உ

பராதேவி துணை.

# ஜீவநாடகம்

## முதலிய அத்வைதப் பாட்டுகளும்

## பஞ்சீகரண மகாவாக்கியமும்.

இவை

வேதாந்தப்பாட்டுகளும் தினஸரி ஸ்தோத்திரங்களும்
பிரசுரஞ்செய்திருக்கும்

சென்னை

V. S. வாலாம்பாள் அம்மாளால்,

பிரசுரிக்கப் பெற்றன.

இரண்டாம் பதிப்பு.



PRINTED AT THE SWADESAMITRAN POWER PRESS, MADRAS.

1914.

*Price Annas, 4½.]* [விலை அணா 4½.

# முகவுரை.

முந்தி என்னால் பிரசுரம் செய்யப்பட்டிருக்கும் "வேதாந்தப் பாட்டுகள்" என்னும் புஸ்தகத்தின் முகவுரையில் எழுதி யிருப்பதற்கிணங்க இந்தப்புஸ்தகம் இரண்டாவது தொகுதியாக அச்சிடப்பட்டிருக்கிறது. பிழைகள் அதிகமாயிருக்கக் கூடுமாகையால் அவைகளைப் பாராட்டாமல், இந்தப்பாட்டுகளில் பிரியமுள்ளவர்கள் ஒருவரிடத்திற் போய்க்கேட்டு எழுதிக்கொள்ளுகிற சிரமத்தை நீக்குகிற, இதன் உபயோகத்தை முக்கியமாய் கிரகிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

V. S. பாலாம்பாள்.

# அட்டவணை.



---

இந்த புண்ணிய கரமான பாட்டுக்களைச்
சொல்லி பக்தி பண்ணிக் கொண்டிருந்த
பரமார்த்தீகமான என் பாட்டியம்மாள்
அம்மாக்குட்டி என்னும் அனந்தலட்சுமி அம்மாளுக்கு

இதைச்

சமர்ப்பிக்கிறேன்.

V. S. வாலாம்பாள்.

உ

பராதேவி துணை.

# ஸ்ரீலலிதாம்பாள் திருவனந்தல்.

### கடவுள் வணக்கம்.

1. ஆதிகுருகணபதியும் ஆறுமுகவேலவரும்
அம்பிகையும் சரஸ்வதியும் கமலவாஸினியும்
மாதேவ ஈசருடன் மலரயனும் ஸ்ரீஹரியும்
மற்றுமுள்ள தேவர்களும் ரிஷிகளுடனே
மாதா லலிதேஸ்வரியும் வரதகாமேஸ்வரரும்
மற்றும் சக்திதேவியர்களுடனே
ஏதுந்தெரியாத எந்தன் நாவில் நின்று அருள்பொழிய
எல்லவருங் காப்பதாமே.

### ஹயக்கிரீவமூர்த்தி அகஸ்தியரிஷிக்கு உபதேசித்தல்.

2. கலியுகத்தில் பாமர நரர்க்கருள அகஸ்தியமுனி
காஞ்சியினில் தவமியற்றினர்
எளிதாகக் கலிதீர்க்கும் ஏகாந்தநிலையானை
இன்பமாகப் பூஜைசெய்தார்
மலையாத கும்பமுனி தபஸைக்கண்டு ஹயக்கிரீவர்
மஹாதேவி கிருபையால் தோன்றினர்
உலையாது நரர்க்குநன்மை அகஸ்தியர் அயமுகரை
உபதேசங் கேட்கலுற்றார்
வீதிமுகர் அகஸ்தியர்க்கு உரைத்தாருன் மகிமைதன்னை
வேதவேதாந்தப் பொருளே திருவனந்தலோ.

3. சொந்தமுடன் உன்மகிமை திருவனந்தலாய்த் துதிக்க
சுருதிவடிவே பஞ்ச தசாக்ஷரியே
எந்தவிதத்திலும் உம்மை நினைப்பவர்க்கு துரிதமில்லை
இகபர அபீஷ்டமுங் கைகூடும்
மந்தமதியான என்றால் (உன்) மகிமைசொல்ல எளிதாமோ
மலரயனும் தேவர்களுமறியார்
பந்தம் நீக்கி அறிவுதந்து எந்தனுக்கு முன்னடவும்
பஞ்சாக்ஷரரூபியே திருவனந்தலோ.

## விஷ்ணுவின் ஹிருதயத்தில் தேவி பிரஸன்னமாதல்
## மதுகைடவர்வதம்.

---

1. பிரளயகாலத்தில் விஷ்ணு உதரத்தினில் சகலமான
   பிராணியெல்லாம் அடக்கிவைத்து
   ஜலத்தில் சயனித்துப்பின்னும் சிருஷ்டிசெய்ய மனதிலெண்ணி
   நாபிகமலந்தன்னில் அயனை சிருஷ்டித்தார்
   மலைபோல்வந்த மதுகைடவர் அதட்டவிதிபயந்துகொண்டு
   மகமாய்கை உம்மை தியானித்தார்
   அலையுமவருக் கருள்செய்து அஸுராளை ஸம்ஹரித்த
   ஆதிபராசக்தியே திருவனந்தலோ.

### மோகினிரூபமாய் தேவருக்கு அமுதமளித்தல்.

5. சக்கராதிவானவரும் அஸுராதிதானவரும்
   சண்டைசெய்தார் அமிர்தத்தினுக்கு
   சக்கரபாணிகண்டு சகோதரியாள் மாய்கைபோல்
   தானெடுத்தார் மோஹினிரூபம்
   அக்கிரமக்கார அஸுரர் எல்லாரையும் மயக்கிசுதை
   அவ்வளவையும் தேவருக்குக்கொடுத்து
   விக்கிரம சாஸ்தாவை சிவனிடத்தில் பெற்றெடுத்த
   விச்வமோகினியே திருவனந்தலோ.

### லலிதாம்பாள் அவதாரம்.

6. பந்தமில்லாப் பரமரினால் நீறாய்ப்போன மன்மதனும்
   பிருமாண்ட பண்டாஸுரனாகி
   அந்தமுள்ள தம்பியரும் புத்திரரும் சேனைகளும்
   ஆண்டுகொண்டுதன் கோட்டையில் சுகமாய்
   இந்திராதிகளை ஹிம்ஸிக்க இமயவர்கள் மனந்தளர்ந்து
   வந்து உம்மைத் தியானஞ்செய்தாள்
   அந்தமுள்ள அக்கினியில் அரிந்துதங்கள் உடம்புகளை
   ஆகுதிபண்ணி ஹோமஞ்செய்தாள்
   சந்திர உதயம்போல் அக்கினி குண்டத்தினில் வந்துதித்த
   ஸ்ரீசக்ராதநாயகியே திருவனந்தலோ.

### ஸ்ரீலலிதாம்பாள் கலியாணம்.

7, உம்முடைய கிருபையினாலே குறையுடல்கள் பூரணமாய்
   உம்மிடத்தில் அபயமென்றாள் அமராள்

சங்கரர் காமேசராகி எழுந்தருளப் பிரும்மாமுதல்
சமஸ்தமான தேவர்களும் மகிழ்ந்து
தங்கமணி மண்டபத்தில் விஷ்ணு உம்மை காமேசர்க்கு
தாரைவார்த்து மணமுமகிழ்ந்தார்
எங்கும் பரிபாலிக்கவே சாம்பிராஜ்ய முடிசூட்டிக்கொண்ட
ஈச்வரி காமாக்ஷியே திருவனந்தலோ.

### ஸ்ரீதேவி பண்டாஸுரன்மேல் யுத்தம் தொடுத்தல்.

8. அலைகடல்கள்போலே சக்திசேனைசூழ ரணகளத்தில்
அஸுரரர்கள் உயிர்வதைக்க வென்றே
கலகஞ்செய்த துர்மத குரண்டர் முதலாய்வதைக்க
சம்பத்கரி அச்வாரூடை வாராகி தேவியுமாய்
பலமுள்ள கரங்காதிகள் ஐந்துபேரை மடியடித்த
பலசாலி நகுலேச் வரியுமாய்
பிலாஸ்கரர் ஏழுபேரைக் கொய்த மந்திரிணி தண்டினி
பரதேவதையே லலிதாம்பா திருவனந்தலோ.

### பாலாதேவி பண்டபுத்திரரை வதைத்தல்.

9. கள்ளனைகப் பிடிக்கவந்த விஷங்கனையும் வதைக்கவந்த
காமேச்வரிகளுக்கு நமஸ்தே
பண்டன்தம்பி விசுக்கிரன் அக்கினிக்கோட்டை வெல்லமாட்டாமல்
பாவி எட்டு யந்திரங்கிழித்தான்
துள்ளிவந்து யந்திரத்தைத் துணித்த சத்திக்கணபதிக்கு
சொல்லி அக்கிரபூஜை கொடுத்து
கள்ளுக்குடியன் பண்டனுட பிள்ளைகளின் தலையரிந்த
கன்னித்தாயே பாலாதேவி பள்ளியுணரீர்.

### ஸ்ரீலலிதை பண்டாஸுரனை வதைத்தல்.

10. பண்டன் தம்பிகளைவதைத்த மந்திரிணி வாராகியுடன்
பக்ஷமான சக்திகளுந் துதிக்க
பண்டாஸுரனை வதைக்க ஸ்ரீசக்ர ரதத்திலேறி
பத்து அவதாரஞ்செய்த விஷ்ணுவை
உண்டாக்கியே விரலால் பண்டன் மாயாஸ்திரங் களைப்போக்கி
உக்கிரகாமேசர் அஸ்திரத்தினாலே
பண்டனையும் அவனுடைய புத்திரரையு மழித்த ஜயம்
கொண்டருளும் சண்டிகையே பள்ளியுணரீர்

### சுப்ரமண்யமூர்த்தி உதித்து சூரனாதியரை அழித்தல்.

11. தேவர்களின் துதியினாலே மன்மதனை எழுப்பி ரதி
தேவியுடன் அனுப்பிவைத்தீர் சுகமாய்
(மஹா) தேவருமையுங்கூடி தேவசேனா பதியுமுண்டாய்
சூராதி மூவரையும் வதைத்து
தெய்வநாயகி வள்ளியை திருமணங்கள் தான்முடித்து
ஸ்ரீபுரத்தில் காமேச்வரருடனே
நாவால் சொல்லிமுடியாத சிந்தாமணிக் கிரகத்தில்வாழும்
இராக்கினியே பரதேவி பள்ளியுணரீர்.

### ஸ்ரீலலிதை காமேசருடன் சிந்தாமணிக்கிரகம் வஸித்தல்

12. சிந்தாமணிக் கிரகந்தன்னில் பஞ்சபிருஹ்ம ஆசனத்தில்
ஹம்ஸ தூளிகாமெத்தை தலையணைமேல்
மன்மதா ஹாரரூப காமேசருடன் வீற்றிருந்து
மாய்கையினால் மயக்கி இந்த ஜகத்தை
இந்து ரவி அக்கினியும் முச்சுடரும் ஒளிவிடவே
எட்டுத்திக்கிலும் சக்திகள் துதிக்க
கந்தருவாள் கானம்பண்ண காக்ஷிசேவை தந்தருளும்
கல்யாணி காமேசருடன் பள்ளியுணரீர்.

### ஸ்ரீலலிதையை பக்தர்கள் வேண்டுதல்.

13. செண்பகப்பூ மல்லிகை மருக்கொழுந்து வெட்டிவேர்
செவ்வந்திப்பூச் சரங்கள் தொடுத்து
சம்புக்கிரீவர் காமேச்வரர் உன்வருடு ராக்கோடியில்
காணும்படி சூட்டினாரோ தாயே
நிரம்பமணம் வீசும்பன்னீர் சவ்வாதுடன் குங்குமப்பூ
கோரோசனை கஸ்தூரி கந்தங்கலந்து
சம்பிரமமாய்ப் பரிமளிக்க ஈசருக்குப் பூசிநிற்கும்
சங்கரியே ஸ்ரீலலிதை பள்ளியுணரீர்.

14. செண்கப்பூ (செவ்வந்தி கட்டு) மாலையைப்போல் உம்முடைய
செம்பொன் வரிவலக்-கையின்மேலே
அம்பிகையே காமேசர் தலைக்குயரம் வைத்துக்கொண்டு
அசைய மாட்டேன் என்கின்றாரோ
சம்பிரமமாய்த் தாம்பூலம் பரிமளிக்க ஈசருடன்
சயனந்தன்னில் இருக்கும் உம்மைக்காண

நம்பினபேர் காத்திருக்காள் உங்களுட சேர்வைக்காக
ராஜ ராஜேஸ்வரியே பள்ளியுணரீர்.

15. உங்களுட நித்திரையினால் உலகம் நித்திரை செய்கின்றது
உதயமாகவில்லை சூரியன் உலகில்
தங்கரத்தினக் குடலையினில் புஷ்பங்கள் கொண்டுவந்து
தாசர்களும் காத்து நிற்கிறாள்
குங்கும ரத்தினச் சிமிழில்கொண்டு உமக்கு அர்ச்சித்திட
கொம்பனைமார் காத்து நிற்கிறாள்
சங்கரியே மந்திரிணிமுதல் சக்திகளும் வந்திருக்காள்
சட்டமிட அஷ்டலக்ஷ்மி பள்ளியுணரீர்.

16. நாரணியே கீர்வாணர் வாத்தியம் முழங்க அப்ஸரஸ
நாரியர்கள் நாட்யமாடுறாள்
நாரதரும் தும்புருவரும் வீணை கொண்டு உம்முடைய
நாமகீர்த்தனங்கள் பாடுறார்
பாரிஜாதங் காமதேனு கற்பகவிருக்ஷந் துளசி
பக்ஷமுடன் வந்துநிற்கிறாள்
வாரணங்கள் அபிஷேக ஜலங்கொணர்ந்து நிற்கின்றது
மாதாவே அருள்புரியப் பள்ளியுணரீர்.

17. இத்தனைபோதாகப் பள்ளி யுணர்த்தினேன் ராஜராஜ
ஈச்வரியே எழுந்திரும் அம்மா
அத்திரிமுனி ஆச்ரமத்தில் அனசூயைக் குபதேசித்த
ஆதிநாராயணர் போற்றுந்தாயே
அற்புதமாம் உம்மிடதுதியில் அபத்தம்நிரம்ப இருந்தாலும்
அபஜாரந்தன்னை க்ஷமிப்பீர் என்தாயே
சொற்பிழை எல்லாம் பொறுத்து துதியாகக்கொண்டருளி
ஜோதிரூபங்காட்டி அருள்வீரே
பரதேவி என்னை ரக்ஷித்திடுவீரே.

18. மங்களம் ஸ்ரீலலிதை திருவனந்தல் சொன்னவர்க்கு
மனமகிழ்ந்து கேட்டவருக்கும்
எங்கிருந்தாலும் உந்தன் திருவனந்தல் உரைப்பவர்க்கு
சஞ்சைபாதை வங்கை யொன்றுமில்லை
சங்கரியே உன்மகிமை சொன்னவர்க்குப் பிணிகளில்லை
மங்களந்தான் ஜயங்களும் உண்டாகும்
மங்களம் மங்களம் ராமேச்வர காமேச்வரிக்கு

மங்களம் ஜயமங்களம்
நித்தியமும் சுபமங்களம்.

ஓம் தத் ஸத்.

---

பராதேவி துணை.

# ஸ்ரீமீனாக்ஷி சுந்தரேசர் திருப்பள்ளியெழுச்சி.

## ஸ்ரீமதுராநகரின் சிறப்பு.

1. மதுராபுரி வளமையும் வைகையாற்றின் அழகும்
(அம்மன்) மாதாவுக்காக அழைத்த ஏழுகடல் மகிமையும்
சொர்னப் பொற்றாமரையழகும் பூத்தலர்ந்த பொய்கையும்
பூமிதன்னில் வளமையுள்ள பாண்டியநாட்டழகும்
ஐங்கரனார் சன்னதியும் ஆறுமுகர் தரிசனமும்
ஆனாலும் மகிமையே சிவஸ்தலமே மதுரை
இருஷிகளுடன் முனிவரும் ஏற்றியே போற்றுகிறார்கள்
ஈசருடன் மீனாக்ஷி திருவனந்தலோ.

2. இருவாக்ஷியுடன் தாமரை புன்னைகை அல்லிமலர்
பூத்தலர்ந்த பொய்கைதன்னில் அழகாய்
பத்மமலரோடையருகில் பஞ்சவர்ணப் பூங்கிளிகள்
பாடியே மரங்களில் கொஞ்சி நிற்கிறது
அரஹர சிவசிவா ஆதிசொக்கநாதா என்று
அன்னங்கள் கூவுகின்றது
அம்பிகையே மீனாக்ஷி ஹாலாஸ்ய நாயகராம்
ஆலமுண்டாருடன் கூடத் திருவனந்தலோ.

3. பூலோக கைலாசம் சிவஸ்தலமே மதுரை என்று
பொன்னுலகு கந்தருவாள் கானம் பண்ணுறார்கள்
ஜீவன் முக்திஸ்தலத்திலொரு சிவஸ்தலமே மதுரை என்று
தேவர் பாரிஜாத புஷ்பந்தன்னைத் தூவிநிற்கிறாள்
ஆயிரங்கண் இந்திரனும் அருச்சிக்கப் பொன்மலர் கொண்டு
ஆராதனைகள் செய்யக்காத்து நிற்கிறார்
திலோத்தமை ஊர்வசியும் தெய்வ அரம்பையரும் பாடுகிறாள்
தெய்வசிகா மணியுடனே திருவனந்தலோ.

## ஸ்ரீமீனாக்ஷி அவதாரச்சிறப்பு.

4\. மலையத்வஜ பாண்டியரின் வம்சங்கள் ஈடேறவென்று
வந்துதித்தீர் கன்னிகையாய் மீனாக்ஷிநீரும்
அன்புடைய ராஜாவின் அருந்தவசு யாகத்தினில்
அக்கினியில் அவதரித்தீர் பாலகியாக
மூவயதுப் பெண்ணுமாய் மும்முலைத் தடாதகையாய்
மூர்த்திகரித்துவந்த மூலகாரணியே
முகுந்தரின் சகோதரியே முக்திதரும் மீனாக்ஷி
முப்புரமெரித்தோருடன் திருவனந்தலோ.

5\. குமிழ்போன்ற கிளிமூக்கும் கோவைக்கனி போல்வாயும்
கோகிலம் கூவுகின்றாப்போல் குரலோசை யழகும்
மான்விழிபோல் விழியழகும் மரகதம்போல் திருமேனியும்
மன்மதன்கை விற்போல் வளைந்த புருவத்தழகும்
சங்குவரிப்பூங் கழுத்தும் ஹாரம்பூண்ட திருத்தோளும்
தாளம்போன்ற மூன்று ஸ்தனத்தழகும்
குந்தளப்பொன் பணிபூண்ட குழந்தைவடிவாய் விளங்கும்
கூடல்நகர் நாயகியே திருவனந்தலோ.

6\. அண்டம் பதினாலுக்கும் படியளக்கும் கைத்தலத்தில்
அஸ்தகடகம் பவழம்வங்கி பாட்டிலியும் விளங்க
சிற்றிடையில் பீதாம்பரமும் சிவந்தவொரு கைத்தலமும்
(அம்மன்) சிறுகையினில் ஏந்திநிற்கும் சொர்ணக்கிளியும்
கந்தனைக்கணபதியைப் பெற்றெடுத்த கல்யாணி
உந்திச்சுழியின் அழகும்
சிற்றடியில் பாடகமும் தண்டைசிலம்பு கொஞ்சும்
தேவர்தொழும் நாயகியே திருவனந்தலோ.

## ஸ்ரீமீனாக்ஷி மகுடாபிஷேகச் சிறப்பு.

7\. குந்தளப்பொன் ஓலையில் கொப்புநிழல் காட்டவே
சுந்தரமான முகத்தில் மூக்குத்தியும் விளங்க
சந்திர உதயம்போல் மீனாக்ஷிவளர்ந்துவர
சந்தோஷப்பட்டு மகாராஜர் மகிழ்ந்து
புத்திரியினாலே வம்சம் பூரிக்க வேணுமென்று
பூமிதன்னை ஆளவென்று பொன்முடியுஞ்சூட்டி
செங்கோலுங் கைக்கொடுத்து சிங்காஸனம் வீற்றிருக்கும்
சேவிமீனாக்ஷி உந்தன் சேவைதன்னைக் கண்டு

### சுப்ரமண்யமூர்த்தி உதித்து சூராதியரை அழித்தல்.

11. தேவர்களின் துதியினாலே மன்மதனை எழுப்பி ரதி
 தேவியுடன் அனுப்பிவைத்தீர் சுகமாய்
(மஹா) தேவருமையுங்கூடி தேவசேனா பதியுமுண்டாய்
 சூராதி மூவரையும் வதைத்து
தெய்வநாயகி வள்ளியை திருமணங்கள் தான்முடித்து
 ஸ்ரீபுரத்தில் காமேச்வரருடனே
நாவால் சொல்லிமுடியாத சிந்தாமணிக் கிரகத்தில்வாழும்
 இராக்ஞியே பரதேவி பள்ளியுணரீர்.

### ஸ்ரீலலிதை காமேசருடன் சிந்தாமணிக்கிரகம் வஸித்தல்

12. சிந்தாமணிக் கிரகந்தன்னில் பஞ்சபிருஹ்ம ஆசனத்தில்
 ஹம்ஸ தூளிகாமெத்தை தலையணைமேல்
மன்மதா ஹாரரூப காமேசருடன் வீற்றிருந்து
 மாய்கையினால் மயக்கி இந்த ஜகத்தை
இந்து ரவி அக்கினியும் முச்சுடரும் ஒளிவிடவே
 எட்டுத்திக்கிலும் சக்திகள் துதிக்க
கந்தருவாள் கானம்பண்ண காக்ஷிசேவை தந்தருளும்
 கல்யாணி காமேசருடன் பள்ளியுணரீர்.

### ஸ்ரீலலிதையை பக்தர்கள் வேண்டுதல்.

13. செண்பகப்பூ மல்லிகை மருக்கொழுந்து வெட்டிவேர்
 செவ்வந்திப்பூச் சரங்கள் தொடுத்து
கம்புக்கிரீவர் காமேச்வரர் உன்வருடு ராக்கோடியில்
 காணும்படி சூட்டினாரோ தாயே
நிரம்பமணம் வீசும்பன்னீர் சவ்வாதுடன் குங்குமப்பூ
 கோரோசனை கஸ்தூரி கந்தங்கலந்து
சம்பிரமமாய்ப் பரிமளிக்க ஈசருக்குப் பூசிநிற்கும்
 சங்கரியே ஸ்ரீலலிதை பள்ளியுணரீர்.

14. செண்கப்பூ (செவ்வந்தி கட்டு) மாலையைப்போல் உம்முடைய
 செம்பொன் வரிவலக் கையின்மேலே
அம்பிகையே காமேசர் தலைக்குயரம் வைத்துக்கொண்டு
 அசைய மாட்டேன் என்கின்றாரோ
சம்பிரமமாய்த் தாம்பூலம் பரிமளிக்க ஈசருடன்
 சயனந்தன்னில் இருக்கும் உம்மைக்காண

நம்பினபேர் காத்திருக்காள் உங்களுட சேர்வைக்காக
ராஜ ராஜேஸ்வரியே பள்ளியுணரீர்.

15. உங்களுட நித்திரையினுல் உலகம் நித்திரை செய்கின்றது
உதயமாகவில்லை சூரியன் உலகில்
தங்காரத்தினக் குடலையினில் புஷ்பங்கள் கொண்டுவந்து
தாசர்களும் காத்து நிற்கிருள்
குங்குமம் ரத்தினச் சிமிழில்கொண்டு உமக்கு அர்ச்சித்திட
கொம்பனைமார் காத்து நிற்கிருள்
சங்கரியே மந்திரிணிமுதல் சக்திகளும் வந்திருக்காள்
சட்டமிட அஷ்டலக்ஷ்மி பள்ளியுணரீர்.

16. நாரணியே கீர்வாணர் வாத்தியம் முழங்க அப்ஸரஸ
நாரியர்கள் நாட்யமாடுரார்
நாரதரும் தும்புருவரும் வீணை கொண்டு உம்முடைய
நாமகீர்த்தனங்கள் பாடுரார்
பாரிஜாதங் காமதேனு கற்பகவிருக்ஷந் துளசி
பக்ஷமுடன் வந்துநிற்கிருள்
வாரணங்கள் அபிஷேக ஜலங்கொணர்ந்து நிற்கின்றது
மாதாவே அருள்புரியப் பள்ளியுணரீர்.

17. இத்தனைபோதாகப் பள்ளி யுணர்த்தினேன் ராஜராஜ
ஈச்வரியே எழுந்திரும் அம்மா
அத்திரிமுனி ஆச்ரமத்தில் அனசூயைக் குபதேசித்த
ஆதிநாராயணர் போற்றுந்தாயே
அற்புதமாம் உம்மிடதுதியில் அபத்தம்நிரம்ப இருந்தாலும்
அபஜாரந்தன்னை க்ஷமிப்பீர் என்தாயே
சொற்பிழை எல்லாம் பொறுத்து துதியாகக்கொண்டருளி
ஜோதிரூபங்காட்டி அருள்வீரே
பரதேவி என்னை ரக்ஷித்திடுவீரே.

18. மங்களம் ஸ்ரீலலிதை திருவனந்தல் சொன்னவர்க்கு
மனமகிழ்ந்து கேட்டவருக்கும்
எங்கிருந்தாலும் உந்தன் திருவனந்தல் உரைப்பவர்க்கு
சஞ்சைபாதை வங்கை யொன்றுமில்லை
சங்கரியே உன்மகிமை சொன்னவர்க்குப் பிணிகளில்லை
மங்களந்தான் ஜயங்களும் உண்டாகும்
மங்களம் மங்களம் ராமேச்வர காமேச்வரிக்கு

மங்களம் ஜயமங்களம்
நித்தியமும் சுபமங்களம்.

ஓம் தத் ஸத்.

---

பரதேவி துணை.

# ஸ்ரீமீனாக்ஷி சுந்தரேசர் திருப்பள்ளியெழுச்சி.

## ஸ்ரீமதுராநகரின் சிறப்பு.

1. மதுராபுரி வளமையும் வைகையாற்றின் அழகும்
   (அம்மன்) மாதாவுக்காக அழைத்த ஏழுகடல் மகிமையும்
   சொர்ணப் பொற்றாமரையழகும் பூத்தலர்ந்த பொய்கையும்
   பூமிதன்னில் வளமையுள்ள பாண்டியநாட்டழகும்
   ஐங்கரனார் சன்னதியும் ஆறுமுகர் தரிசனமும்
   ஆனாலும் மகிமையே சிவஸ்தலமே மதுரை
   இருஷிகளுடன் முனிவரும் ஏற்றியே போற்றுகிறாள்
   ஈசருடன் மீனாக்ஷி திருவனந்தலோ.

2. இருவாக்ஷியுடன் தாமரை புன்னைகை அல்லிமலர்
   பூத்தலர்ந்த பொய்கைதன்னில் அழகாய்
   பத்மமலரோடையருகில் பஞ்சவர்ணப் பூங்கிளிகள்
   பாடியே மரங்களில் கொஞ்சி நிற்கிறது
   அரஹர சிவசிவா ஆதிசொக்கநாதா என்று
   அன்னங்கள் கூவுகின்றது
   அம்பிகையே மீனாக்ஷி ஹாலாஸ்ய நாயகராம்
   ஆலமுண்டாருடன் கூடத் திருவனந்தலோ.

3. பூலோக கைலாசம் சிவஸ்தலமே மதுரை என்று
   பொன்னுலகு கந்தருவாள் கானம் பண்ணுறாள்
   ஜீவன் முக்திஸ்தலத்திலொரு சிவஸ்தலமே மதுரை என்று
   தேவர் பாரிஜாத புஷ்பந்தன்னைத் தூவிநிற்கிறாள்
   ஆயிரங்கண் இந்திரனும் அருச்சிக்கப் பொன்மலர் கொண்டு
   ஆராதனைகள் செய்யக்காத்து நிற்கிறார்
   திலோத்தமை ஊர்வசியும் தெய்வ அரம்பையரும் பாடுகிறாள்
   தெய்வசிகா மணியுடனே திருவனந்தலோ.

## ஸ்ரீமீனாக்ஷி அவதாரச்சிறப்பு.

4. மலையத்வஜ பாண்டியரின் வம்சங்கள் ஈடேறவென்று
வந்துதித்தீர் கன்னிகையாய் மீனாக்ஷிநீரும்
அன்புடைய ராஜாவின் அருந்தவசு யாகத்தினில்
அக்கினியில் அவதரித்தீர் பாலகியாக
மூவயதுப் பெண்ணுமாய் மும்முலைத் தடாதகையாய்
மூர்த்திகரித்துவந்த மூலகாரணியே
முகுந்தரின் சகோதரியே முக்திதரும் மீனாக்ஷி
முப்புரமெரித்தோருடன் திருவனந்தலோ.

5. குமிழ்போன்ற கிளிமூக்கும் கோவைக்கனி போல்வாயும்
கோகிலம் கூவுகின்றாப்போல் குரலோசை யழகும்
மான்விழிபோல் விழியழகும் மரகதம்போல் திருமேனியும்
மன்மதன்கை விற்போல் வளைந்த புருவத்தழகும்
சங்குவரிப்பூங் கழுத்தும் ஹாரம்பூண்ட திருத்தோளும்
தாளம்போன்ற மூன்று ஸ்தனத்தழகும்
குந்தளப்பொன் பணிபூண்ட குழந்தைவடிவாய் விளங்கும்
கூடல்நகர் நாயகியே திருவனந்தலோ.

6. அண்டம் பதினாலுக்கும் படியளக்கும் கைத்தலத்தில்
அஸ்தகடகம் பவழம்வங்கி பாட்டிலியும் விளங்க
சிற்றிடையில் பீதாம்பரமும் சிவந்ததொரு கைத்தலமும்
(அம்மன்) சிறுகையினில் ஏந்திநிற்கும் சொர்ணக்கிளியும்
கந்தனைக்கணபதியைப் பெற்றெடுத்த கல்யாணி
உந்திச்சுழியின் அழகும்
சிற்றடியில் பாடகமும் தண்டைசிலம்பு கொஞ்சும்
தேவர்தொழும் நாயகியே திருவனந்தலோ.

## ஸ்ரீமீனாக்ஷி மகுடாபிஷேகச் சிறப்பு.

7. குந்தளப்பொன் ஓலையில் கொப்புநிழல் காட்டவே
சுந்தரமான முகத்தில் மூக்குத்தியும் விளங்க
சந்திர உதயம்போல் மீனாக்ஷிவளர்ந்துவர
சந்தோஷப்பட்டு மகாராஜர் மகிழ்ந்து
புத்திரியினாலே வம்சம் பூரிக்க வேணுமென்று
பூமிதன்னை ஆளவென்று பொன்முடியுஞ்சூட்டி
செங்கோலுங் கைக்கொடுத்து சிங்காஸனம் வீற்றிருக்கும்
தேவிமீனாக்ஷி உந்தன் சேவைதன்னைக் கண்டு

மலையத்வஜ பாண்டியரும் மாதாவும் மனமகிழ
மதுராபுரி ராக்கினியே திருவனந்தலோ.

### மீனாக்ஷி திக்குவிஜயச் சிறப்பு.

8. தேவர்தொழும் பதவிதன்னை மலயத்வஜர் அடைந்தபின்பு
ஜெகமெல்லா மாண்டிருந்த தேவிமீனாக்ஷி
மாதா அருகிலிருந்து மதுரைவளநாடு தன்னை
மகிமையுடன் எல்லவரும் மதிக்க அரசாண்டீர்
பூலோகந்தன்னை ஜயித்து ராஜாக்கள் எல்லவரும்
பொன்னடியில் வணங்கியே கப்பங்கள் செலுத்த
தேவலோக முதலாய் திக்கெட்டையுஞ் செயங்கொண்ட
ஸ்ரீதேவி மீனாக்ஷி திருவனந்தலோ.

9. திருக்கைலை தன்னில்வந்து ஜயபேரிகை அடித்து
சிவகணங்கள் தன்னையும் சிதறிவிழப்பொருத
திக்குவிஜயம் பண்ணவந்த திறமையுஞ் சேவகமும்
ஸ்ரீகண்ட ஈஸ்வரனார் மனதிலறிந்து
மங்களமாய் மீனாக்ஷியை மாலையிட வேணுமென்று
மகாதேவர் ரிஷபந்தன்னில் ஏறிவரவே
சங்கரனைக் கண்டவுடன் கல்யாணி மீனாக்ஷிக்குக்
காணாமல் ஸ்தனமொன்று மறைந்து விடவே.

10. மங்கையென்னும் தடாதகை (உம்மை) மாலையிடவேணுமென்று
மஹாதேவ ராஜரவர் உரைத்தார்
சுவாமி யுரைக்கலுமே சங்கரியே நீர்கேட்டு
சற்றேதான் லஜ்ஜையுட னுரைத்தீர்
மணம்புரிய வேணுமென்றால் (என்) மாதா அருகினில்
மதுராபுரி நாடுதன்னில் வாருமென்று சொன்னீர்
அம்பிகைநீர் சொன்னவுடன் ஆலாஸ்ய நாதரும்
அப்படியே செய்வோமென்று அந்தர்த்தான மடைந்தார்.

### ஸ்ரீமீனாக்ஷி திருக்கலியாணச் சிறப்பு.

11. ஸ்வாமியும் மறைந்தவுடன் நீர்தாயார் அருகில்வந்து
சந்தோஷ பர்த்தாவை அடைந்தேனம்மா தாயே
ஸ்தனமொன்று மறைந்ததென்று சங்கரியும் சொன்னவுடன்
தழுவியே முத்தமிட்டு தாயாரும் மகிழ்ந்தாள்
காஞ்சனமாலையும் காரியஸ்தர் களையழைத்து
கலியாணக் காரியங்கள் செய்யவென்று உரைத்தார்

மதுராபுரி நகரந்தன்னை மதிக்கவே அலங்கரித்து
　　மஹாதேவர் வரவுதன்னைப் பார்த்துமவா ளிருந்தாள்.

12. மஹாவிஷ்ணுவும் பிரும்மாவும் லக்ஷ்மியும் சரஸ்வதியும்
　　மகிமையுள்ள வாகனத்தில் வரவே
இந்திரனும் இந்திராணியும் எண்ணற்ற தேவர்களும்
　　ரிஷிகளுடன் ராஜர்களும் வரவே
மணவாளக் கோலத்துடன் சொர்ணரிஷபமேறி
　　மஹாதேவ ராஜாவர் வரவே
வாசாமகோசரி ராஜசபை நாயகி
　　மஹாதேவ ருடனுகத் திருவணந்தலோ.

13. மங்கள முகூர்த்தத்தில் மாலையிட்டு ஊஞ்சலாடி
　　மகாவிஷ்ணு தாரைவார்க்க மங்கிலியந் தரித்தார்
பிரும்மாவுஞ் சங்கரர்க்கு புரோகிதராய்த் தானிருந்து
　　புண்ணியரும் நெய்யினுல் ஓமங்களும் பண்ணி
அலங்காரச் சப்பரத்தில் அழகர்வந்து வரிசைவைக்க
　　(அம்மன்) பொரியிட்டு அம்மிமிதித்து அருந்ததியைப்பார்த்து
மங்களஹாரத்தி எடுத்தவுடன் மஹாதேவர்
　　மறையோர்கள் அனைவருக்கும் மநதானஞ் செய்தார்.

14. அக்கினியில் உதித்தவளின் கலியாணங்காண வென்று
　　அயலிலுள்ள சுந்தரிமார் வந்துநிற்கிருள்
முத்தாரத்தி எடுத்தால் மோக்ஷமுண்டு என்று எண்ணி
　　மின்கிளிமார் வந்துநிற்கிருள்
பஞ்சவர்ண ஹாரத்தி பாங்காகக் கொண்டுவந்து
　　பத்தினிமார் காத்து நிற்கிருள்
பாரம்மா தயவுடனே காரம்மா எங்களையும்
　　பஞ்சாக்ஷர ரூபியே திருவணந்தலோ.

### குண்டோதரனுக்கு அன்னமிட்ட லீலை.

15. கலியாண வைபவத்தைக் காணவந்த பேர்களெல்லாம்
　　கட்டுக்கட்டாய் ஷட்ரஸான்னம் புஜித்தாள்
தாம்பூல கந்தபுஷ்பம் சகலருக்குந் தான்கொடுத்து
　　சந்தோஷத்துடனே யம்மன் வீற்று மிருந்தாள்
சயம்பாகித் தலைவனப்போ தேவியருகில் வந்து
　　செங்கரங்கள் கூப்பியப்போ துதிப்பான்
சித்திரான்ன வகைகளெல்லாம் ஊசியே போகுதிப்போ
　　செலவழிய வழிபாருந் தாயே.

16. வெள்ளிமலை போலேயன்னம் மிகுதியாய்க் குவித்திருக்க
மீனாக்ஷி யம்மன்கண்டு விசாரமுங்கொண்டு
ஹாலாஸ்ய நாயகரின் அருகில்வந்து அடிபணிந்து
அடக்கத்துடன் ஒரு வார்த்தை சொல்வள்
நீரும் பூதகணங்களுடன் வருவீரென்று எண்ணியே
மிகுதியாக ஷட்ரஸான்னம் சமைத்தோம்
சித்திரான்னம் பொரிக்கறியும் ஊசியே போகுதிப்போ
செலவழிய என்னவழி ஸ்வாமியென்று கேட்டாள்.

17. அம்பிகையுஞ் சொல்லலுமே ஹாலாஸ்ய நாதரும்
ஆகடியமாகவே மறுவசனஞ் சொல்லுவர்
ஐஸ்வரியம் மிஞ்சிற்றென்று அன்னத்தைச் சமைத்துவிட்டால்
யார்புசிப்பாள் மீனாக்ஷிசொல்வாய்
தனத்தினால்வந்த கருவம் தானடங்க வேணுமென்று
சற்றே பரிகாசமாய் ஸ்வாமியவர் சொன்னார்
பரிகாச மொழிகேட்டு பைங்கிளி மீனாக்ஷியும்
பர்த்தாவின் திருவடியிற் பணிந்து

18. எந்தவித மானாலும் செலவாகும் வழிபாரும்
இரங்குமய்யா என்னுடையநாதா
குடைபிடித்த அருகிருக்கும் குண்டோதரனுக்கு
கொள்ளைகொண்ட பசியதனைக் கொடுத்தார்
சாடரக்கினியினால் தவித்துமந்தக் குண்டோதரன்
உதரந்தன்னில் அக்கினியும் கொளுத்த
ஸ்வாமியுட திருவடியில் சாஷ்டாங்கமாய்ப் பணிந்து
சுந்தரேசரைத் தொழுது ஸ்துதித்தான்.

19. சாடராக்கினியினால் தவிக்கின்றேன் ஸ்வாமி நான்
சாப்பாடு வேணுமென்று தொழுதான்
தாசன்வந்து கேட்கலுமே சுவாமியதைக் கேட்டு
தயவுடனே ஒருவார்த்தை சொல்வர்
வெள்ளிமலைபோல அன்னம் நிரம்பவே குவிந்திருக்கு
வேண்டுமட்டும் புசித்திடுவாய் குண்டோதரா என்றார்
ஸ்வாமியுட அனுமதியால் (அன்ன) சாலைவந்து குண்டோதரன்
அன்னமெல்லாம் அரைநொடியிற் புஜித்தான்.

20. பசிகள் சற்றும் அடங்காமலே பருப்புடனே அரிசிகளும்
பாற்குடங்கள் தயிர்க்குடங்களுருட்ட

அதுகண்டு ஸ்ரீமீனாக்ஷியும் ஆச்சரிய மிகவடைந்து
ஆலாஸ்ய நாதரிடம் அன்புடனுரைப்பள்
அண்டர்தொழும் ஈஸ்வரா (என்) அந்தரங்க நாயகா
மகிமைசற்று மறியாமல் சிறுமதியா லுரைத்தேன்
ஆகாரம் பார்ப்பதற்கு அருஞ்சிறுவ னுயிருந்தான்
அன்னமெல்லாம் ஒரேவாயால் புஜித்தான்.

வைகைநதி யுண்டாக்கிய லீலை.

21. அன்னமில்லை ஸ்வாமிநீர் அடக்குமய்யா அவன் பசியை என்று
அம்பிகையும் வேண்டிநின்று தொழுதாள்
அன்னபரமேஸ்வரியை ஆதிநாத ரருகழைத்து
அன்னமது மூன்றுமலை சமைக்கவென்று சொன்னார்
ஆலாஸ்ய நாதருட ஆக்கினையால் அன்னபூரணி
அந்தக்ஷணம் மூன்றுமலை அன்னஞ்சமைத்தாள்
திருப்தியாய்ப் புஜித்துபக்தன் ஜலதாக மிகுதியாகி
ஜலமடுவைக் காட்டுமென்று கேட்டான்.

22. தாசன்கெஞ்சிக் கேட்கலுமே ஸ்வாமியு மனமிரங்கி
சந்தோஷமாய் ஒருவார்த்தை சொல்வர்
ஜடையிலிருக்கும் கங்கையை ஜகந்நாதர்தான் பார்த்து
வேகவதியாகவே பெருகிவாரு மென்றார்
ஸ்வாமியுட அனுமதியால் திவ்யகங்கா நாயகியும்
ஜலநதியாய் மதுரையினில் பெருகியே வந்தாள்
அல்லோல கல்லோலமாய் அலைகளுடன் நுரைகளுடன்
அதிவேகத்துடனே கங்கா நதியும்வரவே.

23. வளைத்துமந்தக் குண்டோதரன் இருகையினாலு மணைத்து
வாய்திறந்து ஜலபானம் பண்ணியே
திருப்தியாய் அன்னம் புஜித்து ஜலதாக மடங்கியபின்
சுந்தரேசர் அண்டையினில் வந்து
செங்கரத்தால் குடைபிடிக்கச் சிங்காசனம் வீற்றிருக்கும்
சங்கரா தேவியுடன் திருவனந்தலோ
இங்கிதமாய்த் தேவியை அருகழைத்து உபசரித்து
இடப்பாக மளித்தவரே பள்ளியுணரீர்.

நடராஜமூர்த்தியாய் திருக்கூத்தாடிய லீலை.

24. பதஞ்சலி வியாக்கிர பாதருக்கு பாதமெடுத்தாடி நின்ற
புண்டரீ விந்தமான சிவந்த மலரடியை

தாண்டவமாடிநின்ற சரணாரவிந்தத்தினில்
சந்ததமும் பக்திகளைப் பண்ணி
சனகாதி யோகியர்கள் தரிசனைக்கு நிற்கிறார்கள்
தெய்வசிகா மணியே தேவியுடன் கிருபையாய்
பாருமய்யா எங்கள்முகம் பார்வதிநாயகா
பஞ்சாக்ஷர ரூபியே திருவனந்தலோ.

காஞ்சனைக்கு ஏழுகடலழைத்த லீலை.

25. தடாதகா நாயகிக்கு சந்தோஷமாகவென்று
சாகரங்கள் ஏழையும் ஸ்வாமியழைக்க
வானுலகஞ் சென்றுபோன மலையத்வஜ பாண்டியரும்
வந்திருந்து தன்தேவியுடனே
காஞ்சனமாலை யம்மன் கணவனுட கைப்பிடித்து
கடலேழுமாடி யம்மை மகிழ்ந்தாள்
கைலாஸ லிங்கத்தை காக்ஷியுடன் பூஜைபண்ணி
கைவல்யபதவி தன்னை யடைந்தாள்.

ஸ்ரீமீனாக்ஷி சுந்தரருடன் திருக்கோயிலில் எழுந்தருளிய வைபவம்

26. சட்டமாய்ச் சுந்தரருடனே ஜயமாய் செங்கோல் செலுத்தி
சந்திரன்போல் உக்கிரபாண்டியன் வந்துதிக்கவே
கட்டழன் உக்கிரபாண்டியன் கனகசிங்காசனமிருக்க
கருணை செய்ய பக்தருக்குத் திருக்கோயிலில் அமர்ந்தீர்
எட்டானை சுமந்திருக்கும் இந்திர விமானத்தினில்
ஏற்றமுள்ள ஆயிரக்கால் மண்டபத்திலமர்ந்தீர்
இஷ்டமுடன் ஹாலாஸ்ய நாதருடன் காக்ஷிதரும்
ஈஸ்வரி மீனாக்ஷியே திருவனந்தலோ

27. சித்திரையில் திருநாளும் தேவேந்திரன் பூஜைகளும்
செங்கோல் செலுத்தும் தேவிசேவகத்தி னழகும்
கோத்தமுத்துப் பவழத்துடன் ரத்தின அங்கிசாத்தியே
கோமளவல்லி உம்முடைய முத்துக் கொண்டை யழகும்
குஞ்சரத்தின் மேலாக ரத்தினக்குட மேற்றியே
கோட்டை வாசல்கடந்து சென்றுதிருசாய்
வையைநதி ஜலங்கொணர்ந்து மதயானைவந்து கஈத்திருக்கு
மாதாவேமீனாக்ஷி திருவனந்தலோ

28. அனந்தல்நீக்கி பராதேவிக்கு அபிஷேகஞ் செய்து அமுதளிக்க
அர்ச்சகர்கள் காத்துநிற்கின்றார்

திருக்கதவுதாள் திறந்து திரைநீக்கும் சமயமென்று
வந்துவெகு பக்தர்களும் காத்துமிருக்காள்
மஞ்சள்காப்பு சாத்திமயிராற்றிப் பூமுடிக்க
மங்கையர்கள் காத்துநிற்கின்றாள்
விலைமதியாப் பட்டாடை மெல்லியர்கள் கொண்டுவந்து
முன்பாகசன்னிதியில் காத்துமிருக்காள்

29. மகத்துக்கள் பிரமநிஷ்டாள் (உம்ம) மகிமைசொல்லியே துதிக்க
வந்துநின்று சேர்வை வேண்டுகின்றார்
கணக்கன் அதிகாரிகளும் கட்டோலைகணக்குடனே
காண எதிர்வந்து நிற்கின்றாள்
அடிவணங்கி உம்மிடத்தில் அரசாங்கமுறையறிய
(பாண்டிய) அரசர்களும் காத்துநிற்கிறாள்
படியளந்து பிரஜைகளுட பசிநீக்கியருள்பொழிய
பரதேவிமீனாக்ஷி அனந்தல் தெளிவீர்.

30. இத்தனைபோதாய் அனந்தல் எழுப்பினேன் எங்கள்திரு
மீனாக்ஷிதேவியே எழுந்திருமம்மா
அற்புதமாம் மலைபத்வஜ பாண்டியருட யாகத்தினில்
அன்பாக வந்துதித்த தாயே
செப்புமிந்தக்கவிபாடும் திருத்தொண்டருக்கு அருள்புரிவாய்
சௌபாக்கியம் தந்து ரக்ஷிப்பாயே
சொற்பிழைகள் இருந்தாலும் ஸ்துதியாகவே கிரகித்து
சுந்தரிமீனாக்ஷி என்னை ஆண்டருளுவீர்
சுந்தரேசருடன் (பர) தேவி கிருபை அருளுவீர்.

ஓம்—தத்—ஸத்.

## விருத்தம்.

வந்தமாயை அவித்தைதனைக் கண்மேந்த ஜீவராஜன்
தந்தைதாய் தாரம்புத்திரன் தன்னையே நித்யமென்று
தன்னறிவு தான்மயங்கி தத்துவத்தை நினையாமல்
புண்ணிய பாவமென்ற பகுத்தறிவு தோன்றிடாமல்
சிந்தையும் மயங்கியந்த ஜீவராஜன் தானிருந்தான்.

## ஜீவராஜன் மாயை அவித்தை வசமாகுதல்.

### கண்ணிகள்.

1 அனந்தங்கோடி ஜன்மங்களுக்கு-ஆசைவைத்து ஜீவராஜன்
மதிமயங்கி விதிவசத்தால்-பவக்கடலில் அமிழ்ந்தானே.

2 அனித்தியமான சமுசாரத்தை-துக்கஸ்வரூபமென்று அறியாமல்
சர்ப்பவாயின் தவளைபோல-சம்ஸாரத்தினில் அமிழ்ந்தானே.

3 சாரமற்ற சம்சாரத்தில்-ஆசைவைத்து ஜீவராஜன்
போத அறிவற்று ஜீவன்-போகபோக்கிய மடைந்தானே.

## காயாபுரிவர்ணனை.

1 காயாபுரி என்னும்பட்டணம் கள்ளர் சஞ்சரிக்கும் நாடு;
ஐந்துபஞ்ச வர்ணக்கோட்டை அதற்காறு மூன்றுவாசல் பேட்டை

2 பஞ்சபூதமைந்தும் கூட்டம் பதினாறுபேர்கள் நாட்டம்
பதினாலு கொத்தளத்தில் பரவியகாவற்காரர்

3 தொண்ணூற்றாறு சேவர்கள் சுற்றுங்கோட்டைத் தானைக்காரர்
மோகவாசல் முத்திரையிட்டு தாபத்திரயத்தாளாற் பூட்டி

4 மூன்றுகுணச் சாவடியில் மூர்க்கராஜன் கொலுவந்தான்
மனதென்ற மந்திரியுடனே புத்தியென்ற பிரதானியும்

5 சித்தமென்ற சேர்வைக்காரர் இந்தப்பட்டணம் பராமரிக்க
விஷயமென்ற வீடுகட்டி விசாரமென்ற குடிகள் ஏற்றி

6 தாபமென்னும் சந்தைகூட்டி புண்யபாவமென்னும் சரக்குக்கட்டி
கோபக்காரப் பெயரன்செட்டி இந்தப்பட்டணத்துக் கடைக்காரன்

7 ஏழுகட்டரண்மனையில் இருக்குமந்தச் சரக்கறையில்
மூலஸ்தானப் பொக்கிஷத்தில் ஞானப்பொருளான ரத்னம்

8 அதை சாற்றியே கதவைப்பூட்டி நாகசர்ப்பங்களும் சுற்றிக்காவல்
சோதிர்மயமான தீபம் அது ஸ்வப்ரகாசமாகத் தோன்றும்

9 அதைக்காண மாட்டான் ஜீவராஜன் கண்கலங்கி விதிவசத்தால்
அகமென்னும் அரண்மனையில் அரசாண்டான் ஜீவராஜன்.

### விருத்தம்.

இப்படியே ஜீவராஜன் ஏகமாய் போகபாக்கியம்
தடையற அனுபவித்தான் அதனையே நித்யமென்று
புத்திரரைப் பெற்றெடுத்தான் பேரன்பேத்திகளுடனே
நித்தியமாய் சுகதுக்கங்கள் நிறைந்தபலனும் அடைந்தான்.

## ஜீவராஜன் இந்திரியாதிகளினால் கட்டுப்படுதல்.

### கண்ணிகள்.

1 விஷயாதிகள் மிகுதிப்பட்டு வீதி எங்கும் நிறைந்துகொண்டு
தடையில்லாமல் ஜீவராஜனைத் தழுவிக்கட்டவுமாச்சுதே

2 மனம்புத்தி பிரதானிகள் வந்துவகையாய் வளைந்துகொண்டு
மதிமயக்கி ஜீவராஜனை வசம்பண்ணவு மாச்சுதே

3 காமக்குரோதக்கள்ளர்வந்து கட்டி யுருட்டி ஜீவராஜனை
முஷ்டி யுத்தம்பண்ணி ஜீவனை மோசம்பண்ணலு மாச்சுதே

4 மாயையென்னும் அவித்தையவள் வந்துவகையாய்வளைந்து கொண்டு
மதிமயக்கி ஜீவராஜனை வசம்பண்ணவு மாச்சுதே.

### விருத்தம்.

ஏதடா இந்தகோஷ்டி இனிப்பொறுக்கக் கூடவில்லை
சோதித்துப் பார்ப்பளவில் சாரமாய்த் தோன்றவில்லை
தீதடா ஜகத்தின்மாயை தியங்கியே தவிக்கின்றேன் நான்
சாகரத்தினலைபோலத் தளும்புகிறான் ஜீவராஜன்.

## ஜீவராஜன் புலம்பல்.

### கண்ணிகள்.

1 என்ன செய்வேன் ஜகதீசா-நானேது செய்வேன் சர்வேசா
என்ன செய்வேன் ஏது செய்வேன் ஒடும்வழி யொன்றுங்காணேன்

2 கட்டுப்பட்ட கள்ளன்போல-காவலில் அகப்பட்டேனே
சுற்றிச் சுற்றிப் பார்க்க எங்கும்-உற்றதுணை ஒருவரில்லை

3 சேற்றுக்குள்ளே கால்வைத்தாப்போல்-தியங்கித் தவிக்கின்றேனே
பூர்வ ஜன்மஞ் செய்தவினையால்-புலம்பித் தவிக்கிறேனே

4 பட்டசுகம் போதுமய்யா-பரமேச்வரா துணையும் வேணும்
ஆசையென்ற வலையிற்பட்டு-அலைந்தலைந்து மிருகம்போ லானேன்

5 போக்கிவிடும் எந்தன்மாயை-புருஷோத்தமா சரணமய்யா
நீக்கிவிடும் என் துயரம்-நீலகண்டா சரணமய்யா.

## ஜீவராஜன் தெய்வத்தைத் துதித்தல்.

1 ஆகாச வாணியே பூமாதேவி என் தாயே
அண்டர் முனிவரும் போற்றும் சதாசிவா சரணம்

2 காளகோடி விஷம் புஜித்தீர் காமனைத் தகித்தீர்
மார்க்கண்டருக்கு வரங்கொடுத்த வாஞ்சை என்மேலில்லையோ

3 ஸ்ரீராம ராமா என்மேல் சித்தமிரங்காதோ ஸ்வாமி
சிலையைப் பெண்ணாக்கிவைத்த சீர்பாதம் துணையே

4 பாண்டவர்க்குப் பற்றளித்தீர் பார்த்தசாரதியாய் ஜயித்தீர்
பக்திபண்ணும் பிரசலாதற்கு நித்யமுக்தி கொடுத்தீர்

5 துரோபதைக்கு மானங்காத்தீர் கஜராஜனை ரக்ஷித்தீர்!
சரணமென்ற விபீஷணர்க்கு லங்கா சாம்பிராஜ்யங் கொடுத்தீர்

6 கருணையுடன் காகா சுரனை காத்து ரக்ஷித்தீர்
ஜனனமரண பயங்கள் தீர்த்து அபயந் தாருமையா

7 மாயாவித்தை சம்சாரத்தில் மயங்கியே மிகத்தளர்ந்தேன்
கிருபையுடனே என்னைக் காத்து அபயந் தாருமையா

### விருத்தம்

புலம்பியே ஜீவராஜன் விரும்பியே சம்சாரத்தை
நழுவவே விட்டுவிட்டான் நன்மையுண்டாகு மென்றே
கலங்கியே எங்கிமெத்தக் கவலைகள் மிகுதியாகி
தியங்கியே ஜீவராஜன் தியானத்திலே இருந்தான்.

### விருத்தம்.

பரமாத்மா தானுமப்போ பக்தனுக் கருளவேண்டி
ஜீவனுட பரிதாபத்தை சிந்தையிலே தானறிந்து
மாராடி வேஷங்கொண்டு வஞ்சிபோல் வடிவெடுத்து
போதித்து அவர் செவியில் புண்ணிய நீராட்டிவைக்க
சாதித்து வஞ்சிவேஷம் தானுமப்போ கொள்ளுவாரே.

## பரமாத்மா வஞ்சிவடி வெடுத்தல்.

கண்ணிகள்.

1 இந்திரவாளிப் பட்டுடுத்தி ஏகாஸனத்திருந்து
மந்திரத்தால் மயிர்சீவி மல்லிகையும் முடித்தாள்

2 வியஷ்டி என்ற விபூதி விந்தையாகப்பூசி
சமஷ்டியென்ற நெற்றியினில் சாந்துப்பொட்டு மிட்டாள்

3 சாதன சதுஷ்டியத்தால் சந்தனங்கள் பூசி (அம்மே)
குங்கும கோரோசனங்கள் கொங்கையின் மேலணிந்தாள்

4 வேதமென்னும் பொன்னோலை விந்தை மயில்கொப்பு
பாவாபாவ மென்னும் சிரத்தையான பட்டமவள் கட்டி

5 அம்சோக மென்னும் முத்துவடம் சிவசுந்தரியும் பூண்டு
சாந்த மென்னும் சங்குமணி சரப்பளியுங் கட்டி

6 சத்வகுண மென்னும் முத்து மூக்குத்தியு மிட்டு (ரத்ன)
சாக்ஷியென்னும் குறவப்பெட்டி சந்ததமும் இடுக்கி

7 தத்வமஸி என்னுமந்தக் கடகவளையிட்டு
சர்வம் ஏகமென்னுமந்த சரிபவழங்கட்டி

8 காரணங்க ளில்லையென்று கண்ணுக்கு மையெழுதி (இரு)
போதமென்னும் குங்குமங்கள் பொற்கொடியு மிட்டாள்

9 பாக்கியமென்னும் ஒட்டியாணம் மேகலையிற்கட்டி (அம்மை)
வேதாந்தத் தண்டையிட்டு வெண்டயங்கள் பூண்டாள்

10 பரிபூரண மானதொரு பாலமுதம்புஜித்து (திவ்ய)
பரமாத்மா வென்னுமந்தப் பாதக்குறடேறி

11 பக்தியென்னுந் தாம்பூலம் ஹஸ்தந்தனில் பிடித்து (திவ்ய)
சிரத்தையென்னும் பொற்பிரம்பு (சிவ) சங்கரி கைப்பிடித்தாள்

12 நித்தியமென்னும் பாலகரைப் பக்கந்தன்னி லிடுக்கி (அம்மை)
விஸ்தாரமான வேதாந்த வீதியினில் நடந்தாள்

13 மங்கையர்கள் இருபுறமும் மங்களங்கள்பாட (ஜய)
கொம்பனைமார் கூடவர குலுக்கியவள் நடந்தாள்

14 அஷ்டதிக்குப் பாலகர்கள் புஷ்பமாரிசொரிய (சொர்ண)
ஆனந்தவேதக் குறவஞ்சி வந்தாளய்யா

15 சந்ததமும் ஜீவராஜன் சிந்தைவினை தீர்க்க
மங்களமாம் பரமாத்ம வஞ்சிவந்தாளய்யா.

### குறவஞ்சி ஜீவராஜன் சபைக்கு வருதல்.

பல்லவி.

வஞ்சி வந்தாளய்யா-பரமாத்மக்குற
வஞ்சி வந்தாளய்யா,

அநுபல்லவி.

வஞ்சிவந்தாளய்யா மண்டலந்தன்னிலே
பிண்டாண்டபாவங்கள் சந்தேகந்தீர்க்க (வஞ்சி)

சரணங்கள்.

1 சிங்கியடித்துக்கொண்டு சிங்காரமாகவே
பங்காளதேசத்துப் பாட்டுப்பாடிக்கொண்டு
கொஞ்சிக் கொஞ்சிக் குலாவிய கை வீச்சும்
கங்கணம் கை வளை கிண்கிணென்றசைய (வஞ்சி)

2 மயக்கியே கண்ணை உருட்டிவிழிப்பள்
மாயையை சம்ஹாரம் செய்வேனென்பதுபோல்
குலுக்கியே ஜீவேசன் சொலுவுக்கு எதிராக
குங்கும சந்தனம் குமுகுமென்று மணக்க (வஞ்சி)

3 விஸ்தாரமாகவே வேதாந்தவீதியில்
விஷயங்களெல்லாம் வீறிட்டு ஓடவே
தண்டை சதங்கை சலுஞ் சலுமென்னவே
சந்தோஷமாய் ஜீவன் சபைதனிலிப்போ (வஞ்சி)

குறத்தி ஜீவராஜன் வாசல் வளமை உரைத்தல்.

வாசலெது வாசலெது அம்மே மகாராஜன் வாசலெது
ஜனனமற்றோர் வாசலெது அம்மே ஜீவேசன் வாசலெது
மரணமற்றோர் வாசலெது அம்மே மக பிரம்மவாசலெது
பக்தியுள்ளோர் வாசலெது அம்மே பரப்பிரம்ம வாசலெது
சிரத்தையுள்ளோர் வாசலெது என்று சேர்ந்துநின்றாள் பொற்குறத்தி

விருத்தம்.

வந்ததோர் குறத்திதன்னைக் கண்டுமந்த ஜீவராஜன்
எங்கேயுங்கண்டதில்லை பங்காளக்குறத்தியிவள்
இங்கிதமாய்க்குறிகேட்டு ஈடேறவேண்டுமென்று
சிந்தையில் மகிழ்ச்சியுடன் ஜீவராஜன்கேட்கலுற்றான்.

ஜீவராஜன் குறத்தியைக் கேட்குதல்.

1 எங்கிருந்தெங்கு வந்தாய்குறத்தி நீ பங்காளதேசந்தானோ
உன்னை எங்கேயுங்கண்டதில்லைகுறத்தி நீ எழைபோலிருக்கிறாய்

2 சந்திரமண்டலந்தனிலிருந்துகுறத்தி நீ வந்தாயோ மயக்குகிறாய்
தந்தை தாயாரு முண்டோ குறத்தி நீ தன்னிலுதித் தவளோ

3 சங்கரர் பார்வதியோ குறத்தி நீ சதுர்முகன் தேவியரோ
மங்களமாக வந்தாய் குறத்தி நீ மகா லக்ஷ்மி நீ தானோ

4 சிங்காரமாக வந்தாய் குறத்தி நீ ஸ்ரீபூமி தேவியரோ
பிள்ளைகுட்டியு முண்டோ உந்தனுக்கு புருஷனுந் தானுமுண்டோ

5 நீ இருப்பது எந்தமலை குறத்தி நீ நடப்பது எந்தநாடு
விருப்பமாய்ச் சொல்லெனக்கு குறத்தி நீ வேதாந்தக் குறத்தியரோ

6 உன்பேரென்ன ஊருமெது குறத்தி நீ பெருமைகளெல்லாம் [சொல்வாய்
உன்நாடு நகரைச் சொல்வாய் குறத்தி நீ நாதாந்தக் குறத்தியரோ

விருத்தம்.

பேர்சொல்லு மென்கலுமே பெருமையுடனே குறத்தி
குலுக்கியவள் சிரித்துக் கூடையைக் கீழேவைத்து
மடித்தந்தக் காலைவைத்து மந்திராஸனங்கள் போட்டு
வடக்கு முகமாயிருந்து (நாட்டு) வளப்பமுஞ் சொல்லுவாளே

குறத்தி ஜீவராஜனுக்குத் தன் வளமையுரைத்தல்.

கப்பல்.

1 பேர் சொல்வேன் நீர்கேளும் — ராஜே
பேரும் பரமாத்ம வஞ்சி

2 ஊர் சொல்வேன் நீர்கேளும் — ராஜே
ஓங்காரப் பட்டணங்காண்

3 மலை சொல்வேன் நீர்கேளும் — ராஜே
மந்திரகிரிப் பர்வதங்காண்

4 தந்தையுமே சங்கரனார் — ராஜே
தாயுமந்த உமையவளே

5 ஆதி யென்ற என் புருஷன் — ராஜே
அமர்ந்திருப்பார் என்னருகில்

6 அவித்தை யென்ற சக்களத்தி — ராஜே
அமர்ந்திருப்பாள் என் நாட்டில்

7 அகண்ட மென்னும் பிள்ளை பெற்றேன் — ராஜே
ஆனந்தமாய்ப் பேருமிட்டேன்

8 பவபயங்கள் தீர்க்கவந்தேன் — பர
மாத்மா வென்ற வஞ்சி நானய்யா

முடுகு.

9 மலையாளந் தென்காஞ்சி வாழ்மதுரை தன்னில்
வலசையாகக் குடியிருக்கும் வஞ்சி நானையே

10 பக்தியென்னும் கைலாஸ பர்வதத்தி லிருப்பேன்
சிரத்தை யென்னும் மகமேரு (உப) சாந்திமலை அய்யே

11 வித்தையென்னும் வேதகிரிப் பர்வதத்தினருகே
உச்சிதமாம் மூலிகைகள் மெத்தமெத்த உண்டு

12 பூலோகம் புவர்லோகம் வாழுமெந்தன் நாடு
புருஷார்த்தம் கொடுக்குமெந்தன் நாடு நல்ல நாடு

13 நால் வேத சாஸ்திரமும் நடக்குமெந்தன் நாடு
நாதாந்த வேதாந்த நகரி எங்கள் நாடு

14 அத்வைத மகரந்த மானதெங்கள் நாடு
ஆத்மபோத வாக்கிய விருத்தி யானதெங்கள் நாடு

15 அன்னதான முழங்குமெந்தன் நாடு நல்ல நாடு
ஆதிபுராணங்கள் அவதரித்த நாடு

16 ஸ்வர்ணதானங் கொடுக்கு மெங்கள் நாடு நல்ல நாடு
சித்தாந்த யோகியர்கள் சஞ்சரிக்கும் நாடு

17 மந்திரங்கள் ஓதிவைப்பேன் மருந்துகளு மறிவேன்
மதிமயக்கம் தீர்வதற்கு மாத்திரையு முண்டு

18 பிரமாண்ட மண்டலங்கள் சஞ்சரித்து வருவேன்
பங்காளக் குறத்தியென்னும் வஞ்சி நானையே

விருத்தம்.

நாடு நகரி எல்லாம் நன்றாகச் சொல்லி வந்தாய்
விருப்பமுடன் கேட்டு வேதனை எல்லாம் தீர்ந்தேன்
சாதகமாய் எந்தனுக்குத் தக்ககுறி சொன்னாயானால்
நாடு நகர மெல்லாம் நான் தருவேன் நாயகியே

ஜீவராஜனுக்கு குறத்தி குறி சொல்லுதல்.

கண்ணிகள்.

1 குறிசொல்வேன் கேளுமையே கும்பிடுங்காண் உன்குருவை
தடையறவே சொல்லுகின்றேன் தக்ககுறி கேளுமையே

2 சம்சயங்கள் வாராது சங்கரனார் கிருபையாலே
(பணிந்து) அம்பிகையை ஹிருதயந்தன்னில் கொள்ளுங்குலதெய்வ
[மாச

3 களங்கமில்லாரூபங்கண்டு களித்திருப்பீர் ஐயாவே
காயாபுரி நடுவிருக்கும் ஜோதி ரூபமான தெய்வம்

4 காரணரைத்தியானம்பண்ணி கண்டுகொள்வீர் ஐயாவே
(அம்மை) பூர்ணபதாம் புஜரஸத்தை புஜித்திருப்பீர் ஐயாவே

5 முக்தி என்ற முத்தை வைத்து (குண) மூன்றாகப் பிரித்து
சாக்ஷி என்ற குருநாயனை வணங்கிக் குறிகேளும்

6 சித்தந்தன்னில் குருராயரை நித்தியம் பூஜை பண்ணி
சித்தா ஸனந் தனிலிருந்து சிரத்தையுடன் கேளும்

7 அஸ்தந்தனைக் காட்டும் அகமென்ற பேயை ஓட்டும்
வஸ்துவென்னும் குருராயரை வணங்கிக் குறிகேளும்.

### குறத்தி தன் தெய்வத்தை வேண்டிக் கொள்ளுதல்.

கண்ணி

1 மலையாள பகவதி என் முன்னே வந்துநீ
வாக்கிலே நில்லடியம்மே

2 பங்காள தேசத்து ஒங்காளி நீ வந்து
ஒக்கத்துணை யிரும் அம்மே

3 ஸ்ரீ கணநாயகி திருபுர சுந்தரி எந்தன்
சித்தத்தில் நில்லடி யம்மே

4 பக்தியுடன் எங்கள் பர்வத வர்த்தனி
என் பங்கில் நில்லடி யம்மே

5 நிச்சயமாய் ஜீவேசன் நினைத்த குறிசொல்ல
உச்சிதமாகவே எனக்கு

6 எல்லா புரியிலும் வாழும் கொல்லம்மா நீ வந்து
கூடத்துணை யிரும் அம்மே.

### குறத்தி ஜீவராஜனுக்கு இனி நடக்கும் குறிசொல்லுதல்

நலங்கு மெட்டு.

1 ஜீவேஸ்வர பாவங்கள் தெரியச் சொல்லுகிறேன்
சின்மய ரூபத்தைத் தன்னிலறிவீர்

2 மாயா விகாரங்கள் மயக்கமுந் தெளியும்
மகராஜ குருராஜர் வருவார்காண் அய்யே

3 கண்டே களைதெளிவீர் எதிர் கொண்டே அடிபணிவீர்
பிண்டாண்ட பாவங்கள் சந்தேகந் தெளிவீர்

4 நிர்க்குண ரூபா நித்திய நிர்மல சித்தா
சத்தியமாய்க் குறிசொன்னேன் ஸாம் பிராஜ்ய மோக்ஷா

5 பயமில்லை குறிசொன்னேன் சிவபாலர் சாட்சி
ஸ்திரமாக சாம்பிராஜ்ய ஜயமுண்டு உமக்கு

கண்ணிகள்.

1 சண்டை கொள்வான் என் கணவன் வந்துவெகு நேரமாச்சு
அன்னமிடுங்காண் ராஜாவே அகண்ட பரி பூரணரே

2 பசித்தழுரான் எந்தன் பாலன் பாலடிசில் அமுதளியும்
க்ஷணத்திலே என் விடுதியிற் போய் திரும்பி வருவேனையே

3 ஸ்திரமாக நீர்வாழ்ந்திருப்பீர் ஜனன மரணபயங்களில்லை
..ய பரப்பிரம்மத்தைக் காணப் போகிறீர் அய்யே

**மாயாக் குறவன் வருதல்.**

1 கறுப்புக்கச்சையுங் கட்டிக் கொண்டு
கன்னக் கோலுங் கையிற் பிடித்து

2 கோணக் கொண்டையும் கொக்கும் கையுமாய்க்
கோணங்கிச் சிங்கனுந் தோணினானே

3 கறுப்புக் கச்சையும் காங்குரு மாலையும்
கையிலே பிடித்த அம்புடன் வில்லும்

4 கொக்குச் சுடுந் துப்பாக்கியும் கையுமாய்
கோணங்கிச் சிங்கனும் தோணினானே

5 ஈரேழுலகமும் சஞ்சரிப்பவன் இந்திரஜாலம் படித்திருப்பவன்
கன்னமிடுவென் மண்டல மெங்கிலும் சின்மயக் குறவனுந்தோணி
[னானே

**மாயாக் குறவன் வஞ்சியைத் தேடுதல்.**

பல்லவி.

வஞ்சியைக்காணேனே எந்தனுட
வ(

அனுபல்லவி.

வஞ்சியைக்காணேனே மண்டலந்தன்னிலே
எங்கே ஒளித்தாளோ கண்டவருண்டோ

சரணங்கள்.

தங்கப்பணிகள் பூணுவள் யார்க்கும்
சந்தேகநிவர்த்திகள் பண்ணுவள்
இங்கிதமாகவே பாடுவள் அவள்
தன்மயமாயென்னைச் சேருவள் (வஞ்சி)

2 சுத்தவெளிதன்னில் இருப்பள் அவள்
சோகித்தபேரை ஆதரிப்பள்
சச்சிதானந்தத்தைப் பணிவள் அவள்
சித்துப்பிரமமென்று பாடுவள் (வஞ்சி)

3 பஞ்சாக்ஷரந்தன்னைப் படிப்பள் அவள்
பகட்டியே ஜகந்தன்னை மிரட்டுவள்
சின்மயரூபத்தைக் காட்டுவள் இந்த
ஜகத்தினைப்பொய்யென்று ஓட்டுவள் (வஞ்சி)

விருத்தம்.

வந்ததோர்குறவன் தன்னைக் கண்டுமெந்தப்பூங்குறத்தி
மூக்கால்வலம்வந்து மூவிருகால்தண்டனிட்டு
விந்தையாய்வேஷங்கொண்ட இருவரும்வார்த்தையாடி
ஓராசனத்தில் உடனாகவீற்றிருந்தார்.

**மாயக்குறவனுக்கும் குறத்திக்கும் தர்க்கம்.**

1 இத்தனை நாள் என்னை விட்டு எங்கேபோனாய் சொல்லடி நீ சிங்கி
(இந்த) மண்டலத்து ஜீவனுக்கு மதிமயக்கந் தீர்க்கவந்தேன் சிங்கா

2 உன்னைவிட்டுப் பிரிந்தமுதல் எந்தன் மனம் மயங்குதடி சிங்கி
(இந்தத் தன்மயமாஞ் சீவனுக்குத் தன்னறிவு சொல்லவந்தேன் சிங்கா

3 அகண்டவடிவான பெண்ணே அழகுசந்தனப்பூச்சேதடி சிங்கி
ஜகமொழித்தேன் என்றராஜன் சேர்வை சந்தனம் தந்தாரடா சிங்கா

4 குமுகுமென்ன குங்குமங்கள் கூட்டுவர்க்கமேதடியோ சிங்கி
மண்டலத்து ஜீவராஜர் கந்தப்பொடி தந்தாரடா சிங்கா

5 கோலமில்லாப்பட்டுடுத்தி குலுக்குகிறாய் ஏதடியோ சிங்கி
(பஞ்ச) கோசமைந்தும் குலைத்தராஜர் கோலப்பட்டுத் தந்தாரடா சிங்கா

6 அந்தரத்தில் பறக்கும்பக்ஷி அடிமூக்கினில் வருவானேடி சிங்கி
(அந்த) அருந்தவர்க்குக் குறிகள் சொன்னேன் அன்னமூக்குத்தி தந்தாரடா சிங்கா

7 காலிலிட்டவண்டயங்கள் கலகலென்று குலுங்குதேதடி சிங்கி
காமக்குரோத மற்றராஜன் கனகவண்டயந் தந்தாரடா சிங்கா.

விருத்தம்.

வந்ததோர் சிங்கன் தன்னைக் கண்டுமெந்த ஜீவராஜன்
அனேக வகை வஸ்திரமும் ஆபரணமுங் கொடுத்து
பழத்துடனே சர்க்கரையும் பஞ்ச பக்ஷிய பரமான்னமும்
பாலுடனே நெய்யடிசில் பாலகர்க்குத் தான்கொடுக்க
போய்வாரேன் என்றுசொல்லிப் பொற்குறத்தி போய்மறைந்தாள்.

4

## ஜீவனுக்கு குருதரிசனம் ஆகுதல்:

பூபாளராகம்.

1 மகரகுண்டல மணிக்கிரீடமும் விளங்கும் கையில் ஜபமாலையும்
மகிமையாகவே மந்திர யோகங்கள் விளைந்து சுற்றிலும் புகழவே

2 விசுவவ்யாபியின் லலாடந்தன்னிலே விபூதி ரேகையுந் துலங்கவே
ருத்திராக்ஷமாலையும் ரத்னப்பணிகளும் தகத்தகாயமாய் மின்னவே

3 அஷ்டயோகங்கள் அப்பியசிக்கவே (காம) துஷ்டர்கள் ஒதுங்கிவாடவே
கஷ்ட ஜன்மத்தைக் கரையிலேற்றவே காமக்குரோதங்கள் ஒழியவே

4 சகலசாஸ்திரங்கள் சம்மதிக்கவே உபசாந்தி தாண்டவமாடவே
பவக்கடலுக்குத் தெப்பமாகிய பரமகுருவந்து தோணினார்

5 வந்தாரய்யா குருராயர்விடுதியில் சிந்தைமகிழ்ந்து ஜீவராஜனை
அந்தரங்கமாய் ஆதரிக்கவே ஆதிகுருவந்து தோன்றினார்.

### விருத்தம்.

வந்தகுரு ராயர்தன்னைக் கண்டுமந்த ஜீவராஜன்
எதிர்கொண்டு ஓடிவந்து ஏகாஸனத்தில் வைத்து
விந்தையாய்ப் பூஜைசெய்து விருப்பமாய் வணங்கிநின்று
கூப்பி இருகைகளினால் ஸ்தோத்திரங்கள் பண்ணலுற்றான்.

## ஜீவராஜன் குருவைச் சரணமடைதல்.

பூபாளராகம்.

6 சரணம் சரணம் ஸ்ரீகுரேச்வரா சரணம் அபயப்பிரதாயகா
சரணம் நீலகண்ட சங்கரா சரணம் ஸ்ரீகுருநாயகா

7 சரணம் வேதாந்த சாஸ்திர சன்னுதா சரணம் அபயப்பிரதாயகா
சரணம் போதநித்திய தாயகா சரணம் ஸ்ரீகுருநாயகா

8 சரணம் பஞ்சகோசமத்யகா சரணம் அபயப்பிரதாயகா
சரணம் தேவ சுரேந்திர சன்னுதா சரணம் ஸ்ரீகுருநாயகா.

### அகவல்.

சரணஞ் சரணமய்யா சத்குருவே சரணமய்யா
அபயமபயமய்யா ஆண்டவரே அபயமய்யா
ஸ்திரமாக ரக்ஷிக்கும் ஸ்ரீகுருவே சரணமய்யா
பவபயங்கள் தீர்க்கவந்த பரமகுருவே சரணமய்யா
சரணஞ் சரணமென்று ஸ்ரீபாதந் தன்னிற் பணிந்தான்.

## ஜீவனுக்கு குருமூர்த்தி அபயமளித்தல்.

பல்லவி.

எழுந்திருங்காண் ஜீவராஜா உம்மைக்
கரை ஏற்றி ரக்ஷிப்பார் கைலாஸ வாஸர் (எழுந்)

சரணங்கள்.

1 அக்கியானந் தன்னை விட்டீரோ இந்த
அகமென்னும் சம்சாரத்தாசை விட்டீரோ
சுக்கியான ரூபமானீரோ ஜீவா
சுகமான ஸ்ரீகுரு பாதங்கண்டீரோ (எழுந்)

2 அவித்தையைத் தள்ளிவிட்டீரோ
ஆனந்த ரூபத்தை அடைந்திருப் பீரோ
பிரகிருதியின் நிவர்த்தி யானீரோ
பவதாய மார்க்கங்கள் படித்தறிந் தீரோ (எழுந்)

3 மந்திரயோக மறிந்தீரோ இந்த
மகாராஜ யோகத்தின் மார்க்கங் கண்டீரோ
கண்டித்துப் பவந்தள்ளினீரோ
பிண்டாண்ட பாவங்கள் கண்டறிந்தீரோ. (எழுந்)

விருத்தம்.

இப்படியே குருராயர் ஏகாந்த மாகவேதான்
அழைத்து மடியில்வைத்து ஆசீர்வாதங்கள் பண்ணி
தடவியே முதுகுதன்னைத் தன்யன் நாம் செய்வோமென்று
உகிழவே உம்முடைய மனோபாவம் சொல்லுமென்றார்.

## ஜீவன் குருவை வேண்டுதல்.

பத்தியம்.

1 பாவானுபாவமும் பரிபூரணு உம்முடைய
பாதகமலமே எந்தன் பாக்கிய மய்யா
சகல சாஸ்திரங்களும் சத்குருவே உம்முடைய
வாக்கியமே வேதாந்த வாக்கிய மய்யா
ஸ்ரீகுருகிருபை யெனக்குச் சித்தியுண்டாகவே
சிதானந்த ரூபத்தைக் காட்டு மய்யா
அனுபோக மார்க்கங்கள் அறியவே எந்தனுக்கு
ஆதரவுடனே நீர் சொல்லு மய்யா.

முடுகு.

(உம்முடை) சகவாசம் சாம்பிராஜ்ய மோக்ஷமய்யா
சச்சிதானந்தமே நீர் தாமுமய்யா
தாஸனாய் என்னை நீர் ஆளுமய்யா
சம்சயங்கள் இல்லை இது சத்தியமய்யா.

குருநாதர் ஜீவனுக்கு உபதேசித்தல்.

பத்தியம்.

2 பளா பளா ஜீவேசா (உன்) பக்தி உச்சித மய்யா
பரிபக்குவ காலங்கள் ஆச்சுதய்யா
சம்ஸார சாகரத்தைத் தள்ளிக்கரை ஏற்றியே
(சச்சி) தானந்த சாம்பிராஜ்யம் வாய்க்குமையா
ராஜயோக மார்க்கங்கள் ரமணீயமாகவே
பாவித்துப் பார்த்தால் பிரகாசமய்யா
கண்டித்துப் பார்த்தால் கரதலாமலகம் போல்
சோதித்துப் பார்த்தால் (சுயம்) பிரகாசமய்யா

முடுகு.

சாதித்துப்பார்க்க ஜகம் அநித்தியமய்யா
தாரகா உபதேசம் கேளுமய்யா
சாக்ஷியே நீர் தானென்று எண்ணுமய்யா
சம்சயங்கள் இல்லை இது சத்தியமய்யா.

விருத்தம்.

இப்படியே குருஸ்வாமி ஏகாந்தமாகவே தான்
வா என்றழைத்து வலச்செவியில் போதித்து
தாரக உபதேசம் சாந்தியுடன் பண்ணிவைத்து
ஸ்வரூப மென்னும் ஆனந்த சுகந்தன்னை அடைவீரென்றார்.

ஜீவன் குருசுவாமியைத் துதித்தல்.

பல்லவி.

தன்யனானேன் ஐயா
புனிதனானேன் ஸ்ரீ குருநாதா.

காமக் குரோதக் காடுகள் வெட்டி
ஞான ரத்னம் வெளிப்படுத்தி
சாதித்து நல்ல மார்க்கம்
தன்னிலே கண்டேனய்யா (தன்)

மண்டலங்கள் சுற்றி வந்தேன்
மந்திர ஜபங்கள் ஜபித்தேன்
ஒன்றாலும் ஐயங் காணுமல்
(மதி) தன்னிலே ஐயமடைந்தேன் (தன்)

விருத்தம்.

இப்படியே ஜீவராஜன் ஏகாந்தமாகவே தான்
புத்திர மித்திர களத்திர இந்திரியாதி விஷயமெல்லாம்
அவித்தை வியாபார பந்தமென்று தானறிந்து
நேமத்துடனேயிருந்து போதந்தன்னை யறிந்து
சேவித்துச் சற்குருவை சிந்தை மயக்கந் தெளிந்து
பாவித்துப் பிரம்மமயமாய் சேவித்தான் தன்னுக்குள்ளே.

ஜீவராஜன் காயாபுரியில் தீர்த்தயாத்திரை செய்தல்.

நோட்டு மெட்டு.

கண்ணிகள்.

1 நித்தியகர்ம அனுஷ்டானம் சிரத்தையுடனே பண்ணிக்கொண்டு
சித்த தீர்த்தயாத்திரை பண்ண ஜீவராஜனும் புறப்பட்டான்

2 காசிகங்கை கமலாலயம் காவேரி சையபர்வதமும்
திருவண்ணமலை ஸ்ரீரங்கம் சேவித்தேன் திருப்பதி காஞ்சீபுரம்

3 வேதாரண்யம் பஞ்சநதம் விருத்தாசலமும் நான் கண்டேன்
கோடி காசி கும்பகோணம் பிரயாகை கங்கை ராமேஸ்வரம்

4 அனந்தசயனம் ஜனார்த்தனம் திருக்குற்றால நாதரை நான் கண்டேன்
பாவந்தீர்க்கும் மத்யார்ச்சுனம் பாபவிநாசம் நான்கண்டேன்

5 திருவாரூர் ஸ்ரீவாஞ்சியம் திருக்கணமங்கையை நான் கண்டேன்
மன்னார் கோவில் சங்கமுகம் மயூர நாதரை நான் கண்டேன்

6 ஸ்ரீமதுரை கைலாஸபுரி புஷ்பவனகாசியும் நான் கண்டேன்
சீர்காழி தில்லைச் சிதம்பரமும் திருப்பாடலி நாதரை நான் கண்டேன்

7 அழகர் போற்றும் அந்தச்சோணமலை ஆகாசகங்கையும் நான்கண்டேன்
திருபுவனநாதரைத் தரிசித்தேன் திரும்பியுங் காயாபுரி வந்தேன்

8 பக்தி என்னும் கஜ்ஜை கட்டிக்கொண்டேன் சிரத்தை என்னும் செருப்
[புப் போட்டுக்கொண்டேன்
வைராக்கிய மென்னும் நல்லவாள் பிடித்தேன் குரு வென்னும் கோடாலி
[கைப்பிடித்தேன்,

12 காலாந்தகி என்கிறாய் என்னை ஜீவன் கருத்திலறிந்துகொண்டு
இக்கரையில்வந்து என்னைாகஷி என்று ஏற்றித்தொழுதான் போடி.

### விருத்தம்.

அதட்டியே வித்தைதள்ள திரும்பியந்த மாய்கைதானும்
மயங்கியே மனதுநொந்து மகாராஜ ஜீவன்மீதில்
பிதற்றியே பேய்போலேங்கிப் பெருமூச்சு மிகுதியாகி
தயங்கியே மிருகம்போல தன்னிலே புலம்புவாளே.

### வித்தையால் தள்ளப்பட்ட அவித்தை புலம்புதல்.

### கண்ணிகள்.

1 ஐயையோ வித்தைகையால் நான் அடிபட்டு நொந்தேன் ஐயோ
பெண்பிள்ளை பிறவி என்று நான் பேராசை வைத்தது பொய்யோ

2 பஞ்சமகாபாதக ஜீவமகாராஜனுக்குத் தயவில்லையோ
அனந்தங்கோடி ஜன்மங்களுக்கு ஆசைவைத்துக் கொண்டிருந்தேன்

3 பவக்கடலைத்தாண்டி என்னை நடுக்கடலில் கைவிட்டாரே
போதித்தாளே பிருமவித்தை ஜீவன்கரை ஏறவேண்டி

4 போதித்தென்னை வெளியில்தள்ளி பிரும மயமாக்கினாளே
சோதித் தென்னைத் தூரத்தள்ளி சுகந்தன்னை அடைந்தாரே ஜீவன்

### விருத்தம்.

மாயையும் தான்புலம்பி மகதத்வஞ் சேர்ந்தபின்பு
திருப்தியாய் ஜீவராஜன் சிந்தைமனமகிழ்ந்து
ஆனந்த பாஷ்பத்தால் குருவை அபிஷேகம் பண்ணிவைத்து
நேத்ர கமலத்தால் நிறையவே அர்ச்சித்து
சோடச உபசார பூஜைகளும் தாம்பூலம் சமர்ப்பித்து
உதித்தெழுந்த சூரியன்போல் புடமிட்ட தங்கம்போலே
மருவற்ற சந்திரன்போல் மறைந்த பொருள் கண்டதுபோல்
வந்தனங்கள் பண்ணி மலரடியிலே பணிந்து
கூப்பியிரு கைகளையும் ஸ்தோத்திரங்கள் பண்ணலுற்றான்.

### ஜீவராஜன் குருவைத்துதித்து ஆனந்த மடைதல்.

### பல்லவி.

ஐயா ஆனந்தமானேன் ஐயா ஸ்ரீகுருநாதா
ஐயா ஆனந்தமானேன் ஐயா.

சரணங்கள்.

1 தள்ளிப்பவக் கடலைத்தாண்டி சுகஸ்வரூபம்
கண்டு பிரும நிலையை வேண்டி பக்தியுடனே
பிருமவிசாரணையும் சைதன்ய விதேகமும்
குண்டலி பேதித்து மண்டலங் கண்டேன் (ஐயா)

2 மாயா விகாரந்தன்னை விட்டு ஸ்தூல சூக்ஷ்ம
காரணக் காயந் தன்னைச் சுட்டு
சாக்ரஸ்வப்ன சுஷுப்தியைத் தள்ளி ஏகபட்டு ஆதாரமாக
பூஜித்து சிரத்தையுடன் கோஷித்து நாதத்தை
யோகநிதானம் அனுபவித்தேன் ஐயா (ஐயா)

3 ஜகதியைப் பொய்யென்று நானெண்ணி சுகஸ்வரூபம்
தான் தானே என்று நிச்சயம் பண்ணி பிரபஞ்சம் எங்கும்
பரப்பிரும்ம சொரூப பாவனை பண்ணி பக்தியுடன்
பூஜித்து சிரத்தையுடன் கோஷித்து நாதத்தை
பாவித்துப் பரஞ்சோதியைச் சேவித்தேன் ஐயா (ஐயா)

ஜீவன் தானடைந்த அனுபவாநந்தம் வெளியிட்டுரைத்தல்.

கண்ணிகள் (கோலாட்ட மெட்டு)

கோலுக் கோலெனக் கொலே-கோலெனக் கொலே
கோலு பரதேவிக்கு-செங்கோலுக் கொலே

1 ஆனந்தமானந்தமையா ஆதிகுருவே பர
மானந்த மானேன் பரஞ்சோதிவடிவே

2 நித்யசுத்த புத்தமுக்த நிர்விகாரணரே என்
சித்தத்தில் வந் துதித்த சின்மய மூர்த்தே

3 பவபய மறுக்கவந்த பஞ்சரத்னமே எந்தன்
குணத்திரயங்களுக் காதார குணரத்னமே

4 சின்மய மாகுமிந்த ஜீவரத்னத்தை நீர்
அனுசரித்து ஐக்கியம் செய்த ஆதிரத்தினமே

5 மகாவாக்கிய தத்துவத்தால் மந்திரயோகத்தால் என்னை
கரை ஏற்றி இரக்ஷித்த கருணா ரத்தினமே

6 கண்டேன் ஐயா ஜகஸ்வப்பிர காசவடிவை இந்த
மண்டலத்தில் வந்துதித்த மந்திர மூர்த்தியை

7 தாகிருதி கிருதோமென்று-ஆடினனே ஜீவன்
தானேதானனே மென்று பாடினனே

8 நானே தன்யன் நானேதன்யனென் றாடினனே ஜீவன்
நாதமென்ற வீணைகொண்டு பாடினனே

5

9 மிருத்யுவின் சிரசில் மிதித் தாடினுனே ஜீவன்
மீண்டும் ஜனனமற்றுப் பாடினுனே

10 அன்று மின்றும் ஏகமென்று ஆடினுனே மாய்கை
ஆபாஸக் கூத்தைவிட்டுப் பாடினுனே

11 பரமானந்தப் பாதக்குறட்டில் ஏறினுனே ஜீவன்
பாடியே தம்பூர் எடுத்து ஆடினுனே

12 அம்ஸோக ஸோகமென்று ஆடினுனே ஜீவன்
ஆனந்த உடுக்கைத்தட்டிப் பாடினுனே.

ஜீவராஜன் பிரும்மத்துடன் ஐக்கியமடைதல்.

விருத்தம்.

ஜீவனுந்தான் மகிழ்ந்து ஸ்ரீகுருவைப் பணிந்து
அபராதங்கள் பொறுத்து கிருபை செய்ய வேணுமையா
உபகாரம் பண்ணவென்றால் ஈடொன்றுங் காணுமையா
காக்ஷியுள்ள ஜீவாத்மம் காணிக்கையாக வைத்தேன்
ஜனன மரண மிழந்தேன் சாம்பிராஜ்ய மோக்ஷமடைந்தேன்
பரமாத்மாவே உம்முடைய பாதபத்மம் நானடைந்தேன்
பக்தியுடன் ஜீவராஜன் பரிபூர்ணமா யிருந்தான்
பரத்துடனே ஜீவன் பரிபூர்ணமாய்க் கலந்தான்.

மங்களம்.

சாவேரி ராகம்.

பல்லவி.

நித்தியானந்த ரூபருக்கு நித்திய ஜயமங்களம்

சரணங்கள்.

1 முக்தனும் ஜீவனுக்கு மோக்ஷ மளித்த வருக்கும் (நித்)
2 கோமள வடிவாய் வந்த பரமாத்மக் குறத்தியர்க்கும் (நித்)
3 பவபாசம் விலக்கவந்த பரமகுரு மூர்த்திக்கும் (நித்)
4 ஆத்ம நிஷ்டாளுடனே அகில ஜனங்களுக்கும் (நித்)
5 சச்சிதானந் தருக்கும் சர்வவியா பகர்க்கும் (நித்)
6 சிரத்தையுடனே ஜீவ நாடகம் படிப்பவர்க்கும் (நித்)

ஓம் தத் ஸத்.

---

பரதேவி துணை

## அத்வைத கோட்டை முத்துக் கும்மி.

1 சற்குரு பாதத்தைத் தான் பணிந்து
சந்தோஷ மாகவே பூஜை பண்ணி
விஸ்தார அத்வைதக் கும்மி பாட

சித்தி விநாயர் காப்பாமே-பரா
சக்தி விநாயகர் காப்பாமே.

2 ஈஷணையாகின்ற காடுதிருத்தி
இசைந்தவேலியுந் தானெடுத்து
விகல்பமற்ற வேதாந்தவெளியினில்
கொட்டைமுத்துவிதை போடலுற்றாள்-ஞானக்
கொட்டைமுத்துவிதை போடலுற்றாள்.

3 சுத்தமென்கிற ஜலம்பாய்ச்ச
முக்தியாகின்ற முளைமுளைக்க
புத்தியென்கின்ற பூக்களும் பூக்க
போதமென்கிற காய்காய்க்க-ஞான
போதமென்கிற காய்காய்க்க

4 தத்துவமாகும் பழம்பழுக்க
தன்மயமாகின்ற நெற்றுவிட
ஆதிமுதலான ஐந்தெழுத்தாகிய
ஆமணக்குமுத்து தானெடுத்தாள்-அவள்
ஆமணக்குமுத்து தானெடுத்தாள்.

5 அக்ஞானமென்ற அழுக்குப்போக
ஆனந்தமாகவே தான்புழுக்கி
(பர) பிரும்மமயமாக ஆச்சுதென்றுமுத்தை
பார்த்துஉலர்த்திப் புடைத்தெடுத்தாள்-அவள்
தேய்த்துஉடைத்துப் புடைத்தெடுத்தாள்.

6 ஓங்காரமென்னும் உரலை வைத்து
உண்மையறிந்த உலக்கையினால்
வேதாந்தமென்னும் வெளியில் வைத்து
நாதாந்தமென்றுமே தான் துகைத்தாள்-அவள்
நாதாந்தமென்றுமே தான்துகைத்தாள்.

7 சிவோகமென்று முறமெடுத்து
சித்தசுத்தியாக வேபுடைத்து
கர்மம்விலகித்து என்றுசொல்லியவள்
கப்பியைவேறாய்க் கொழித்தெடுத்தாள்-அவள்
கப்பியைவேறாய்க் கொழித்தெடுத்தாள்.

8 காரியமாகும் அடுப்பைவைத்து
காரணமென்கிற தீமூட்டி
ஆதாரவாகிய பானையைவைத்து
அகண்டமென்ற ஜலத்தைவிட்டாள்-அவள்
அகண்டமென்ற ஜலத்தைவிட்டாள்.

9 முத்திஎன்கிற விழுதுபோட்டு
சிரத்தைஎன்னும்துடுப் பால்கிளறி
சர்ச்சங்கமென்னும் கொதிவரவே அதைச்
சந்தோஷமாகவே பார்த்திருந்தாள்-அதைச்
சந்தோஷமாகவே பார்த்திருந்தாள்,

10 மூலாதாரத்துக் குள்ளிருந்து
முத்தியாகின்ற கொதியும்வரச்
கூடிவிழுதும் ஜலமுங்குழம்பியே
கொதிகொதிப்பதைக் கண்டுகொண்டாள்-அவள்
கொதிகொதிப்பதைக் கண்டுகொண்டாள்.

11 பிருமமும்அவித்தையும் சேர்ந்தாப்போல்
ஜலமும் விழுதும் சுழன்றுநிற்க
மாய்கையைவிட்டு மனதுதெளிந்தாற்போல்
எண்ணெய்தெளிந்ததைக் கண்டுகொண்டாள்—அவள்
எண்ணெய்தெளிந்ததைக் கண்டுகொண்டாள்.

12 வேதாந்தமாகின்ற சட்டியினில்
விவகார மற்ற கரண்டியினால்
அமிருதமாகின்ற எண்ணெய் தன்னை
(அதி) சூக்ஷமமாகவே தானெடுத்தாள்-அதி
சூக்ஷமமாகவே தானெடுத்தாள்.

13 சாதுசங்கமாம் அடுப்புமூட்டி
தன்மயமாகின்ற எண்ணெய்வைத்து
சற்சங்கமென்னும் கரண்டியால்கிளறி
தன்சுயரூபத்தைத் தானறிந்தாள்—அவள்
தன்சுயரூபத்தைத் தானறிந்தாள்.

14 அத்வைதமாகின்ற பல்லாய்தன்னில்
அமிருதஎண்ணெயைத் தானிறுத்து
வெட்டவெளிஎன்னும் மாடப்புரைதன்னில்
கொட்டாங்கச்சியினால் மூடிவைத்தாள்—அவள்
கொட்டிப்போகாமலே பார்த்திருந்தாள்.

15 அகண்டமென்னும் அகல்துடைத்து
அத்வைதமென்னுந் திரிபோட்டு
சொர்ணமணிபோன்ற தீபத்தைஏற்றி
சோதிஸ்வரூபத்தைக் கண்டுகொண்டாள்-பர
மாத்ம ஸ்வரூபத்தைக் கண்டுகொண்டாள்.

ஓம் தத் ஸத்.

பரதேவி துணை.

## வேதாந்தக் கப்பல்.

ஏலேலோ குருபாதம் தத்தையா
ஏலேலோ நான் மறவேன்.

1 சற்குருவின் பாதமலர் — குருவே
சந்ததமும் சிந்தைபண்ணி
நிர்க்குணமாஞ் சரக்குக்கப்பல் — குருவே
தத்துவத்தைப் பாடுகிறேன்.

முடுகு.

முக்கண்ணர் புத்திரர்க்கு முந்நூறு தேங்காயும்
பக்குவமாம் பழமுடனே பாயஸமும் வடையும்
சர்க்கரையும் எள்ளுருண்டை அதிரஸமும் பொரியும்
ருக்குமணி மருமகர்க்கு இளநீருங் கரும்பும்
ஆறுமுகவேலவர்க்கும் அண்டர்கணபதிக்கும்
சாரமுள்ள பொங்கலுடன் ததியன்னம் படைப்பேன்
கூறுகின்ற கப்பலுக்கு குறைவுகள் வாராமல்
விக்கினங்கள் வாராமல் காத்தருளுமையா — ஏலேலோ

2 சுந்தரமாங் கப்பலுக்கு — குருவே
பந்தமென்ற சுழல்வாராமல்
சந்தேகங்கள் தோன்றிடாமல் — குருவே
வந்தெனக்கு உரையுமையா.

முடுகு

அந்த மாதியற்ற தொரு (பர) மாத்மா வினிடத்தில்
மந்த காசத்துடனே மாய்கை வந்து பிறந்தாள்
அப்பொழுதே மாய்கையிடம் அவித்தையு முண்டானாள்
சந்திரனின் பிரதிபிம்பம்போல் ஈசருண்டாக
அப்பொழுதே ஈசரிடம் (சிதா) பாசனுண்டானான்
அக்கியான மானதொரு பாசிவந்து சுழல
அகங்காரமானகொடி மிகுதியாசப்பட
அதனிடத்தில் ஆவரண விக்ஷேபமுண்டாகி
அசங்கமென்னும் கத்தியினால் அறுத்துக்கப்பல்
ஏறப்பா — ஏலேலோ

3 ஆவரண சகதியவள் — பரம
ஆத்மாவை மறைத்திருப்பவள்
பாய்மரத்துக் காக்காய்போல் — பொல்லாப்
பாழ்மனங்கள் சுற்றிவரும்.

முடுகு

மாயாரகிதரான வஸ்துவை அறிந்து
தாயுடனே தந்தையரைப் பொய்யென்றறிந்து
காயமென்னுந் தேகமிதைக் கற்பிதமென்றறிந்து
சாயாஸ்வரூபமிந்த தேகமென்று எண்ணி

மாய்கையினுல் வந்ததென்று ஊகமுடன் பார்த்து
மகாவாக்கிய உபதேசம் குருவினுலடைந்து
ஆபக்காரன் போலிருக்கும் ராகந்தன்னைத்தள்ளி
அபரோக்ஷ ஞானந்தன்னை அறிவினுலறிந்து
சுவர்போல மறைத்திருக்கும் ஆவரணந்தள்ளி
சின்மயமாங் கப்பலிலே தன்மயமாய் ஏறப்பா.. ஏலேலோ

விக்கியானக் கப்பலுக்கு மாயா
விக்ஷேபசக்தியவள்
அக்கியானத்தாலே மூடி இந்த
அண்டமெல்லாம் உண்டுபண்ணுவள்.

முடுகு

ஆகாசந்தன்னிலொரு சப்தமுண்டாகி
அதிலிருந்து வாயுவினுல் ஸ்பரிசமுண்டாகி
அதிலிருந்து அக்கினியால் ரூபமுண்டாகி
அதிலிருந்து அப்புவினுல் ரஸமும் உண்டாகி
அதிலிருந்து பிருதிவியினுல் கந்தமுண்டாகி
அதனைதனின் பாதிப்பங்கு ஒன்றிற்கொன்று கலந்து
பஞ்சபூதமென்ற பேருமுண்டாகி
வஞ்சனையாய் மூடியதை தோலினுலே போர்த்து
மலடிமைந்தன் போலேயது மயக்குவதைப் பார்த்து
மஹாவாக்கியத் துடுப்பினுலே தள்ளிக் கப்ப
லேறப்பா ஏலேலோ

சித்ஞான கப்பலுக்கு ஜீவா
சூக்ஷ்மதேக முதலைவந்து
பொட்டெனவே வளைந்துகொண்டு பரம்
பொருள்தனையும் மறைத்திருக்கும்.

முடுகு

பத்தினேன் குருபாதம் நன்முகப்பணிந்தேன்
சற்சங்க வாசனையைச் சந்ததமுமடைந்தேன்
யுக்திசொன்ன குருமொழியை உள்ளந்தன்னில் நினைத்து
சுற்றிலும் ஓடுமிந்த மனது தன்னை நிறுத்தி
சித்தந்தன்னைச் சொரூபந்தன்னில் சலியாமலிருத்தி
கத்திவரும் அகங்காரக் காடிதன்னையடித்து
காமக்குரோத லோபமோகக் கள்ளர்களைத் தள்ளி
பற்றியே படர்ந்திருக்கும் பாசக்கட்டை அறுத்து
முந்தியான படிதன்னிலே மெள்ளமெள்ள ஏறி
மோக்ஷசாம்பிராஜ்ய மென்னும் கப்பலிலேறப்பா. ஏலேலோ

பரிபூர்ணக்கப்பலுக்கு ஜீவா
பிராணவாயு பத்துங்கூடி
நரிபோல வளைந்து கொண்டு பரமாத்மாவை
நாடவொட்டாமல் மறைக்கும்

முடுகு

நிருவிகற்ப சமாதியினால் ஊகமுடன் பார்த்து
நெதி நெதி வாக்கியத்தால் அவஸ்தை எல்லாந் தள்ளி
சருவிவரும் கர்மேந்திரிய சர்ப்பந் தன்னையடித்து
சத்துருக்களாம் அகங்காரலோபாதிகளை வென்று
மருவிவரும் மனமாதி மச்சங்களைத் துறத்தி
மகத்தான விஷமென்று விஷயம் புஜியாமல்
உருவியே ஓங்கார உலக்கைதன்னை எடுத்து
ஓரடியாகவே யடித்து கோசமைந்தைப் பிரித்து
கருவிருக்கும் இடமதனை ஊகத்துடன் பார்த்து
கர்மமென்னுங் கயிறவிழ்த்து நிர்மலமாயிருந்து
கம்மலற்ற கப்பலினில் நிம்மதியாய் ஏறப்பா (ஏலேலோ)

7 மாய்கை என்னும் சக்தியவள் ஜீவா
மகத்தாதி காரணமாய்
தோகையவள் பொல்லாதவள் காண் உலகைத்
தோற்றுவிப்பாள் மெய்போல.

முடுகு.

ஆசாம்ய சஞ்சிதக காமமுண்டாகி
அதனாலனேகவித ஜன்மமுண்டாகும்
சாகவும் ஜனிக்கவும் வழியுமுண்டாகும்
(மாய்கை) சத்துமன்றசத்துமன்று சதசத்துமன்று
சொரூபமன்றரூபமன்று பரமாத்மாவுமன்று
பின்னமன்றபின்னமன்று பின்னாபின்னமன்று
முன்னுமன்று பின்னுமன்று மூலமுள்ள பிரகிருதி
கானல்ஜலம் போலவே காணும் ஜகமாயை
(அதை) கண்டவர்களின்னதென்று சொல்ல அறியார்கள்
கண்டுசொன்ன குருவாக்கியம் நன்றாக அறிந்து
(மோகம்) உண்டுபண்ணும் மாய்கைதன்னை அண்டவொட்டாம [லடித்து
முக்குணங்கள் அற்றிருக்கும் கப்பலிலேறப்பா (ஏலேலோ)

8 ஆதித்தனை மேகம்வந்து ஜீவா
அடிக்கடிக்கு மறைப்பதுபோல்
அனாதியான ஆத்மாவை மாயா
அவித்தைவந்து மறைத்திடினும்.

முடுகு.

ஜோதிஸ்வரூபமே நாமென்றறிந்து
ஜாதிவர்ணாசிரமம் நான்கையுந்தள்ளி
வாதுபண்ணும் மதமாதி ஆறையுமடித்து
வைராக்கிய மென்கின்ற வாள்தன்னைப்பிடித்து
போதஸ்வரூபமே நாமென்றறிந்து
பின்தொடர்ந்து வரும்மூன்று குணந்தன்னையுந் தள்ளி
ஆதியந்த மற்றவஸ்து நாமென்றறிந்து

ஆசை என்னும் பேய்தன்னை அண்டவொட்டாம லடித்து
ஈஷணாத்திரயங்களை இருக்கவொட்டாம லடித்து
தூஷணையும் பூஷணையும் இரண்டு மொன்றாய்ப்பார்த்து
திவ்வியமயமாய் நிறைந்த கப்பலிறேப்பா. (ஏலேலோ)

9 ரஜ்ஜு சர்ப்பம்போல இந்த ஜீவா
பிரபஞ்சமெல்லாம் என்றறிந்து
சச்சிதானந்த ஸ்வரூபம் நாமுந்
தாமென்று அறிந்துகொண்டு,

முடுகு

தச்சன்கட்டும் வீடதுபோல் தேகமென்றறிந்து
நிச்சயமாய் நிர்க்குணமே நிலையென்றறிந்து
துற்சங்கம் சேராமல் சற்சங்கம் பழகி
ஜனனமரணாதி என்ற பவக்கடலைக் கடந்து
கருணையினால் ஆதரிக்கும் குருவைக்கண்டு அடைந்து
கண்டங் கத்தரிச் செடிபோன்ற தொண்ணூற்றாறுந்தள்ளி
பச்சைமரத்தாணிபோல் (குரு) வாக்கியந் தன்னைக் கிரகித்து
ஒச்சமற்ற வஸ்துவை உள்ளந் தன்னிலறிந்து
மொண்டித் தனஞ்செய்கின்ற மாய்கைதன்னைத் தள்ளி
மோக்ஷ சாம்பிராஜ்ஜியமென்ற கப்பலிலேறப்பா ஏலேலோ

10 சித்தாகும் கப்பலுக்கு முக்தனும்
ஜீவனென்னுஞ் செட்டி ஐயா
(நல்ல) சத்தான சரக்குக்கட்டி உப
சாந்தி ரத்ன முதலெடுத்தான்,

முடுகு.

ஷட்லிங்கமாஞ் சந்தனக்கட்டை
சாதனங்களாகும் ஜாதிக்காய் ஜாபத்திரி ஏலம்கிராம்பு
ஆறுதார மென்னும் ஆணிமுத்துப் பவழம்
மாதா கர்ப்பஞ்சயித்து அடைந்த வெண்பட்டு
சோதித் தாரய்ந்தெடுத்த சிந்தாமணி ரத்னம்
ஜபதபமென்னும் நல்ல வஜ்ஜிர வைடூரியம்
உபரதி திதீக்ஷை என்னும் கந்தப்பொடி புனுகு
சப்தாவஸ்தை என்னும் கர்ப்பூரப்பாளம்
சிரவண மனன நிதித்யாசனப் பலகை
சற்குருவாம் ஸ்ரீராகவர் தன் கிருபையினாலே
அகண்டார்த்தக் கப்பலினில் அசையாமலேறப்பா

ஏலேலோ குருபாதம் தத்தய்யா
ஏலேலோ நான் மறவேன்.

ஓம் தத் ஸத்.

உ

பார்வதி துணை.

# பஞ்சீகரண மகாவாக்கியம்.

## விநாயகர் துதி.

*சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணஞ் சதுர்ப்புஜம்*
*பிரஸந்ந வதனம் தியாயேத் சர்வ விக்னோப சாந்தயே,*
*சிந்தாசோக விநாசய சிந்திதார்த்தப் பிரதாயினே*
*சின்மயாய நமஸ்துப்யம் சிந்தாமணி விநாயகா.*

## சற்குருவைக்கண்டு சிஷ்யன் வினவுதல்.

*சாதன சதுஷ்டய சம்பன்னனாகிய சிஷ்யனானவன் பரமகுருவைக் கண்டு சரணாகதியடைந்து அனந்த நமஸ்காரம்பண்ணிக் கேட்கின்றதாவது:—*

*"என் அக்கியானமாகின்ற இருளை உம்முடைய ஞானஞ் சனத்தினால் பிரகாசிக்கச்செய்து விக்கியானப்பொருளை எளியேனுக்கு உபதேசித்த பரமகுருவாகிய உமக்கு அனந்த நமஸ்காரம். இந்த சமுசாரமாகின்ற சாகரத்தில் முழுகிக்கரையேறவுமாட்டாமல் கரையேற்றுகின்றவருமில்லாமல் தாபத்திரயமாகின்ற வெய்யலினால் அடிபட்டு மிகவும் சோர்வடைந்திருக்கின்ற நான் ஜன்மாந்திர புண்ணியபலன்களினாலும், ஸத்துக்களின் சகவாசத்தினாலும், சத்கதைகளைக்கேட்ட பலன்களினாலுஞ் சற்குருவாகிய உம்மையடைந்தேன். எனக்கு ஆத்மதத்துவத்தை உபதேசித் தருளவேண்டுமென்று பிரார்த்தித்தான்." அதற்கு சிஷ்யனைப்பார்த்து பரமகுருவானவர் சொல்லுகின்றதாவது:-*

*"மகத்துக்களால் அடையக்கூடிய ஆத்மதத்துவமாகிய அமிர்தம் உன்னால் அடையக்கூடியதல்லவே; ஆகையால் வேறு ஏதாவது வரத்தைக் கேட்டுக்கொள்."*

*உடனே சிஷ்யன் பரமகுருவை வணங்கிச் சொல்லுகிறான்.*

*"இந்தக்கர்ம போகங்களைக் கேட்டுக்கொள்ளுவதினால் என்ன பிரயோஜனம். ஆதலால் வேறுவரங்களொன்றும் எனக்குத்தேவையில்லை. பாழுங்கிணற்றிலிருக்கின்ற தவளையைப்போல் இந்த நிஸ்ஸாரமாகிய சமுசாரத்தில் இருக்குமென்னை மோகமென்கின்ற பாம்பு கடித்து கழுத்தளவும் விஷமேறி*

ஆசாபாசமென்கின்ற கயிற்றினுற் கட்டப்பட்டு தாபத்திரயமாகின்ற கற்களினுல் அடிபட்டு சோர்ந்துபோயிருக்கின்ற என்னை உம்முடைய கடாக்ஷமென்கின்ற கருட பார்வையினுற் பார்த்து, மகாவாக்கியமென்னும் மூலிகையினுல் நஸ்யம்பிழிந்து சுப்பிரகாச ஒளியாகிய அஞ்சனமிட்டு, சாம்பிராஜ்யமென்னுஞ் சுக்கையிட்டு, தாரகவாக்கிய அமிர்தத்தினுல் சீவிப்பிக்கச்செய்து, மோகமாகின்ற விஷத்தை இறக்கி, ஞானமிருதமாகின்ற சாகரத்தினில் ஆரோக்ய ஸ்நானம் பண்ணிவையும் பரமகுருவே! கருணாநிதியே! எனக்கு நீர்தான் கெதி என்று சொல்லி குருவை வணங்கித் தொழுதான்." அப்பொழுது குருவானவர் சந்தோஷத்துடன் சிஷ்யனைப்பார்த்துச் சொல்லுகின்றார்:—

"அன்புள்ள குமாரனே நீ சீக்கிரமாகவே உன் கோரிக்கையை அடைவாயென்பதிற் சந்தேகமில்லை. நீ ஒரு ஆத்மஞானி, உனக்கு இப்பொழுது பரமரகசியமான பஞ்சீகரண மகாவாக்கியத்தை உபதேசம் பண்ணுகின்றேன், நீ அதிக சிரத்தையுடனே கேட்கக் கடவாயென்று பரமகுருவானவர் சொல்லத்தொடங்கினுர்."

## சற்குரு சிஷ்யனுக்கு உபதேசித்தல்.

"ஓ சுகுணமுள்ள சிஷ்யனே! சமஸ்த பிரபஞ்சமும் ஜலமயமாய் இருக்கிறபோது, சுப்பிரகாசமாய் விளங்கும் ஸ்ரீ பரமாத்மாவானவர் இந்த அண்டம் பதினுலு உலகுமாகத் தாமே வியாபித்து, விளையாட வேணுமென்று இச்சித்தார். அந்த ஸ்ரீ பகவான் நித்தியராய் நிர்க்குணராய் நிர்மலராய் நிர்விகாரராய் நிராதாரராய் நித்தியமுக்தராய் இருப்பர்." மேலும்,

---

## பிரும்மத்தின் துதி

சுலோகம்.

1. ஆனந்த மானந்தம் கனப்பிரசன்னம்
ஞானஸ்வரூபம் நிஜபூர்வதத்வம்
யோகேந்திர வந்தியம் பவரோக வைத்தியம்
ஸ்ரீ குரு நிமித்தியம் ஆதிகுருநமாமி.

2. பிரும்மானந்தம் பரமசுகிர்தம்கேவலம் ஞானமூர்த்தம்
விஸ்வாதீதம்ககனசதிர்சம் தத்வம் அவியாதிலக்ஷ்ய
ஏகம்நித்தியம் விமலமசலம் சர்வதீ சாக்ஷிபூதம்
பாவாதீதம் திரிகுணரகிதம் சத்குருந்தம் நமாமி.

(என்றபடி)

* சத்தாய், சித்தாய், ஆனந்தமாய் இருக்கப்பட்ட பிரும்மத்தினிடத்தி லிருந்து பிரதிபிம்பமாகிய சிற்சாயை (பஞ்சீகரண படத்தில்) முதல் கட்டத் தில் உண்டாயிற்று.

சிற்சாயையினிடத்திலிருந்து அசத்தாய், சடமாய், துக்கரூபமாய் இருக் கப்பட்ட மாய்கை 2-வது கட்டத்தில் உண்டாயிற்று.

மாய்கையிலிருந்து மஹத்தத்வம் மூன்றாவது கட்டத்தில் உண்டாயிற்று.

மஹத்தத்வத்திலிருந்து அக்கியானம் 4-வது கட்டத்தில் உண்டாயிற்று.

அக்கியானத்திலிருந்து அகங்காரம் 5-வது கட்டத்தில் உண்டாயிற்று.

அகங்காரத்திலிருந்து முக்குணங்களின் முதன்மையான சத்துவகுணம் 6-வது கட்டத்தில் உண்டாயிற்று.

முக்குணங்களின் இரண்டாவதான இராஜதகுணம் 7-வது கட்டத்தில் உண்டாயிற்று.

முக்குணங்களின் மூன்றாவதான தாமதகுணம் 8-வது கட்டத்தில் உண்டாயிற்று.

தாமதகுணத்திலிருந்து ஜீவர்களின் அறிவை மறைக்கும் ஆவரணசக்தி 9-வது கட்டத்தில் உண்டாயிற்று.

ஜீவர்களின் அறிவைத் தோன்றவைக்கும் விக்ஷேபசக்தி 10-வது கட்டத் தில் உண்டாயிற்று.

விக்ஷேப சக்தியினிடத்திலிருந்து சப்த தன்மாத்திரையான ஆகாயம் 11-வது கட்டத்தில் உண்டாயிற்று.

ஆகாயத்தினிடத்திலிருந்து ஸ்பரிச தன்மாத்திரையான வாயு 12-வது கட்டத்தில் உண்டாயிற்று.

வாயுவினிடத்திலிருந்து ரூப தன்மாத்திரையான அக்கினி 13-வது கட்டத்தில் உண்டாயிற்று.

அக்கினியினிடத்திலிருந்து ரச தன்மாத்திரையான அப்பு 14-வது கட்டத்தில் உண்டாயிற்று.

---

* பஞ்சீகரண கட்டத்தின் பரப்பிரும்மகட்டத்தில் 36 காய்கள் (அதாவது தினுசுக்கு 5 காய்மேனிக்கு 5-தினுசு காய்கள் 25. அது தவிர 11-காய்கள் ஆக 36) வைத்துக்கொண்டு இங்கு சொல்லப்படும் கட்டங்களின் லக்கப் பிரகாரம் காய்கள் வைக்கவேண்டியது. பஞ்ச பூதகட்டம் ஐந்துக்கும் ஐந்து திணுசு காய்களை ஐந்து கட்டத்திற்கும் வைத்து பஞ்சீகரணவாக்கியப்பிரகாரம் பிரித்து வைக்கவும். முதற் பத்து கட்டத்திற்கும் லக்கப்பிரகாரம் வைக்கவும்.

அப்புவினிடத்திலிருந்து கந்த தன்மாத்திரையான பிருதிவி 15-வது கட்டத்தில் உண்டாயிற்று.

இந்தப் பஞ்சபூதங்களும் தன் அமிசத்தில் பாதியை தனக்கு வைத்துக் கொண்டு மிகுந்த பாதி யமிசத்தை ஒவ்வொரு பூதங்களுக்கும், அரைக்கால் பாகம் கொடுத்து ஒன்றுக்கொன்று கலந்துகொள்ளும் விதத்தைச் சொல்லுகின்றோம்.

11-வது கட்டத்திலுள்ள ஆகாயதத்துவம் அர்த்தாம்சம் தனக்கு வைத்துக்கொண்டு, மிகுந்த பாதியை நான்காய்ப்பகிர்ந்து, வாயுவிற்கு இடைவெளியைக் கொடுத்தது, அக்கினிக்கு இடைவெளியைக் கொடுத்தது, அப்புவிற்கு இடைவெளியைக் கொடுத்தது, பிருதிவிக்கு இடைவெளியைக் கொடுத்தது

12-வது கட்டத்திலுள்ள வாயுதத்துவம் அர்த்தமாம்சம் தனக்கு வைத்துக்கொண்டு மிகுந்த பாதியை நான்காய்ப் பகிர்ந்து ஆகாயத்திற்கு சலனத்தைக்கொடுத்தது, அக்கினிக்குச் சலனத்தைக் கொடுத்தது, அப்புவிற்குச் சலனத்தைக் கொடுத்தது, பிருதிவிக்குச் சலனத்தைக் கொடுத்தது.

13-வது கட்டத்திலுள்ள அக்கினிதத்துவம் அர்த்தாம்சம் தனக்கு வைத்துக்கொண்டு மிகுந்த பாதியை நான்காய்ப்பகிர்ந்து, ஆகாயத்திற்கு உஷ்ணத்தைக்கொடுத்தது, வாயுவிற்கு உஷ்ணத்தைக் கொடுத்தது, அப்புவிற்கு உஷ்ணத்தைக் கொடுத்ததது, பிருதிவிக்கு உஷ்ணத்தைக்கொடுத்தது.

14-வது கட்டத்திலுள்ள அப்புதத்துவம் அர்த்தாம்சம் தனக்கு வைத்துக் கொண்டு மிகுந்த பாதியை நான்காய்ப் பகிர்ந்து, ஆகாயத்திற்கு நெகிழ்ச்சியைக்கொடுத்தது, வாயுவிற்கு நெகிழ்ச்சியைக்கொடுத்தது, அக்கினிக்கு நெகிழ்ச்சியைக் கொடுத்தது, பிருதிவிக்கு நெகிழ்ச்சியைக் கொடுத்தது.

15-வது கட்டத்திலுள்ள பிருதிவி தத்துவம் அர்த்தாம்சம் தனக்கு வைத்துக்கொண்டு மிகுந்த பாதியை நான்காய்ப் பகிர்ந்து, ஆகாயத்திற்கு கடினத்தைக் கொடுத்தது, வாயுவிற்கு கடினத்தைக் கொடுத்தது, அக்கினிக்கு கடினத்தைக் கொடுத்தது, அப்புவிற்கு கடினத்தைக் கொடுத்தது.

## 1. அந்தக்கரண பஞ்சக உற்பத்தி.

பிருதிவிகட்டத்தில் ஆகாயத்தினுடைய அரைக்கால் பாகங் கூடுமிடத்தில் அகங்காரம் உண்டாயிற்று (16 வது கட்டத்தில்). அப்புகட்டத்தில் ஆகாயத்தினுடைய அரைக்கால் பாகங் கூடுமிடத்தில் சித்தம் உண்டாயிற்று (17-வது கட்டத்தில்). அக்கினி கட்டத்தில் ஆகாயத்தினுடைய அரைக்கால் பாகங் கூடுமிடத்தில் புத்தி உண்டாயிற்று (18-வது கட்டத்தில்). வாயு கட்டத்தில் ஆகாயத்தினுடைய அரைக்கால் பாகங் கூடுமிடத்தில் மனம் உண்டாயிற்று (19-வது கட்டத்தில்). ஆகாய கட்டத்தில் அதன் அர்த்தாம்சத்தில் அந்தக்கரணம் உண்டாயிற்று [11-வது கட்டத்தில்]. பிருதிவியினம்சத்தால்

உண்டான அகங்காரம் பிருதிவியைப்போல் கடினமான அபிமானத்தையும், அப்புவினமிசத்தால் உண்டான சித்தம் அப்புவைப்போல் சலிக்குந் தன்மை யையும், அக்கினியினம்சத்தால் உண்டான புத்தி அக்கினியைப்போல் விளங் கவைக்குந் தன்மையையும், ஆகாயத்தினமிசத்தால் உண்டான அந்தக்கரணம் ஆகாயத்தைப்போல் கேள்வியை அறியுந் தன்மையையும் அடைந்திருக் கின்றது.

அந்தக்கரணம், உச்சியில் (பிரம்மரந்திரத்தில்) இருக்கும். கேள்வி—விஷயம், சதாசிவன்—தேவதை.

மனம், கண்டத்திலிருக்கும். சங்கற்பம், விகற்பம்—விஷயம், சந் திரன்—தேவதை.

புத்தி, முகத்திலிருக்கும். நிச்சயிக்கின்றது—விஷயம், பிரகஸ்பதி— தேவதை.

சித்தம், நாபியிலிருக்கும். ஆலோசிக்கின்றது—விஷயம், விஷ்ணு— தேவதை.

அகங்காரம், சர்வாங்கமும் இருக்கும். அபிமானிக்கின்றது—விஷயம், ருத்திரன்—தேவதை.

அந்தக்கரணம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இவ்வைந்தும் ஆகாய தத்துவம்; சத்துவகுணத்திலிருந்து உற்பத்தி.

## 11. பிராணாதி பஞ்சக உற்பத்தி.

பிருதிவிகட்டத்தில் வாயுவினுடைய அரைக்கால் பாகங் கூடுமிடத்தில் பிராணனுண்டாயிற்று 20-வது கட்டத்தில்.

வாயுவினுடைய அரைக்கால்பாகங் கூடுமிடத்தில் அபானனுண்டாயிற்று 21-வது கட்டத்தில். அக்கினி கட்டத்தில் வாயுவினுடைய அரைக்கால் பாகங் கூடுமிடத்தில் வியானனுண்டாயிற்று 22-வது கட்டத்தில். வாயுகட் டத்தில் அதன் அர்த்தாம்சத்தில் உதானனுண்டாயிற்று 23-வது கட்ட த்தில். ஆகாயக்கட்டத்தில் வாயுவினுடைய அரைக்கால் பாகங்கூடுமிடத்தில் சமானனுண்டாயிற்று.

பிராணன், பிருதிவியிலுண்டாயிற்று, ஊர்த்துவகமனம் (உசுவாசம்) விஷயம், விசிட்டன்—தேவதை.

அபானன் அப்புவிலுண்டாயிற்று. அதோமுகம் (நிசுவாசம்)—விஷயம், விசுவகர்த்தா—தேவதை.

வியானன் அக்கினியிலுண்டாயிற்று. சர்வநாடியிலும் வியாபிக்கின் றது—விஷயம், அச்சுவினிதேவர்—தேவதை.

உதானன் வாயுவிலுண்டாயிற்று. கண்டத்திலிருந்து உக்கிரமிக்கின் றது—விஷயம். விரிஞ்சன்—தேவதை.

சமானன் ஆகாயத்திலுண்டாயிற்று. புஜித்த அன்னபானாதிகளை நக்கிகை பரியந்தம் பரவச்செய்கின்றது—விஷயம், போக்தா—தேவதை.

பஞ்சப்பிராணன்களின் உட்பிரிவான உபப்பிராணன் நாகன் கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் ஆக ஐந்து.

நாகவாயு வாந்திபண்ணும்.

கூர்மவாயு கண்ணிமைத்து விழித்து மூடும்.

கிரிகரவாயு கொட்டாவி விக்கல் ஏப்பம் முதலியவை செய்யும்,

தேவதத்தவாயு தும்மல் இருமல் முதலியவை செய்யும்.

தனஞ்சயவாயு தேகத்தை ஸ்தூலிப்பிக்கச்செய்யும். உயிர்போயினும் போகாதுடலை வீக்கித் தலைகிழித்தகலும்.

பிராணன் ஹிருதயத்திலிருந்து புஜித்த அன்னபானாதிகளை உள்ளுக்கு வாங்கிக் கொள்ளுகிறான்.

உதானன் கண்டத்திலிருந்து அன்ன பானாதிகளை உட்செலுத்துகிறான்.

சமானன் நாபியிலிருந்து அன்னபானாதிகளைப் பகிர்ந்து கொடுக்கிறான்

வியானன் சர்வநாடியிலுமிருந்து அன்னபானாதிகளை வியாபிக்கச் செய்கிறான்.

அபானன் குதத்திலிருந்து மலசலமாகக் கழித்து விடுகிறான்.

அன்னத்தின்

முக்கியபாகம் பிராணனுக்கு பலத்தையும்.
மத்தியபாகம் மாம்ஸ விருத்தியையும்,
சாரமற்றபாகம் மலமாகவுங் கழியும்,

உதகத்தின்

முக்கியபாகம் பிராணனுக்கு பலத்தையும்,
மத்தியபாகம் இரத்தவிருத்தியையும் (செய்து)
சாரமற்றபாகம் அற்ப ஜலமாகவுங்கழியும்.

ஆகாராதிகளின்

சத்தாகியமுக்கியபாகம் மூளைக்குத் தெளிவையும்,
மத்தியபாகம் அஸ்திநரம்புகளுக்குப் பலத்தையும் (கொடுத்து)
சாரமற்றபாகம் சுக்கிலமாகவும் கழியும்.
பிராணன் அபானன் வியானன் உதானன்,
சமானன் இந்த ஐந்தும் வாயு தத்துவம்,
இராஜதகுணத்திலிருந்து உற்பத்தி.

## III. ஞானேந்திரிய உற்பத்தி.

ஆகாய கட்டத்தில் அக்கினியினுடைய அரைக்கால் பாகங் கூடுமிடத்தில் சுரோத்திரம் உண்டாயிற்று. (24-வது கட்டத்தில்)

வாயு கட்டத்தில், அக்கினியினுடைய அரைக்கால் பாகங் கூடுமிடத்தில் துவக்கு உண்டாயிற்று, (25-வது கட்டத்தில்)

அக்கினிகட்டத்தில், அதன் அர்த்தாம்சத்தில் சட்சு உண்டாயிற்று. (13-வது கட்டத்தில்)

அப்புகட்டத்தில் அக்கினியினுடைய அரைக்கால்பாகங் கூடுமிடத்தில் ஜிஹ்வை உண்டாயிற்று. (26-வது கட்டத்தில்)

பிருதிவிகட்டத்தில் அக்கினியினுடைய அரைக்கால் பாகங் கூடுமிடத்தில் ஆக்கிராணம் உண்டாயிற்று. (27-வது கட்டத்தில்)

சுரோத்திரம் ஆகாயத்திலுண்டாயிற்று. சப்தம்—விஷயம். திக்கு தேவதை—தேவதை.

துவக்கு வாயுவிலுண்டாயிற்று. ஸ்பரிஸம்—விஷயம். வாயு—தேவதை.

சட்சு அக்கினியிலுண்டாயிற்று. ரூபம்—விஷயம். சூரியன்—தேவதை.

ஜிஹ்வை அப்புவிலுண்டாயிற்று. ரசம்—விஷயம். வருணன்—தேவதை.

ஆக்கிராணம் பிருதிவியிலுண்டாயிற்று. கந்தம்—விஷயம். அசுவினி தேவர்—தேவதை.

சுரோத்திரம், துவக்கு, சட்சு, ஜிஹ்வை, ஆக்கிராணம் இந்த ஐந்தும் அக்கினி தத்துவம். சத்துவகுணத்திலிருந்து உற்பத்தி.

## IV. விஷயாதி பஞ்சக உற்பத்தி.

ஆகாயகட்டத்தில் அப்புவினுடைய அரைக்கால் பாகங் கூடுமிடத்தில் சப்தம் உண்டாயிற்று (28-வது கட்டத்தில்)

வாயுகட்டத்தில், அப்புவினுடைய அரைக்கால் பாகங் கூடுமிடத்தில் ஸ்பரிசம் உண்டாயிற்று (29-வது கட்டத்தில்)

அக்கினிகட்டத்தில், அப்புவினுடைய அரைக்கால்பாகம் கூடுமிடத்தில் ரூபம் உண்டாயிற்று (30-வது கட்டத்தில்)

அப்பு கட்டத்தில் அதன் அர்த்தாம்சத்தில் ரசம் உண்டாயிற்றி (14—வது கட்டத்தில்)

பிருதிவிகட்டத்தில், அப்புவினுடைய அரைக்கால் பாகங்கூடுமிடத்தில் கந்தம் உண்டாயிற்று (31-வது கட்டத்தில்)

சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் இந்த ஐந்தும் அப்பு தத்துவம், ஞானேந்திரியத்தின் விஷயங்கள்.

## V. கன்மேந்திரிய பஞ்சக உற்பத்தி.

ஆகாய கட்டத்தில், பிருதிவியினுடைய அரைக்கால்பாகங் கூடுமிடத்தில் வாக்கு உண்டாயிற்று (32-வது கட்டத்தில்)

வாயுகட்டத்தில், பிருதிவியினுடைய அரைக்கால் பாகங்கூடுமிடத்தில் பாணி உண்டாயிற்று (33-வது கட்டத்தில்)

அக்கினிகட்டத்தில், பிருதிவியினுடைய அரைக்கால்பாகங் கூடுமிடத்தில் பாதம் உண்டாயிற்று (34-வது கட்டத்தில்)

அப்புகட்டத்தில் பிருதிவியினுடைய அரைக்கால்பாகங் கூடுமிடத்தில் வாயு உண்டாயிற்று. (35-வது கட்டத்தில்)

பிருதிவிகட்டத்தில், அதன் அர்த்தாம்சத்தில் உபத்தம் உண்டாயிற்று (15-வது கட்டத்தில்)

வாக்கு ஆகாயத்தில் உண்டாயிற்று. வசனம் (பேசுதல்)—விஷயம்; வன்னி—தேவதை.

பாணி, வாயுவில் உண்டாயிற்று. தானம் (இடுதலேற்றல்)—விஷயம்; இந்திரன்—தேவதை.

பாதம் அக்கினியில் உண்டாயிற்று. கமனம் (நடத்தல்) விஷயம்; உபேந்திரன்—தேவதை.

வாயு அப்புவில் உண்டாயிற்று. விசர்க்கம் (விடுதல்)—விஷயம், யமன்—தேவதை.

உபத்தம் பிருதிவியில் உண்டாயிற்று. ஆனந்தம் (சிற்றின்பம்)—விஷயம்; பிரஜாபதி—தேவதை.

வாக்கு, பாணி, பாதம், பாயு, உபத்தம் இந்த ஐந்தும் பிருதிவி தத்துவம். இராஜதகுணத்திலிருந்து உற்பத்தி.

ஆகாய கட்டத்தின் சொந்தமான அர்த்தாம்சம் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் பக்ஷிசாதிகளுக்கும், மிகுந்த பாதி பஞ்சீகரணக்கட்டத்தில் பகிர்ந்து கொடுத்தபடி ஜீவகோடிகளுக்கும்;

வாயுகட்டத்தின் சொந்தமான அர்த்தாம்சம் அகண்டத்திலுள்ள பூதப் பிரேத பிசாசுகளுக்கும், மிகுந்தபாதி பஞ்சீகரணக்கட்டத்தில் பகிர்ந்து கொடுத்தபடி ஜீவகோடிகளுக்கும்;

அக்கினி கட்டத்தின் சொந்தமான அர்த்தாம்சம் அண்டாண்டத்திலுள்ள தேவதைகளுக்கும், மிகுந்த பாதி பஞ்சீகரணக் கட்டத்தில் பகிர்ந்து கொடுத்தபடி ஜீவகோடிகளுக்கும்;

அப்புகட்டத்தின் சொந்தமான அர்த்தாம்சம் நீரின் கண்ணுள்ள ஜலசர செந்துகளுக்கும், மிகுந்த பாதி பஞ்சீகரண கட்டத்தில் பகிர்ந்து கொடுத்தபடி ஜீவகோடிகளுக்கும்,

பிருதிவிகட்டத்தின் சொந்தமான அர்த்தாம்சம் பூமியின் கண்ணுள்ள மலைபர்வதம் விருக்ஷாதிகளுக்கும், மிருந்தபாதி பஞ்சீகரணக் கட்டத்தில் பகிர்ந்து கொடுத்தபடி ஜீவகோடிகளுக்கும்.

பாதமுதல் முழங்கால்வரைக்கும பிருதிவியினம்சம், முழங்கால் முதல் நாபிவரைக்கும் அப்புவினம்சம். நாபிமுதல் ஹிருதயம்வரைக்கும் அக்கினியினம்சம். ஹிருதயமுதல் புருவம்வரைக்கும் வாயுவினம்சம், புருவம முதல் பிரம்மரந்திரபரியந்தம் ஆகாயத்தினம்சம்.

1. அந்தக்கரணபஞ்சகம் பஞ்சபூதங்களின் சத்துவகுணத்தில் நின்றும் உற்பத்தி.

2. பிராணாதி பஞ்சகம் பஞ்ச பூதங்களின் இராஜதகுணத்தி னின்றும் உற்பத்தி.

3. ஞானேந்திரிய பஞ்சகம் பஞ்சபூதங்களின் சத்துவகுணத்தி னின்றும் உற்பத்தி.

4. விஷயாதி பஞ்சகமாகிய சப்தம் ஸ்பரிசம் ரூபம் ரசம் கந்தம் ஞானேந்திரியத்தின் தன்மை.

5. கன்மேந்திரிய பஞ்சகம் பஞ்சபூதங்களின் இராஜதகுணத்தில் நின்றும் உற்பத்தி.

தோல், இரத்தம், சதை, நரம்பு, எலும்பு இவைகளால் அமைக்கப்பெற்றதும், பிறத்தல், இருத்தல், வளர்தல், திரிதல், குறுகுதல் நசித்தல் என்ற ஷட்பாவ விகாரங்களை யுடைத்தானதுமான தூலசரீரமே பஞ்சபூதத்தின் தாமதகுணங்களி னின்றும் உற்பத்தியாயிற்று.

## விருத்தம்.

ஐந்துபூதம் பத்தாக்கி அவைபாதி நந்நான்காக்கி
நந்துதன் பாதிவிட்டு நாலோடு நாலுங்கூட்ட
வந்தன தூலபூத மகாபூத மவற்றினின்றும்
தந்தன நான்காந் தூலதனுவண்ட புவனபோகம்.

என்று கைவல்லியத்திற் சொன்னபடி சத்துவ ரஜோ தமோகுணங்களில் உண்டான ஆகாயம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவி இந்த பஞ்சபூதங்களின் சேர்க்கையினால் ஒரு அண்டம் உண்டாயிற்று.

அண்டத்திலிருந்து சதுர்வித பூதப்பிராணிக ளுண்டாயிற்று. அவை யாவன:—

(1) சராயுஜமென்னுங் கருப்பையிற் பிறப்பனவாகிய தேவர், மனிதர், மிருகங்கள் முதலியவைகளும்;

(2) அண்டசமென்னும் முட்டையிற் பிறப்பனவாகிய பக்ஷி, பன்னகம், கிருமி கீடாதி, முதலை, மீன், முதலியலியவைகளும்;

(3) சுவேதசமென்னும் வியர்வையிற் பிறப்பனவாகிய பேன், மூட்டைப்பூச்சி, கொசு முதலியவைகளும்.

(4) உற்பீசமென்னும் நிலத்திற் பிறப்பனவாகிய விருக்ஷம், கொடி, செடி, புல், பூண்டு முதலியவைகளும்.

இந்த நான்குவித பிராணிகளும் தேவர், மனிதர், மிருகங்கள், பக்ஷிகள், கிருமிகள், ஜலஜந்துக்கள், விருக்ஷங்கள் என்னும் எழுவகைத் தோற்றமென்றும் சொல்லப்படும்.

பிரும்மத்தின் பஞ்சமுகங்களிலிருந்து பஞ்சபூதங்கள் உற்பத்தியாயின. அதன்விவரம்:—

(1) ஈசானமுகத்திலிருந்து ஆகாயம் உண்டாயிற்று.

(2) தற்புருடமுகத்திலிருந்து வாயு உண்டாயிற்று.

(3) அகோரமுகத்திலிருந்து அக்கினி உண்டாயிற்று.

(4) வாமதேவமுகத்திலிருந்து அப்பு உண்டாயிற்று.

(5) சத்தியோஜாத முகத்திலிருந்து பிருதிவி உண்டாயிற்று.

## பஞ்சீகரண கட்டத்தில் பஞ்ச பூதங்களின் தன்மை.

15-வது கட்டம். நாமம்—பிருதிவி, ரூபம்—சதுரம், வர்ணம்—சுவர்ணம், சுபாவம்—கடினம், குணம்—கந்தம், கிரியை—சிருஷ்டி, முகம்—சத்தியோஜாதம், தேவதை—பிரும்மா, சக்தி—சரஸ்வதி, அக்ஷரம்—அகாரம், ஆக மொத்தம் பத்து.

14-வது கட்டம். நாமம்—அப்பு, ரூபம்—அர்த்த சந்திர வடிவம், வர்ணம் வெளுப்பு, சுபாவம்—திரவம், குணம்—மதுரம், கிரியை—ஸ்திதி முகம்—வாமதேவம், தேவதை—விஷ்ணு, சக்தி—லக்ஷ்மி, அக்ஷரம்—உகாரம், ஆக மொத்தம் பத்து.

13-வது கட்டம். நாமம்—அக்கினி, ரூபம்—திரிகோணம், வர்ணம்—சிவப்பு, சுபாவம்—உஷ்ணம், குணம்—தேஜஸ், கிரியை—சம்ஹாரம், முகம்—அகோரம், தேவதை—சங்கரன், சக்தி—பார்வதி, அக்ஷரம்—மகாரம், ஆக மொத்தம் பத்து.

12-வது கட்டம். நாமம்—வாயு, ரூபம்—ஷட்கோணம், வர்ணம்—தூம்பிரவர்ணம், சுபாவம்—சலனம், குணம்—ஸ்பரிசம், கிரியை—அனுக்கிரகம், முகம்—தற்புருடம், தேவதை—சதாசிவம், சக்தி—பராசக்தி, அக்ஷரம்—நாதம், ஆக மொத்தம் பத்து.

11-வது கட்டம். நாமம்—ஆகாயம், ரூபம்—வட்டம், வர்ணம்—நீலம், சுபாவம்—வெளி, குணம்—சப்தம், கிரியை—திரோதானம், முகம்—ஈசானம், தேவதை—ருத்திரன், சக்தி—கிரியாசக்தி, அக்ஷரம்—பிந்து, ஆகமொத்தம் பத்து.

## தூல தேக விபரம்.

சுலோகம் (1) "அஸ்திமாம்ச த்வசோநாடி ரோமஞ் சேதியதாக்கிரமம் க்ஷிதி: பஞ்சவிதா புரோக்தா ஸமாஞ்சா: பரிகீர்த்திதா" என்றபடி.

பிருதிவியின் அம்சங்கள் யாதென்றால்:—

(1) பிருதிவியினிடத்தில் பிருதிவியினம்சம் எலும்பு.
(2) பிருதிவியினிடத்தில் அப்புவினம்சம் மாம்ஸம்
(3) பிருதிவியினிடத்தில் அக்கினியினம்சம் தோல்
(4) பிருதிவியினிடத்தில் வாயுவினம்சம் நரம்பு
(5) பிருதிவியினிடத்தில் ஆகாயத்தினம்சம் ரோமம்.

சுலோகம் 2 "லாலா மூத்ரம் ததாசுவேதா: சுக்லஞ்சோணித மேவச ஆப: பஞ்சவிதா: புரோக்தா ஸமாஞ்சா: பரிகீர்த்திதா" என்றபடி,

அப்புவினம்சங்கள் என்னவென்றால்:—

(1) அப்புவினிடத்தில் பிருதிவியினம்சம் உமிழ்நீர்.
(2) அப்புவினிடத்தில் அப்புவினம்சம் அற்பஜலம்
(3) அப்புவினிடத்தில் அக்கினியினம்சம் வியர்வை
(4) அப்புவினிடத்தில் வாயுவினம்சம் உதிரம்
(5) அப்புவினிடத்தில் ஆகாயத்தினம்சம் சுக்லம்

சுலோகம். (3) "க்ஷுதாதிருஷ்ணாததாநித்ரா ஆலசியம் சங்கமஸ்ததா அக்கினி: பஞ்சவிதா: புரோக்தா ஸமாஞ்சா: பரிகீர்த்திதா" என்றபடி.

அக்கினியின் அம்சங்களாவன:—

(1) அக்கினியினிடத்தில் பிருதிவியினம்சம் பசி
(2) அக்கினியினிடத்தில் அப்புவினம்சம் தாகம்
(3) அக்கினியினிடத்தில் அக்கினியினம்சம் நித்திரை
(4) அக்கினியினிடத்தில் வாயுவினம்சம் சோம்பல்
(5) அக்கினியினிடத்தில் ஆகாயத்தினம்சம் சங்கமம்.

சுலோகம். (4) "தாவநம் வலக்நம் சைவா குஞ்சநஞ்சப்ரஸாரணம் ஸ்திதி: பஞ்சவிதோவாயு ஸமாஞ்ச: பரிகீர்த்திதா:" என்றபடி.

வாயுவின் அம்சங்களாவன:—

(1) வாயுவினிடத்தில் பிருதிவியினம்சம் கிடத்தல்

(2) வாயுவினிடத்தில் அப்புவியினம்சம் நடத்தல்
(3) வாயுவினிடத்தில் அக்கினியினம்சம் மடக்கல்
(4) வாயுவினிடத்தில் வாயுவினம்சம் ஓடுதல்
(5) வாயுவினிடத்தில் ஆகாயத்தினம்சம் குதித்தல்.

சுலோகம். (5) ராகத் துவேஷௌ பயம் லஜ்ஜா மோகஞ்சைவ யதாக்ர மம்—நப: பஞ்சவிதப் புரோக்தம் ஸமாஞ்ச: பரிகீர்த்திதா: !! என்றபடி.

ஆகாயத்தினம்சங்களாவன:—

(1) ஆகாயத்தினிடத்தில் பிருதிவியினம்சம் ராகம்
(2) ஆகாயத்தினிடத்தில் அப்புவினம் துவேஷம்
(3) ஆகாயத்தினிடத்தில் அக்கினியினம்சம் பயம்
(4) ஆகாயத்தினிடத்தில் வாயுவினம்சம் லச்சை
(5) ஆகாயத்தினிடத்தில் ஆகாயத்தினம்சம் மோகம்.

## பஞ்சபூத ஸ்தூல சக்கரம்.

| பஞ்சபூதங்கள். | பிருதிவியினம்சம். | அப்புவினம்சம் | அக்கினியினம்சம். | வாயுவினம்சம். | ஆகாயத்தினம்சம். |
|---|---|---|---|---|---|
| பிருதிவியில் | எலும்பு | மாம்சம் | தோல் | நரம்பு | ரோமம் |
| அப்புவில் | உமிழ்நீர் | அற்பஜலம் | வியர்வை | உதிரம் | சுக்கிலம் |
| தேயுவில் | பசி | தாகம் | நித்திரை | சோம்பல் | சங்கமம் |
| வாயுவில் | கிடத்தல் | நடத்தல் | மடக்கல் | ஓடுதல் | குதித்தல் |
| ஆகாயத்தில் | இராகம் | துவேஷம் | பயம் | லச்சை | மோகம் |

## சூக்ஷ்மதேக விவரம்.

சுலோகம். (1)

"ஞானம் ஸமான வாயுச்ச சுரோத்திரஞ் சப்தஸ்ததைவச:
வாக் பஞ்சவிதம் புரோக்தம் இத்யேதத் வியோம பஞ்சகம்"

என்றபடி, அந்தக்கரணத்துடன் கூடிக்கொண்டிருக்கிற சிதாபாசன் சமானவாயுவினில் ரமித்துக்கொண்டு சுரோத்திர இந்திரியத்தினால் சப்தங்களைக் கேட்டுக்கொண்டு வாக்கிந்திரியத்தினால் வசனிக்கிறார்.

## சுலோகம். (2)

"மாநஸம் உதானவாயுச்ச சர்மஸ்பரிசஸ்ததை வச:
பாணி: பஞ்சவிதப் புரோக்தம் இத்யேதத் வாயுபஞ்சகம்"

என்றபடி, மனதுடன் கூடிக்கொண்டிருக்கிற சிதாபாசன் உதானவாயுவினில் ரமித்துக்கொண்டு துவக்கு இந்திரியத்தினல் ஸ்பரிசங்களை அறிந்துகொண்டு பாணி இந்திரியத்தினல் கொடுக்கல் வாங்கல் செய்கிருர்.

## சுலோகம். (3)

"புத்திச்சோத் வியானவாயுச்ச நேத்ரம் ரூபம் ததைவச
பாத: பஞ்சவிதப் புரோக்தம் இத்யேதத் வஹ்னிபஞ்சகம்"

என்றபடி புத்தியுடனே கூடியிருக்கின்ற சிதாபாசன் வியான வாயுவினில் ரமித்துக்கொண்டு சட்சு இந்திரியத்தினல் ரூபங்களைப் பார்த்துக்கொண்டு பாத இந்திரியத்தினல் சஞ்சாரங்களைப் பண்ணுகிருர்.

## சுலோகம். (4)

"சித்தஞ்சாபான வாயுச்ச ஜிஹ்வாரசன மேவச
பாயு: பஞ்சவிதப் புரோக்தம் இத்யேதத் ஜலபஞ்சகம்

என்றபடி, சித்தத்துடனே கூடிக்கொண்டிருக்கின்ற சிதாபாசன் அபான வாயுவினில் ரமித்துக்கொண்டு ஜிக்வை இந்திரியத்தினல் ரசபதார்த்தங்களை அறிந்துகொண்டு பாயு இந்திரியத்தினல் மலஜலாதிகளை விடுகிருர்.

## சுலோகம். (5)

"அஹஞ்சப்பிராண வாயுச்ச நாசிகா கந்தமேவச
குஹ்யம் பஞ்சவிதப் புரோக்தம் இத்யேதத் பூமிபஞ்சகம்"

என்றபடி அகங்காரத்துடனே கூடிக்கொணடிருக்கின்ற சிதாபாசன் பிராணவாயுவினில் ரமித்துக்கொண்டு ஆக்கிராண இந்திரியத்தினல் கந்தமணங்களை அறிந்து உபஸ்த இந்திரியத்தினல் (ஆனந்தம்) சிற்றின்பங்களை அடைகிருர்.

## பஞ்சபூத சூக்ஷ்ம சக்கரம்.

| பஞ்சபூதம். | பிருதிவி | அப்பு. | அக்கினி. | வாயு. | ஆகாயம் |
|---|---|---|---|---|---|
| 1. ஆகாயத்தில் (ஸ்தானம்) | அந்தக்கரணம் (மூளையில்) | சமானவாயு (நாபியில்) | சுரோத்திரம் (செவியில்) | சப்தம் (கேள்வி அறியுமிடம்) | வாக்கு (வாய்) |
| 2. வாயுவில் (ஸ்தானம்) | மனது (கண்டத்தில்) | உதானவாயு (கண்டத்தில்) | துவக்கு (தோல்) | ஸ்பரிசம் (தோலின் அறிவு) | பாணி (கையின் அறிவு) |
| 3. தேயுவில் (ஸ்தானம்) | புத்தி (முகத்தில்) | வியானவாயு (சர்வதேகம்) | சட்சு (நேத்திரம்) | ரூபம் (பார்வையின் அறிவு) | பாதம் (நடக்குஞ்செய்கை) |
| 4. அப்புவில் (ஸ்தானம்) | சித்தம் (நாபி) | அபானவாயு (குதம்) | ஜிக்வை (நாக்கு) | ரஸம் (அறியுஞ்சக்தி) | பாயு (குதம்) |
| 5. பிருதிவியில் (ஸ்தானம்) | அகங்காரம் (சர்வாங்கம்) | பிராணவாயு (ஹிருதயம்) | ஆக்கிராணம் (மூக்கு) | சந்தம் (வாசனை அறியும் சக்தி) | குஹ்யம் (உபஸ்தம்) |

**தெய்வம் ஒன்று.** அண்ட பிண்ட சராசரங்களெங்கும் வியாபித்து பலவிதமான ஜாதி மதஸ்தர்களால் பலவிதமான நாமங்களால் அழைக்கப் படும் கடவுள் ஒன்றே.

**புண்ணியம், பாவம்.** பல ஜன்மங்களில் புண்ணியஞ் செய்தவர்கள் நல்ல ஊர், பெயர், நல்லகுரு சிஷ்யன், நல்லதாய் தந்தை, நல்ல பாரியை புத்திரன், நல்லமனது நடத்தை இவைகளை யடைந்து சுகமாயிருப்பார்கள். அனேக ஜன்மங்களில் பாவஞ்செய்தவர்கள் தகாத ஊர் பெயர், தகாத குரு சிஷ்யன், தகாத தாய்தந்தை, தகாத பார்யை புத்திரன், தகாதமனது நடத்தை இவைகளை யடைந்து கஷ்டமடைகிறார்கள்.

**குணங்கள் மூன்று.**

1-சத்துவகுணம்.

சுலோகம். 'சத்தியக்ஞானந் தயாமௌனம் சௌசமிந்திரிய நிக்கிரகம்!
பிருமசர்யஞ்ச அக்ரூரம் சாத்வீகங் குணலக்ஷணம்.

என்றபடி, சத்தியம் ஞானம், தயை, மௌனம் சுத்தம், இந்திரிய நிக்கிரகம், பிறருக்குத் துன்பஞ்செய்யாமை, தெய்வபக்தி, இவை எட்டும் சத்துவகுண லக்ஷணம்.

2. இராஜதகுணம்.

சுலோகம்! காமக்குரோத மதமஹங்காரம் மைதுனஞ்சப்பிரவர்த்தகம்! உத்
தியோக விஷயானந்தம் இராஜதங்குண லக்ஷணம்.

என்றபடி காமம், குரோதம், மதம், அகங்காரம், சிற்றின்பப் பிரியம் உத்தியோகம், விஷயானந்தம், தயை யின்மை இவை எட்டும் இராஜத குண லக்ஷணம்.

3. தாமதகுணம்.

சுலோகம். 'அக்யானமோக நித்ரஸ்ய ஆலஸ்யம் புத்தி சூன்யகம் ஆகாரப்
பிரியம் பாபிஷ்டம் தாமதங் குணலக்ஷணம்'

என்றபடி அக்கியானம், மோகம், அதிக நித்திரை, சுறு சுறுப்பின்மை, மந்தபுத்தி, பாபத்தில் மனஞ்செல்லுதல், பகுத்தறிவின்மை, மிதமிஞ்சி புஜித்தல் இவை எட்டும் தாமதகுணலக்ஷணம்.

இம்மூன்று குணங்களில் சத்துவகுணம் வெளுப்பாகவும். இராஜத குணம் சிவப்பாகவும், தாமதகுணம் கறுப்பாகவுமிருக்கும்.

சுலோகம். 'பிருஹ்மா விஷ்ணு ருத்ரஸ்ய ஈஸ்வரஸ்ய சதாசிவா' மனயேவ
மனுஷ்யணாங் காரணம் பந்தமோக்ஷதே!!

என்றபடி இந்த முக்குணங்களும் பிருமத்திலிருந்து உண்டான ஈஸ்வராதிகள் முதல் அண்டாண்டங்களில் உள்ள ஜீவர்கள் எல்லாரிடத்திலும் இருந்து பந்தமோக்ஷங்களுக்குக் காரணமாகும்.

**தாபத்திரயம் மூன்று.**

1. அத்யாத்மீகம். சரீரத்தை பீடித்துக்கொண்டு வரப்பட்ட தலைவலி, சுரம், ஜன்னி முதலிய உபாதிகளும், அவயவங்களிலுண்டாகும் குருடு, செவிடு, ஊமை குரூபம் முதலியவைகளும் அத்யாத்மீக துக்கமென்று சொல்லப்படும்.

2. ஆதிபௌதிகம். புலி, கரடி, பாம்பு, தேள் முதலிய ஜந்துக்களால் வருந்துன்பங்கள் ஆதிபௌதிக துக்கமென்று சொல்லப்படும்.

3. ஆதிதைவீகம். இடி, மின்னல், காற்று, அக்கினி, விருக்ஷம் இவைகளால் வருந்துன்பங்கள் ஆதிதைவீக துக்கமென்று சொல்லப்படும்.

**சரீரம் மூன்று.**

1. பஞ்சபூதங்களினாலுண்டான கர சரண அவயவங்களுடன் பிம்பாகிருதியான தேகம் தூல சரீரம்.

2. ஞானேந்திரியம் கன்மேந்திரியம், பிராணாதி பஞ்சகம், அந்தக் கரணாதிகள் சூக்ஷ்மசரீரம்.

3. முதல் இரண்டு சரீரத்திற்கும் ஹேதுவான அவித்தை (அக்கியானம்) காரண சரீரம்

**ஆகாமிய சஞ்சித பிராரத்துவம்.**

1. பழைய ஜன்மங்களில் செய்திருக்கும் கன்மங்களில் மிகுந்திருப்பது சஞ்சிதகன்மம்.

2. வரும் ஜன்மங்களில் அனுபவிக்கும்படியாக இந்த ஜன்மத்தில் செய்யுங்கன்மம் ஆகாமியகன்மம்.

3. இந்த ஜன்மத்தில் அனுபவிக்கும் கன்மம் பிராரர்த்தகன்மம்.

ஆகாமியகன்மம், நிஷ்காமமாகச்செய்வதால் கொஞ்சமும் நெருங்காமல் நீங்கும். சஞ்சிதகன்மம் ஞானிகளுக்கு ஞானக்கினியினால் நசித்துப்போகும் எப்படி என்றால் அறிஞர்கள் பூஷிப்பதனால் புண்ணியகன்மமும், அறிவிலிகள் தூஷிப்பதினால் பாபகன்மமும் நசித்துவிடும். பிராரத்துவகன்மம் நிஷ்காமியத்தினால் சஞ்சலமன்னியில் அனுபவிக்கப்படும்.

### காலம் மூன்று.

இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம்.

### பருவம் மூன்று.

பால்யம், யௌவனம், வார்த்திகம்.

### அவஸ்தை மூன்று.

1. தூலதேகத்தினால் கரசரண அவயவங்களினால் கர்த்திருத்வ போக்திருத்வமாகச் செய்யப்படுஞ் செய்கை சாக்கிராவஸ்தை.

2. சூக்ஷ்ம தேகத்தினால் மனது வாசனையினாலே கண்டதும் கேட்டதும் எண்ணப்படுஞ் செய்கை சொப்பனாவஸ்தை.

3. காரண தேகத்தினால் நான் யாதையும் அறியாமல் சுகமாய் நித்திரை செய்தேனென்று அறியப்படுஞ் செய்கை சுழுத்தி அவஸ்தை.

### வியஷ்டி அபிமானி தேவதை மூன்று.

1. சாக்கிரத்தில் தூலதேகத்தை அபிமானித்திருப்பவர் விசுவன்.

2. சொப்பனத்தில் சூக்ஷ்மதேகத்தை அபிமானித்திருப்பவர் தைஜசன்.

3. சுழுத்தியில் காரணதேகத்தை அபிமானித்திருப்பவர் பிராஞ்ஞன்.

### வாஸனாத்திரயம் மூன்று.

அவை—தேசவாசனை, உலகவாசனை, சாஸ்திரவாசனை, எனப்படும்.

### ஈஷணாத்திரயம்மூன்று.

அவை—பொன்னாசை, மண்ணாசை, பெண்ணாசை எனப்படும்.

### காண்டத்திரயம் மூன்று.

1. கர்மகாண்டம்:—ஸ்நானம், சந்தியாவந்தனம், ஜபம், அக்கினி கோத்திரம், வைசுவதேவம், அதிதிபூஜை, தேவதார்ச்சனை, முதலிய சத் கருமங்களை செய்வது கர்மகாண்டம்.

2. உபாசனாகாண்டம்:—ஸ்ரீ பரமேஸ்வரனை சதா சர்வகாலமும் தைலதாரைபோல் இடைவிடாமல் பக்தி பண்ணிக் கொண்டிருப்பது உபாசனாகாண்டம்.

3. ஞானகாண்டம்.—எள்ளுக்குள் எண்ணெய் போலவும், புஷ்பத்திற்குள் வாஸனையைப்போலவும், காஷ்டத்திற்குள் அக்கினியைப்போலவும் ஏகமாக எங்கும் நிறைந்திருக்கும் பிரும்மத்தை அறியுந் தத்துவ உணர்ச்சியே ஞானகாண்டம்.

### வேதம் நான்கு.

அவை, இருக்கு, யசுர், சாமம், அதர்வணம்.

### வேதங்களின் மஹாவாக்கியம் நான்கு.

அவையாவன

1. பிரஞ்ஞானம் பிரம்மம் (அறிவே பிரமம்)
2. அஹம்பிரஹ்மாஸ்மி (நான் பிரமமாய் இருக்கிறேன்)
3. தத்துவமஸி (அது நீயா யிருக்கிறாய்)
4. அயமாத்மா (இந்த ஆத்மாவே நீ)

### பஞ்சகோசம் ஐந்து.

1. அன்னத்தினால் விருத்தி யடைந்த கரசரணங்களுடன் அவயவாகாரமாய் ஷட்பாவ விகாரமாய் ஷடூர்மிக்காலயமாய்த் தோற்றப்படும் தூலசரீரம் அன்னமய கோசம்.

2. கன்மேந்திரியம் ஐந்தும், பிராணாதி ஐந்தும் சேர்ந்து பிராண மய கோசம்.

3. மனதும் ஞானேந்திரியம் ஐந்தும் சேர்ந்து மனோமய கோசம்.

4: ஞானேந்திரியமும் புத்தியுஞ் சேர்ந்து விஞ்ஞானமய கோசம்.

5. அவித்தையின் வடிவான காரணதேகமே ஸ்ரீவேஸ்வர ரூபத்துடன் கூடி பிரியம் அப்பிரியங்களை (பிரியம் மோதம் பிரமோதமாகிய விருத்திக்கு வித்தாய்) உணர்கின்ற அஞ்ஞானமே ஆனந்தமய கோசம்.

### அவஸ்தை ஐந்து.

1. தூல தேகத்தினால் பண்ணப்படும் விவகாரம் சாக்கிராவஸ்தை.
2. சூக்ஷ்மதேகத்தினால் எண்ணப்படும் விவகாரம் சொப்பனவஸ்தை.
3. காரணதேகத்தினால் அறியப்படும் விவகாரம் சுழுத்தி அவஸ்தை.
4. ஞானேந்திரியங்களுடன் கூடிச்செய்யும் சத்கருமம் துரியாவஸ்தை.
5. தத்துவங்களுடன் கூடாமல் ஆத்மஸ்வரூபமாகத் தன்னை அறிகின்றதே துரியாதீதம்.

### ஷட்கோசம் ஆறு.

அவை- தோல், உதிரம், மாம்ஸம், நரம்பு, எலும்பு, மச்சை.

### ஷடூர்மிகள் ஆறு.

பசி, தாகம், சோகம், மோகம், ஜரை, மரணம்.

### ஷட்பாவ விகாரம் ஆறு.

அவை பிறத்தல், இருத்தல், வளர்தல், திரிதல், குறைதல், நசித்தல்.

அத்தியாரோபமாகிய பஞ்சீகரண உற்பத்திப்பிரகாரஞ் சொன்னோம். இனி, கற்பனாரகிதமான லயப்பிரகாரம் (அபவாதவழி) சொல்லுகின்றோம்.

மிருத்திகையிலுண்டான கடம் மிருத்திகையில் லயமாகிறது. அயத்திலுண்டான கத்திகட்காதிகள் அயத்திலேயே லயமாகிறது. சுவர்ணத்திலுண்டான கடக மகுடாதிகள் சுவர்ணத்திலேயே லயமாகின்றது. அது போல பிரும்மத்திலுண்டான அண்டம் பதினாலு உலகமும் பிரும்மத்திலேயே லயிக்கின்றன.

## விஷயாதி பஞ்சகம் லயம்.

ஆகாயத்திலுண்டான சுதாம் சத்திலிருந்து அப்புவினுடைய முக்கியாம் சத்துடன் கூடிப்பிரிந்த சப்தம் லயமாயிற்று (14-வது கட்டத்தில்)

வாயுவினுடைய சுதாம் சத்திலிருந்து அப்புவினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த ஸ்பரிசம் லயமாயிற்று (14-வது கட்டத்தில்)

அக்கினியினுடைய சுதாம்சத்திலிருந்து அப்புவினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த ரூபம் லயமாயிற்று (14-வது கட்டத்தில்)

அப்புவினிடத்திலே ரசம் லயமாயிற்று (14-வது கட்டத்தில்)

பிருதிவியினுடைய சுதாம்சத்திலிருந்து அப்புவினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த கந்தம் லயமாயிற்று (14-வது கட்டத்தில்)

சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் இவ்வைந்தும் அப்புவில் லயமாயிற்று. (14-வது கட்டத்தில்)

## ஞானேந்திரிய பஞ்சகம் லயம்.

ஆகாயத்தினுடைய சுதாம்சத்திலிருந்து அக்கினியினுடைய முக்கியாம் சத்துடன் கூடிப்பிரிந்த சுரோத்திரம் லயமாயிற்று (13-வது கட்டத்தில்)

வாயுவினுடைய சுதாம்சத்திலிருந்து அக்கினியினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த துவக்கு லயமாயிற்று (13-வது கட்டத்தில்)

அக்கினியினிடத்திலேயே சட்சு லயமாயிற்று (13-வது கட்டத்தில்)

அப்புவினுடைய சுதாம்சத்திலிருந்து அக்கினியினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த சிங்குவை லயமாயிற்று (13-வது கட்டத்தில்)

பிருதிவியினுடைய சுதாம்சத்திலிருந்து அக்கினியினுடைய முக்கியாம் சத்துடன் கூடிப்பிரிந்த கந்தம் லயமாயிற்று (13-வது கட்டத்தில்)

சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் இவை ஐந்தும் அக்கினியில் லயமாயிற்று (13-வது கட்டத்தில்)

## கன்மேந்திரிய பஞ்சகம் லயம்.

ஆகாயத்தினுடைய சுதாம்சத்திலிருந்து பிருதிவியினுடைய முக்கியாம் சத்துடன் கூடிப்பிரிந்த வாக்கு லயமாயிற்று (15-வது கட்டத்தில்)

வாயுவினுடைய சுதாம்சத்திலிருந்து பிருதிவியினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த பாணி லயமாயிற்று (15-வது கட்டத்தில்)

அக்கினியினுடைய சுதாம்சத்திலிருந்து பிருதிவியினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த பாதம் லயமாயிற்று (15-வது கட்டத்தில்)

அப்புவினுடைய சுதாம்சத்திலிருந்து பிருதிவினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த பாயுரு லயமாயிற்று (15-வது கட்டத்தில்)

பிருதிவியினிடத்திலேயே உபஸ்தம் லயமாயிற்று (15-வது கட்டத்தில்)

வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் இவை ஐந்தும் பிருதிவியில் லயமாயிற்று (15-வது கட்டத்தில்)

## பிராணாதி பஞ்சக லயம்.

ஆகாயத்தினுடைய சுதாம்சத்திலிருந்து வாயுவினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த சமானன் லயமாயிற்று (12-வது கட்டத்தில்)

வாயுவினிடத்திலேயே உதானன் லயமாயிற்று (12-வது கட்டத்தில்)

அக்கினியினுடைய சுதாம்சத்திலிருந்து வாயுவினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த வியானன் லயமாயிற்று (12-வது கட்டத்தில்)

அப்புவினுடைய சுதாம்சத்திலிருந்து வாயுவினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த அபானன் லயமாயிற்று (12-வது கட்டத்தில்)

சமானன், உதானன், வியானன், அபானன், இவை நான்கும் வாயுவில் லயமாயிற்று (12-வது கட்டத்தில்)

## அந்தக்கரணங்களும் பிராணனும் லயம்.

ஆகாயத்தில் அந்தக்கரணம் லயமாயிற்று (11-வது கட்டத்தில்)

வாயுவினுடைய சுதாம்சத்திலிருந்து ஆகாயத்தினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த மனம் லயமாயிற்று (11-வது கட்டத்தில்)

அக்கினியினுடைய சுதாம்சத்திலிருந்து ஆகாயத்தினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த புத்தி லயமாயிற்று (11-வது கட்டத்தில்)

அப்புவினுடைய சுதாம்சத்திலிருந்து ஆகாயத்தினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த சித்தம் லயமாயிற்று (11-வது கட்டத்தில்)

பிருதிவியினுடைய சுதாம்சத்திலிருந்து ஆகாயத்தினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த அகங்காரம் லயமாயிற்று (11-வது கட்டத்தில்)

அந்தக்கரணம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம், இவை ஐந்தும் ஆகாயத்தில் லயமாயிற்று (11-வது கட்டத்தில்)

பிருதிவியினுடைய சுதாம்சத்திலிருந்து வாயுவினுடைய முக்கியாம்சத்துடன் கூடிப்பிரிந்த பிராணன் லயமாயிற்று (12-வது கட்டத்தில்)

பிருதிவி அப்புவினிடத்தில் லயித்தது (14-வது கட்டத்தில்)

அப்பு அக்கினியிடத்தில் லயமாயிற்று (13-வது கட்டத்தில்)

வக்கினி வாயுவினிடத்தில் லயமாயிற்று (12-வது கட்டத்தில்)

வாயு ஆகாயத்தில் லயித்தது (11-வது கட்டத்தில்)

ஆகாயம் அண்டபிண்டாதி பஞ்சபூதங்களையும் உண்டாக்கிய விக்ஷேப சக்தியில் வந்து லயமாயிற்று (10-வது கட்டத்தில்)

விக்ஷேபசக்தி அகண்டானந்த பிரும்மத்தையும் அதிஷ்டான ஆரோப பேதத்தையும் அறிய வொட்டாமல் மறைக்கும் ஆவரண சக்தியிடம் வந்து லயமாயிற்று (9-வது கட்டத்தில்)

ஆவரணசக்தி கறுப்பு வர்ணமான தாமதகுணத்தில் வந்து லயமாயிற்று (8-வது கட்டத்தில்)

தாமதகுணம் சிவப்பு வர்ணமான ராஜதகுணத்தில் வந்து லயமாயிற்று (7 வது கட்டத்தில்)

இராஜதகுணம் வெள்ளைவர்ணமான சத்வகுணத்தில் வந்து லயமாயிற்று (6-வது கட்டத்தில்)

சத்வகுணம் மித்தையான விஷயாதி போகங்களை தன்னுடையதாக அகங்கரித்துக் கொண்டிருக்கும் அகங்காரத்தில் வந்து லயமாயிற்று (5-வது கட்டத்தில்)

அகங்காரம் நானே கர்த்தா, நானே போக்தா, நான் சுகி, நான் துக்கி என்று எண்ணி மயங்கும் அக்கியானத்தில் வந்து லயமாகினறது (4-வது கட்டத்தில்)

அக்கியானம் மாய்கையினுடையவும் பிரும்மத்தினுடையவும் ஸ்வரூப மான மஹதத்துவத்தினிடம் வந்து லயித்தது (3-வது கட்டத்தில்)

மஹதத்துவம் சத்துமின்றி, அசத்துமின்றி, சித்துமின்றி, சடமு மின்றி, துக்கமுமின்றி, ஆனந்தமு மின்றி, விளங்கும் மாய்கையினிடம் வந்து லயித்தது (2-வது கட்டத்தில்)

மாய்கை பிரும்மத்தின் பிரதிபலித்ததாய் ஸமஸ்த ஜகத்தையும் பிரகா சிக்கச் செய்யும் ஒளியாய் விளங்கும் சிற்சாயையினிடத்தில் வந்து லயித்தது (1-வது கட்டத்தில்)

சிற்சாயை நித்தியமாய், நிர்மலமாய், நிராகாரமாய், சத்துச்சித்தானந்தப் பரவெளியாய் நிறைந்த ஏகமேவா அத்வதீயம் பிரஹ்ம மென்று சுருதிகள் சொல்லுகின்றபடி பரிபூரண பரப்பிருமத்தில் வந்து லயித்தது.

ஓம்- தத்: ஸத்.

## பிரம்மார்ப் பிதமஸ்து.

இந்தப் பஞ்சீகரண மகா வாக்கியத்தை பஞ்சபூதக்கட்டத்தில் பகிர்ந்து வைத்து எவர்கள் ஜபிக்கிறார்களோ, அவர்கள் அநேக ஜன்மங்களில் அதா வது நெல்லி இலையை ஒரு பிடி உருவி வைத்தால் அதில் எவ்வளவு இலைகள்

இருக்கின்றனவோ அவ்வளவு ஜன்மங்களில் செய்த பாபத்திலிருந்து விடுபட்டு பரிசுத்தராய் ஞானசித்தியடைந்து பரமாத்மாவை யறிந்து விதேக முத்தி யடைகிறாரென்று சற்குருவானவர் சிஷ்யனுக்கு உபதேசம் பண்ணினார். அப்படிப்பட்ட பஞ்சீகரண மகா வாக்கியத்தை விவரித்து விளக்கமாய் எழுதி அச்சிற்பதிப்பித்தேன்! இதில் அனேக பிழைகளிருந்தாலும் குற்றத்தைத்தள்ளி குணத்தைக் கிரகிக்க வேண்டுமாய் இதைப்படிக்கும் மகத்துக்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஓம்-தத்-ஸத்.

வாலாம்பாளம்மாள்.

உ

பராதேவி துணை.

# குறவஞ்சி

[தர்மாம்பாள் குறம், வேதாந்தக் குறம்,
அகண்டவெளிக் குறம்]

சென்னை

V. S. வாலாம்பாள் அம்மாளால்

பிரசுரிக்கப்பட்டது.

**MADRAS.**

PRINTED AT THE COMMERCIAL PRESS, MADRAS, S. E.

1915.



*Price Annas 3.*] [விலை அணா 3

# முகவுரை.

இதில்

தர்மாம்பாள் குறம், வேதாந்தக் குறம்

அகண்டவெளிக் குறம்

என வழங்கும் மூன்று பாடல்கள் அடங்கியிருக்கின்றன.

ஸ்ரீ பார்வதியம்மனே குறப்பெண் வடிவாய் வந்து சில ஸ்திரீகளுக்கு அவர்களுடைய உள்ளங்கை ரேகைகளைப் படித்துக் குறி சொல்லியதாக ஏற்பட்டவை.

தர்மாம்பாள் குறம் என்பதில் காவேரியம்மனுக்கு கடலோடு சேர உபாயஞ்சொல்லி அனுக்கிரகம் செய்ததாகவும், மற்றவை யிரண்டிலும் ஆத்தும ஞானம் அடையப் பக்குவமான சில ஸ்திரீகளுக்கு அவர்களடைந்திருக்கும் பக்குவத்தையும் அந்த ஞானத்தை யடையவேண்டிய மார்க்கத்தையும் சொல்லியதாகவும் அமைக்கப் பட்டிருக்கிறது.

கலியாண காலங்களில் சொல்லத்தகுந்த காவேரியம்மன் கப்பல் ஒன்று தர்மாம்பாள் குறத்தின் முடிவில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

ஆத்தும போதமடையப் பக்குவமான
எல்லா ஸ்திரீகளுக்கும்
இந்தக்
குறவஞ்சிகளைச்
சமர்ப்பிக்கிறேன்.

**V. S. வாலாம்பாள்.**

உ

பரதேவி துணை.

# தர்மாம்பாள் குறம்.

## கடவுள் வணக்கம்.

(கண்ணிகள்.)

1 சரணமய்யா கணபதியே சரஸ்வதியே முன்னடவாய்
ஆறுமுக வேலவனே அன்புடனே துணைவருவாய்
பார்வதியாள் குறவடிவை பக்தியுடன் நான்பாட
அறம் வளர்த்த நாயகியின் அழகான குறம்பாட
காவேரிக்குக் குறிகள்சொன்ன கதையை நானும் எடுத்துரைகக
விக்கினங்களில்லாதே விநாயகரே முன்வருவீர்.

## லோபாமுத்திரை காவேரி நதியாக வந்தது

4. ஸஹ்யமலை தனில்பிறந்து சமுத்திரரை மாலையிட
அகஸ்தியரை பிரிந்துமவள் அரியபெரும் நதியாகி
5. தட்சணத்தின் கங்கையென்றும் ஜலரூபந் தனையடைந்து
ஜலரூபியாய் காவேரி யென்னும் திருநாமததுடனே வந்தாள்
6. குடகுமலை தன்னைவிட்டு காடுசெடி மலைதாண்டி
பர்வதத்தைப் பிளந்துகொண்டு பாம்புகளைச் சேர்த்துக்கொண்டு
7. மலையைப் பிளந்துகொண்டு மரங்களெல்லாம் பேர்த்துக்கொண்டு
செடிகொடியைப் பிடுங்கிக்கொண்டுதோழிமாரைக்கூட்டிக்கொண்டு
8 ஆப்தமான தோழிமார்கள் ஐந்துபேரைச் சேர்த்துக்கொண்டு
அமராவதி யென்னுமொரு அன்புடைய தோழியுடன்
9. பவானி யென்னுமொரு பிரசித்தமான தோழியுடன்
லக்ஷ்மணதீர்த்த நதியான லக்ஷணமாந் தோழியுடன்
10. ஹேமவதி யென்னுமொரு இஷ்டமான தோழியுடன்
காஞ்சன நதியென்னுமொரு களிப்புடைய தோழியுடன்
11. தோழிமாரைக் காவேரியம்மன் துணையாகச் சேர்த்துக்கொண்டு
பாரியெங்கும் நிறைந்துகொண்டு பார்வையாக வந்துவிட்டாள்

12. ஓசந்துவரும் நுரையழகும் உத்ஸாக கொந்தளிப்பும்
 பெருகியந்தக் காவேரிநதி அலைமோத வந்துவிட்டாள்

13. குயில்கூவி குதூகலிக்க குளிர்ந்தகாற்று வீசிவர
 சோலை தூரத் தென்றல்வீச சிறந்தநதி யாகவந்தாள்

14. கனத்தசெடி குடிசைகளும் காட்டுமிருகம் பலவகையும்
 வாழையுடன் கமுகுதென்னை வாரிக்கொண்டு வந்துவிட்டாள்

15. சாமுண்டி மலையருகின் ஸ்தலங்களெல்லாம் சுற்றிக்கொண்டு
 மைசூரு ராஜ்ஜியத்தில் வைபோகமாய் நிறைந்துகொண்டு

16. சிவசமுத்திரந் தன்னில்வந்து சிலபிரிவாய்க் கீழிறங்கி
 ஸ்ரீரங்கப் பட்டணத்தில் ரங்கருக்கு மாலையாகி

17. ஈரோடு கொடுமுடியின் எல்லைவழி யாகவந்து
 அகண்டமென்னும் காவேரியாய் அழகுடனே பரவிவந்தாள்

18. ஜம்புநாதர் ஸ்ரீரங்கர்க்கு திருமாலை யாகவந்தாள்
 பாற்கடல்போல் அலைமோத படுகையெங்கும் நிறைந்துவந்தாள்

19. வயல்களெல்லாம் நிரம்பிக்கொண்டு வேகமாக வந்துவிட்டாள்
 அறம்வளர்த்தாள் படித்துறைக்கு ஐந்துமுகத் தோடுவந்தாள்

20. பஞ்சநத க்ஷேத்திரத்தில் காவேரியும் வந்தவுடன்
 ஆள்கொண்ட சுவாமிசென்று அறம்வளர்த்தாளுக் கறிக்கையிட்டார்

21. அம்பிகையாள் தானெழுந்து ஆபரணஞ் சோதிவிட
 பாக்குடனே வெற்றிலையும் பழத்துடனே தேங்காயும்

22. மஞ்சளுடன் குங்குமமும் மணமுடைய சந்தனமும்
 புஷ்பவகை யுள்ளதெல்லாம் தட்டினிலே எடுத்துக்கொண்டு

23. காவேரியின் வரவேற்று காணிக்கையும் தான்கொடுத்தாள்
 வாங்கிக்கொண்டு காவேரி வணங்கி நமஸ்கரித்தாள்

24 வாழ்த்தியப்போ அம்பிகையும் நதியைக்கண்டு மனமகிழ்ந்தாள்
 சமுத்திரரை நானடைய சந்தோஷமா யனுப்புமென்று

25. காவேரி கேட்கலுமே கல்யாணிதேவி சொல்வள்
 சமுத்திரரை இங்கழைப்பேன் சந்தோஷமா யிருப்பாயென்றாள்

26. காவேரி கேட்டுமதைக் கலங்கியவள் தன்மனதில்
 சரீரமெல்லாம் அங்கேவைத்து சாக்ஷியாக ஒருரூபம்

27 சாக்ஷியான காவேரி சாகரத்தை நோக்கிச்சென்றாள்
 அம்மனுட ஆக்ஞையினால் சமுத்திரரும் அக்ஷணமே

28. உத்ஸாகத் துடனேவந்தார் உலகமெல்லாம் முழுகுமென்று
 பாதாளத்தில் மறைந்துகொண்டு பட்டணத்தின் நடுவேவந்தார்

29. ஸ்தலத்தினுட மகிமைதன்னை சமுத்திரருந் தான்பார்த்தார்
 ஸப்தஸ்தல சுவாமிகளும் சமுத்திரரின் வரவேற்று

30. பழங்களுடன் தாம்பூலம் பிரஸாதங்களும் தான்கொடுத்தார்
வாங்கிக்கொண்டு சந்தோஷமாய் சமுத்திரரும் போய்மறைந்தார்

31. சாக்ஷியென்னும் காவேரிநதி சாகரத்தில் தேடிவிட்டு
திரும்பிவந்து காவேரி தயங்கி மனந்தளர்ந்து

32. சமுத்திரரை யடையவென்று தர்மாம்பாளை நினைந்து
கன்னிகையாய் திருவையாற்றில் காவேரி தவமிருந்தாள்

33. பார்வதியாள் காவேரியை பரிஹாஸம் பண்ணவென்று
அறம்வளர்த்தாள் குறவடிவை அழகாகத் தானடைந்தாள்

## தர்மாம்பிகை குறத்தி வடிவெடுத்தல்.

(2-வது வேறுமெட்டு.)

1. பாடகந் தண்டையும் பாதஸரமும்
பத்துவிரலுக்குப் பீலிமெட்டியும்
அடுக்குமோதிரம் சங்குவளையும்
அஸ்தகடகமும் தோள்வளையும்

2. குண்டும் பவழம் குடமணித் தாழ்வடம்
கோத்தமுத்துடன் வஜ்ஜிரமாலையும்
சங்குமணியும் பச்சைமணியும்
சரப்பளி உத்தண்டா மோகனமாலையும்

3. கொப்புடன் நல்ல முத்துவாளியும்
குந்தள ஓலையும் கொடக்கடுக்கனும்
மின்னல் ஒளிபோல மூக்குத்தியும்
முத்துக்கட்டின வஜ்ஜிரக்கல்லும்

4. பல்லொளியும் புன் சிரிப்பும்
பவழம்போல சிவந்தவாயும்
கண் மலரும் மையழகும் இரு
கண்ணிடையில் பச்சிலைப்பொட்டும்

5. கஸ்தூரிப்பொட்டும் நெற்றியின் பட்டமும்
கல்லிழைத்த சுட்டியாழ்வானும்
மல்லிகை முல்லை மலர்கள்சூடி
மயிரைவாரி முடிந்த அழகும்

6. கறுப்பு ரவிக்கையும் பட்டுப்புடவையும்
கச்சிதமாகவே உடுத்தவழகும்
பாலகனை யார்புடனே
பூட்டுத் தலப்பாலே அரவணைத்து

7. குஞ்சுகளைக் குறத்தியம்மை
கூடத்தன்னுடன் கூட்டிக்கொண்டு
கொடிபோல இடையும் துவளக்
கூடையெடுத்து இடுப்பினில்வைத்து

8. பாக்குப்பையும் இடுப்பில் சொருகி
பாவனையாகவே சாய்ந்துநடந்தாள்
காதுவரையில் நீண்ட கண்ணும்
கனிவாயும் புன்சிரிப்பும்

9. செண்பகம் போல் மேனிவர்ணமும்
செந்தாமரை போல் முகமும்
தாழை மடல்போன்ற காதுகளும்
சந்திரன்போல் வளைந்த நெற்றியும்

10. பஞ்சநதி திருவை யாற்றின்
பெரியதொரு வீதியிலே
தையலந்த வண்ணக்குறத்தி
தானும்வந்தாள் குறிபார்க்க.

ஸ்திரீஜனங்கள் குறத்தியிடம் குறிகேட்குதல்

11. செம்பொன் கொடிபோல் மெல்லநடந்து
தெருவீதி சுற்றிவந்தாள்
தேர்முட்டியி னருகே நின்று
சிவதெரிசனம் பண்ணிக்கொண்டு

12. சிங்காரமாகவே வண்ணக் குறத்தி
தென்னண்டைவீதித் தெருவில் வந்தாள்
அம்பிகையென்னுங் குறத்தியிடத்தில்
ஆதரவாய் வந்து மாதரெல்லாரும்

13. கூட்டமாய்க் கூடியே கொம்பனைமாரெல்லாம்
குறத்தியைப்பார்த்து கேட்கத் துவக்கினார்
பெண்க ளிரண்டுபேர் புத்திபறிய வில்லை
இங்கழைத்துவந்தேன் பாராய்குறத்தி

14. மூத்தபிள்ளைக்கு வேட்க வகையில்லை
சாஸ்திரம்பாரென்று சொன்னாளொருத்தி
இளையபிள்ளையும் என்னுடன் பேச வில்லை
எனக்குச் சொல்லென்று கேட்டாளொருத்தி

15. கைக்குழந்தைக்கு காச்ச லடிக்குது
காட்டவந்தேனென்று சொன்னாளொருத்தி

நாத்தனாருக்கு ஆக்துப் புருஷன்
நலமில்லையென்று கேட்டாளொருத்தி

16. கொழுந்தனொருத்தன் சூத்தியார் வீட்டிலே
குடியாய்க்கிடக்கிறான் என்றாளொருத்தி
தோழியொருத்தி தூர்க்கனா காண்கிறாள்
திருநீறுதாவென்று கேட்டாளொருத்தி

17. மாமனாருக்கு மண்டை யிடிக்குது
மாத்திரைதாவென்று கேட்டாளொருத்தி
நாட்டுப்பெண்ணுக்கு பேய்பிடித் தாட்டுது
நல்லமருந்துதா வென்றாளொருத்தி

18. இப்படிப்பெண்கள் எல்லாருங் கேட்கவே
இங்கிதமாகக் குறிகளுஞ்சொல்லி
கைலாஸநாதனை ஆலயஞ் சென்று
கண்டுபின் வந்து குறிகளுஞ் சொல்வேன்

19. என்று சொல்லியந்தப் பெண்களுடனே
ஈச்வரியாகிய வண்ணக்குறத்தி
அம்பிகைஎன்னும் வண்ணக் குறத்தி
ஆள்கொண்டார்கோவிலைக் கண்டுதொழுது

20. ஆள்கொண்ட சுவாமியின் கோவிலைவிட்டு
அய்யாரப்பரின் சந்நதிவந்தாள்
சூர்யபுஷ்கரணி ஜலத்தை யெடுத்து
விரலின்மேலே தெளித்துக்கொண்டாள்

21. தென்கைலாஸம் வடகைலாஸம்
சுற்றிப்பிரதக்ஷணம் பண்ணிவந்தாள்
சுவாமியுடைய சந்நதித்தூணில்
சாய்ந்திருந்தாள் வண்ணக்குறத்தி

22. சந்நதியிலே யிருந்த குறத்தி
வடிவைக்கண்டு சங்கரரும்
கயல்மீன்போன்ற கண்ணழகும்
கஸ்தூரிப்பொட்டும் முகவொளியும்

23. புன்சிரிப்பும் பல்லொளியும்
புவனேச்வரி வடிவழகும்
ராஜேச்வரி அழகைக் கண்டு
நாலுநாழி பிரமித்திருந்தார்

24. இந்நெடு நாளிதுவரைக்கும்
இந்தவடிவை நாம்கண்டதில்லை

மன்மதனை யெரித்தசிவன்
மயங்கியே தன்மனதிற் குள்ளே
25 காமனைநீறு யெரித்த சிவன்
கலங்கியேதன் மனதிற்குள்ளே
அந்தக்குறத்தி வடிவைக்கண்டு
ஆசையுடன் மோகங்கொண்டார்.

**பஞ்சநதீசர் சுந்தரவடிவுடன் குறத்தியிடம் வந்துசம்பாஷித்தல்.**

(3-வது வேறு மெட்டு.)

1. கைவளையும் சங்கிலியும் கணையாழி மோதிரமும் (சுவாமி)
கடுக்கனுடன் பதக்கம்கண்டி சரப்பளியும் தரித்தார்
2. சாயக்கம்பி வேஷ்டிகட்டி சரிகைச்சால்வை யணிந்து
தலைப்பாகையும் உருமாலை சங்கராரு மணிந்தார்
3. சந்தனக் குறுக்குமிட்டு ஜவ்வாதுப் பொட்டிட்டு
தங்கரைஞாண் தாழித்தும் கந்தம் புனுகணிந்தார்
4. கொழுந்து வெட்டிவேர் மல்லிகை குடமல்லிகைப் புஷ்பம்
குமுகுமுன்னு பரிமளிக்க குடுமியிலே அணிந்தார்
5 வாயிலே பாக்கடக்கி வெண்பட்டுப் பைபிடித்து
மடித்ததொரு வெற்றிலையை விரல்நடுவி லிடுக்கி
6. கந்தர்வ வேஷத்துடன் குறத்தியிடம் வரவே (சுவாமி)
கூர்விழியால் மயக்கியந்தக் குறத்திமெள்ளச் சிரித்தாள்
7. ஈச்வரரைக் கண்டவுடன் எழுந்திருந்து குறத்தி (அம்மை)
இருகையினு லுங்கூப்பி அடிவணங்கி நின்றாள்
8. வாரும்பெண்ணே குறத்தியேயுன் வடிவைக்கண்டு வந்தேன்
மாலையிட்ட உன்கணவன் வந்தானோ கூட
9. தாய்தகப்பன் உனக்குமுண்டோ சகோதரர்கள் உண்டோ
ஜாதிகுலம் நாமந்தன்னை தனித்தனியாய் சொல்வாய்
10. எந்தநாடு எந்ததேசம் எங்கேவந்தாய் குறத்தி
இந்நெடுநாள் உன்போல்வடிவைக் கண்டது நானில்லை
11. சித்திரைத் திருநாளுக்கு ஜனங்கள்மெத்த வருவார்
சுந்தரிஉன் வடிவைப்போல கண்டது நானில்லை
12. வைகாசி வஸந்தனுக்கு மனுஷ்யாள் இங்கு வருவார்
வையகத்தில் உன்னைப்போன்ற வடிவைக்கண்ட தில்லை
13. செல்லத்துடன் சிவனும் சுந்தரியைக் கேட்க
வண்ணக் குறத்திகேட்டு மயக்கியவ ளுரைப்பள்
14. ஜாதிகுலங் கேட்டீரே சுவாமியென்னை யிப்போ—நான்
தனித்தனியா யெடுத்துச்சொல்வேன் சலியாமல் கேளும்

15. ஜாதியும்நான் குறச்சாதி தனிவழியும் வருவோம்—நாங்கள்
சாம்பபரமேசருக்கும் சம்பந்தங்களுண்டு

16. அப்பன் ஆயி என்னை அம்பிகையென் றழைப்பார்
என், அண்ணன்பெயர் சக்ரபாணி ஆறுமுகனென் பிள்ளை

17. குச்சுக்கு காவலாயென் கிழவனாரும் இருப்பார்
கூடைமுறங் கட்டிநாங்கள் குறிபார்த்துச் சொல்வோம்

18. குஞ்சுகளின் பசியார அன்னமது கொடுத்து
கொழித்தமுத்தும் முறத்தில்வைத்தால் குறிபார்த்துச் சொல்வேன்

19. வண்ணக் குறத்தியிந்த வக்கணைகள் படிக்க
கேட்டுமந்தப் பரமேசருங் கெம்பீரமாய்ச் சொல்வர்

20. பட்டுச்சீலை படியரிசி பாக்குடன் வெற்றிலையும்
பசியடங்கப் பட்டைசாதம் பணமுங்காசுந் தருவேன்

21. உன்கணவன் கிழவனென்று சொன்னாயே நீ பெண்ணே
கந்தருவன் போன்றநானே உன்னழகுக் கேர்வை

22. செல்லத்துடன் சிவனாரும் சிரித்துக்கொண்டே சொல்ல
வண்ணக்குறத்தி சினந்து மறுத்திதனைச் சொல்வள்

23. என்கணவன் குறவனெங்கள் கிழவனிதைக் கேட்டால்
ஈட்டியினாலே குத்தி என்னை இழுத்தெறிவார்

24 ஆசைபெரி தென்றுசொல்லி உம்மைநானு மடைந்தால்
அறம்வளர்த்த நாயகியும் அக்கினியால் தகிப்பள்

25. வேலைசெய்யத் தாதியுண்டு பாக்கியமெனக் குண்டு
விதம்விதமாய் பட்டுமுண்டு வெகுபணதி யுண்டு

26. கட்டிலுண்டு மெத்தையுண்டு கிழவனாரு கிருப்பேன்
களஞ்சியத்தில் அரிசியுண்டு கவலைகெட யிருப்பேன்.

### குறத்தி ஈசருக்குத் தன் பெருமையுரைத்தல்

(2-வது மெட்டுப்போல் பாடலாம்.)

1. கோத்தமுத்து மாலையுடன் கொப்புடனே வாளிமின்ன
ஏற்றமுள்ள ஈச்வரியாள் எடுத்துச்சொல்வள் தன் பெருமை

2. பூத்திருக்கும் சோலைகளும் புஷ்கரணி தீர்த்தங்களும்
காஞ்சனத்தால் ஆலயமும் கடைத்தெருவும் வீதிகளும்

3. பார்வையுள்ள வீதிகளும் படித்துறையுங் காவேரியும்
ஏழுநிலைக் கோபுரமும் எட்டவொண்ணாத் திருமதிலும்

4. பத்துநிலைக் கோபுரமும் என் பள்ளியறை சேர்வைகளும்
யாகம்வேள்வி செய்யும் நல்ல அந்தணர்கள் கூட்டங்களும்

5. வேத பாராயணத்தழகும் நான் வீதிவரும் வைபோகமும்
பஞ்சநதி மகத்துவமும் எந்தன் பரிபூர்ண நதியழகும்
6. இன்னமுண்டு என்பெருமை ஜகதீசரே நீர் கேளுமென்று
தையலந்த உமையவளும் தன்பெருமை பின்னுஞ்சொல்வள்

துறந்தி ஈசுந்த மலைவளமை யுரைத்தல்.

(2-வது மெட்டுப்போல் பாடலாம்.)

1. கைலாஸத்தினில் வஸிப்பவரே காளவிஷத்தை புஜித்தவரே
எந்தனுட மலைகள்தன்னை ஈச்வரரே நீர்கேளும்
2. கொங்குகுடகு கொல்லிமலை வங்கம் மலையாளதேசம்
கஞ்சிகாள ஹஸ்தியுடன் காசியிலும் நானிருப்பேன்
3. அங்குமிருப்பேன் சுவாமிமலையில் அடர்ந்தசோலைக் குடந்தையிலும்
இங்குமிருப்பேன் பஞ்சநதியிலும் ஏழூரும் சுற்றிவருவேன்
4. வைத்தீச்வரன் கோவிலிலும் மனமகிழ்ந்து நான் வஸித்திடுவேன்
அறம்வளர்த்தாள் சந்நதியில் அனுதினமும் நானிருப்பேன்
5. சங்கமுகம் மாயவரமும் சபாநாதரைக் கண்டுவருவேன்
மங்கள நாயகரே மஹானுபாவா நாடுகேளும்,

துறந்தி ஈசுந்த நாட்டுவளமுரைத்தல்.

(3-வது மெட்டுப்போல் பாடலாம்.)

1. எந்தனுட நாடுதன்னை கேளுமையா சுவாமி
ஏற்றமுள்ள ஈச்வரனுர் வாழுமெங்கள் நாடு
2 பொங்கிப் புகழ்காவேரி உள்ள தெங்கள் நாடு
புண்ணியமாம் மானிடர்கள் புகழ்ந்தேற்றும் நாடு
3 சந்திரரும் சூரியரும் வஸிப்பதெங்கள் நாடு
சாரங்கபாணியனுர் பள்ளிகொண்ட நாடு
4 அஹிலாண்ட ஈச்வரியாள் வாழுமெந்தன் நாடு
அப்பருக்கு அருள்புரிந்த நாடு மெந்தன்நாடு
5 அஞ்சுநதியோடிவரும் பஞ்சநதம் நாடு
அன்னைபரமேஸ்வரியாள் அறம் வளர்த்தாள் நாடு
6 மாதுர் பூதேச்வரனுர் மலையுமெந்தன் நாடு
மலையின்மேலேவாழும் மகனுமுண்டு எனக்கு
7. ஜம்புநாதஸ்வாமி தீர்த்தமெந்தன் நாடு
ஸ்வயம்புவன பிக்ஷாண்டார் கோவிலுமென் நாடு
8. குத்தாலம் பாபவிநாசம் கோவில்மலை நாடு
முத்தான திரு அனந்தர் நாடுமெந்தன் நாடு

9 திருச்செந்தில் திருக்குன்றம் திருத்தணியும் நாடு
திருப்பதியென்னும் அந்தத்திருமலை என்நாடு

10. வண்ணக்குறத்தியும் தன் பெருமையை வர்ணிக்க
கூட்டங்கூடி தேவரெல்லாம் சுவாமியுடன் கேட்க

11, சரஸ்வதியும் லக்ஷ்மியும் சந்தோஷமாய்க் கேட்டு
குறத்தியுடமகிமை தன்னைக்காவேரிக்குச் சொன்னார்

12. காவேரியுங்கேட்டவுடன் தன் கவலை நீங்கி
சகியைவிட்டுக்குறத்தி தன்னை அழைத்துவரச்சொன்னாள்.

### குறத்தி காவேரிக்குக் குறிசொல்ல வருதல்

(2 வது மெட்டுப்போல் பாடலாம்.)

1. (அடி) கொங்கையழகி குறத்தியம்மே நீ
குறிசொல்லுகின்ற மகத்துவத்தை

2. எங்கள் நாயகி காவேரிகேட்டு
அழைக்கச்சொன்னாள் குறத்தியேயுன்னை

3. செம்பொன் கொடிபோல் குறத்தியெழுந்து
திருக்காவேரிக்கரையில் வந்தாள்

4. வீற்றிருந்து தவம் செய்யுமந்த
மெல்லி நல்லாள் காவேரியம்மனும்

5. கண்டவுடன் குறத்திவரவைக்
காவேரியம்மனுங் கண்ணைவிழித்து

6. கயல்மீன்போன்ற கண்மலரும்
கஸ்தூரிப்பொட்டும் முகஒளியும்

7. நகைத்திடுமந்தப் பல்லொளியும்
ராஜேச்வரியின் வடிவழகும்

8, கண்டவுடனே குறத்திவடிவை
காவேரியம்மனும் மனந்திகைத்து

9. (அடி) ஸஹ்யமலைக்கும் சமுத்திரத்துக்கும்
சாய்ந்தவண்ணமாய் நானிருப்பேன்

10. இந்நெடு நாளாய்க் கண்டதில்லை
உந்தன்வடிவைப்போல குறத்தி

11. எந்த நாடடி குறத்தியுனக்கு
எனக்குச்சொல்வாய் எமக்குறத்தி

12, என்றவுடன் மந்தஹாஸமாய்
உமையுமப்போ எடுத்துரைப்பள்

13. இந்தநாடெல்லாம் எந்தன் நாடுதான்
    இன்னமுண்டெந்தன் நாடுகளும்

14, பொங்கித்தளும்பும் நாலுகடலும்
    புவனேந்திரக் குறவருடன்

15. அங்கங்கிருந்து நான்வஸிப்பேன்
    அய்யா றப்பன் குறத்தியென்பேர்

### குறத்தி காவேரிக்குக் குறிசோல்லுதல்

(3-வது மெட்டுப்போல் பாடலாம்.)

1. எந்தனுடநாடுகளும் சொல்லித்துலையாது
   எற்றமுள்ள ஈச்வரனார் ஆள்வதெங்கள் நாடு

2, சொல்லுவேண்டி உன் குறையை தயவெனக்குண்டாக
   சொர்ணங்களைங்கொணர்ந்து வைத்தால் தகுந்த குறிசொல்வேன்

3. கோர்த்தியான முத்து ரத்னம் பவழங்களுங்கொணர்ந்தால்
   (உன்) நெஞ்சிலுள்ள குறைகளை நான் நிவர்த்தியாகச்சொல்வேன்

4. வஜ்ஜிரமும் பச்சையுடன் வைடூர்யமுங் கொணர்ந்தால்
   (உன்) மனதிலுள்ள குறையை நானும் மாற்றும்படிசொல்வேன்

5. சந்நியாசி வேஷங்கொண்ட தபஸியுந்தன் கணவன்
   தலைமயிரை ஜடைதரித்து தபஸுபண்ணும் முனிவன்

6. கௌபீனம் கடுசூத்ரம் கமண்டலமும் தரித்த
   அமைந்த கிருஷ்ணஜினந்தரித்த அகஸ்தியரு மவரே

7. அகஸ்தியரை மாலையிட்டு லோபாமுத்திரை நீயும்
   அகண்டகாவேரியாகி அவரைவிட்டுப்பிரிந்தாய்

8. சமுத்திர ராஜனுடன் சங்க முகமாகி
   சமுத்திரத்தைப்போயடைய தபஸுபண்ணியிருக்காய்

9. மார்கழி மாதத்தினில் மணல் மேடு இடுவாய்
   மடுக்களிலும் ஜலம் வற்றி வெகு நாற்றம் நாறும்

10. ஆற்றின் ஜலம் வற்றிவிட அனைவர்களுந்தவித்து
    ஊற்றின் ஜலந்தனையெடுத்து உலகிலுள்ளோர் உழல்வார்

11. வைகாசி வஸந்தகாலம் வருவாய் வெள்ளம் பெருகி
    வையகத்துமனிதரெல்லாம் முழுகிக்கதிபெறுவார்

12. ஆடிமாதம் பெருக்கெடுத்து அணைகரையில் போட்டால்
    அப்போநீயும் சமுத்திரனை அடைந்துமனமகிழ்வாய்

13 கொஞ்சுங்கிளிபோல் குறத்தி குறிகள் சொல்லிச்சிரிக்க
   கூட்டங்கூடி சகலபேரும்கூடி நின்று கேட்டார்

## குறத்திஈசருடன் சம்பாஷித்தல்

(4-வது வேறுமெட்டு)

1. குறத்தி முகத்தையும் குறிசொல்லும் நேர்த்தியும்
   குறிப்புடனே பார்த்து
2. க்ஷணப்பொழுதாகிலும் கண்ணை மூடாமல்
   சங்கரர் பார்த்திருந்தார்
2. (அடி) கொங்கையழகி குறப்பெண்ணே நீயும்
   குறிசொன்னது போதும்
   என் ஆலயம் புகுந்து அன்னம் புஜித்து
   அணைவாய் நீ என்னையென்றார்
3, சிறுபிள்ளைப் புத்திபோல் சிவனுமுரைக்கவே
   சிவகாமி தான் கேட்டு
   சித்தத்திற்குள்ளே சிரித்து மகிழ்ந்து
   சீறியே எதுசொல்வள்
4, பஞ்சாப கேசரின் பாததெரிசனம்
   பண்ணவே நானும் வந்தேன்
   ஆசைபெரிதென்று உம்மையும் நானும்
   அணையவும் நீதியுண்டோ
5. அறம்வளர்த்த உம்மநாயகியாளுமக்
   கனுக்ஞை கொடுத்தாளோ
   ஆகட்டுமிப்போ தவளுடன் சொல்லியே
   ஆக்கினை பண்ணிவைப்பேன்

### ஈசர் அம்பிகையைக் காணமல்வருந்துதல்.

6. சிரித்தமுகத்தையும் துடுக்கானவார்த்தையும்
   சிவசங்கரர்தான் கேட்டு
   (நம்ம) சுந்தரிதேவியும் வந்தாளோ வென்றவர்
   சுற்று முற்றும் பார்த்தார்
7. சரஸ்வதி லக்ஷ்மி இருவருமாகச்
   சடேலென் றெழுந்திருந்து
   சங்கரியாளை அழைத்திடநாமும்
   அறிவழிந்துபோனோம்
8, ஆலயத்திற்சென்று அம்பிகையைத்தேடி
   ஆராய்ந்து பார்த்துமவள்
   மூலைமுடுக்கெல்லாம் தேடிக்காணமல்
   விசாரமுங் கானவைந்தார்

9. சிவசுந்தரியாளைக் காணுமலேயந்தச்
சங்காா் தான்புலம்பி
நந்திகேசரைவிட்டு எங்குந்தேடச்சொல்லி
(சிவ) நாதன் தவித்தழுதார்

10. சித்திவிநாயகா சங்கரியாளைக்
காணுமே என்னசெய்வேன்
சுந்தரிதேவியைக் காணுவிட்டால் நான்
சீவனிழப்பேன் என்ருர்

11. சிவசுப்ரமண்யா உன்னுட அன்னையைக்
காணுமே என்ன செய்வேன்
அம்பிகையாளை நான் கண்ணிற் காணுவிட்டால்
ஆவி யிழந்திடுவேன்

12. கௌரீவல்லபர் என்று பிரபஞ்சத்தில்
கீர்த்தியாய் சொல்லுவர்
வாமபாகத்தினில் தேவியில்லாவிட்டால்
வாசன மேறுவரோ

13. பார்வதி சங்கரர் என்று பிரபஞ்சத்தில்
பகதியாய்ச் சொல்லுவர்கள்
பத்னியுமில்லாட்டால் பத்னிஹீனனுக்கு
பூஜையும் பண்ணுவாரோ

14. அம்பிகையாள் வந்து சேராவிட்டாலெனக்
கன்னபானங்கள் வேண்டாம்
அபிஷேகம் வேண்டாம் அலங்காரம் வேண்டாம்
அர்ச்சனையும் வேண்டாம்

15 சுந்தரி சுந்தரி என்று எல்லோருமாய்
சேர்ந்து அலத்தலுற்ருர்
சிவகாம சுந்தரிதேவியுங்கேட்டு
சிரித்தாள் மனதிற்குள்ளே

16. சபையிலுள்ள பேரைக் கடைக்கண்ணலேபார்த்துச்
சங்கரி தானிருக்க
சரஸ்வதி லக்ஷ்மி குறத்தியுடைய
சமீபத்திலோடி வந்து

17. சங்கரியாளைக் குறத்தியே நீயும்
க்ஷணத்திலழைத்தாயானல்
செம்பொன்னும் முத்தும் ரத்தினங்களெல்லாம்
சொர்ணத்தட்டிற் கொடுப்போம்

18. அம்பிகையாளை அழைப்பித்தாலிக்ஷணம்
யானை சேனை குதிரை
வெண்கலத்தேருடன் தங்கப்பல்லாக்கும்
வெகுமானந் தாரோமென்றார்

19. சேனைபரிவாரம் யானைகளுண்டென்று
துடுக்காகப்பேசுகின்றீர்
(என்) சித்தத்தினிலிப்போ கோபம் வந்துதானல்
தகித்துவிடுவேன் நானும்

20.. சினத்துடனேயந்தக் குறத்தியுரைத்திட
சரஸ்வதி லக்ஷ்மியும்
குறத்தி யைநாமும் அதட்டிப்பேசினது
குற்றமாய் நேர்ந்ததிப்போ

21, குறத்திக்கு கோபம் வந்துவிட்டதானல்
குத்திவிடுவள் நம்மை
குறவரெல்லாருமாய் கூட்டமாய்க்கூடி
கொன்று விடுவார் நம்மை

22. என்று சொல்லிக்கொண்டு தேவியைக் காணுமல்
ஏக்கமடைந்திருந்தார்
தய்யல் குறத்தி சரஸ்வதியை நோக்கி
சாந்தமாய் தானுரைப்பாள்.

**அம்பிகை தன்னை அறிவித்து ஈசருடன் ஆலயம் சேர்தல்**

23. சபையுள்ளோர் ஏக்கமும் சங்கரர் வாட்டமும்
சங்கரி கண்டிரங்கி
சந்தோஷமாகச் சபையோர்களைப்பார்த்து
தயவாகத் தானுரைப்பாள்

24. கோடிநவரத்தினம் கொண்டுவந்தாலிப்போ
குறிபார்த்து நானுமுங்கள்
அம்பிகையாளை அரைநாழிக்குள்ளாக
அழைப்பித்துத் தாரேனென்றாள்

25. முப்பத்து முக்கோடி தேவர் ரிஷிகளும்
முன்னே நிறைந்திருக்க
ஆதிசிவனுட அண்டையில் சென்றவள்
அவர் கரத்தைப் பிடித்தாள்

26: தய்யல் குறத்தியும் கையைப்பிடிக்கவே
சங்கரர் தான்பயந்து

நெஞ்சந்துடிக்க சரீரம் பறக்கத்
திடுக்கிட்டுத்தான் திகைத்தார்

27. குறத்தியைக்கண்டாசைப்பட்ட சிவனோரே
கூசாமல் கைகாட்டும்
வெட்டவெளியான பிரம்மம் உமக்கிந்த
வெட்கமுந்தானுமுண்டோ

28. விழுத்து எறிவீர் எடுத்து உடுப்பீர்
வித்தைகள் செய்திடுவீர்
சதாசிவப்பிரும்மம் நானென்று சொல்வீர்
சந்யாசிபோலிருப்பீர்

29. பதிவிரதைமார்களைப் பங்கம் குலைப்பீர்
பரப்பிரம மூர்த்தி என்பீர்
ரிஷிபத்தினிமாரண்டை நிர்வாணத்துடனே
நின்றது வெட்க மன்றோ

30. அறிவிலியாகிய அஸுரதுராத்மாவுக்கு
அவன் கேட்ட வரங்கொடுத்து
அண்டம் பதினாலும் ஓடியலைந்து நீர்
ஐவேலிக்காயி லொளித்தீர்

31. மூர்த்தியில் சமர்த்தராம் விஷ்ணுவுமப்போது
மோஹினி வேஷங்கொண்டு
அஸுரனைக் கபடத்தால் வதைசெய்த விஷ்ணுவை
அணைந்தது வெட்கமன்றோ

32. வண்ணக்குறத்தி பரிஹாஸம் பண்ணவே
மஹாதேவர் தான் கேட்டு
குறத்தியைக் கண்டு நாமிச்சையடைந்தது
குற்றந் தானென்றுணர்ந்தார்

33. சுவாமி தளர்ந்திடும் மேனியும் சங்கரர்
வாட்டமும் சங்கரிகண்டிரங்கி
க்ஷமிக்க வேணுமென்று சங்கரர் பாதத்தில்
சரணமென்றே பணிந்தாள்

34. தய்யல் குறத்தி பணிந்தவுடனே
சபையோர்கள் தான்பார்த்து
அம்பிகை தானிவள் என்றறிந்தவுடன்
ஆனந்த மாயிருந்தார்

35. ஆதி சிவனாரும் அம்பிகை யுடனே
ஆலயந் தன்னிற் சென்று

குறத்தி வடிவான அம்பிகையாளைக்
கூசாமலே யணைந்தார்

36. அம்பிகையுடனே அபிஷேக மாடி
அமுதமுந் தான் புஜித்து
வாமபாகத்தினில்தேவியுடன் சிவன்
மந்தஹாஸமாய் வீற்றிருந்தார்

37. பக்தியாய் சொன்னவர் சிரத்தையாய்க்கேட்டவர்
கற்றுக்கொடுத்தவர்க்கும்
அஷ்டபோகத்துடன் புத்திரபாக்கியமும்
அறம்வளர்த்தாள் கொடுப்பள்

38. அறம் வளர்த்தபர தேவியின் பாதத்தை
அனுதினமும் ஸ்மரித்தால்
அம்பிகை யின்திருப் பாதார விந்த
ஐக்கியமுந் தான் கொடுப்பள்

39. அம்பிகை யருளால் காவேரி பெருகி
ஆற்றினில் வெள்ளம் வந்து
சந்தோஷ மாகிச் சமுத்திரத் தைக்கண்டு
சங்க முகமடைந்தாள்

40. மங்களம் மங்களம் தர்மாம்பிகையு டனே
பஞ்சநதீச்வரர்க்கும்
மங்களம் திருக் காவேரி நதிக்கும்
மண்ணில் வாழும் மாந்தருக்கும்

---

## காவேரியம்மன் கப்பல்.

(விநாயகர் துதி கப்பல்)

நமோமஹா கணபதியே-சம்போ-நமோமஹா குணநிதியே
நமோஉமா ஸ்கந்தாய-சம்போ-நமோஹரன் ஆநந்தாய

(முடுகு.)

விக்நராஜாய வெகு விக்நஹாரணாய
லம்போதராய ஹேரம்பாய மஹாதே
ரம்பாபலகராய அம்பா ஸுதாய
அபயவர கரதாய ஏகதந்தாய
சுபமுக வரதாய லம்போதராய
கபிலமுக வர்ணாய கஜகர்ணிகாய

விகடதந்தாய ஸுர கணபூஜிதாய
தூமகேதாய யக்ஷ கணஸேவிதாய
பாலசந்திராய ஹரஸ்கந்தஜேஷ்டாய
சரவண பவாயநம: கருணாரஸாய.

ஏலேலோ கணராஜா—ஜயா
ஏலேலோ சர்வேசா.

மண்டலமெல் லாம்புகழும்—பொன்னி
மங்களக் காவேரி கப்பல்
தென்கிழக்காய் காவேரி—அம்மன்
செல்லுகின்ற ஸ்தலங்கள் சொல்வாம்.

(முருகு.)

விண்ணவர்கள் புகழும் ஸஹ்யகிரி தனைவிடுத்து
மின்னொத்த குடகுகிரி காட்டின் வழிவந்து
உன்னத கிரிகடந்து கண்காணும லோடி
தென்னனுடன் சிவசமுத்திர சிகரம்விட்டு இழிந்து
சேர்ந்துவந்த கபிலையுடன் சந்தோஷமாய்ச் சேர்ந்து
திருமுக்கூ டென்னுமந்தத் திருநகரைத் தாண்டி
ஸ்ரீரங்க பட்டணத்தில் சடுதியாக வந்து
ஸ்ரீரங்க நாதருக்குத் திருமாலையாய் வளைந்து
சீருடைய கௌமுகியும் சேலம்நகர் சேர்ந்து
க்ஷேத்திரமாம் பிர்மகிரி சேர்வைமலை தாண்டி
அந்தமாய் பவானிநதி அன்புடனே கூட
ஆனைக்குந்தி மலையைவிட்டு அமராவதி சேர
சொந்தமாய் ஈரோடுவிட்டு கொடிமுடியைச் சேர்ந்து
திருமூர்த்திகள் வஸிக்குமந்த ஸ்தலத்தைக்கண்டு மகிழ்ந்து
அந்தமுள்ள சேரனுட அரசாட்சியில் அமைந்த
அழகான ஊர்களெல்லாம் அன்புடனே பரவி
பாச்சலூர் கருவூரு குழித்தலையும் பார்த்து
பெருகமணி சிருகமணி (திருப்) பளாத்துறையு மோடி
அகண்டகா வேரியாகி அடியார்களைக் காத்து
தலைமகளாய் கொள்ளிடத்தை வடபுரத்தில் செலுத்தி.
திருச்சிறாப் பள்ளிமலை ஈசனையும் ஸ்துதித்து
ஜம்புநாதர் ஸ்ரீரங்கர்க்கு திருமாலையுந் தரித்து
சிந்தாமணி தன்னைவிட்டுத் திருவானைக்கா கடந்து
கொண்டல்கண்டு மயிலாடும் கோவிலடி யடைந்து

கொக்கரசம் பேட்டைதிரு மழப்பாடி கடந்து
வண்டலூடன் பெருகிமக ராஜபுரம் வந்து
தில்லேஸ்தானம் திருக்கண்டியூர் திருவையாற்றில் தங்கி
கணபதிஅக் கிரகாரம் கபிஸ்தலமுங் கண்டு
வளமையான சுவாமிமலை கும்பகோணம் வந்து
பேரான மருதூரின் பரமரையும் பணிந்து
பேர்பெற்றகோ விந்தபுரம் வஞ்சிநாடு புகுந்து
குத்தாலம் ஆடுதுறை உச்சிதமாய் கடந்து
கோனேரி ராஜபுரம்நர சிங்கன்பேட்டை வந்து
கௌரீமா யூரநாதன் சந்நதியைக் கண்டு
களிப்புடன் துலாமாதக் கடசீமட்டு மிருந்து
கண்டவுடன் ஜீவர்களின் கர்மங்களை யொழித்து
அன்புடனே கௌரிநாதன் அனுக்கிரக மடைந்து
சந்தோஷமாய் காவேரி சாயாவனந் தாண்டி
சங்கமுகத் துறையடைந்து சமுத்திரரைச் சேர்ந்தாள்,—

அன்புடனே கூடி அலையுடன் போராடி
கண்கலங்கி வாடி கணவரிடம் ஓடி
களிக்கக் கடல் கொந்தளிக்க
முத்தைக் கொழிக்கத்—தண்ணி சிவக்கச்—சேர்ந்து
காதலுடன் கடல்மன்னனும்
காவேரியுங் கலந்துவிட
ஏலேலோ—ஏலேலோ—காவேரி
கடலுடனே கலந்த கப்பல்

## காவேரியம்மன் ஊஞ்சல்.

இருபுரமும் சோலைதன்னில் குயில்கள் கூவ
எத்திசையும் பக்ஷியினம் இசைந்து பாட
தோழியராம் நதிகூடத் தென்றல் வீச
திருக்காவேரி கணவருடன் ஆடிஊஞ்சல்

ஓம்சுபம்.

பரதேவிதுணை

# வேதாந்தக்குறம்

## சற்குருவின் வணக்கம்.

(விருத்தம்)

1. அகண்டராய் நிர்க்குண ஸ்வரூபராய் இருக்குமரிதாக
அவனியிலே வந்து அவதரித்த மூர்த்தியுமாய்
ஸ்ரீவெங்கடேசரென்னும் நாமமுள்ள சற்குருவின்
திருவடிகள் தன்னில் ஸ்திரமாய் நமஸ்கரித்தேன்

2. ஒரு சிற்றெறும்புவந்து கடலின் ஜலத்தையெல்லாம்
பற்றரவே நான்குடிப்பேன் என்னுங்கதைபோல
நித்தியதத்வஸாகரத்தை நீந்திக்கரைகாண
(என்) அற்பபுத்தியாலே அறிந்திடவுங்கூடாது

3. ஆனாலும் எந்தனுட ஆசை பெரிதாலே
தத்துவசாஸ்திரத்தை சங்கிரகமாய் எடுத்துச
சொல்லவே நான் துணிந்தேன் சித்த சுத்த ஞானியர்கள்
தாமும்பிழைபொருக்க வேணுமென்றுதாள் பணிந்தேன்.

## விநாயகர் துதி

(கண்ணிகள்)

1. தத்வரஸக்குறம்பாட சங்கரிகுமாரா
தரணிதன்னிலனை வருக்கும்தடை தீர்க்கும்வீரா

2. விக்னமற்றுப் பரிபூர்ணமாக வரந்தந்து
விக்நேச்வரா எனக்கு முன்னடக்கவேணும்

## சரஸ்வதிதுதி.

3. விமலையாய் பிரம்மாவின் நாவினுள்ளே வஸிக்கும்
வித்யாலக்ஷ்மி எனக்கு வரமளிக்கவேணும்

4. அமரரெல்லாம் அனுதினமும் அடிவணங்கும்தாயே
(என்) அக்யானமனதினுக்கு அறிவுவரவேணும்

## பரமாத்மா குறத்தி வடிவெடுத்து புத்தி என்பவளுக்கு குறி சொல்ல வருதல்

(விருத்தம்)

4. பிரும்மபுறந் தன்னிலிருந்து போதவடிவாய்க் குறத்தி
கர்மசெடிகளென்னுங் காடெல்லாந்தான் கடந்து
வர்ம மற்றமனதுடையாள் வாக்கிய முந்தப்பறியாள்
நிர்மலமாம் புத்தியென்னும் பெண்ணருகில் வந்தாளே.

(கண்ணிகள்.)

1. போதமென்னுங் குறமகள்வரவே
சீதளமான சந்திரனைப்போல முகவொளியும்
பாதமுதல் தொட்டுசிரஸறுதி
நாலுசாதனங்களாகுந் தங்கப்பணதிகளையை

2. இடைதன்னில் உடைவஸ்திரமிலங்க
(சாம) வேதவாக்கியமாகின்ற விபூதியிட்டுத்துலங்க
பக்தியாம் ருத்ராக்ஷமாலை தரித்து
பரிபூர்ணமாம் பிரும்மவித்தை குறந்தன்னைப்படித்து

3. பிரும்ம மயமென்னுங் குறக்கூடையும்
பெரியோர்கள் சேவைநாடுமந்த ஒய்யார நடையும்
வாழைமரம்போல இருதுடையும்
(அதி) சூக்ஷமமாய் பிடிக்கடங்கும் சொகுசான இடையும்

4. அனுபோகமென்ற பிள்ளை இடுக்கி
அபரோக்ஷ சாக்ஷாத்காரமென்னுங் கோல்பிடித்து மயக்கி
இத்தனை சம்பிரமத்துடன் குறத்தி
(சாக்ஷி) விருத்தியாகின்ற வீதியினில் வந்து மந்தபுத்தி

5. அகத்தின் வாசற்படியில் வந்து நின்றாள்
கண்டவுடனே புத்தியெதிர்கொண்டு வந்தாள்
விந்தையான குறத்தியைக்கண்டு
அந்தமான புத்திமிக்க ஆனந்த மடைந்தாள்

(விருத்தம்.)

5. வந்துநின்றகுறமகளைக்கண்டு மந்தமதியழகி
பந்தடித்துவிட்டாற்போல் பரபரவென்று ஓடிவந்து
(உன்) சுந்தரமாம் முகவடிவை இவ்வுலகில் கண்டதில்லை
எந்தநாடுன்றனுக்கு எனக்கறியச்சொல்வாயே,

## துறத்தி புத்தி யென்பவளுக்குத் தன் நாட்டு வளமை யுரைத்தல்

(3-கண்ணிகள்)

1. அத்வைதமான நாடெங்கள் நாடு
   அசத்தமில்லாத நாடெங்கள் நாடு
   த்வைத உபாதிகள் சற்றுமற்றதோர்
   சிலஞானிகள் வாழு மென்னாடு

2. மானமில்லாத நாடெங்கள் நாடு
   மனதுக்கெட்டாத நாடெங்கள் நாடு
   தியானஞ் செய்திடும் நாடெங்கள் நாடு
   சகல பாக்கியம் விருத்திக்கும் நாடு

3. இச்சையில்லாத நாடெங்கள் நாடு
   இருட்டிப்போகாத நாடெங்கள் நாடு
   ஒச்சமில்லாத நாடெங்கள் நாடு
   சோதிமயமாய் விளங்குமென் நாடு

4. ஈஷணைத்திரயம் இல்லாதபேர்கள்
   இருந்து வாழ்கின்ற நாடெங்கள் நாடு
   வாஸனைத்திரயம் போகாத பேர்க்கு
   வழிதெரியாத நாடெங்கள் நாடு

5. மந்திரதந்திரங்களாகும் முதலை
   மடுவில் விளையாடும் நாடெங்கள் நாடு
   சந்ததம் தீபங்களெங்கும் பிரகாசிக்கும்
   திறந்தவாசல்கள் விளங்கு மென்னாடு

6. இந்திரியமாகின்ற கள்ளர் தலையை
   இழக்கச் செய்கின்ற நாடெங்கள் நாடு
   கந்தமாதி சகல விஷயமும்
   கிட்டணுகாத நாடெங்கள் நாடு

7. சாந்தியானதோர் சந்தனத்தாலே
   மெழுகிக் கோலங்களிட்டே யிருக்கும்
   காந்தியானதோர் பட்டுத்துணியால்
   கொடிகள் எங்கிலும் கட்டிப்பறக்கும்

8. சற்குணமென்ற சிரவணப்பொடியை
   தரைகளெங்கும் இறைத்தே யிருக்கும்
   சொற்கடங்காத வீதிகளெங்கும்
   மகரத்தோரணங் கட்டியிருக்கும்

9. பேதமில்லாமற் சந்துக்குச் சந்து
பூர்ணகும்பங்கள் வைத்தேயிருக்கும்
தன்யமாகின்ற மேடையின் மேலே
தாளமத்தள வாத்தியமுழங்கும்

10. ஓங்காரமென்ற சிம்ஹாஸனத்தில்
உபாதியென்ற ஆத்மாயிருப்பர்
ஹ்ரீங்காரமென்ற பூஷணத்தினால்
நிறைத்து அலங்காரம் பண்ணியிருக்கும்

11. ஆசாபாசங்களில்லாத பேர்கள்
அனுதினமும் வஸித்தே இருப்பாள்
போஜனம்பண்ணி பிரும்மாஸத்தைப்
புகழ்ந்து கீர்த்தனம்பாடித் துதிப்பாள்

12. எந்தன் நாட்டு மகிமைகள் தன்னை
வர்ணிக்க முடியாதடியம்மே
எந்தனுக்குத் தெரிந்ததைச் சொன்னேன்
என்று சொல்லியிருந்தாள் குறத்தி

விருத்தம்

6. உத்தமியே உந்தன் ஊர்வளமை தானுரைத்தாய்
பத்தினியே யுந்தன் பரமார்த்த நாமத்தை
நான் கேட்டுமறிந்திடவே கெம்பீரமாக நீ தான்
சற்றே எடுத்துரையாய் என் சிந்தை குளிர்ந்திடவே

## குறத்தி புத்தி யென்பவளுக்கு தன் நாமத்தைத் தெரிவித்தல்

(4-கண்ணிகள்)

1. பரமார்த்தமான எந்தன் நாமம்
அதைப் பார்க்கப்போனால் ஒன்றுமில்லையம்மே

2. ஆனாலுஞ்சொல்லுகிறேன் கேளாய்
அவித்தை நாசமானால் ஏகமானவடிவாம்

3. தானுகுஞ்சைதன்ய ஸ்வரூபம்
பரமாத்மாவே எந்தனுட நாமம்

4. அத்வைதமாம் பணிபூண்டு இருப்போம்
அகண்டாகார விருத்தி என்ற உடையுடுப்போம்

5. ஏகமான வெளிதன்னிலே இருப்போம்
எண்ணமற்ற மலைதன்னிலே வஸிப்போம்

6. சோகமற்ற சுனை நீரைக்குடிப்போம்
சகதுக்கமொன்றாகப்பார்ப்போம்

விருத்தம்

7. அகமகிழ்ந்தேன் உன் வரவால் ஆச்சரியம் நானடைந்தேன்
சிறகைவிரித்தாடும் மயிலே குயில்மொழியே
பிடியிடையாயுள்ள பொற்கொடியே நீயுமுந்தன்
மலைவளமை யெல்லாம் மகிழ்ந்தெனக்குச் சொல்வாயே

**துறத்தி புத்தி யென்பவளுக்கு தன் மலைவளமை யுரைத்தல்.**

(5-கண்ணிகள்)

1. பள்ளம்மேடு அற்றதொரு நிரஞ்சனமாம் மலையே
கள்ளர்பயமற்றிருக்கும் கைலாஸமலையே
2. வெள்ளை சிவப்பு கறுப்பு மூன்று மற்ற மலையே
எங்கும் வெளியாகி நிறைந்திருக்கும் விஸ்தாரமலையே
3. ஆனந்தமாகும் மழை அனுதினமும் பொழியும்
ஆத்மக்யானம் என்னும் பயிர்வளர நன்றாய் காயும்
4. வேதாந்த வாக்கியமென்னும் ஓடை நன்றாய் விளங்கும்
முனிவருடன் யோகிகளும் ஸ்நானம் பண்ணித் துளைவார்
5. சாக்ஷி விகாசமென்னும் தாமரைகள் பூக்கும்
ஆத்மனாத்மா விவேகமென்னும் ஹம்ஸம் விளையாடும்
6. போதமென்னும் மஸ்யம்வந்து முழுகிவிளையாடும்
(பரி) பூர்ணமான ரிஷிகள்வந்து ஸ்நானமது செய்வார்
7. மோக்ஷ இச்சையாகும் மரம் படிய எங்கும் பூக்கும்
சாக்ஷி விருத்தியான பிஞ்சு தளதளென்று பெருக்கும்
8. அகண்ட விருத்தியாகின்றகாய் அழகாக முதிர்க்கும்
திரண்டதொரு துரியவிருத்தி செம்பழங்கள் பழுக்கும்
9. துரியத்துக்கும் அதிகவிருத்தி தேனொழுகக்கசியும்
எங்குஞ் சரியாகி நிறைந்திருக்கும் சமரஸங்கள் பெருகும்
10. ஏகரஸமானமது எங்குமெங்கும் பெருகும்
(பரி) பக்குவமாம் யோகியென்னும் கிளி பழத்தைக் கோதும்
11. பிரமவித்தை யாகுங்குயில் கூட்டமிட்டுக் கூவும்
கர்மமென்னுங் காடிபுலி காதவழியோடும்.
12. மலையினுள்ள வளமை யெல்லாம் வர்ணித்திட வென்றால்
(என்) வாக்கினாலும் சொல்லி முடியாது மதியழகி

(விருத்தம்)

8. அலைகளுக்கு ஆதாரமாயிருக்கும் சாகரத்தின்
கரையினுள்ள பூமியெல்லாம் கண்டுவந்த பெண்மணியே

நிலையாக நீயடைந்த தேசிகனார் பேருமென்ன
அடைவாக எந்தனுக்கு அன்புடனே சொல்வாயே

**துறத்தி புத்தியென்பவளுக்கு தன் குருவின் நாமத்தை அறிவித்தல்.**

(6-கண்ணிகள்)

1. ஏகமென்று சுருதிகள் சொல்லும் அம்மே
ஈச்வரன்தான் எங்கள் குரு
2. தேகமில்லா விலக்ஷணராம் அம்மே
சித்ரூபர்தான் எங்கள் குரு
3. தன்னை யுபாஸனைகள் பண்ணும் அம்மே
அன்பர்கள்மேல் தயவுடையோர்
4. இன்னதென்று சொல்வதற்கு அம்மே
எட்டாத பெயருடையோர்
5. முக்கிய கர்த்தா என்று சொல்லி அவரை
முமுக்ஷுக்களுஞ் சொல்லிடுவோர்
6. ஐக்கிய மாக்கும் குணமுடையோ ரென்று
ஆத்ம நிஷ்டாள்சொல்லிடுவார்

(விருத்தம்)

9. ஆதியாம் வேதாந்த வாக்கிய மெல்லாமறிந்து
ஆதி புருஷனுட அண்டையினில் தானிருந்து
ஓதிப்படித்து உபதேசங் கேட்ட பெண்ணே
(உன்) சாதிவளமை தன்னைச் சலியாமல் சொல்வாயே

**துறத்தி புத்தி யென்பவளுக்குத் தன் ஜாதிவளமை யுரைத்தல்**

(7-கண்ணிகள்)

1. சாதி வர்ணமேது மில்லை சித்துமய மாயிருப்போம்
தேகதர்மஞ் சற்றுமில்லை ஏகவடிவாயிருப்போம்
2. ஆதியந்த மேதுமில்லை அகண்டவடி வாயிருப்போம்
போதமய மாயிருப்போம் விபூதியும் அணிந்திருப்போம்
3. ஐந்து வித இந்திரியத்தை அடக்கியேமேலாயிருப்போம்
பசிதாக மற்றிருப்போம் பிரமானந்த மாயிருப்போம்
4. நித்திரையற்று சுகித்திருப்போம் நித்தியமெங்கள் சாதிமுறை
நீ முக்தையானபடியினாலே விஸ்தரித்துச் சொன்னேன் உனக்கு

(விருத்தம்)

10. உன்னுடைய ஊர்பெயரும் உன்னுபதேசகர்த்தாவும்
உன்னித மாஞ்சாதிமுறை எல்லாமுறைத்தாய் நீ

என்னுடைய ஊர்பெயரும் எனக்குண்டாகும் சங்கதியும்
இத்தையிப்போ நீயுரைத்தால் எனக்குஉன்மேல் பிரீதியுண்டாம்

துறந்தி புத்தியென்பவளுக்குக் குறிசொல்லுதல்

(8-கண்ணிகள்)

1. உரைக்குகிறேன் கேளடியோ—அம்மே
உந்தனுட வர்த்தமானம்—
2. நிலைக்கவில்லை மனதனக்கு—அம்மே
நீதிதப்பி அலையுகிறாய்
3. தேகமென்னும் பட்டணத்தில்—நீயும்
வாஸம் பண்ணிக் கொண்டிருக்காய்
4. மோகமென் பாள் தாயுனக்கு—அம்மே
மெல்லியரே புத்தியுன் பேர்
5. சம்ஸாரப்பேய் பிடித்து—அம்மே
சரீரமெல்லாம் ஆட்டுறது
6. அகங்காரமுள்ள மட்டும்—விட்டுப்
போகாமல் பிடித்திருக்கும்
7. எந்தன் வார்த்தை கேட்பையானால்—அது
இப்பொழுதே தொலைந்து விடும்

(விருத்தம்)

11. சொன்னதெல்லாங் கேட்பேன் தொலைந்தால் பிசாசெனக்கு
என் அன்னையைப்போல் வந்து உபதேசம் பண்ணினையே
உன்னையிப் போநானும் பிடித்தேன் உறுதியுடன்
என்னை ஈடேற்றவந்த ஈச்வரியும் நீதானே

(9-கண்ணிகள்)

1. விஸ்வாஸமாயிருந்து கேட்டகிளிமொழியே
விஸ்தரித்து நன்மைநோக்குச் சொல்லுவேன் கேளம்மே
2. துக்கத்திக்கு ஹேதுவான ஸ்தூலதேகமிதனை
ஜனித்து மறித்திறக்கின்றது தானொருஸம்ஸாரம்
3. ஸம்ஸாரப் பேயுனக்குப் போகவேணு மென்றால்
சைவமந்திரஞ் ஜபித்து விபூதியும் தருவேன்
4. அனுசரித்து எந்தனை நீ இன்னதென்று கேட்டால்
அனுஷ்டானம் பண்ணிவந்தால் அறிவுதானே விளங்கும்

(விருத்தம்)

12. பூமணத்தைக்கண்டு புகழுகின்ற வண்டது போல்
உன் சற்குணத்தைக் கண்டு சந்தோஷமாச் சுதிப்போ

நேம மென்ன செய்வ தென்று நீயுரைத்தாயா மானால்
நானுமந்தநே மத்தை நன்றாகச் செய்து வாரேன்

துறத்தி மதிப்பெண்ணுக்கு உபதேசித்தல்

(10-கண்ணிகள்)

1. புத்திர சம்பத்தையும் போகவிஷயத்தையும்
   பந்து மித்ரபோஷணைகள் பண்ணுவதையும்
2. திருச்டமாய் பார்ப்பதையும் விச்வகர் மத்தையும்
   துச்சமென்றுதானே நினைக்கவேணும்
3. நித்யராய் சுத்தராய் நிற்குணப் பிரும்ம மாய்
   சத்யராய் விசித்ரராய் சர்வகுணராய்
4. பக்தராய் முக்தராய் அந்தர் முகப்பார்வையாய்
   ஞானம் வரச் சிந்தனைகள் பண்ணவேணும்
5. கண்ணுக்கு ரூபமாய் ஸ்தூலமாய் தானிருக்கும்
   தேகத்தின் அபிமானம் விட்டுப் போமா
6. தர்மத்துக் கேதுவாய் சந்தோஷ ஹாரியாய்
   தானிருக்கும் அர்த்தத்திறைசை போமா
7. அத்யந்தப் பிரீதியாய் ஆயிருக்கும் பந்துக்களின்
   அவர்கள் மேலபிமானம் விட்டுப் போமா
8. சஷுஞாத்திரயங்களும் என்னைவிட்டுப்போமோ வென்று
   என்று நீ கேட்பையானால் சொல்லுவேன் கேள்
9. (ஒரு) சம்பன்னன் வீட்டிலே யாஜகம் போனுக்கே
   சாணிலே சரீரத்தை ஒடுக்கிக்கொண்டு
10. (அவன்) உண்டென்று சொல்லுவனோ இல்லையென்று சொல்லுவனோ
    என்று பயந்துமனதி லெண்ணிக் கொண்டு
11. நித்தியமாய் அவனுடைய வீட்டிலே போயலைந்து
    இரண்டு கால் வெள்ளெலும்பும் தோணிப்போக
12. துச்சனாய் ஒன்றுக்கும் மாகாத துஷ்டரிடம்
    துதிசொல்லி வாயும்வலி எடுத்துப்போக
13. அவகாசமில்லாத வேளைதன்னில் போனுக்கே
    அவமானம் பண்ணியே அனுப்பிவிடுவன்
14. கல்லுதன்னில் நாருரித்துக் கண்ட சந்தோஷம்போல்
    காசுமொன்று வாங்கியவன் முடிவானால்
15. (அதை) தர்மத்திலுங்கொடான் தானுமதைச் சாப்பிடான்
    மண்ணுங்கீழே மூடிவைத்து வைப்பன்

16. கள்ளன்மார் லக்குவைத்து கன்னம்வைத்து திருடுவாள்
கலகக் காரர்வந்தால் கொள்ளையிடுவார்
17. தாயாதிப் பேர்கள் வந்து சண்டையும் போடுவார்
சமைக்கவைத்த அடுப்பிலும் தண்ணீர் விடுவார்
18. அல்லசல்காரர்களும் செல்வத்தைக் கண்டவுடன்,
அசூயையால் வயிறு வெந்து உப்பிப்போவாள்
19. ஓயாத விசனத்தை உண்டு பண்ணும் சம்பத்து
இருந்தாலும் போனாலும் துக்கந்தானே
20. ஆகையினால் அர்த்தத்தில் அபிமானம் வையாமல்
ஆசையற்று நிம்மதியாய் அறிவையடைவாய்
21. துக்கங்களுண்டுபண்ணும் தனதான்ய சம்பத்தை
துச்சமென்று நீயும் நினைக்கவேணும்
22. புத்திர பௌத்திராதியர் தம்மிடத்தில் பிரீதியாய்
உபகாரம் பண்ணினாலுன்னைப் புகழ்வார்
23. ஆஸ்தி யில்லாவிட்டாலும் அசக்தமான போதிலும்
அவமானம் பண்ணியுன்னை அசங்கதிப்பார்
24. சுக்கில சுரோணிதங்கூடி ஆனதொரு விக்ரகம்
தேகத்தின் அருவருப்பைச் சொல்லக் கேளாய்
25. நரம்பிலும்பு நாடியும் நவத்துவார வாசலிலும்
நாறியே துர்க்கந்தம் வீசி அடிக்கும்
26. வாதமும் பித்தமும் மற்று மந்த சிலேஷ்மமும்
வாட்டியே எப்பொழுதும் வதைத்து வருத்தும்
27. இரத்தமும் அசுத்தமும் மாம்ஸமும் சர்மமும்
மலஞ்சலம் சீழ் கோழை நிறைந்து இருக்கும்
28. எந்தமடி யானாலும் வஸ்திரத்தைக் கொண்டு வந்து
இதின்மேலே யுடுத்திவிட்டால் விழுப்புத்தானே
29. எச்சிலுக்கும் தீண்டலுக்கும் இருப்பான தேகமிது
கொப்புளித்தபின்பு வாயினெச்சில் போமோ
30. பசிதாக வேளைதன்னில் அன்னஞ்ஜலம் போடாவிட்டால்
பல்லை யிளித்துக்கொண்டு மூர்ச்சை போகுமே
31. ஆனாலுமாகட்டும் போட்டாலும் போடுகிறோம்
அநேக நாளிருக்குந் தேகமென்னப்போமோ
32. (அது) இன்றைக்கோ நாளைக்கோ இன்னுஞ் சற்றுப்போதிலோ
இரவிலோ பகலிலோ இப்பத்தானோ
33. ஆகையினால் அஸத்தானதேகத்தி லாசையற்று
ஆத்மாவை நாமென்றறியவேணும்

34. ஒன்றையும் விரும்பாமல் உலகத்தி லாசையற்ற
உத்தம முக்தியை விரும்பி யடைவாய்

(11-கண்ணிகள்)

1. மதியே என் மாணிக்கமே கையைக்காட்டு சொல்லுவேன்
அதிகமாய் முத்தை எனக்கன்புடன் காணிக்கையாய்
2 முன்னிலே கொணர்ந்து வைத்தாயானல் மின்கொடியாளே
தன்னையறியும் உபாயம் சொல்லுகிறேன் நீ கேளாய்
3. பசுபக்ஷிமிருகதேவ மனுஷ்ய சரீரமும்
பலவிதமாயெடுத்து பாழிற்காலம் போக்கினய்
4. கொசுமழை தூத்தல்களை கூட்டிலக்கமிட்டாலும்
கூடாதுநீயெடுத்தஜன்மம் என்றுமெண்ணி முடியாது
5. இனிமேலுனக்கு ஜன்மம் வேண்டாம் என்றுயென்னை கேட்டிட்டால்
இன்னதென்றறியவுனக் குள்ளபடிசொல்கிறேன்
6. ஏகாந்தஸ்தானத்திலே இருந்துகொண்டுன்சித்தத்தை
எங்கும்போகாமல்நிறுத்தி ஈச்வரனை ஹிருதயத்தில்
7. போதசிந்தனைகள்பண்ணிக்கொண்டு அந்தர்முகமாய்
பிர்மத்தியானம் பண்ணிநித்யம் அப்யாஸமிருக்கணும்
8. இந்தப்படி தானப்பியாஸம் பண்ண ஆரம்பித்தாக்கே
எண்ணிக்கையற்றகோடி விகாதம் வந்துநேரிடும்
9. தடைகளென்னவந்தாலும் சட்டை பண்ணமல் நீயும்
தன்னைத்தானறிந்தாயானல்முக்தியுமதுதானே
10. உன்) கையிலுள்ளரேகைவெகுகல்யாணப்பிரதாபமாய்
இன்பமடையவுனக்கு இலக்ஷணமிருக்குது
11. புத்திசம்பத்தையடைந்து போகத்தில் விரக்தியாய்
அற்புதமாஞ் ஜீவன் முக்த லக்ஷணமிருக்குது
12. பக்தியுள்ள மதியென்னும் பக்குவமாம் பெண்ணுக்கு
பிரமமென்னுங் குறவஞ்சி பக்ஷமாய் கிருபைசெய்தாள்

## புத்தியென்பவள் ஜீவன்முக்தியடைகுதல்

(விருத்தம்.)

13. சொன்ன வுடனேமதிப்பெண் சித்த சுத்தி என்ற முத்தால்
அன்னையென்னும் வேதாந்தக்குறத்திமனங்குளிரவைத்து
சன்னபின்ன லாயடர்ந்த ஸம் ஸாரக்காட்டைவிட்டு
என்னை உன்னையென்பதற்று ஏகவடிவாயிருந்தாள்

## புத்தீயென்பவள் அகண்டாஹாரமாய் விளங்குதல்

(12-கண்ணிகள்)

1. ஆத்மசிரத்தையான தோர்அகண்டாஹார விருத்தியாகிய சகியை
புத்தியானவள்பிரீதியுடனே பற்றித்தோழமையடைந்தாள்
2. எற்றியேயெளிதாகஜீவன் முக்தியானதோர்புரத்தில்
விரக்தியாகின்றபுருஷனுடன் அத்வைதானந்தமடைந்தாள்
3. வாக்கினாலுச்சரித்ததும் மனதினாலே எண்ணப்பட்டதும்
கேட்டதும்காணப்பட்டதும் கிரியையெல்லாஞ்சித்தென்றறிந்தாள்
4. சச்சிதானந்தமூர்த்தியுட சற்குணந்தன்னைப்பாடி
நித்தியானந்தமடைந்தோம் பரதேவிபதந்துணையே

ஓம் தத் சத் பிர்மார்ப்பிதம்.

பராசக்தி துணை

# அகண்ட வெளிக்குறம்.

(1-வது விருத்தம்)

சதுர்மறை வேதப்பொருளாம் சச்சுதாநந்த வஸ்து
உருவமாய் நாமரூபந்தரித்து உலகுள்ளோர் உய்யவென்றே
குருவாகி வந்துதோன்றிக் குறிசொன்ன தத்துவத்தை
விரிவாக எடுத்துரைக்க விநாயகனை வணங்கினேனே

## பார்வதியம்மை குறத்தியாக வருதல்

1. சங்கரியாம் பார்வதியும் குறத்தியாகத் தோன்றி
தன்னைத்தானறியும் வித்தை உபதேசிக்கவந்தாள்
அக்ஞானவேரையவள் அறவேயறுத்தெறிந்து
விக்ஞான மளிக்கவென்று வடிவெடுத்து வந்தாள்

2. விவேகமென்னும் பெண்ணருகே குறத்தியவள்வந்து
போதகிலே யுரைக்கவென்றே பிரத்தியக்ஷமாய் நின்றாள்
வந்த குறமாமகளை விவேகம் வரவழைத்து
சிந்தைமிக மகிழ்வடைந்து சந்தோஷமாய் சொல்வள்

## 2-வது விவேகமென்னும் பெண்மணி குறத்தியை வரவழைத்தல்

(அகவல் மெட்டு)

1. வந்தவகைசொல்வாய் மதியுடைய பூங்குறத்தி
விவேக மறிந்தவள்போல் முன்னே விளங்கி நின்றாய்
(உன்) ஆனந்தப்பொழுதும் ஆபரண பூஷணமும்
காந்தியுள்ளமேனியுடன் கழுத்தில் ரக்ஷமாலைகளும்

2. பூண்டதொரு தாவடமும் பூசியவெண்ணீறுடனே
பேசுமுந்தன் நாவில் பஞ்சாக்ஷரஜபமும்
மாசுமருவற்ற வஸ்துவின் மந்திரமும்
சீவன்முக்தர்போல சிறந்த திருவடிவும்

3. சச்சிதானந்தரஸம் ததும்பும் திருமுகமும்
ஒச்சமில்லா ஆகாசம் போலிருக்கும் உள்ளமுடன்

நிற்குணத்திலே வயித்த நிர்மலஞானிகள்போல்
பரமானந்த ரஸத்தில் அமிழ்ந்த பெரியோர்போல்

4. ஈசரடியார்போல எழுந்தருளும் என்குருவே
ஆதாவாய்வந்தவளே அகண்டவடிவானவளே
உந்தனுட ஊர்பெயரும் உண்மையுள்ள உன்வடிவும்
எந்தனுக்குச் சொல்லுமென்க குறத்தியெடுத்துரைப்பள்.

## 3-வது குறத்தி நாட்டு வளமை யுரைத்தல்

1. பேச்சுஉரையற்றநாடு பிர்மஸ்வரூபமென்நாடு
வார்த்தைப் பிரஸங்கமற்றநாடு வஸ்து விளங்கியநாடு
சாட்சி சைதன்யமாம் நாடு சச்சுதானந்தமாம் நாடு
நாதம்விளங்கிய நாடு நானும் அறிந்திட்ட நாடு

2. ஜோதிர்மயமான நாடு சுப்பிரகாசமான நாடு
உள்ளாகக் காணுமென்நாடு யோகிகள் சிந்திக்கும் நாடு
தானாகப்பாவிக்கும்நாடு சற்குருவவலிக்கும்நாடு
நீ நானென்றில்லாதநாடு நிர்மலமான தென்நாடே.

(வேறு மெட்டு)

3. பிர்மமென்பதோர் நாடெங்கள்நாடு
பேச இரண்டில்லை நாடெங்கள்நாடு
அன்னைபார்வதி பாகனிடத்தில்
அறிவாம் ஜீவன் ஐக்கியமாம் நாடு
ஆதிதேசிகர் போதனை கேட்டு
அலையுஞ்சித்தம் நிலைநின்றநாடு
ஆனந்தமாகின்ற நாடெங்கள்நாடு
அவஸ்தைமூன்றும் அகற்றியநாடு

4. கோசமைந்தும் குணத்திரய மூன்றும்
குலைந்து கெட்டு நசித்திட்டநாடு
சாட்சியாகிய நாடெங்கள் நாடு
சின்மயானந்தம் பெருகுமென் நாடு
தேசிகர்தந்தநாடெங்கள் நாடு
ஜனனவேரை யறுத்திட்ட நாடு
ஆகாயம்போல் வெளியாகிய நாடு
அர்க்கசந்திரன் உதயமாகு மென்நாடு

5. நிராசைகளற்ற நித்தியயோகியர்க்கு
இரவுபகலற்ற ஏற்றமாம் நாடு
மோகங்கள் போக்கியே ஆசையொழிக்கும்
மூலமருந்தை அறிவிக்கும் நாடு

ஆசையாகின்ற அந்தகாரம் நீங்கி
அகண்டவெளியாகத் தோன்றுமென்நாடு
எங்கள் பிராரப்தம் போக்கிடும் நாடு
ஏகவெளியாய் விளங்கியநாடு

6. பட்டகாஷ்டத்தில் அக்கினிபட்டு
பற்றியே சருகாகுமாம் போல
பக்தியாலீசன் பாதத்திலே மனம்
பற்றினல் ஜன்மம் போக்குமென் நாடு
நாதன் சற்குரு நன்மொழிநாடி
நாலாம்பதத்தை யளித்திடும் நாடு
ஸ்வஸ்வரூபமதாகிய நாடு
சொற்கடங்காத துல்யமாம் நாடு

7. பக்தியண்ணியே தன்னுக்குள் தானாய்
பராபரமாகத் தோணு மென்நாடு
சங்கமற்றதோர் நாடெங்கள் நாடு
அசஞ்சலமான ஆனந்தநாடு
சந்தேகங்களற்ற தற்பொருளானோர்க்குத்
தானேசாட்சியாகத் தோன்றிடும் நாடு
நிற்குணமான நாடெங்கள் நாடு
நிருபாதியாகும் நாடெங்கள் நாடு

8. துச்சமாகுமிந்த ஸம்ஸாரந்தன்னில்
சுயம்பிரகாசமாய்த் தோன்றிடும் நாடு
நன்மையாமிந்த நாட்டையறிந்து
நானேநானென்றறிந்த ஜீவர்கள்
அன்னைபாழ்கும்பி தன்னில் விழாமல்
அகண்டசாக்ஷிஸ்வரூபமடைவார்
கேளும்விவேகமாம் மங்கையே கேட்டு நீ
கதியடையென்று குறத்தியுரைத்தாள்

9. நாமமில்லாத நாட்டுமகிமையுன்
நன்மையை நாடியே நானுமுரைத்தேன்
பாடகந்தண்டை சலங்கைகுலுங்க
பார்வதியாகிய பிரமக்குறத்தி
நாடகமான பிரபஞ்ச நடத்தையை
நாடாதிருக்கவே நற்போதஞ்சொல்லி
தானேதானாகி யகண்டவடிவாய்
சாந்நித்தியமாகவே தேவியிருந்தாள்

## விவேக மென்னும் பெண்மணி துறத்தியைக் கேட்குதல்

(4-வது விருத்தம்)

1. போரால் பெருமைபெற்ற பூங்குறத்தி பேசலுமே
மேலாம் மதியுணர்ந்த விவேக மென்னும் பெண்ணரசும்
ஆரம்மா நீரும் அகண்டவடிவாய் விளங்கிப்
பேரானந்த மளிக்க வந்துதித்த பூங்கொடியே

2. அண்டாண்டப் பேருலகில் அறிவுடையபேர்களிலும்
பண்டு சொன்னபக்தாளாய்ச் சென்ற பலபேர்களிலும்
தொண்டராய் வந்துதித்த ஜீவன்முக்தாள் தங்களிலும்
அகண்டசச்சுதானந்த மகிமை சொன்னார் யாருமில்லை

3. பக்தாளுமுண்டு பிரமையொழித்த ஞானியுண்டு
இச்சையுடன் ஈச்பரனை பூஜித்தோரெங்குமுண்டு
சச்சுதானந்த மயமாய் விளங்கும் தார்குழலே
உச்சிதமாயுன்னுடைய பெயரை யெடுத்துரைப்பாய்

## குறத்தி பெயர் ஊர்முதலியவையுரைத்தல்

1. பேருமில்லை ஊருமில்லை பிரும்மமயம்தானே
வீடுமில்லை வாசலில்லை வெட்டவெளி யானே
சித்தமில்லை சிந்தையில்லை சிதாகாச மானேனே
பித்தமில்லை பிரமையுமில்லை பெரும் வெளியானேனே

2. தந்தையில்லை தாயுமில்லை தானே தானானேனே
பந்துவில்லைப் பந்தமில்லை பரவொளியும் நானே
மாசுமில்லை மருவுமில்லை வஸ்து வொளி நானே
ஜோதிமயமாய் விளங்கும் சுகஸ்வரூபமானேன்

3. இரவு பகலற்றிருக்கும் சுயஞ்சோதி யானேனே
அகண்டவெளிதனையடைந்த பரமானந்தம் யானே
ஆணுமல்ல பெண்ணுமல்ல அலியுமல்ல அறிவாய்
ஸ்நானபான சத்கர்மத்தின் பலன் புஜிக்கவறியேன்

4. ஜபதபங்கள் செய்துவரும் பிரும்மசாரிதானுமல்ல
நற்கர்மங்கள் செய்துவரும் சத்கிரகஸ்தனல்ல
மனைவியுடன் வனம் வஸிக்கும் வானப்பிரஸ்தனல்ல
தவஸியாகி ஸஞ்சரிக்கும் சந்நியாசியுமல்ல

5. மனுஷ்யவர்க்கம் நானுமல்ல பக்ஷியும் நானல்ல
மண்ணுலகில் ஸஞ்சரிக்கும் மிருகவர்க்கமல்ல
தரணி தன்னில் ஊர்ந்து செல்லும் ஜந்துக்கள் நானில்லை
செடிகொடிகள் மலைமுதலாம் ஸ்தாவரம் நானில்லை

6. மகாப் பிரளபம் உண்டு பண்ணும் மாய்கையும் நானில்லை
மஹாதேவர் விஷ்ணுபிரும்மாமும்மூர்த்தி நானில்லை
சிந்தையற்ற பிரஹ்மமய சுகஸ்வ ரூபம்நானே
அந்த மாதிநடுவுமற்ற அகண்டவெளிநானே

(5-வது விருத்தம்)

பேருமில்லை யென்றாய் பிரம்ம வடி வென்று சொன்னாய்
ஈச்பரனே எந்தனுக்கு எற்றகுரு வென் றுரைத்தாய்
ஸ்தூல முண்டாகியன்றோ ஞானம் வந்த துன்னிடத்தில்
சூக்ஷ்ம மறிந்த விதம் சொல்லுவாய் பொற்குறத்தி.

**குறத்தி தன்னுடைய சற்குரு மகிமையுரைத்தல்.**

1 விவகாரதசை தனிலே ஈசர்குருவானார்
விவேகத்தால் பார்ப்பளவில் குருவும் வெட்டவெளியே
அவரேகுரு சிஷ்யையும் நான் அறிவு வருந்தனிலும்
ஆத்மாஜீவாத்மாவில்லை அக்கியானங்களொழிந்தால்

2. ஜன்மவேரையறுக்கும்படி சிவனுரைத்த வாக்கியம்
எவர்களுக்கு மெடுத்துரையேன் உனக்கித மாயுரைத்தேன்
அனுக்கிரகித்து எந்தனிடம் ஹரனுரைத்த வாக்கியம்
அன்புடனே யுனக்குரைக்க ஆதாவாய் வந்தேன்

3. இருதய மதின் இருள் நீங்கி ஏகவெளியாலல்
உதயமாகும் அறிவுதானே சொரூப மென்று வுரைத்தார்
காணுகின்ற பிரபஞ்ச சுகம் கற்பிதமே யென்றார்
கரைகாணு அகண்டவெளி சொரூப மென்றே குறித்தார்

4. அவிபதத்தின் சுயவடிவை அறிய வெனக்குரைத்தார்
ஆரணங்கே என்கணவர் அகண்டவெளி நாதர்
பஞ்சேந்திரியங்களையும் பகுத்தறியச் சொன்னார்
உண்டான விடத்தில் ஜீவன் ஒடுங்கு மென்றே யுரைத்தார்

5. கடம் உடைந்து மடமிடிந்து காணும் வெளிபோலே
உடல் நசித்து ஜீவாத்மா ஒடுங்கு மிடமுரைத்தார்
சர்வக்ஞராய் மும்மூர்த்திகள் சுயேச்சையுடனிருப்பார்
கிஞ்சிக்ஞராய் தொம்பதத்தில் ஜீவன் கிடந்துழலும்

6. தொம்பத ஜீவாத்மாவை தத்பதமாம் வெளியில்
நாமரூபம் தள்ளிப் பார்த்தால் நிற்குணமே நிலைக்கும்
பிரும்மமே அஸ்மியென்று பிறப்பொழிப்பா யென்றார்
பேதமொன்றுங்காணு யென்று பரமரெனக்குரைத்தார்
வந்ததோர் என்வடிவும் அகண்டவடிவாகும்
விவேகமென்னும் உந்தனுக்கு மதியுரைக்க வந்தேன்

(6-வது விருத்தம்)

கொம்பனையே யுந்தன் குலநலமும் நானறியேன்
குறக்குலமோ அல்லவென்றால் மேன்மையுள்ள நற்குலமோ
குற்றமற்ற ஈசபரனை சற்குருவாய்க் கூறுகின்றாய்
குடிநலமுங் கோத்திரமுங் கூசா தெடுத்துரைப்பாய்

குறத்தி தன்னுடைய குலவளமை யுரைத்தல்

1. குடிநலமுங் கேட்டாய் நீ கொண்டல்வர்ணர் தங்கையும் நான்
குணாதீதமான பிரமக் குணவடிவாய் வந்தவள் நான்
ஜன்மமற்ற பிரமமும் நான் ஜீவபரான் சாட்சியும்நான்
அகிலலோகம் நிறைந்திருக்கும் ஆதிவஸ்து வானவற்கு
2. ஹரனென்னும் ஈசருக்கு அகண்டமென்னும் வடிவமும் நான்
அவருடைய அனுக்கிரகத்தால் ஜன்மவேரை யழிப்பவள் நான்
பராபரனும் ஈசருடைய பாகந்தன்னில் வசிப்பவள் நான்
மறைவேந்தும் ஈசருடைய வாமபாகத்திலிருப்பவள் நான்
3. விச்வமெல்லாம் ஒன்றாய் விளங்கி விபூதி தரிப்பவள் நான்
உலகமெல்லாம் தானாய்விளங்கி ருத்ராக்ஷம் அணிபவள் நான்
எந்தனுடைய அடியாருக்கு ஈசருடைய கருணையினால்
இன்பமுள்ள அகண்டரஸம் இச்சைதீர அளிப்பவள்யான்

(7-வது விருத்தம்)

அகண்டரஸமளித்த ஆனந்தத் தாண்டவர்க்கு
ஆசார்யனென்னும் அகண்டவொளி யானவர்க்கு
கனிந்த பழவகையோ கற்கண்டோ தேன்பாகோ
என்ன பதிலளித்தாய் எடுத்துரைப்பாய் பூங்குறத்தி

குறத்தி தான் சற்குருவுக்கு அளித்த காணிக்கையை உரைத்தல்

1. அன்னமுடன் பால் பழங்கள் அகண்டருக்கோ அளிப்பேன்
அதீதமென்னுங் குருநாதர் அடிமலரைத் தொழுவேன்
பரனுடைய பாதரஸம் புஜித்தருஜி பார்ப்பேன்
பக்தியுடன் துதித்துமவர் பாதத்தூள் அணிவேன்
2. நன்மையுடன் தொண்டுசெய்து நமஸ்கரித்துப் பணிவேன்
நானவர்க்குக் கொடுப்பதில்லை புஜித்திடவும் நினையார்
அவரெனக்குக் கிருபையுடனே ஆத்மபோத மளிப்பார்
அதற்கெதிராய் எந்தனிடம் பிரதிபலனை யடையார்
3. வள்ளியம்மை கிருபையினாலே குறக்கூடையை வாங்கி
வள்ளல் குரு சிவனுரைத்த வாக்கியக் கோல்பிடித்து

அண்டரண்ட பிரமாண்ட லோகமெல்லா மடைந்து
அன்புடைய அடியாருக்குக் குறிகள் சொல்லவமைந்தேன்

4. தொண்ணூற்று தத்துவமாம் சேவகரை ஜெயித்து
தன்னையே தானறியும்படி தகுந்தகுறி சொல்வேன்
அனவரத கணபதியும் அமரர் சேனுபதியும்
அழகுடைய சிறுவராக எந்தனுக்கே யமைந்தார்

5. ஆதிசக்தி பார்வதியும் லக்ஷ்மிசரஸ்வதியும்
அன்புடைய தோழிகளாய் என்னையடைந்திருப்பார்
சந்ததமும் வேதங்களை மாலைகளாய் தரிப்பேன்
சாஸ்திரங்கள் உபநிஷத்தை தாவடமா யணிவேன்

6. கோசங்களைக் குலைத்தெறிந்து ஆசைதன்னைக் களைந்து
பாசங்களை யகற்றிவிட்டு பிரமமாகச் செய்வேன்
அவித்தைதன்னை நிவர்த்தி செய்து அக்ஞானத்தை யொழித்து
அகண்டவெளிப் பழரஸத்தை அடியார்களுக் களிப்பேன்

(8-வது விருத்தம்)

அருமையுடன் நீ புஜித்த அகண்டரஸ நற்பழத்தை
இருமைப் பிணிநீங்க எந்தனுக்குத் தந்திடுவாய்
பாதிப்பழத்தை பகிர்ந்தெனக்குப் போட்டாமல்
பூரணமாய் பழமளித்து போதம் வரச்செய்திடுவாய்

**குறத்தி அகண்டரஸப்பழத்தின் மகிமையுரைத்தல்**

1. வெளியான பழமிதையும் விவேகத்தினலறிவாய்
ஒளியான நற்பழத்தை உண்மையினல் உணர்வாய்
வேதமென்னும் பழரஸத்தை விசாரணையா லடைவாய்
போதமென்னுங் கனிரசத்தை புத்தியினல் காண்பாய்

2. நாமரூப மற்றிருக்கும் நான்புசிக்கும் பழமே
பாமரரால் பறிக்கவொண்ணு விசித்திரமான பழமே
அந்தரமாம் ஆகாசத்தில் அளிந்துதொங்கும் பழமே
எந்தனுட நாவில்ருஜிக்கும் இரஸம் ஒழுகும் பழமே

3. பக்திபண்ணி ஈசருடைய பாதங்களைப் பணிந்தோர்
இச்சையுடன்எடுத்தருந்தும் இன்பரஸப்பழமே
தேஜோன் மயமான பழம் சித்த சுத்தியடைந்தோர்
ஆசையுடன்எடுத்தருந்தும் அகண்டரஸப் பழமே

**9-வது விவேகமென்னும் பெண்மணி கேட்டதல்.**

(விருத்தம்)

எத்துகிறாய் என்னை இளமையுள்ள பூங்குறத்தி
மெரட்டுகிறாய் வேதப்பழத்தை மறைத்துவைத்து

அகண்டமென்னும் த்வைதப்பழத்தை யெனக்களித்து
ஆத்மக்கியானமடைய அனுக்கிரகிப்பாய் ஆரணங்கே.

1. விச்வமெல்லாம் ஒன்றாகி விளையாடுந்தேவி
மொட்டுகின்றீர் ஜகமிதனை மாய்கையினால்மயக்கி
பாலகனைத்தாயமுக்கிப்பால் போட்டும்முறைபோல
பார்வதியே எந்தனுக்குப் பக்திப்பழமளிப்பீர்,

2. வேண்டுகின்றேன் உன்பதத்தை விவேகமாகுமென்னை
ஆண்டுகொண்டு அடிமையாக ஸ்வானுபவமருள்வீர்
கந்தபிரா னுகந்தேற்றும் அன்னையே நீர் கேளீர்
சொன்னபடியெந்தனுக்கு வேதப்பழந்தருவீர்.

3. ஆற்றமாட்டேன் பார்வதியே அருள் பொழிந்தேயருளும்
போற்றுகின்றேன் திருவடியில் உமது ஐக்கியம் பெறவே
நீயென்றும் நானென்றும் பேத நிலையை விட்டுநீக்கி
நிற்குணத்தில் நிலைக்கச்செய்வீர் நீலகண்டர்தேவி

4. இருக்குமிடமேதுமற்று என்னையுணராமல்
எடுத்தெடுத்து நானலைந்த ஜன்மமிதுபோதும்
சங்கரராம் சற்குருவை தன்னிலறியாமல்
தெளிவிழந்து மயக்கத்தினால் ஜனித்ததுவும்போதும்

5. மகமாய்கை தனில் மூழ்கி அறிவிழந்து மயங்கி
வஸ்துவை நானறியாமல் தத்தளிக்கும் மளவில்
முக்திபத மளிக்கவென்றே மூர்த்தியாய் முன்வந்தீர்
சித்தமதைத் தெளியவைத்தீர் சற்குருவே எனக்கு

6. கடலின் அலைதனையெடுத்து கயிற்றினில் கோர்த்தாலும்
காவேரி மணலை எண்ணி கணக்காய்ச் சேர்த்தாலும்
பிரபஞ்சத்தில் நானெடுத்த ஜன்மம் பார்த்தெண்ணவும் போமோ
பக்ஷியாக எடுத்த ஜன்மம் மட்டுமிதமாமோ

7. விருக்ஷமாகி நின்ற ஜன்மம் வேணதுண்டு தாயே
புற்பூண்டாய்க் கிடந்ததெல்லாம் போதும் போதும் அம்மா
பரமாத்மா நானேயென்று பார்த்து உணராமல்
பலவிதமாய் ஜன்மித்து நான் பிரபஞ்சவசமானேன்

8. மஹாதேவர் கருணையினால் மதிமயக்கந்தெளிய
வண்ணமுள்ள குறத்தியாகி எந்தன் முன்னே வந்தாய்
சொல்லுமுந்தன் வாக்கியத்தால் சிந்தை மயலொழிந்தேன்
எண்ணுமலேயானெடுத்த ஜன்மங்களுமிழந்தேன்

9. ஜீவனுடன் ஆத்மாவுக்கும் ஜகப்பிரபஞ்சந்தனக்கும்
பேதமில்லை யென்றுரைக்கும் புத்தியை நானடைந்தேன்

ஆசையென்ற பாசங்களை அறுத்து மனந்தெளிந்து
அகண்டமென்னு மானந்தத்தில் அமிழ்ந்து மகிழ்வடைந்தேன்

10. சித்துமயமாம்அவித்தை நித்தியமதேயானால்
ஜகத்திலுள்ள பிரபஞ்சமாய்கை நிச்சயமதாகும்
ஸ்வப்பனத்தில் கண்டவஸ்து நித்தியமென்றுசொன்னால்
தோன்றுமிந்தப்பொய்யுலகம் நிச்சயமதாகும்

11. ஜீவாத்மாபரத்துடனே சேர்ந்தயிக்கியமானால்
திரும்பியிந்தப் பிரபஞ்சத்தினில் ஜனித்திடாதென்றறிந்தேன்
அப்படியே என்மனதின் பிரபஞ்சவாசையகற்றி
ஆதியான அகண்ட ரஸப்பழத்தை யெனக்கருள்வீர்

12. பரிவுடனே எனக்குவந்து உபதேசமுஞ்செய்தீர்
பராபரவஸ்துவென்னும் பூரணத்தில் சேர்ப்பீர்
சம்ஸாரக்கடல் கடக்கத் தோணியாகவிருந்து
சச்சுதானந்தமென்னும் அகண்டமதில் சேர்ப்பீர்

10-வது விருத்தம்

பிரியமாய் விவேகமென்னும் பெண்மணியுரைக்கக்கேட்டு
விவரமாய் யோகந்தன்னைக் குறத்தியும் விளம்பவென்றே
சிரவணத்தின் அனுபோகத்தால் உன் சித்தமும் சுத்தமாகி
மனனத்தைச்செய்துகொண்டு சஞ்சலமகற்றுவாயே.

## குறத்தி உபதேசித்தல்

கண்ணிகள்.

1. விருதாவாய் உன்பொழுதை வீணிலழிக்காமல்
விச்வமெங்கும் நிறைந்தவனை விசாரணையாலறிவாய்
க்ஷுத்பாதை நிமித்தியமாய் சோகமடையாமல்
கிட்டின பதார்த்தங்களை கவலையற்றுப் புசிப்பாய்.

2. அன்னமுடன் காய் கிழங்கு அகப்பட்டதையருந்தி
இன்னவகை வேணுமென்ற இச்சைதனையொழிப்பாய்
தொண்ணூற்றாறு தத்துவத்தின் சன்னபின்னலைத்தாண்டி
ஸ்தூலதேக ஆபாஸத்தின் பந்தமதைத் தவிர்ப்பாய்

3. ரோமமுடன் நரம்புகளும் எலும்புகளுஞ்சேர்ந்து
நவத்துவார வாசலமைந்து இரத்தங்களும் நிறைந்து
ஒக்காள மெடுக்கவரும் உள்ளே கிள்ளிப்பார்த்தால்
உடலாகிய மாம்ஸதேக உறவுதனையொழிப்பாய்

4. எழுபத்தோராயிரத்து மூச்சுக்காற்றையிழுத்து
இந்ததேகத்தின் அசுத்தக்காற்றை இழுத்துவெளியில் அகற்றும்
பந்தமாகிய பிராணவாயுவை பிங்களையில்பொருத்தி
பூர்ணயோக நிலையறிந்து பிரமநிலைபெறுவாய்.

5. மனனம் பண்ணியறிவைக்கொண்டு வஸ்து நிலையுணர்ந்து
அகமொழிந்து அகண்டவெளி அதீதந்தன்னையடைவாய்
சச்சு தானந்தமயமாகி சஞ்சலங்களொழிந்து
அச்சமற்று அகண்டமதின் வஸ்துவை நீயடைவாய்

11-வது விருத்தம்.

மெய்யானநல்லறிவே விவேகமென்னும் மெல்லியரே
கைலாஸபர்வதத்தில் காக்ஷிபெற உன்கருத்தோ
வைகுண்ட லோகமதில் வசிக்கமனதுமுண்டோ
சத்தியலோகமடைந்து வசித்திருக்கச் சம்மதமோ
ஸ்வர்க்கலோகமடைந்து சுகித்திருக்கச் சிந்தையுண்டோ
தத்பதத்தில் முக்திபெறச் சம்மதமோ சொல்வாயே.

விவேகப்பெண் சொல்லுதல்.

1. மாய்கைதன்னை யொழித்தாய் எந்தன் மனதின் நிலையுணர்ந்தாய்
வானவர்க்கும் மேலான வாழ்வை யெனக்களிப்பாய்
மஹாதேவர் தேவியுடன் வாழ்ந்திடுங்கைலாஸம்
மஹாவிஷ்ணுலக்ஷ்மியுடன் வாழ்ந்திடும் வைகுண்டம்

2. சிருஷ்டிகர்த்தாவாணியுடன் இருக்கும் சத்தியலோகம்
தேவதைகள் வாஸம்பண்ணும் தேவேந்திரன் உலகம்
மட்டில்லாத பலனளிக்கும் ஸ்வர்க்கலோக வாழ்வும்
வஸ்து நிலையறியாதவர் இச்சைவைத்துவாழ்வார்.

3. இவ்வுலகுப்போகமெல்லாம் இரும்புவிலங்காகுல்
பொன்னுலகுப்போகமெல்லாம் பொன்விலங்குபோலாம்
ஜீவன் முக்திசேரவென்றால் ஸ்வர்க்கம் நிலையாமோ
ஜகதீச்வரி எந்தனை நீர் சோதிக்கவும் வேண்டாம்.

4. எண்ணறிய தானம் யாகம் ஜபதபங்கள் இயற்றி
பண்ணி நின்ற கர்மங்களின் பலனுண்டதும்போதும்
கண்ணில்லாத அந்தகன்போல் கர்மங்களைப்புசித்து
எண்ணில்லாத பிறவி தன்னை எடுத்ததினிப்போதும்

5. வஸ்துவே நீர் குறத்தியாகி சற்குருவாய் வந்தீர்
உத்தமியே உமக்களிக்க ஒருபொருளுங் காணேன்

சத்தியமாய் நான் புரிந்த கர்மபலன் தந்தேன்
தத்பதமாம் சாயுஜ்யத்தில் ததாகார வெளியடைவேன்

12-விருத்தம்.

குருவாகி வந்தெனக்கு கிருபைசெய்தபொற்குறத்தி
அறியாமையென்னும் மயக்கம் அகற்றிவைத்தாய்.
ஆனந்தமாம் பிரம ஸாகரத்தில் மூழ்கவைத்தாய்
அகண்டவெளிகாட்டி நின்றாய் பழமளிப்பாய் ஆரணங்கே.

1. மாசில்லாத பேரழகும் மதிமுகமும் — அம்மன்
தேஜோன் மயமாய் விளங்கும் திருவொளியும்
நிகரில்லாத கிருபை பொழியும் நீலவிழியும் — அம்மன்
நெற்றியினில் பொட்டழகும் ரத்தினமுடியும்

2. சந்திர பிரபை சூர்யபிரபை சுட்டிபொளியும் — அம்மன்
தளதளென்னுந் தாடகமும் திருச்செவியும்
சண்பகத்தின் முகிழ்ப்போல திருநாசியும் — அம்மன்
சிவந்த அதரம் நடுவில் தந்தப் பந்தியும்

3. வலம்புரிச்சங்கம் போல் விளங்கும் கழுத்தும் — அம்மன்
வண்மையுள்ள முத்து ரத்தினமாலை யொளியும்
சிவந்த இளநீர்க் குலைபோல் ஸ்தனத்தழகும் — அம்மன்
திருமார்பில் சிந்தாமணி ரத்தினமாலையும்

4. திருக்கையில் கடகம்வளை தோளணிகளும் — அம்மன்
திருமருங்கில் ஒட்டியாணம் மேகலை மின்ன
அழகாய்ச் சிலம்பணிந்த அன்ன நடையும் — அம்மன்
ஆதியென்னும் பராதேவி அகண்ட மாகினள்

5. அகண்ட வடிவாகிய ஆதிசத்தியே — எங்கள்
ஆதிசிவன் கண்டுகக்கும் அபிராமியே
மன்மதனைச் சுட்டெரித்த மஹாதேவராம் — ஈசன்
வசமாய் உனக்கு வேதப்பழமளித்தார்

6. ஆசையற்றார் போலிருந்து ஆதிசிவனும் — உம்மை
நேசத்துடன் நிற்குணத்தில் நிலைக்கவைத்தார்
காக்ஷியாகி எந்தனுக்குக் குறியுஞ்சொன்னீர் — தாயே
கருணையாகக் கைவல்யப்பழத்தை யருள்வீர்

சச்சுதா

வாய்திறக்கவழியுமில்லை மௌன சங்கற்பமில்லை
வந்ததில்லை போனதுமில்லை
ஆதியந்த நடுவுமில்லை ஜோதியான உருவுமில்லை
உபாதியில்லை உன்னிடத்திலே
வாதுசெய்யும் மாய்கை தன்னால் பேதமான கற்பனையே
புதுமையிது புதுமையிதுவே ஆ ஆ ஆ

சச்சுதா

உட்புறமும் உயரங் கீழ்திசை திக்கெட்டும் பூரணமாய்
ஒளியாகி வெளியுமாகி
நிற்குண நிராபாஸ நிர்மல நிராதார
பிரஞ்ஞானப் பரஞ்சோதியாய்
அத்வைத அகண்டராய் அஜிபதலக்ஷியாதாராய்
அபரோக்ஷ சுகமாகியும் ஆ ஆ ஆ

சச்சுதா

(ஓம்தத்சத் பிரமார்ப்பிதம்)

# விளம்பரம்.

R. S. சுப்பலக்ஷாமி அம்மாளால்,

பிரசுரிக்கப்பட்ட புஸ்தகங்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | வால்மீகி ராமாயணப் பாட்டும் ஞானராமாயணக் கப்பலும் (3-ம் பதிப்பு) … … … | 0 | 3 | 0 |
| 2. | குசலவ வாக்கியம் (4-ம் பதிப்பு) … … | 0 | 3 | 0 |
| 3. | அனந்தங்காடு (4-ம் பதிப்பு) … … | 0 | 2 | 0 |
| 4. | ஸ்ரீபார்வதியம்மன் சோபனம்(2-ம் பதிப்பு) … | 0 | 3 | 6 |
| 5. | வேதாந்தப் பாட்டுகளும், தினசரி ஸ்தோத்திரங்களும் (2-ம் பதிப்பு) … … … | 0 | 2 | 0 |
| 6. | ஜீவநாடகம் முதலிய சில அத்வைதப் பாட்டுகளும் பஞ்சீகரண மகா வாக்கியமும் (2-ம் பதிப்பு) … … | 0 | 4 | 6 |
| 7. | பஞ்சீகரண கட்டம் … … … | 0 | 0 | 6 |
| 8. | சாவித்திரி பாடம் (2-ம் பதிப்பு) … … | 0 | 1 | 0 |
| 9. | ஸ்ரீ லலிதாம்பாள் சோபனமும் தேவி பாடமும் (3-ம் பதிப்பு) | 0 | 5 | 0 |
| 10. | ஐந்து கும்மிகள் (2-ம் பதிப்பு) … … | 0 | 2 | 0 |
| 11. | குறவஞ்சி (மூன்று குறங்களடங்கியது) … | 0 | 3 | 0 |

மேற்கண்ட புஸ்தகங்களை இவ்விலாசத்திற்கு எழுதிப் பெற்றுக் கொள்ளவும்:—

V. S. வாலாம்பாளம்மாள்,

8, தொளசிங்கப் பெருமாள் தெரு,

திருவல்லிக்கேணி, சென்னை.

# பார்வதி அம்மன் சோபனம்.

இஃது

சென்னை

R. S. சுப்பலக்ஷ்மி அம்மாளால்

பிரசுரிக்கப்பட்டது.

மூன்றாம் பதிப்பு.



MADRAS.

THE COMMERCIAL PRESS.

1917.

*Price Annas, 4.*]                [விலை அணா, 4.

உ

பராதேவி துணை.

# ஸ்ரீ பார்வதி அம்மன் சோபனம்.



"இணைவிழைச்சிற் சுகமதனை யுயிர்க ளெய்த
விருந்ததிருக் கோலமென வெழில்கொள் வேதப்
பணையுரைக்கு மபிராம விமலன் றன்னைப்
பாரமெல்லாங் கொண்டாடும் பாலமைய னிற்றுச்
துணையிரட்டை கொழுந்தோளிற் றுலங்கா நின்ற
தும்பையொரு மலருடனே தோற்றி நின்ற
கணையிரட்டை யணையாவிற் புயுமையோ டுற்ற
கலியாண சுந்தரனைக் கருதி வாழ்வாய்"

உ

பரதேவி துணை.

# முகவுரை

ஸ்காந்தபுராணக் கதையை நமது தமிழ்நாட்டு ஸ்திரீகள் சுலபமாய் தெரிந்துகொள்ளும்படி பாட்டு ரூபமாய் அமைக்கப் பட்டுள்ள இந்தப் "பார்வதி சோபனம்" என்பது வெகுகாலமாய் கர்ண பரம்பரையாய் வழங்கி அனேகஞ்சொற்கள் உருவில்லாமல் மறைந்துபோயும் இன்னும் ருது கலியாண காலங்களில் சிற்சிலரால் மட்டும் சிலபாகங்கள் பாடப்பட்டு வந்துகொண்டிருக்கிறது.

விட்ட விடம் தொட்ட விடம் தெரியாமல் சொற்பிழைகள் மலிந்து சீர் கெட்டுப்போயிருந்த வாக்கியங்களை அனேகவிடங் களில் வெகு கஷ்டப்பட்டுச் சேகரித்து பலதடவை திருத்தி எழுதி உருவாக்கித் தன் சிரமம் வீண்போகாமல் இதை அச்சிற் பதிக்க வேணுமென்னும் பேரவாக்கொண்டிருந்த என் தாயாருடைய முக்கியமுயற்சியினால் இது இப்பொழுது வெளியாகநேர்ந்தது.

இதிற் சேர்க்கப்பட்டிருக்கும் "தக்ஷிணாமூர்த்தி உபதேசம்" என்னும் பாகமானது எளிதிற் புலப்படும்படியான அதனுடைய வேதாந்த ஸாரத்திற்காக அனேகரால் மிகவும் மதிக்கப்பட்டுள் ளது. சிவன், விஷ்ணு, பிரும்மா, தேவேந்திரன் முதலானவர்களை ஏசிப்பாடியிருக்கும் பாகங்களால் இதர புராணங்களின் சில முக்கியமான விசேஷங்களையும் தெரிந்துகொள்ள இடமுண் டாகும். கலியாணகாலங்களில் பெண்குழந்தைகளால் பாடப் பொருத்தமான சில தனிப்பாடல்களையும் தகுந்தவிடங்களில் சேர்த்திருக்கிறேன்.

எழுதிப்படிக்கத்தெரியாமல் முற்காலத்து ஸ்திரீகள் இம்மா திரியான பாடல்களை மனப்பாடம்செய்து புராணக்கதைகளை

நன்றாய்த் தெரிந்துகொண்டு வெகுபக்தி சிரத்தையோடு இருந்திருக்கிறார்கள். தற்காலத்திற் பெண்டுகள் படிக்க அனேக சௌகரியங்களும் இலகுவான அச்சும் ஏற்பட்டு, மனப்பாடம் செய்ய வேண்டிய ஆவசியகம் மிகவும் குறைந்துபோய் விட்டபடியால், மறைந்துபோய்க் கொண்டிருக்கும் இப்படிப்பட்ட சிலாக்கியமான பாடல்களை உயிர்ப்பித்தல் மிகவும் உபயோகமுள்ளதாகுமென்று இதை அச்சிடலானேன்.

அனேக புராணங்களின் ஸாரங்களும் அடங்கிய இந்தச் சோபனத்தை சகலரும் படித்து ஸ்ரீ பார்வதிதேவியின் கிருபைக்குப் பாத்திரராவார்களாக.

Triplicane, R. S. சுப்பலக்ஷ்மி.
*April, 1917.*

இந்தச் சோபனத்தை

தன் பேத்திகள் கொள்ளுப் பேத்திகளுக்கு

மனப்பாடஞ் செய்யச் சொல்லிக் கொடுத்துக்கொண்டு

தானும் மகாபக்தியுடன் பாடிக்கொண்டிருந்த

என் மிகவும் அருமையான

கொள்ளுப்பாட்டி (பிரபிதாமஹி)

**சுப்பம்மாள் என்பவருக்கு**

ஸமர்ப்பிக்கிறேன்.

R. S. S.

உ

பரதேவி துணை.

# ஸ்ரீ பார்வதி அம்மன் சோபனம்.

## விநாயகர் துதி.

சிரவில் தும்பி விநாயகனே, ஸ்ரீஹரியார்தன் மருமகனே
ஹரிசகோதரி யாள்மகனே, ஆதிமூர்த்தி விநாயகனே
அமர்ந்த சுந்தர நடையனே, சிவந்த பங்கஜ நயனனே
தளர்ந்த தொந்தி விநாயகனே, பணிந்து பாடுவோம் சோபனமே.

## அம்பிகை துதி.

பார்வதியாள் சோபனத்தை, பக்தியுடனே நான்பாட
ஈஸ்வரியே என்னுடைய ஹிருதயந்தன்னில் வாருமம்மா
ஏர்வையான பெண்மணிகாள் இன்பமுடன் கூடிக்கொண்டு
கோர்வையாகவே நின்றுகொண்டு, குனிந்து பாடுங்கள் சோபனத்தை

## தாக்ஷாயணி அவதாரம்.

பிரமனிடத்தில் உதித்தவராம் பிரம்மாண்ட சிருஷ்டிவகித்தவராம்
அக்ஷரநாயகி பாலகராம் தக்ஷப்பிரஜாபதி என்பவராம்
அகிலபுவன சிருஷ்டியிலே அதிகசிரத்தை யுடன்கூடி
அமரர்மண்டல மத்தியிலே ஆதித்தன் ஒளிபோலிருந்தார்
சகலபுவன காரணியை சச்சிதானந்த ரூபிணியை
அச்சுதருக்குச் சகோதரியை தக்ஷரும் நோக்கித் தவமிருந்தார்
பச்சைவர்ணமேனி யம்மனவள் பிரத்தியக்ஷமாகி எதிரில்வந்து
இச்சையுடனம்மன் தக்ஷரைநோக்கி என்னவரம் வேணுங்கேளுமென்றாள்
5. போற்றிசெய்து தக்ஷரும் அம்மனை (தன்) பெண்ணாகவரக்கேட்டுக்
கொண்டார்

பார்த்துஅம்மனும் கிருபையுடனே பாலையாகவே தோன்றி நின்றாள்
அன்புடனே குழந்தையைக்கொண்டு அரன்மனைக்கே வந்துவிட்டார்.
இரந்துகிடந்த விதிகுலத்திலே பிறந்ததைக்கண்டு தக்ஷரப்போ
பந்துஜனங்களுடன்கூடி சந்தோஷங்கள் கொண்டாடினர்.

தக்ஷப்பிரஜாபதி கன்னிகைக்கு தாக்ஷாயணியென்று பேருமிட்டார்
நித்ய கல்யாணியின் பாலலீலைகளை நித்தியம்பார்த்துமகிழ்ந்திருந்தார்.
நீர்க்கரையின் அருகுநிறம்போலே நித்தியகல்யாணி வளர்ந்துவந்தாள்
இந்தப் பெண்மணிக்கு ஏற்றகணவன் ஈசுவரனென்றே நினைத்திருந்தார்
பரமசிவனும் எழுந்தருளிப்பரா சக்தியைக் கலியாணம் பண்ணிக்கொண்டு
10. அமைந்தகைலை மத்தியிலே சிவன் அம்மனுடனே வசித்திருந்தார்.

## தக்ஷப்பிரஜாபதியக்யம்.

தக்ஷப்பிரஜாபதி யக்யம் செய்யும்போது அக்ஷயமானந்த ஈஸ்வரியை
கக்ஷிகூடி அழையாமலம்மனை பக்ஷபாதமாய் தக்ஷனிருந்தான்
அந்தமுமாதியு மற்றசிவன் எந்தவிதமாய்த் தடுத்தாலும்
பெற்றபிதாவென்ற பாசத்தினால் குற்றம் பரிகாரஞ் செய்யவென்றே
தேவியும் மெத்த ஆசையுடன் தோழிமாரை அழைத்துக்கொண்டு
வாழைமரம்போல் தொடையுடையாள் அரைநாழிகையிலே வந்துவிட்டாள்
யக்யசாலையில் வந்த அம்மனை யக்யரூபியென்றெண்ணாமல்
அக்யானத்தாலே தக்ஷரும் அம்மனை ஆதரிக்காமலே தானிருந்தார்.
15. அம்மனும் மிகுந்த கோபத்துடனே அந்தக்ஷணமே மனந்தளர்ந்து
அப்போதே சொன்ன ஆண்டவன் வார்த்தையை ஆதரித்தாலிதுநேராதே
துக்கத்துடனே தயங்கி யம்மனும் விக்கி விக்கி யழுதுகொண்டு
பத்தினிமாருடன் வீற்றிருக்கும் பெற்றதாயண்டையில் வந்துநின்றாள்.
புத்தியில்லாத தாயாரும் பரிபூரணியென்று எண்ணாமல்
சற்றும் மதிக்காமலே யிருக்க அதைச்சங்கரி ஆற்ற முடியாமல்
இதுகிரகசார வேளையென்றுஎண்ணி இருள்மூடன் யக்ய சாலைவந்து
இந்த அவமானந்தன்னை சங்கரர் கேட்டால் அபசாரம் நமக்கென்றுஎண்ணி
சிவனருகில் போனோமானால் நம்மை தகிப்பரே நம்மைச் சேராரே [ன்று
ஈசரின்வார்த்தையைத் தட்டின நமக்கு என்னபிராயசித்தம்செய்வோமெ
20. துணிந்துவிட்டாளக்கினியில் விழ சிவ அபராதம்தீரவென்றே

யக்ய அக்கினித்தீயிலே விழ சித்தமாகவே ஓடிவந்தாள்
ஒத்ததோழிமார் ஓடிவந்து எத்தனைவிதம் மறுத்தாலும்
சற்றும்மனது திரும்பாமல் அம்மன் தீயில் குதித்து மறைந்துவிட்டாள்.

## வீரபத்திரமூர்த்தி தக்ஷன்யாகத்தை அழித்தல்.

அம்மன் தீயில் குதிக்கவுமே அந்த சபையோர் நடுங்கிவிட்டாள்
அதையறிந்து மஹாதேவர் அக்கினிக்கண்ணைத் திறந்துவிட்டார்

சற்றேகோப மடையுலுமே அப்போது குதித்தார் வீரபத்திரர்
யக்யசாலையில் ஓடிவந்து இந்திராதிதேவர்களையடித்து
தக்ஷப்பிரஜாபதியின் தலையை அக்கினி தன்னிலே போட்டுவிட்டார்.
அப்போதந்த அமரரெல்லாம் ஆதிசிவனண்டை ஓடிவந்து
25. ரக்ஷியுமையா சரணமென்னவே முக்கண்ணர் கோபந் தெளிந்துவந்து

ஒட்டிப்பிர ஜாபதிக் காட்டுத்தலையை யக்யத்தை நிறைவேற்றிவைத்து
தக்ஷிணாமூர்த்தி வடிவத்துடன் தெற்குமுகமாய்த் தவமிருந்தார்
சித்தர்வடிவமாய்த் தானிருக்கச் சனகாதி முனிவர்கள் தானும்வந்து
தக்ஷிணாமூர்த்தியைத் தான்பணிந்து தத்துவ உபதேசங் கேட்கலுற்றார்

## தக்ஷிணாமூர்த்தியான பரமசிவத்தை சனகாதிகள் துதித்தல்.

அகவல் மெட்டு.

ஆதிமுதலே அகண்ட ஒளி யானவரே
(சிவந்த) மேகநிறத்தவரே விவேகமுரைப்பவரே
ஞான முரைக்கவென்றே ரூபமெடுத்தவரே
அஞ்ஞானம் போக்கவென்றே அவதாரமானவரே
சுத்தஸ்வரூப சுருதிமறைப்பொருளே
சுத்தஸ்வரூப சுருதி சொல்லுக்கெட்டாதவரே
ஆத்மஸ்வரூப அகண்டரஸமானவரே
ஆரோக்யஸ்தானத்தில் அமர்ந்திருக்குமாண்டவரே
ஜனனவியாதிக்கு அவிழ்தமிட்டதேசிகரே
சஞ்சிதகர்மத்தை சுட்ட தக்ஷிணாமூர்த்தி
தீருமைய்யா எங்களது ஜன்மவினையையென்று
சனகாதியோகியரும் சீர்பாதத்தில்பணிந்தார்.

---

## தக்ஷிணாமூர்த்தி உபதேசம்.

(வேறு மெட்டு

1. சின்மயஸ்வரூபரான தக்ஷிணாமூர்த்திதானும்
 தேசிகராய் யோகிகளுக்கு
2. (சற்றும்) சந்தேகமன்றியிலே அகண்டமெல்லாம் ஏகமென்று
 சொல்லிநின் றவாக்கியஞ்சொல்ல

3. வெள்ளைநிறமாயிருக்கும் வேதாவின்நாயகியும்
விநாயகரும் நாவில்வசிப்பீர்

4. (சற்றும்) கங்குகரைகாணாமல் சம்சாரசாகரத்தில்
என்னசெய்வோம் என்றலையும்பேர்

5. (சுவாமி) செந்தாமரைப்பாதத்தை தியானம்பண்ணி தினந்தோரும்
சிந்தைதனில் கண்டுபணிந்தால்

6. (அவர்) அஞ்சாதேயென்றுசொல்லி ஆத்ம திருஷ்டியால்பார்த்து
(அவாள்) தன் தாபம் மூன்றையும்போக்கி

7. பொங்கித்ததும்பும்மனம் சிரவணப் பொழுதால் ஒழிவடைய
போதித்தார் வாக்கியந்தன்னை

8. சந்ததமும் தைலதாரைபோல பக்திபண்ணிவரும்
சனகாதியோகி நால்வரும்

9. (சுவாமி) தாளடியிலேபணிந்து தத்துவங்கள் கேட்கலுமே
தக்ஷிணாமூர்த்தியும்சொல்வர்

10. பூதமைந்தைப் பிரியென்பர் போதந்தன்னையறியென்பர் (மனப்)
போக்குவர வற்றிரு என்பர்

11. ஆசைதன்னை ஒழி என்பர் ஆத்மவிசாரணை பண்ணென்பர்
(பிரும்) மானந்தமாய் நீ யிரு என்பர்

12. விஷயத்தைவிடுவென்பர் வேதாந்தங்கேளென்பர்
மோகாந்த காரந் தள்ளென்பர்

13. ஏகாந்தமாயிருந்து ஆராய்ந்து பார்த்தாயானால்
வாராது வாசனையென்பர்

14. சாகாஸமாய்த்துணிந்து சர்வத்திலும் பற்றுதலற்று
ஆகாசம் போலிருவென்பர்

15. பக்திவிரக்திதன்னை பிரதிதினம்பண்ணி வந்தால்
பழுதுனக்கு வாராதென்பர்

16. ஸப்தஸ்பரிசரூப ரசகந்தவாசனையை
தைரியத்தினாலே தள்ளென்பர்

17. கட்டுப்படாதமனதை வணக்கித் திருப்பி நல்ல
சத்வாசனைக்கு விடென்பர்

18. மனம் புத்தி அகங்காரம் சித்தம் சிவத்துடனே
ஒத்து லயமாய் விடுமென்பர்

19. மலடிமைந்தன் போல இந்தமனதினால் வந்ததெல்லாம்
பதினாலு உலகமுமென்பர்

20 (சற்றும்) பிரமையாதேபாரென்பர் பார்த்தால் இரண்டில்லையென்பர்
அசையாமல் தியானம் பண்ணென்பர்

21. (ஜீவ) ஆத்மபக்தி தேகபக்தி அது இரண்டும்மித்தையென்பர்
அறிந்து அதை விட்டுத்தள்ளென்பர்
22. தீர்க்ககாலபிரமைதன்னை தினந்தோறும் சிரவணத்தால்
போக்கிவிடு என்று சொல்லுவர்
23. மனனத்தைப் பண்ணியே வஸ்துவாக நீ யிருந்தால்
ஹிருதயக்கிரந்தி அற்றுப்போமென்பர்
24. நிதித்யாஸனந்தன்னிலே நிர்விகாரியாருந்தால்
இரண்டுமொன்றாய் காணலாமென்பர்
25. பொருமையுடனேகூடி பூததயவுபண்ணிவந்தால்
(பரி) பூர்ணவடி வாகலாமென்பர்
26. காலமென்றும் தேசமென்றும் கலங்காதே யிரு என்பர்
கற்றுணர்ந்து உற்றுப்பாரென்பர்
27. அருமையான ஆத்மக்யானம் அதுவுமெளிதாகிவிடும்
அறிந்துவிட்ட பின்பாகவென்பர்
28. தர்ப்பணத்துப் பிரதிபிம்பம்போல ஜகம்தள்ளென்பர்
தத்தபடம் போலபாரென்பர்
29. சொப்பனந்தானிப்பிரபஞ்சம் சுத்தப்பொய்யிதென்று தள்ளி
செப்பிடுவித்தை போல எண்ணென்பர்
30. சுழுத்திபோல சாக்கிரத்தின் சுக துக்க மிரண்டையும் .
சமபுத்தியாகப் பாரென்பர்
31. மூலாதாரத்தின் வழியை மூச்சடக்கியேவிட்டு
(மூல) மூர்த்திதன்னை தியானம் பண்ணென்பர்
32. தொன்பதத்தை தற்பதத்தை சோதித்துப்பாரென்பர்
தோன்றும்பபோ தன்வடிவென்பர்
33. ஆபாதாரந்தனிலே அதிஷ்டான தேவதைகள்
ஆரிருக்கின்றார் பாரென்பர்
34, சகஸ்திர தளத்தின்மேலே சக்தியுடன் சங்கரனார்
தாமிருக்கின்றார் பாரென்பர்
35. உற்சாகத்தோடிருக்கும் உவமையற்ற ஞானியர்க்கு
(இந்த) உண்மை வழி தோன்றிடுமென்பர்
36. அறிவுகெட்ட அக்யானி அறிவுவந்து ஈடேற
ஆலயத்தில் ஈசனுண்டென்பர் [தீர்த்தம்
37. (பெரியவாள்) இருக்கின்றதே சிவஸ்தலம் தண்ணீரெல்லாம் புண்ய
பார்த்ததெல்லாம் மூர்த்திதானென்பர்
38. எத்தனை தான் சொன்னாலும் எல்லாம் ஒன்றுதானென்பர்
இன்னதென்று சொல்லாதென்பர்

பெட்டகத்திலுள்ள பூஷணமும்பூட்டி தொட்டிலுக்குள்ளே வளர [விட்டாள்;
மாயாதாரிக்கு ஏற்றவளை தானே ஜெகத்தில் நிறைந்தவளை ,
ஆராரோ வென்று பாட்டுப்பாடி தாலாட்ட அம்மன்கண் வளர்ந்தாள்

## அம்பிகையின் தாலாட்டு.

சிந்தைமகிழ்ந்து (சிவ) சங்கரியைத் தாலாட்ட.
கந்தனுக்கு முன்பிறந்த கற்பகமே முன்னடவீர்
பாருலகம் வாழ (ஹிம) பர்வதத்தின் மேலாக
தேவரிஷிகள் துதித்து மலர்சொரிய
ஏழுலகம்போற்ற ஹிமவான் மனங்குளிர

50. தாரணியில் வந்துதித்த (சிவ) சங்கரியைச் சொன்னார்
சித்தாதி யோகியரும் தேவர்களும் கண்டுகக்க
கொற்றவனார் பர்வதரின்குறைநீர்த்த குஞ்சலமோ
சங்கரியோ தாயோ சகலலோக சுந்தரியோ
வன்குறைகள் தீர்க்கும் மலையரசன் சீர்மகளோ
மேனையுட கண்மணியோ வேதாந்தத்தற்பொருளோ
ஆதி சிவனார் அரும்பாகம் பெற்றவளோ
ஜோதிச் சுடரொளியோ சுந்தரப் பூநாயகியோ
பஞ்சாக்ஷரப்பொருளோ பரிபூரணநாயகியோ
கங்கைதரித்து புலியுரித்து மேல்போர்த்து

55. சந்திரனைக்கூட சடைதரித்தார் தேவியரோ
எட்டெழுத்து மெய்ப்பொருளோ ஈஸ்வரனார் நாயகியோ
பக்தர் மனதில் உறையும் பரஞ்சுடரோ
சித்தாந்த யோகியர்கள் சிந்தைகுடிகொண்டவளோ
திரிபுரம் எரித்த சிவகாம சுந்தரியோ
காளி யெதிர்வந்து கனகசபை மண்டபத்தே
ஹாரஞ் சிலம்புகளும் அசைந்தாடுங் கிண்கிணியும்
கோல வளையும் கொத்தருகும் கொன்னைதும்பை
மாலைகளும் சூலகபாலம் ஒளிதிகழ
நீலகண்டமூர்த்தி நிறைந்த கொலுமண்டபத்தே

60. ஆலமுண்டார் பக்கல் அமர்ந்த சிவசுந்தரியோ
ஹிமவான் திருமகளோ ஏழுலக மீன்றவளோ
திருமுலைப்பாலாலே ஜகமெல்லாங் காத்தவளோ

இருநாழி நெல்கொண்டு எல்லாஉலகுதனை
பதினாலு லோகமும் படியளக்கும் பார்வதியோ
வெள்ளெருது மேலேறி வெள்ளொளியாய் நீறணிந்து
துள்ளுமான் கைபிடித்த சங்கரனார் தேவியரோ
ஆராரோ ஆராரோ ஆரிவரோ ஆராரோ
பாராளும் மேனையுட பாக்கியமே கண்வளராய்

## ஸ்ரீ பார்வதியம்மன்பால லீலை.

பக்ஷமுடனே தாராட்டி சீராட்டிச் பார்வதிதேவி வளர்ந்துவந்தாள்
65. பூர்வபக்ஷத்துச்சந்திரன் போலம்மன் பூரணமாக வளர்ந்துவந்தாள்
வளர்பிறையின் சந்திரன் போலம்மன் வடிவமைந்து வளர்ந்துவந்தாள்
மூன்றுமாஸத்திலம்மனவள் முகம்பார்த்துச் சிரிக்கலுற்றாள்
நான்காமாஸத்திலம்மனவள் நவரத்தினமயமான தொட்டிலிலே
கொஞ்சுங்கிளிபோல புன்சிரிப்புடனே கோமளரூபி அரிதுயின்றாள்
ஐந்தாமாஸத்திலம்மனவள் கொஞ்சிக்குலாவி முகம்பார்த்தாள்
ஆறுமாஸத்திலம்மனவள் ஆயிரக்கால்மணி மண்டபத்தில்
மாசில்பதக்கம் பளபளென்ன மாரால் நகர்ந்து விளையாடினாள்
ஏழாமாசத்திலம்மனவள் எங்குந்தவிழ்ந்து விளையாடினாள்
எட்டாமாஸத்திலம்மனவள் எட்டியடிவைத்துச் சித்தடியால்
70. தந்தைமகிழ தாயார்மகிழ தத்தடியிட்டு விளையாடினாள்
ஒன்பதாமாஸத்திலம்மனவள் ஓடிநடந்து விளையாடினாள்
பத்தாமாஸத்திலம்மனவள் பாங்காய்க்கைகளை யாட்டிக்கொண்டு
தாராராமா காட்டிக்கொண்டு சந்திரன் காட்டி விளையாடினாள்
இரண்டாம்வயது தன்னில் நேரிழையாள் பார்வதிதேவி
தண்டைசிலம்பு சலஞ்சலென்க தத்தடியிட்டு விளையாடினாள்
மூன்றும்வயதி லம்மனவள் முச்சிலெடுத்துக் கையிற்பிடித்து
சொர்ணமும் முத்தும் கொழித் தெடுத்துத் தோழியுடனே விளையாடினாள்
நாலாம்வயதி லம்மனவள் நாலைந்து தோழியுடன்கூடி [கொண்டு
பொன்னுங்கழக்கோடி யாடிக்கொண்டு பூப்போட்ட சித்தாடை கட்டிக்
75. பட்டுரவிக்கையும் போட்டுக்கொண்டு முத்தாபரணங்கள் பூட்டிக்
பர்வதர் மேனையும் கண்டுமகிழ பாங்கியருடன் விளையாடினாள் [கொண்டு
ஐந்தாம்வயதில் அம்மனவள் ஐந்தாறு தோழிமார்களுடனே
கஞ்சதள நேத்திரமுடையாள் மஞ்சுள புஷ்பம் பூட்டிக்கொண்டு
குழல்கத்தைகளும் தொங்கத்தொங்க கழுத்தி லாபரணங்கள் மின்ன
பந்துவிளையாடித் தோழிமார்களுடன் பால லீலைகளும் செய்துவந்தாள்

ஆறும்வயதில் அம்மனவள் மாயாதாரியைத்தான் நினைத்து
ஈஸ்வரர் மாதவம் பண்ணும்வனத்திலே ஈஸ்வரி தோழிமார்களுடனே
கூரார் வேல்விழி அம்மனவள் கொண்டுவந்து கோடிபுஷ்பங்களை
ஸ்வாமி பாதாரவிந்தத்திலே அம்மன் சொரிந்து பக்தியுடனுக

80. தேவிதலையை வணங்கிக் கொண்டு சிவனை அடிக்கடி பார்த்துக்கொண்டு
பாராரோ நம்மைச் சேராரோ போகாதோ இவர்கோபமெல்லாம்
வேறே ஒன்றையும் எண்ணுமல் முக்கண்ணர்மேல் மனதாகியம்மன்
தேவி யொடுக்க வணக்கத்துடன் சிவனை பூஜித்துக்கொண்டிருந்தாள்
ஆதியந்தமற்ற சங்கரரும் அறிந்து மறியாதுபோலிருந்தார்
பார்வதிதேவியைப் பாராமல் பராமுகமாகச் சிவனிருந்தார்.

## பரமசிவன் மன்மதனை தகித்தல்.

தாருகாஸுரன் சூரபத்மன் சிங்கமுகன் இம்சையினுல்
தேவலோகம் பறிகொடுத்து தேவர்களும் மெத்தத்தான் தவித்து
காடுமலைகள் எல்லாமலைந்து சோகத்துடன் விஜாரப்பட்டார்
சூலபாணி உமையுடனே கூடிக் கோபமெல்லாந் தான்தணிந்து
சூரசம்ஹார சுப்பிரமணியமூர்த்தி பூர்ணமாய் வந்தவதரித்தால்

85. தீரும் நம்முடைய கஷ்டவினையென்று தேவர்களெல்லாம் எண்ணமிட்டு
அதிரூபமுள்ள மன்மதனைத்தேவாள் ஆதிமூர்த்தியிட்மனுப்ப
தீரனுமந்த மன்மதனும் (இனிப்) போறகாலமென்றெண்ணுமல்
சூலபாணியின் முன்பாகவந்து பாதம்போற்றி நமஸ்கரித்து
தேகமெல்லாம் நடுநடுங்கக் காமன் மோகமானகணை தொடுத்தான்
தேவியப்போ சமயமென்றெண்ணி சொர்ணமாலையைக் கொண்டுவந்து
பிராணநாயகர் கையிற்கொடுக்க ஸ்வாமி வாங்கித் தரித்துக்கொண்டார்.
ஆசீர்வாதங்கள் பண்ணி சாம்பவர் அந்தரங்கமான பிரியத்துடன்
நாசமில்லாத வஸ்துவைக் கூடியே நேசமாயிருவென்றுரைத்தார்.
காமன்மேலே கோபத்துடன் சிவன கடுகடுத்த பார்வையுடன்

90. நெற்றியின் கண்ணைத்தான் திறந்து நீறுசெய்தாரந்த மன்மதனை
வேறே ஒரு வனந்தனிலே லோகநாதரும் போய் மறைந்தார்
நான்முக இந்திராதி தேவரெல்லாம் சாம்பலாய்ப்போன மன்மதனை
பிராணனுன ரதிதேவிக்கும் பூமியிலுள்ள பிரஜைகளுக்கும்
அரூபத்துடனே சுகிப்பாயென்று ஆசீர்வாதங்கள் பண்ணினுர்
தேவி சுந்தரி நாயகியம்மனும் மோசம்வந்ததே என்று சொல்லி
சோகமோக விசாரத்துடன் சில தோழிமார்களைக் கூட்டிக்கொண்டு
பூர்ணமான பலங்கள் தரும்நல்ல புண்ணிய தீர்த்தங்கள் ஆடிவிட்டு

வாராரிந்தத் தபங்களுக்கு இது போராதென்றம்மன் எண்ணிக்கொண்டு
நீராகாரமும் நித்திரையும் விட்டு சீத உஷ்ணமெல்லாம் தான்சகித்து
95. நீலகண்டரைச் சிந்தையில் ஸ்மரித்து நித்திய கல்யாணி தபசிருந்தாள்.

## பரமசிவம் கிழக்கோலத்துடன் தோன்றி அம்பிகையின் மனதைச் சோதித்தல்.

மன்மத ஹாரியும் அம்மனுடைய மனதைச் சோதிக்கவேணுமென்று
நன்மையை வேண்டிய அம்மனிடம் நடுக்கல் கிழவன்போல வந்தார்
கொம்பில் பழுத்த பழம்போல கோவப்பழத்தின் நிறம்போல
அன்புள்ளபேர்க்கு தனம்போல ஆதித்தனுட ஒளிபோல
தும்பைப்பூபோல நரைத்ததலையும் தோளிலேதூக்கின சஞ்சிகையும்
தம்பலச்சாறு வடியவடிய தளர்ந்து தொங்கிய புருவமும்
சுழித்துவாங்கும் மேல்மூச்சும் சோர்ந்த நடையும் இருமலும்
தனித்துத்துணையும் இல்லாமல் தம்பட்டம் கேளாத காதுடனே
கங்கணங்கையில் தரித்துக்கொண்டுநல்ல மங்களவாக்கியம் சொல்லிக்
கொண்டு

100. எங்கே போராய் பெண்ணே எங்கேபோராய் புங்கமரத்தின் நிழலோடே
எந்தனுக்கிப்போது பெண்சாதி இல்லை கன்னியைக் கல்யாணம்

வந்தவழியிலே உன்னைக் கண்டேன் தள்ளாடத்தள்ளாட ஓடிவந்தேன்
உத்தனழகைக் கண்டபின் எனக்குப் பின்னே போகவும் கால்வருமோ
எங்கே நீ ஓடி ஒளித்தாலும் அங்கெல்லா முன்னுடன் கூட இருப்பேன்
உன்னை இனிவிடப் போறதில்லை இப்போ எந்தனுக்கு மாலைசூட்டிவிடு
என்னைத் தவிறவும் இந்த உலகத்தில் உனக்கேற்ற நாயகரைக் காணேன்
நில்லு பெண்ணே யங்கே நில்லு பெண்ணே என்று அள்ளுகிழவனுஞ்
சொல்லலுமே
கண்டு கல்யாணியும் கண்சிவந்து காலகெதியோ இதுவுமென்று
எட்டாதவனைக் காட்டிலே இப்போ ஏதடிதோழி இது பழியோ
105. துஷ்டனான கிழவனிப்போ சொன்னவார்த்தையைக் கேளுங்கோடி
ஏதடிஏதடி ஆச்சரியம் எங்கேகிடந்த கிழவனடி
தோதகமே இங்கு ஆடுகிறானிவன் சுத்தப்பயித்தியக்காரனடி
வாயினில் வாராதவார்த்தைகளைச்சொல்லி வந்தொருஜாமமாய்ப்புலம்புகிறான்
ஆரடி உத்தாரம் சொல்வாரிவனுக்கு அந்தரமான காட்டினில்
காரணமோ கதையோ புராணமோ பாரதமோ படாப்பழியோ
காலஞ்சென்ற கிழவனுக்குக்கல்யாணமும் வேணுமோடி

வயதுசென்ற கிழவனுக்கு வாழ்க்கைப்படவும் வேணுமோடி [கொண்டு
மல்லிகைமாலையைப் போட்டுக்கொண்டு மாப்பிள்ளைக் கோலமுஞ் செய்து
மன்னவனம்மான் தோளில்மேலேறி நீ மாலையிடவுந்தான் மாட்டுவேயோ
110. காலினிற்பாலைத் தெளித்துக்கொண்டு கன்னியூஞ்சலு மாடிவிட்டு
பச்சைப்பொடியுஞ் சொரியட்டும்போது பந்தலிலுன்னைக் கண்டவர்கள்
உற்றாருறவார்க ளத்தனைபேர்களும் உதட்டைமடித்துன்னை நாப்பாளோ
போடா போடா கிழவா நீ போக்கிடங்கெட்ட கிழவா நீ
வீடுபோ வென்கிற வேளையிலே உன்னை காடுவரச்சொல்லுங் காலத்திலே
நாடியே இப்போ தென்னைக்குறித்து நடுக்கல் கிழவாதொடராதே
அஞ்சுவயதுக் குழந்தையுடன் நஞ்சுண்டவன்போல் மயங்காதே
இங்கே வந்தென்னைத் தொடருவதை எங்கள் பர்வதராஜர்கண்டால்
உன் தலைக்காக் கினைவந்து விடும் உனக்குப் பின்பலமாக ஒருவரில்லை
என்னுட வார்த்தையைக் கேட்டுக்கொண்டு உன் தலையைத் தப்பவைத்துக் கொண்டு

115. பின்னே மலங்கமுழியாமல் பேய்க்கிழவா ஓடுமென்று சொன்னாள்.
ஓடுமென்றம்மன் சொல்லலுமே அந்த நீலகண்டர் சிரித்துக்கொண்டு
எத்தனை சொல்லித் தடுத்தாலும் ஈசர் குறுக்கே மறைத்துக்கொண்டு
(உன்) சித்தத்தில் வைத்த கணவனை எனக்குச் சற்றே உரைத்தாலாகாதோ
அத்தைக் கேட்டந்த பார்வதியும் ஆச்சரியமோ இதுவுமென்று
உத்தார மிவர்க்குச் சொல்லாதிருந்தால் உற்றார் உறவார்க்கு ஏச்சாகும்
உத்தாரம் கல்லெறிந்தாப்போலே உத்தண்டமாக உரைக்கலுற்றாள்
கேளடா நீ நரைத்தலையா இப்போ கேடுபுத்தி நினைத்தவனே
வேரடா இதுபாவமரத்துக்கு வெட்டிவார்த்தைகள் சொல்லாதே
கோடி சூரியன் உதித்தாப்போல் என் கோமளரூப சங்கரரை

120. நாடிமனதில் வரித்திருக்கும் என்னை ஓடிவந்து நீ மறிக்காதே.
தொண்டு கிழவனிதைக் கேட்டு தொந்திகுலுங்கச் சிரித்துக்கொண்டு
குண்டலங்காதில் குலுங்கவே கூனிக்கொண்டு தடி ஊணிக்கொண்டு
ஈழல் இருமலும் நெஞ்சையடைக்க இருமி எங்கிலுந் துப்பிக் கொண்டு
தேவிமனதைச் சோதிக்கவென்றே சிவனுமப்போ எடுத்துரைப்பார்
ஏளிதப்பட்டவளே அசடே எங்கேகிடந்தவன் நோக்குவந்தான்
கானைக்குப்புல் அறுக்கவேணும் அந்தக் காமரூபிக்கு வாழ்க்கைப்பட்டால்
சோளி கையில்பிடித்துக்கொண்டு தொண்டுவேலைகள் செய்துகொண்டு
காஷாயவஸ்திரம் தரித்துக்கொண்டு கப்பரைகைதனில் ஏந்திக்கொண்டு
சேமகலத்தை யடித்துக்கொண்டு தெருத்தெருவாயிரந்து கொண்டு
125. நாளைக்குஎன்செய்யப்போறேமென்று அறுபது நாழியுமிரந்துகொண்டு

வீட்டுக்குவீடு இரக்கவென் றிருந்தால் (உன்) விதியைத்தானுந்தொலைக்கப் [போமோ

நாட்டிலே வேறிடத்திலே (உனக்கு) நல்ல கணவன்கிடையாதோ
தாயில்லை பெற்றதகப்பனில்லை தம்பிதமையனொருவரில்லை
பாயில்லை நல்லபடுக்கையில்லை பால்கறக்கப்பசுவுமில்லை
வெங்கலமில்லைவிளக்குமில்லை மங்கிலியத்துக்குவகையுமில்லை
குடிக்கப்பாத்திரமொன்றுமில்லை ஒருபடிவடிக்கவும் ஏனமில்லை
அங்கம்மூடத்துணியுமில்லை சற்சங்ககதியில்லை சிரவணமில்லை
இரங்கிதமில்லை தரித்திரக்கடலுக்குக் கங்குமில்லைகரையுமில்லை
பங்குமில்லையொரு இடத்திலும் பொங்கித்தின்க நிழலுமில்லை

130. பணமுமில்லை ஒத்தைவிருஷபத்தில் பூணக்கவேறுஎருதுமில்லை
பாம்பைஉடம்பில்பூணுவன் பாடிக்கொண்டேகூத்தாடுவன்
சாம்பலைமேனியில்பூசுவன் ஜாதிஎனக்கு ஏதுஎன்பன்
புலித்தோலை உடுத்திக்கொண்டு பூதஞ்சிக் காரியஞ்செய்துகொண்டு
ஆனைத்தோலையும்போர்த்துக்கொண்டு ஆகாதவேலைகள்செய்துகொண்டு
பூனைபோல இருந்துகொண்டு பூமிகளெல்லாம் நிறைந்திருப்பன்
அஸ்திமாலைதரித்துக்கொண்டு அன்புடனேபூஜைபண்ணிக்கொண்டு
நெற்றியிலேகுறுக்கிட்டுக்கொண்டு நேமத்துடன் இருந்துகொண்டு
பாதக்குறட்டின்மேலேறிக்கொண்டு பாடிக்கொண்டுஎங்குமாடிக்கொண்டு
காதிலே செம்புக்கடுக்கனிட்டுகையிலேமானைப்பிடித்துக்கொண்டு [கொண்டு

131. தோளிலேபையைப்போட்டுக் கொண்டு தந்தினப்பாட்டைப்பாடிக்
குருபாதம் நினைத்துக்கொண்டு குங்குமப்பொட்டையுமிட்டுக்கொண்டு
அரகரசிவ வென்றுசொல்லித் தர்மபிட்சை எடுத்துக்கொண்டு
இப்படி எல்லாம் திரிந்து அலைந்து இரந்துபிட்சை புஜித்துக்கொண்டு
உப்புக்கும் உதவாதவன் அசடன் ஒப்பாவனோ உனக்கிணையோ
ஒப்பில்லாதவன் உன்கணவன் பம்பரம்போலே அலைகிறவன்
காலைத்தலையை வலித்தாக்கால் கண்கரித்தமனுஷ்யருண்டோ
கூலிகொடுத்திடக்காசு முண்டோ கொன்றைப்பூவைத்துமுடிப்பாருண்டோ
காலைவேளையில் தயிரும் பழையதும் தாலம்வைத்து இடுவாருண்டோ
நீலவிழிக்கு மையிடுவாருண்டோ நீலவேணி முடிப்பாருண்டோ [மென்றுய்

135. இப்படிப்பட்ட தரித்திரக்கடலுக்கு எப்படி வாழ்கைப் படுவோ
...டகுமுண்டுபணமுமுண்டு (எனக்கு) தங்கக்கட்டிகள் வேணதுண்டு
...ாக்யமுண்டுபலமுமுண்டு போகபாக்கியங்களும் வேணதுண்டு
...ட்டாடைகளும்வேணதுண்டு பணிப்பெண்கள் வெகுபேருமுண்டு
உடைமை வேணதுபூணலாம் உடுபுடவைகள் பட்டாயுடுக்கலாம்

பிடிபிடியாய் பணத்தை எடுத்து உடற்பிறப்புக்குக் கொடுக்கலாம்
வேதம்வரும் சாஸ்திரங்கள்வரும் விதவிதமாய் வித்தைவரும்
இந்திரஜாலம்முதலான இஷ்டசித்திகளெனக்குவரும்
மாயையெனக்குவசமாவள் மாயைக்குநான்வசமாவதில்லை
பத்துத்தரமாய் உனக்குச் சொன்னேன் பரமேசர் ஆசையைவிட்
140. இஷ்டமான ஆசையுடனே எனக்கு மாலையைப்போட்டுவிடு

## பரமசிவத்தின் மகிமைகளை பார்வதி தேவி எடுத்துரைத்தல்.

தத்துப்பித்தென் றுகிழவனுரைத்திட சங்கரிநாராயணிகேட்டு
(தன்) சித்தத்தையும் திடப்படுத்தி சிவசங்கரரைமனதிலெண்ணி
எத்தையடாவந்துபேத்துகிறாய் எங்கள் சிவன்மேலே நிந்தனையாய்
மற்றொருவர்வந்து சொல்லிஇருந்தால் வாங்கி வைப்பேன் அவர் தலையை
விட்டேன்வைதீகரானதினால் வயது சென்றகிழவரென்றே
எட்டப்படாதமகிமையுள்ள (எங்கள்) ஈசர்மகிமையைச்சொல்லவென்றால்
சப்தரிஷிகளுந்தாமறியார் சேஷசாயியும் சொல்லமாட்டார்
சற்றேனெனக்குத்தெரிந்தமட்டும் சொல்லுவேன்கேளடாபேய்க்கிழவா
பட்டிலேயுள்ள சிவப்புமன்று(சுவாமி) பாலிலேயுள்ளவெளுப்புமன்று
145. துஷ்டர்மனதுக்கறுப்புமன்று சூர்யஉதயத்தின் காந்தியன்று
கட்டையோநெட்டையோமட்டமோவென்று கண்டபேர்கள் ஒருவரில்லை
வெட்டவெளியாய் நிறைந்தபிரமம் விசுவமெல்லாந்தானே ஆனவர்க்கு
ஸ்தூலமோ அல்லது சூட்சுமமோவென்றுசொல்ல ஒருவரால் ஆகாது
பெற்றோர் ஒருவர்க்குப்பிள்ளைஎன்றால் வஸ்துவிலேஇரண்டுண்டோடா
ஒக்கப்பிறந்த பிறப்புஎன்றால் ஒன்றுதானே இரண்டாகுமோடா
தாயுந்தகப்பனு மற்றுலென்ன தானேஜகத்தில் நிறைந்தவர்க்கு
வாயும்வயிறு மிருந்தாலென்ன வாக்குக்கு அப்புறப்பட்டவர்க்கு
கச்சையரையில்தரித்தாலென்ன நிச்சலனுகி இருந்தாலென்ன
கந்தையரையில் தரித்தாலென்ன கனகவஸ்திரம் உடுத்தாலென்ன
150. புலித் தோலைஉடுத்தாலென்ன பூஷணம் நாகத்தைப்பூண்டாலென்ன
மச்சிலிருந்துபுஜித்தாலென்ன பிட்சையிரந்துகுடித்தாலென்ன
சாம்பலைத்தான்பூசிக்கொண்டாலென்ன சந்தனம்பூசிமணத்தாலென்ன
உன்மத்தனுகித்திரிந்தாலென்ன மன்மதன்போலேஇருந்தாலென்ன
கட்டிலின்மேலே படுத்தாலென்ன கட்டையுறுத்தக் கிடந்தாலென்ன
எப்போதும் பரிபூரணராய் எங்குமாகி நிறைந்தவர்க்கு

கப்பரையைக்கையிலேந்திக் கொண்டு கண்டெடமெங்குந் திரிந்தாலென்ன
அண்டங்களெல்லாம் வயிற்றுக்குள்ளே அனேகங்கோடி தரித்தவர்க்கு
தலைமுண்டங்களைக்கட்டிக் கண்டந்தன்னில் மாலை யாகத்தரித்தவர்க்கு
கந்தர்ப்பன்போல அழகருக்கு கல்பவர்க ளரைப்பெற்றவர்க்கு
155. அந்தமும் ஆதியுமற்றவர்க்கு மூந்திருக்கும் வியர்பகர்க்கு
முத்துஇசைத்தமாலைக்கும் அஸ்திமாலைக்கும் பேதமென்ன
இந்திராதி தேவரால்போற்றுந்தேவருக்கு சுந்தரமூர்ந்திக்குச் சிந்தைஎன்ன
சீத உஷ்ணமான துக்கசுகங்களும் சற்றும் பற்றில்லாத வஸ்துவுக்கு
வாசனை ஏதொன்றுமற்றவர்க்குவாங்கிப்புஜித்தால் குற்றமென்ன
நித்தியானந்தசொரூபருக்கு நிர்மலமாகிய வஸ்துவுக்கு
பத்தரைமாற்றுத் தங்கத்திற்கு எங்கும்பரந்தவருக்கேது செய்தாலென்ன
ஏகராகிஇருந்துகொண்டு ஈஷணை மூன்றுமறுத்தவர்க்கு
ஆதாரமாகி ஜெகத்திற்கெல்லாம் ஆனைமுகவரைப் பெற்றவர்க்கு
இலாபாலாபமில்லாதவர்க்கு பாபமில்லாத திகம்பரர்க்கு
60. ஆனந்தத்தாண்டவம் அற்புதமாகவே ஆடினதாலே குறைச்சலென்ன
இப்படியாகக் கிழவரண்டை ஈஸ்பரியாளுந் துதிக்கலுமே

---

## சாம்பமூர்த்தி நிஜரூபத்துடன் தோன்றிதேவிக்குத்தன் முத்திரை மோதிரமளித்தல்.

கர்ப்பூரமேனியர் கேட்டுமகிழ்ந்து காத்துரக்ஷித்திடவேணுமென்று
இங்கிதமாகிய சங்கரிதேவியும் ஏக்கமடைந்து வருந்துவதை
அந்தரங்கமான சாம்பமூர்த்தியும் ஆபத்துவேளையில் காக்கவென்றே
கோடிசூரியன் உதித்திட்டாப்போல கோமளரூபமெடுத்தவரும்
வீபூதி ருத்திராட்சமாலைகளும் மேனியில் மாணிக்கப்பூஷணமும்
செந்தாமரைப்பூ முகத்திலே சந்தனப்பொட்டையு மிட்டுக்கொண்டு
கழுத்தில்ரொம்பப் பதக்கம்சரப்பளி கண்டசரமும் பூட்டிக்கொண்டு
வாடாதபுஷ்பமும் சூட்டிக்கொண்டு மானும்மழுவும் தரித்துக்கொண்டு
165. முப்பத்துமுக்கோடி தேவர்களும் புஷ்பவருஷங்கள் தான்சொரிய
நாற்பத்தெண்ணாயிரத்தெட்டு ரிஷிகளும் நால்வேதஞ்சொல்லிஸ் தோத்தரி
காளர் முதலான பூதகணங்களும் காவலாகவே சூழ்ந்துவர [க்க
ஸுப்பிரகாச ரிஷபத்தின்மேலே சுவாமி பிரத்தியக்ஷமாகவந்தார்
பாலவயசுப் பிள்ளையைப்போலவே பார்வதியண்டையில் தோன்றி நின்றார்
விருத்தரைப்போல வந்ததிவர்தாமோ விசுவபதியென்றறியாமல்
அபசாரம் பண்ணிவிட்டோமே என்று அம்மன்தலையை வணங்கிக்கொண்டு
சிவனைக்கண்டதும் சுந்தரிநாயகி தேகமெல்லாம் மயிர்கூச்செறிய

மலர்ந்தசொர்ணதளத்திலே கோடி மஹாதேவர்பாதத்திலே சொரிந்தாள்
சொரிந்து பக்தியுடனுகை அந்த தேவிவணங்கி நமஸ்கரித்தாள்
170. ஒப்பில்லாத வடிவழகி அவள் ஒடுக்கத்துடன் வணங்கிநின்றாள்
அக்குமில்லை யொருதொக்குமில்லை பக்கத்தில்நிற்க மனுஷ்யரில்லை
வெட்டவெளியான ஈசரிடத்திலே வெட்கத்துடனே விலகிநின்றாள்
ஹிமவான்மகளாரே எனக்கேற்றதொரு வடிவழகி
எனக்கு இப்போது மாலையிடவும் உனக்குச் சம்மதந்தானுமுண்டோ
உம்மைத்தவிற பர்த்தாவெனக்கு ஈரேழுலகத்தொருவரில்லை
இஷ்டப்படிக்கு மாலையிடுமென்று பட்சமாய் பார்வதி தானுரைத்தாள்
இருவரும் சம்மதம்பண்ணிக்கொண்டு ஏகமனதாயிருந்துகொண்டு
சக்கரபாணி முதலான அந்த சகலதேவ சபைநடுவே
மூக்குருணிப் பிள்ளையாரை வேண்டிச்சிவன் முத்திரைமோதிரங் கைக்
கொடுத்தார்

175. இன்றுஎட்டாநாளில் வருவோமென்றுசொல்லி ஈஸ்பரனும்போய்
கொத்தார் குழலியம்மனப்போ தன் ஒத்ததோழிமாருடன் கூட [மறைந்தார்
முத்தாபரணங்கள் சோதிவிட முத்திரைமோதிரமும் விளங்க
சங்கரனை நான்குறித்து செய்ததவம் பலித்ததிப்போ
மன திலெண்ணம் நிறைவேறிவந்தாளம்மன் அரண்மனைக்கு
துலக்கமுள்ள முத்தாரத்துடன் ஆபரணஞ்சோதிவிட
பார்த்தவுடன் மேனை பர்வதர் பரிபூரணமாய் மகிழ
அர்த்தகலையுமணிந்தபரமர் உத்தாரஞ்சொன்ன விஷயங்களை
உற்றார் உறவுடன் அம்மன்சொல்லப் பெற்றோர்கேட்டு மனமகிழ்ந்தாள்.

## பார்வதிதேவியின் கல்யாணவைபவம்.

அப்பாலந்தஹிமவானும் ஆனந்தசாகரத்திலமிழ்ந்து
180. அந்தப்புறம்விட்டு அரமனைவாசலில் ஆதரவாகவேவந்திருந்து
பட்டணமெங்கும் அலங்கரிக்கச்சொல்லி அட்டாளதேசமறியவைத்தார்
சீக்கிரமாகவே கல்யாண ஓலையைத் தீவிரமாக எழுதிவிட்டார்
அங்கவங்ககலிங்கர் முதலான ஐம்பத்தாறு தேசராஜர்களும்
சுந்தரிகல்யாணம் காணவேணுமென்றே எல்லோரும்வந்து இறங்கினார்கள்
அந்தந்தத்தேசஇராஜர்களுக்கு ஆதரவாகவிடு திவிட்டார்
எந்தெந்தவேளையில் ஏதெதுவேணுமோ அந்தப்படி எல்லாம்தான்கொடுத்
விச்வகர்மாவும்விதவிதமாய் விஸ்தாரமாக ஜனங்களுக்கு [தார்
கல்யாணமண்டபம் அற்புதமாகவே கல்பித்தாரந்த க்ஷணத்துக்குள்ளே
நாலுகால் மண்டபமத்தியிலேயே நாலுமூலைப்பட வேதிபோட்டு

185. நாலுபுறமுங்கொடுங்கையிறக்கியே நன்முகச்சுற்றிலும் பந்தலிட்டு
மல்லிகைமுல்லைமுதலான மாலையைச்சுற்றிலுந் தொங்கவிட்டாள்
மங்கிலியப்பெண்கள் கூடிக்கொண்டு அம்பிகையுடஅருகில்வந்து
சுந்தரி அம்புஜ பாதகரங்களில் செவக்கவேமருதாணியிட்டு
சந்தன தித்தைலத்தினால் தேவிக்கபிஷேகம்பண்ணிவைத்தாள் [தாள்
செண்பகமொட்டுடன்சிகைக்காய்நெல்லிசேத்தரைத்துஅபிஷேகஞ்செய்
கெங்காதீர்த்தத்தைத்தங்கங்குடத்திலே கொண்டுவந்து அபிஷேகம்பண்ணி
மங்களம்பாடியே அம்மனுக்கு மங்களஸ்நானமும் பண்ணிவைத்தாள்
தங்கத்துளிரானபீதாம்பரத்தினால் சங்கரிமேனியெங்கும் துடைத்தாள்
ஈரேழுலோகமெங்கும்விளங்கும் இந்திரவாளிப் பட்டுடுத்திவிட்டாள்
190. குந்தளநாயகிபூங்குழலை கோதிவாரித்துவலாற்றியவாள்
சொர்னத்தாலே அலங்காரம்பண்ணிச் சாயக்கொண்டைமுடித்துவிட்டாள்
மல்லிகைசெண்பகம்மந்தாரை மருக்கொழுந்துடன் பாதிரியும்
பாரிஜாதப்புஷ்பங்கள்சாத்தி பாங்காய்கஸ்தூரிப்பொட்டுமிட்டாள்
காதளவாய் நீண்டபுண்டரீ காக்ஷத்தில் கறுத்த அஞ்சனமெழுதினாள்
பார்வதிதேவிக்குப்பஞ்சமியின் அர்த்தசந்திரன் போலன்றநெற்றி தன்னில்
குங்குமத்தாலேகுறுக்குமிட்டு அதற்குமேலே விபூதியிட்டாள்
மங்களகஸ்தூரி வாஸனைகள் கந்தமும் தங்கத்தூளும் கலந்து
அம்புஜநாயகி தேவிக்குச்சந்தனக் காப்புச்சாத்தி அலங்கரித்தாள்
இந்திராணியும் அருந்ததியும் லெட்சுமிதேவிசரஸ்வதியும் [தாள்
195. சந்திரன்பக்கத்தில் நக்ஷத்திரம்போலே சுந்தரிதேவியைச் சூழ்ந்திருந்
மண்டலம்போலேவளைந்துகொண்டு மந்தஹாஸத்துடன் கூடிக்கொண்டு
சொர்னமாணிக்க சர்வாபரணத்தை சூரியகாந்திபோலேஎடுத்து
இந்துமுகத்தாள் ஈஸ்வரிதேவிக்கு இடைவெளிதேகத்திலன்றியிலே
அம்புஜபாதசிரஸுமட்டும் ஆபரணத்தால் அலங்கரித்தாள்
பாடகந்தண்டை சதங்கைகொலுஸு காலாழிபீலியுந்தானுமிட்டாள்
பட்டுக்குமேலே பதக்கம்சரப்பளி பட்டைஒட்டியாணமும் கட்டிவிட்டாள்
பட்டமும்சுட்டியும்கட்டி அதன்மேலே பாங்காய் சூரியப்பிரபையமைத்து
தாடகங்காதிலே தானமைத்து தங்கத்தினாலான கொப்புமிட்டாள் [டாள்
மூன்றரைக்கோடி வராகன்மதிப்புள்ள மூக்குத்தியை அம்மன்மூக்கிலிட்
200. நாலரைக்கோடி வராகன் மதிப்புள்ள ராவராக்கை யம்மன் காதிலிட் [டாள்
அஞ்சரைக்கோடி வராகன் விலையுள்ள அஸ்தகடகத்தைக் கையிலிட்டாள்
பத்தரைக்கோடி வராகன் விலையுள்ள பதக்கத்தையம்மன் மார்பிலிட்டாள்
வயிரஅட்டிகைதன்னுடனே வயிரப்பொட்டு மணி பூட்டிவிட்டாள்
முத்துமாலையும் கண்டிமாலையும் முழுக்காசு மாலைகளும்

அஸ்தகடகமும் முன்கைமுதாரியும் அடுக்குத்தோள்வளைவங்கியும்
பச்சைநாயகி அம்மனுக்கு (பெரும்) பவழமாலையும்பூட்டிவிட்டாள்
புஷ்பமாலைகள் பரிமளம்வீசப் பூட்டினாளம்மன்கழுத்திலே
மட்டில்லாதவடிவழகியாளை வாசுதேவர்சகோதரிக்கு
இஷ்டமாக அலங்கரித்து ஈசருக்கேத்தவளா என்றுஎண்ணி [தாள்
205. உற்றுற்றுப் பார்த்துஉகந்துகொண்டு அத்தனைபேர்களும்கூடியிருந்
எட்டாநாளின் உதயத்திலே ஏழைபங்காளி தயாநிதியும்
கட்டுக்கட்டாகஎல்லவருடனும் கல்யாணக்கோலத்துடன் கூட
மட்டில்லாத ரிஷிகளையும் முக்கோடி தேவர்களையும் அழைத்துக்கொண்டு
வெள்ளிரிஷபத்திலேறிக்கொண்டு வெங்கலபேரிமுழங்கிவர
வெள்ளிபோல வெளுத்த ரிஷபத்தின் கயிற்றைக்கையிலிழுத்துக்கொண்டு
வெள்ளிக்கிழமை உதயத்திலே வேதங்கள் ஓதிடும் வேளையிலே
வெள்ளிமலையில் இருந்துபுறப்பட்டு வேகத்துடனேவரும்போது
அண்டத்திலுள்ள ஜனங்களெல்லாம் ஆதிசிவனுடன் தான்வரவே
கனகமேரு உத்தரதேசம் கனம்அதிகமாய்த் தாழவே [தால்
210. சுந்தரமூர்த்தி அகஸ்தியரைப்பார்த்துதெக்ஷிணதேசநீர் சென்றிரு
மங்கையுடனே மணவாளக்கோலத்தை வந்துஉமக்கு நான் காட்டுகிறேன்
என்றுசொல்லி அகஸ்தியமுனியை ஈசருமங்கே அனுப்பிவிட்டு
அகஸ்தியரை அனுப்பியேஈசரும் ஆனந்தமாகவருகையிலே
அடிக்கும்மத்தளபேரிகைவாத்யமும் அண்டமெல்லாம் அதிரவே
எடுத்ததாரைநாகஸ்வரநாதம் ஈசர்வாரார் என்றோதவே

---

## பரமேசுரை பர்வதராஜா எதிர்கொண்டு அழைத்தல்

உரத்தவாத்தியங்கேட்டு ஹிமவான் ஹிருதயமும் பரிபூர்ணமாய்
சரக்கறைதன்னை திறந்து சொர்ணம் சங்கையில்லாமலேதான் எடுத்து
ஜெகத்பதிக்கு எதிராகவந்து திருவடியிலேசொரிந்தவர்
நானெடுத்தஜென்மம் சபலமய்யா என்குலம் ஈடேறிப் போச்சுதையா
215. தவத்திற்குப்பலன்கண்டேன்ஐயா சங்கரா நான் முக்தனானேன்ஐயா
ஸ்துதிக்க எனக்குவாராதய்யா என்சொல்லையேஸ்தோத்ரமாய் எண்ணு [மய்யா
அழைத்துக்கொண்டவர் கரத்தைப்பிடித்து அரண்மனைதனில்கூட்டிவந்தார்
நித்தியருக்கு அந்தப்புறத்திலே நிச்சியதாம்பூலந்தான் கொடுத்தார்
பத்மாஸனத்தில்பரமகல்யாணியை வைத்துக்கொண்டு மகாராஜர்
ஏற்றமுடன் ராஜாநாந்திசாந்திகள் ஈஸ்பரிதேவிக்குப்பண்ணிவைத்தார்
ஹஸ்தந்தன்னிலே காப்பிசைத்துஜங்கபாலிகையும்பர்த்தி

உச்சிதமாகமுளைக்கவென்று விரையும் பாலுடனேகலந்து
பத்தியாகவேஐந்துபெண்கள் வாரிப்பாலிகையுந்தெளிக்க
பத்தினிமாருக்குஉத்தமதானம் பர்வதராஜரும்தான்கொடுத்தார்
220. ஈஸ்வரரும்விருதம்பண்ணவென்றே ஏற்றமாகமணைக்கிருந்தார்
நெற்றியில்முக்கண்ணர்குட்டிக்கொண்டு நமஸ் கரித்துமணைக்கிருந்தார்
வசிஷ்டருடன்மகா ரிஷிகள்எல்லாம் வாத்தியாராய் அமைந்திருக்க
சரக்கறையின்சொர்னமெடுத்து ஸம்பாவனைகள் பண்ணினார்
அதிமிருதுவானபட்டெடுத்து ஆதிசிவனாரின் கண்ணைக்கட்டி
விருதம்பண்ணும்சமயமென்று மேனையம்மன் அறிந்துக்கொண்டு
மூவாயிரத்தொரு அப்பமெடுத்தாள் முன்னூறுசீப்புப்பழமெடுத்தாள்
பாலொருபாத்திரத்திலெடுத்தாள் பாங்குடனே நெய்யுந்தானெடுத்தாள்
தாம்பூலம் எலையடைக்காய் தட்டினில் ரொம்பஎடுத்துக்கொண்டாள் (டு
நான்குபெண்டுகளைச் சேர்த்துக்கொண்டு நன்றுகபூஷணம் பூட்டிக்கொண்
225. ஐந்து பெண்டுகளுங்கூடிக்கொண்டு ஆதரவாகவே அப்பம்வைத்தாள்
கண்ணுக்குமுன்னாக அப்பக்கூடையும் காணிக்கைகளும் வைக்கலுமே
அப்பக்கூடையில் கண்முழித்தாரந்த ஆதிபரமேசுவரரும்
பரமேசர்விருதம் பண்ணி பாங்குடனே எழுந்திருந்தார்
அப்பக்கூடைக்கு ஆயிரம்பொன்னும் ஆதிசிவனார் தான்கொடுத்தார்
மங்களஸ்நானமும் பண்ணிவந்தார் மஹாதேவமூர்த்தியும்
தங்கநிறம்பெற்ற இந்திரவாளிப்பட்டு சாம்பமூர்த்திதரித்துக்கொண்டார்
சுந்தரமூர்த்திக்குச்சொர்ண பூஷணமும் சந்தனக்காப்பும் அலங்கரித்தாள்
மாணிக்கக்குண்டலமிட்டுக்கொண்டு வா_தமாலையும் போட்டுக்கொண்டு
மானுமழுவும்தரித்துக்கொண்டு மாரிலேசந்தனம்பூசிக்கொண்டு [கொண்டு
230, பாதக்குறட்டைதரித்துக்கொண்டு பட்டுக்குடையும்பிடித்துக்
கிலுக்குத்தடியும் கையில்பிடித்து அரிசிமுடிந்துபோட்டுக்கொண்டு
ஆதரவாகவே கிரந்தமெடுத்து ஆதிசிவன்கோலம்புறப்பட்டார்
அடிக்கமத்தள பேரிகைவாத்தியம் அண்டமெல்லாமெட்டி முழங்கவே
பரதேசிக்கோலம் வருவதை பர்வதராஜரும் கண்டுகந்து
மணித்தேங்காய் கையில்கொண்டு மஹாதேவரருகில்வந்து
காசிக்குப்போகவும் வேண்டாம் கன்னிகையைநான் தருவேன்
வாருமைய்யாவென்றழைத்து மணித்தேங்காய் கைக்கொடுத்தார்
சந்தோஷமாய்த் தேங்காய்வாங்கி சாம்ப பரமேசுவரரும்
தர்மவாகனத்தின்மேலேறி கல்யாணமண்டபந்தன்னில்வந்தார்
235, ஹம்ஸவாகனத்தின்மேலேறி ஆதிபராசக்தி யம்மன்வந்தாள்
பார்வதியும் பரமசிவனுமாய் பந்தலில்நின்றிடும் காட்சிதன்னை
அண்டத்திலுள்ள ஜனங்களெல்லாம் அம்மையப்பரைக்காணவந்தார்.

சுந்தரி மாலையிடுவதைக்கண்டால் ஜீவன்முக்தராயப்போவோமென்று
அம்புஜக்கண்ணி அலங்காரமூர்த்தியைக் கண்டு ஆனந்தமாகியம்மன்
செண்பகமாலையும் சொர்ணமாலையும் சிவன்கழுத்தினில் சாத்தினாள்
வில்வமாலையும் தங்கமாலையும் தேவிக்குச்சிவன் சாற்றினார்
இப்படிமாலையை மூன்றுதரமிட்டு ரத்தினஊஞ்சலில் ஆடினார்
சப்தரிஷிகளும் நின்றுகொண்டு சந்தைவைத்தவர் ஊஞ்சல்பாட
நாரதரும் வீணைதனைமீட்டி நன்றாகப்பாடல்கள் பாடிநிற்க
240. பரமாநந்தமாகவேதங்கச் சங்கிலிகளுந்தானசைய
பரிமளங்கள் வீசியே புஷ்ப சரங்களு மெதுவாயசைய
பக்திஞானமென்னுமந்த பலகையின்மேலிருந்துகொண்டு
சுந்தரமூர்த்தியும் தேவியுமாய்ச் சேர்ந்து ஊஞ்சலில்விளங்கினாள்.

பங்காருமேருகிரி கால்களாக
வங்கமலை அதுக்கேற்ற விட்டமாக
பொங்காரவாஸுகியே கயிறதாக
பூவுலகேசெம்பொன்மணிப் பலகையாக
2. மங்களமாம் விண்ணுலகே பந்தலாக
வரிசையுடன் விஸ்வகர்மா செய்தமைத்த
சிங்காரப்பொன்னூஞ்சல் மீதிலேறி
தேவியுடனேசர் ஆடிலூஞ்சல்
3. பக்தனும் நாரதரும் வடந்தொட்டாட்ட
பார்வதிசகிகள்ஒரு வடந்தொட்டாட்ட
பங்கயனும்வாணியுமோர் வடந்தொட்டாட்ட
பார்வதியும் பதியுடனே ஆடிலூஞ்சல்
பர்வதராஜர்மகிழ ஆடிலூஞ்சல்

## லாலி

1. வஜ்ஜிரமணிவைத்திழைத்த ரத்னசபைதன்னிலே
மங்கைசுந்தரிதேவி உகந்தமனோஹரனே — லாலி
2. பச்சைஉமையவளுடனே பர்வதேசர்மகிழ
பக்தர்களும்ஸ்தோத்தரிக்க வீற்றிருக்கும் ஹரனே — லாலி
3. அச்சமறஎத்தியசையும் அன்பர்களைக்காக்கும்
ஆதிபரம்பொருளாகி அமர்ந்ததயாபரனே — லாலி
4. இச்சையுடன்நான்பாட எந்தனுக்கு அருள்வாய்
ஈச்வரியாளுடனூஞ்சல் இருந்திடும்சங்கரனே — லாலி

வஜ்ரமாணிக்க ஊஞ்சலாடி வாழிமங்களம் பாடியே
பார்வதியைபரமசிவன் இடப்பக்கந்தனில் நிறுத்திவைத்து
வாணிஇந்திராணியும் லக்ஷ்மியும் மகிமையுடைய மேனையும்
பாணியினாலே சுழற்றிக்கொட்டி பாலால் பாதந்தனை அலம்பி
மதுவர்க்கமுந்தான் கொடுத்து மங்களஹாரத்திக் காப்பெடுத்தாள்
பிடியன்னம்போட்டு ஹாரத்திசுற்றி பூமையைத் தொட்டொரு பொட்டு மிட்டாள்
245. கொலமணித்தேங்காய் பழங்கள் கொண்டுவந்தந்த மேனையாளும்
ஆதிசங்கரர் கரகமலத்தில் அன்புபெருகியே தான்கொடுத்தாள்
ஆதிமூர்த்தியும் கோமளரூபியை அண்டையிலே கிட்டவைத்துக்கொண்டு
லோகபாவனையாய் வீற்றுருந்தார் நிர்மல ஆனந்த மூர்த்தியும்
கீர்த்தியான சதாசிவருமந்தக் கல்யாண மங்களவேளையிலே
மூத்தப்பிள்ளைகணபதியை வேண்டிநெற்றியில் குட்டிக்கொண்டு
ஏத்தமாகவே ஆயிரந்தேங்காய் உடைத்துவைத்தார் கணபதிக்கு
பானகம்மோதகம் முப்பழம்வைத்து பூஜித்துநைவேத்தியம் பண்ணி
தீர்க்கமாக மணைக்கிருந்தாரப்போ தேவியுடனே சங்கரரும்
தேவர்நிறைந்த சபைநடுவே மேனையுடன் ஹிமவானும்
250. ஆதிசங்கரர் பாதகமலத்தை அன்புடன் கையால் பிடித்துக்கொண்டு
பூர்ணகங்காஜலத்தினால் பூஜித்துப்பாதங்களை அலம்பி
செய்த தபோபலத்தினால் தெளித்துக்கொண்டவாள் சிரஸிலே
ஆயிரங்கோடி பசுவுங்கன்றுடன் அனந்தங்கோடி சொர்ணங்களும்
சாதிமாணிக்கமுத்தும் பவழமும் சங்கையில்லாத பூமிகளும்
தேவிசங்கரி அம்மனையுமந்தச் சிவனுடைய கரந்தன்னிலே
தானம்பண்ணியே தாரைவார்த்து சச்சுதானந்தரைக் கண்டுகேந்தார்

## பரமேசர் தேவிக்கு மங்கிலியதாரணஞ்செய்தல்.

வாங்கிச்சங்கரர் தேவியை இடப்பாகந்தன்னிலே வைத்துக்கொண்டு
ஓமம்வளர்ந்துஜொலிக்கவே வேதகோஷங்கள் முழங்கவே
நான்முகவரும் உரைத்தமந்திரம் தானுங்கூட உரைத்துகொண்டு
255. நீலவேணியம்மனுக்கு அப்போ கூறைஓதியே தான்கொடுத்தார்
வாணிஇந்திராணியும் லக்ஷ்மியும் தேவிபார்வதியம்மனுக்கு
தேவிமருங்கில் கூறையுடித்தி சிவனருகில் கொணர்ந்துவிட்டாள்
பர்வதேசர்பொன்கோட்டையிலிருந்து தேவியைமடி மேல்வைத்துக்கொண்டு
நேர்த்தியானதோர் அம்மன் சிரஸினில் நுகத்தடிவைத்து மந்திரஞ்சொல்லி
பிரியமாகவே மங்கிலியந்தன்னை பெரியவாள்தொட்டு வாழ்த்திக்கொடுக்க
மேளமுடன் வெகுவாத்தியங்களும் வேதகோஷங்களுந்தான் முழங்க

மங்களம்பாடவே பெண்டுகளும் சுந்தரியம்மன் திருக்கழுத்தில்
தங்கப்பிரகாசத்திருமங்கிலியத்தை சாம்பமூர்த்திதிருக்கரத்தால்
சிவஸுந்தரிகண்டத்திலேதரித்து அண்டமெல்லாம் விளங்கின்றார்
260, பின்னாலிருந்து சரஸ்வதிதேவியும் பூர்ணமாக முடிந்துவிட்டாள்
முடிந்ததேவிக்குக் கோடிபொன் முக்கண்ணார் சன்மானஞ்செய்துவைத்தார்
மங்கைஸுந்தரிநாயகியை வாமபாகத்தில் வைத்திருந்தார்
அக்கினிவளர்த்து ஹோமங்கள்பண்ணி யக்ஞமூர்த்தியை திருப்திபண்ணி
அம்பிகையுடைய பாதாம்புஜத்தை அம்மியின்மேலே மூன்றுதரம்
தூக்கியே வைத்து சாம்பமூர்த்தியும் சுற்றிப்ரதட்சணம் பண்ணிவந்தார்
அம்பிகையுடைய திருக்கரத்தினில் ஆதிவிஷ்ணு பொரியுமிட்டார்
பொரியிட்டகைக்கு ரத்னகணையாழி பொருந்தவேயிட்டார் ஆதிசிவன்
அக்கினிவளர்த்து ஹோமங்கள்பண்ணி ஆசிர்வாதங்கள் ஆனபின்னே
வாணியும்லெக்ஷ்மிதேவியுமாய் மங்களஹாரத்திக் காப்பெடுத்தாள்
265, மலையரசன் ராஜாவுமப்போ மகாஜனங்களெல்லவர்க்கும்
பூரிதக்ஷிணைதான்கொடுத்து போஜனங்களும் பண்ணிவைத்தார்
ஆதிசிவனும்தேவியுடனே அன்பாகப்போஜனம்செய்திருந்தார்
அம்பிகையுடனேதோழிமார்களும் ஆதிசிவன் அருகில்வந்து
பக்தியுடனேவணங்கிகலங்கிடப் பராபரமூர்த்தியைத்தானழைத்தாள்

கௌரி கல்யாணம் வைபோகமே

1. உச்சிதமாம் பந்தலிலே
உயர்ந்த சிம்ஹாஸனத்தில்
உமையுடனே சங்கரனார்
உல்லாசமாய் இருந்தார் — கௌரி

2. கௌரிசமேதராய்க்
காக்ஷியளித்திடவே
கண்டுகந்து பர்வதரும்
தேவர்களும் தொழுதார் — கௌரி

3. அருந்ததியும் சரஸ்வதியும்
அனைவர்களும் கூடி
அம்பிகையாள் பார்வதிக்கு
மங்களங்கள் பாட — கௌரி

4. திமிதிமென்று பதினெட்டு
வாத்தியங்கள் முழங்க
தேவதாஸிகள் நடிக்க
தேவர்கள்மலர் சொரிய — கௌரி

5. பார்வதியாள் நலங்குமிட்டு
பரமேசர்தமக்கு
பக்தியுடன் வணங்கியம்மன்
பரிபூர்ணமடைந்தாள் — கௌளி

## நலங்குமேட்டு.

1. ஸ்ரீசம்போஜெயஜெயா ஸ்ரீகௌரீமனோகரா
பரமானந்தசாகரா பரமேச்வரா ஜெய

2. கோடிமன்மதரூபர் கோமளமாம்தேவியுடன்
கூடிவந்துநலங்கிடவே கூட்டிவந்தார்சகிஜனங்கள்

3. அலங்காரப்பந்தலிட்டு ஆணிப்பொன்னூஞ்சல்மணைபோட்டு
அம்பிகையும்சங்கரரும் அழகாகமணைக்கிருந்தாள்

4. பச்சைமஞ்சள் நலங்குமஞ்சள் பருப்புடனேஉப்பரிசி
சுட்டதொருஅப்பளமும் சொர்ணத்தட்டில் கொணர்ந்துவைத்தாள்

5. ஆதிநாதர்தேவியுடன் அன்புடனேநலங்குமிட்டு
பூரணருங்கௌரியுடன் பூலச்செண்டு ஆடலுற்றார்

## பூலச்செண்டு.

பந்தாடினார்பரமசிவனும் பர்வதராஜன் பெண்ணுடனே
பாங்கியர் கீதங்கள் பாடித்துதிக்கப் பலவிதவாத்தியமுழங்க [ட்
சங்கரமூர்த்தி பூச்செண்டையுமெடுத்துச் செந்தாமரைக்கையாலுரு
மங்கைசுந்தரியும் தன்கையால்எடுத்து மகதேவரிடத்தில் திருப்ப
சுந்தரி செண்டாட சந்தோஷமுங்கொண்டு பந்துஜனங்களும்மகிழ
அன்புடன் மேனையம்மனும் மகிழ்ந்து மங்களஹாரத்தி எடுத்தாள்

ப்ரவேசஹோமம் ஆனவுடன் பரமேசருமையுடனே
அருந்ததியைக்காட்டி நின்றார் ஆதிபரமேசுவரிக்கு
துருவனைக்கண்டீரோ சிவனே என்றாள் தேவி பார்வதியம்மனும்
நான்குநாளும் ஹோமம்பண்ணி நலங்குமிட்டுப் பொன்னூஞ்சலாடி

270. சிவனுமையுடன் பவனிவந்து சேஷஹோமம் முடிந்தபின்பு
ஐந்துநாட்கல்யாணம் ஆனபின்பு ஆதிபரமேச்வரரும்
கட்டுமுட்டாகவிருந்துபுஜித்து காவிச்சோமனும் கட்டிக்கொண்டு [கொண்டு
கூடைச்சாதமும் பருப்புத்தேங்காயும் குண்டோதரன்தலைமேல் வைத்துக்

வெள்ளிமலைவந்து சிங்காஸனத்திலே உல்லாசமாகவே வீற்றிருந்தார்
கைலாசகிரிதன்னிலே காளகண்டமூர்த்தி போயிருந்தார்
ஹிமோத்கிரிபர்வதத்தில் ஈஸ்பரிதேவி வளர்ந்துவந்தாள்

## அம்பிகை பெரியாளுஷி ஆகுதல்

பர்வதராஜரின் கன்னிகையும் பழையகாலப் பெருநிதிபோல்
பளபளத்தபவழக்கொடிபோலே பார்வதிதேவியும் தான்வளர்ந்தாள்
நீலமாமந்தவேணியிலே நிறையப்புஷ்பத்தைச் சூட்டிக்கொண்டு
275. விஸ்தாரமாமந்த நெற்றியிலே குச்சிலிட்பொட்டையுமிட்டுக்கொண்டு
கடைக்கண்சிவந்த விழியழகி கண்ணுக்கு அஞ்சனமிட்டுக்கொண்டு
பவழம்போலே நிறத்தழகி பாதத்தில் செம்பஞ்சுபோட்டுக்கொண்டு
அண்டகோடிஜனனியம்மன் ஆபரணம் ரொம்பப் பூட்டிக்கொண்டு
தண்டைபாடகஞ்சிலம்புடனே காலாழிபீலியும் இட்டுக்கொண்டு
குந்தளஓலையுடன் இருகாதிலும் குலுங்கஜிமிக்கியும் இட்டுக்கொண்டு
சந்திரமுருகும் ராவராக்கும் தளதளென்னத்தரித்துக்கொண்டு
அஸ்தகடகம் தரித்துக்கொண்டு அட்டிகைபதக்கம் பூட்டிக்கொண்டு
சிறுத்தகொடியிடையுக்குள்ளே (பள) பளத்தபட்டு முடித்திக்கொண்டு
கவிழ்த்ததங்கக்கலசம்போல பெருத்தகொங்கைள் நடுவிலே
280. அழுத்தமானதோர் முத்துமாலையை ஆசையுடனே தரித்துக்கொண்டு
சிற்றடி தன்னில் சிலம்பழகி சுற்றிமருதாணி இட்டுக்கொண்டு
அந்தமுமாதியு மற்றசிவனைச் சிந்தையிற்குள்ளே நினைத்துக்கொண்டு
வாழைமரம்போல் தொடையுடையாள் மதயானைபோல நடையுடையாள்
மாதளம்பூவைப்போல் மேனியுள்ளாள் மகிழ்ந்திருக்கின்றவேளையிலே
பருவமாகியகாலத்திலே பதினைந்துநாழிகைவேளையிலே
பொருத்தமான தினத்திலே போஜனங்களும் ஆனபின்பு
பெருத்தபெண்டுகள் சம்மதமாகவே புழக்கடையில் விலகிநின்றாள்
ஈச்வரியுடைய தோழிமார்கள் இச்சையுடன் விளையாடும்போது
பார்வதியம்மன் திரண்டாளென்று பரிகாஸமாகவே தோழிசொன்னாள்
285. மேனையம்மாளும் ஓடிவந்து மெய்யோ பொய்யோ வென்றாளாம்
அருந்ததியம்மன் ஓடிவந்து ஆமடிதோழி என்றாளாம்
இந்திராணியம்மன் ஓடிவந்து எப்போவென்று கேட்டாளாம்
வெட்கத்துடனே அம்மனப்போ பெற்றதாயின் அருகிருந்தாள்
வாணிஇந்திராணி லெக்ஷ்மியும் வாசல்மெழுகியே கோலமிட்டாள்

## ஸ்ரீபார்வதி சகிகள் சோபனம் பாடுதல்.

கொத்துடனே பழவகையும் குலையுடனேதேங்காயும்வைத்து
கட்டுடனேவெற்றிலையும் காசுக்கட்டிகளிப்பாக்கும்
கற்கண்டும்சர்க்கரையுடனே கனகத்தட்டில் எடுத்துவைத்து
குத்திவிளக்கையுமேற்றிவைத்து கோலஞ்சதுரமாய்நான்போட்டு
நிறைநாழியில்முத்தும்வைத்து நேராகவேலக்ஷம் பொன்னும்வைத்தாள் [ட்டு
290. பத்துக்கலநெல்லுங் கொட்டிப்பரப்பி பட்டுப்பாயை அதின்மேலேபோ
பட்டுபாயின்மேலேபார்வதிதேவி பாங்காகவேமணைக்கிருந்தாள்
அருந்ததியொருதலைவனும் அச்சுதர்நாயகி தலைவனும்
இந்திராணியொருதலைவனும் சந்திரன் நாயகிதலைவனும்
சரஸ்வதியொரு தலைவனும் சம்மந்திப் பெண்ணொரு தலைவனும்
சாவித்திரியொருதலைவனும் சாயாதேவியொருதலை வனும்
எட்டுத்தலைவானுங் கூடிக்கொண்டு ஏகமாகவளைந்துகொண்டு
கொட்டிக்கொண்டுபாதச்சலங்கைகள் குலுங்கநன்றாய் குதித்துக்கொண்டு
பார்வதிதேவிக்குச்சோபனம்சோபனம் பங்கஜவல்லிக்கு சோபனம்சோபனம்
நீலவேணிக்குச்சோபனம்சோபனம்நித்தியகல்யாணிக்குசோபனம்சோபனம்
295. சாம்பவிக்குச்சோபனம்சோபனம் ச்யாமளரூபிக்குசோபனம்சோபனம்
தாக்ஷாயணிக்குச்சோபனம் சோபனம்சங்கரர்தேவிக்குசோபனம்சோபனம் [னம்
ருத்ரபாரிக்குச்சோபனம் சோபனம்ஹிமவத்புத்திரிக்குச்சோபனம் சோப
ஜகத்துக்கெல்லாமதிபதியாகிய ஸத்தாதேவிக்குச் சோபனம்சோபனம்
காலத்ரயத்தை வெகுவிதமாய் கற்பித்தமாய்கைக்குச் சோபனம்சோபனம்
தாபத்ரயத்தைத் தன்பக்தாளுக்குத்தள்ளினதேவிக்குச்சோபனம்சோபனம்
அன்னைவயிற்றில்தரியாதே ஓரன்னைகர்ப்பத்தில் பிறவாதே
பூமியில்வந்து பிறவாமல் இந்தப்பூதங்களைப்போல் இறவாமல்
மானுபிமானங்களில்லாத அந்தக்சாமரூபிக்குச் சோபனம் சோபனம்
நாற்பத்துமுக்கோணச்சக்கரத்தில் வந்த நர்தரூபிக்கு சோபனம் சோபனம்
300. முப்பத்துமுக்கோடி தேவர்தொழுகின்ற மூலரூபிக்கு சோபனம் (சோபனம்
நாலுமுகவர் கலக்கந்தவிர்த்திட்ட (ஸ்ரீமன்) நாராயணிக்குச்சோபனம் சோப
கிளியைக்கையில்தரித்திருக்கும் கின்னரரூபிக்குச் சோபனம்சோபனம் [னம்
நீலகண்டரின் பட்டமகிஷிக்கு நீலவேணிக்குச் சோபனம்சோபனம்
ஒப்பற்றதேவியைவைத்துக்கொண்டு (பெண்கள்) ஓங்கிஓங்கிகையைகொட்டி கொண்டு
இப்படிச்சோபனம் பாடிக்கொண்டுபெண்கள் ஈச்வரியுடனிருக்கும்போது

## பர்வதராஜா பரமேசருக்குச் சோபனஓலை அனுப்புத

(கன்யலார சோபனமே காந்துலார சோபனமே
என்ற பல்லவிக்கு சந்தையாசப் பாடலாம்.)

நித்தியகல்யாணி யம்மன் ருதுவானசோபனத்தை
பக்தியில் பெரிதான பர்வதராஜரும் தானறிந்து
நித்தியானந்தம் அடைந்து முக்திநமக்கு உண்டென்று
அச்சுதரைத் தானனுப்பி ஆதிசிவ சங்கரர்க்கு

305. செப்பிவைக்க வேணுமிந்த சோபனத்தை என்றுஎண்ணி
இரத்னமணி மண்டபத்தில் நிறைந்தசபையின் நடுவில்
பொன்னுமணி ஆசனத்தில் பூரிப்புடன் இருந்துக்கொண்டு
சுப்பிரகாச மானதொரு தங்கப்பொன் ஓலைதன்னில்
வஜ்ஜிர மணிக் குண்டுபதித்தமணி எழுத்தாணிகைப்பிடித்து
சத்குருவே சங்கரரே சரணம் நமஸ்காரமையா
இரத்னமணிநீலகண்டா நித்திய கல்யாணமையா
பொற்கொடியாள் பார்வதிதேவி பூமலர்ந்தாள் சோபனம்
பக்தியுள்ள சுந்தரியை பொட்டெனவே சேருமையா
சுப்பிரமணியர் உங்களுக்கு புத்திரராய் வந்திடுவர்

310. (என்று) லக்கனையாய் வாசகத்தை மங்களஓலைதன்னில் எழுதி
கஸ்தூரிமஞ்சளிட்டு கல்லியாண ஓலைதன்னில்
விஷ்ணுவின் சஞ்சிகையில் வைத்தார்மனோகரமாய்
முத்துக்கோபால கிருஷ்ணன் வேதமுனிவர் தங்களுடன்
பொட்டெனவே வந்துவிட்டார் பர்வத கைலாஸத்தில்
இலக்கமற்ற ரிஷிகளுடன் முக்கோடிதேவர்களும்
சுற்றிநிறைய வீற்றிருக்கும் சோமசுந்தர மூர்த்தியை
பச்சைவர்ணர் கிட்டவந்து பரமேச்வரர் பாதத்திலே
பொற்றளத்தால் பூஜித்து போற்றி நமஸ்கரித்தார்
அச்சுதமூர்த்தியைச் சங்கரர் ஆசீர்வாதங்கள் பண்ணி

315 முத்தாசனத்திலே மைத்துனரை வைத்திருந்தார்
சுப்பிர காசமானதொரு தங்கச்சுருள் ஓலையை
அன்புடனே சங்கரரின் ஹஸ்தந்தனிலே கொடுத்தார்
வாங்கிச் சங்கரர் ஓலையின் வாசகத்தைப் பார்த்தவுடன்
அகப்பட்டார் மதன்பாணத்தில் அழுந்தினாரம்மன் மோகத்தில்
போட்டார் பார்வதிமேல்மனதை பின்னையொன்றுந் தோன்றாமல்

பார்த்தவுடன் ஆனந்தம் பரிபூர்ணமா யடைந்தார்
ஓட்டமாகவே தாளுேடி ஈச்வரியை இடத்துடைமேல்
தூக்கியெடுத்து வைத்துக்கொண்டு திருக்கனிவாயை முத்தமிட்டு
பார்த்து சுந்தரிவாழ்முகத்தை பவழம்போலும் அதரத்தை

320. கோர்த்த முத்துப்போல் பல்லொளியை குளிர்முழியுட மயக்கத்தை
கூட்டி நம்முகத்துடனே வைத்து மங்கையரை நம்ம மார்போடு
சேர்த்துக் கட்டியே ஈஸ்வரியுடன் வீற்றிருக்கவுங் காண்போமா
ஆச்சரியமான மோகத்தில் அழுத்தியேநம்மை மன்மதனும்
போட்டுபாணத்தால் பிளக்கிருன் தன் பிராணனுக்கானியைஎண்ணுதே
(இதைக்) கேட்டால்அச்சுதர் சிரிப்பரே கண்டபேர்நம்மை அசங்கதிப்பரே
(என்று) பேத்திக்கொண்டுமனதிற்குள்ளே பித்துக்கொண்டாப்போலே சிவ
நாளுமொரு யுகமுமாய் நாழிகை ஐந்நூறு வருஷமாய் [னும்
போதுமெப்போ கழியுமென்று பித்துக்கொண்டசிவன் காத்திருந்தார்
ஆதிமாலுக்கும்வேதமுனிவர்க்கும் அப்பியங்கஸ்நானமும் பண்ணிவைத்து

325. மணியிழைத்த மண்டபத்தில் வரிசையாகவே பந்திவைத்து
புத்தருக்கு நெய்யும் அன்னம்பருப்புடன் பொரிக்கரிகளும் ரஸத்துடன்
ஆயிரம் பணியாரவகையும் அமிர்தமான பாயஸமும்
கோடி பல பழவகைகளும் வாரிச்சொரிந்து மதுவுடன்
போஜனங்கள் பலவகையும் புஜித்துத் திருப்திகள் ஆனபின்பு
ஆஸனத்திலே வீற்றிருந்து ஆயாஸங்களும் தீர்ந்தபின்பு
சாந்துசந்தனம் புனுகுகஸ்தூரி குங்குமப்பூ கோரோசனையும்
கூட்டிக்கலந்து மணங்கள்வீசக் குளிரச்சந்தனம் பூசினுள்
சோபனஞ் சொல்லவந்தவாளுக்கு சொர்ணஞ் சங்கையில்லாமலே
வாரிச்சொரிந்து வெகுமானம்பண்ணி சாம்பமூர்த்தி அனுப்பிவைத்தார்

330. ஏறியேசிவன் வெள்ளிரிஷபத்தில் அண்டாதசேனையைக்கூட்டிக்கொ
ஏத்தமாகத் தானும வந்தாரந்த ஹிமத்பர்வத மனைதன்னில் (ண்டு
ஆதிசிவனை வீராஸனத்தில் அமர்த்தியே அந்தராஜாவும்
பூஜைகள்பண்ணி பக்தியுடன் பூரணருடனே வீற்றிருந்தார்
பார்வதிதேவி யிடமிருந்த பைங்கிளிமார்கள் எல்லவரும்
பூர்ணவடிவைக் கண்டவுடன் ஓடிவந்து வளைந்துகொண்டாள்
கொட்டிக்கொண்டு கையை பாதச்சலங்கை குலுங்கக் குதித்துப்பாடினுள்

வாதவூரடிகள் பக்திகண்டு வன்சிறை நீக்கவே எண்ணங்கொண்டு
ஊழல்நரிகளைதேய்த்துக் குதிரையாய் உச்சிதமாகக்கொடுத்தவரே
அம்மையார் பிட்டுக்கு ஆசைப்பட்டு அரைக்காசு கொடுக்க அவசமற்று
வஞ்சித் தவள் பிட்டை வாங்கித்தின்றுவிட்டு மண்ணைச்சுமந்து கழப்பி
[விட்டு
பொன்னும் பிரம்பினால் பாண்டியராஜாவின் கையினாலே அடிப்பட்டவரே
கீர்த்தனம்பாடின பக்தனுடைய மகத்தான ஆபத்தை நீக்கவென்று
பார்த்தொரு கட்டு வெறகைச்சுமந்து பாடி ஜயத்தைக்கொடுத்தவரே
வளைச்செட்டி வேஷமெடுத்துக்கொண்டு வயிறுவளர்த்திடவேணுமென்று
வளையைத்தூக்கித் தோளிலேபோட்டு மதுரைபட்டணவீதியிலே
370. அடுக்கிக்கோமுட்டிப் பெண்களுக்குவளை ஆனந்தமாகி மறைந்தவரே
இலச்ச வாய்க்குப் புசிக்கபக்ஷணம் மதுரமாயொன்று மில்லாமல்
நிஷித்தமாகிய வேடனெச்சிலை நித்தியமும்வாங்கிப் புஜித்தவரே
காளியுடன்கூட வாதுக்குத்தாண்டவம் ஆடமாட்டாமல் நீர் தோற்று
வாதுக்குத்தூக்கின பாதக்காலின் கூத்துக்குப்பணந்தருவரோ
பாக்கியம் ரொம்ப இருந்தசிவனும் பாகவதாள் கையிலேதோற்று
கூத்தையாடிக்கொண்டு கோலாஹலமாகப் பேத்திக்சொண்டவர் இருப்பரே
கூத்துக்குப்பணம் சம்பாதிப்பவர் (நம்ம) பாட்டுக்குப்பணந்தருவரோ
ஏத்தமாக இருந்திட்ட சங்கரர் கூத்தாடிவேஷந்தரித்துக்கொண்டு
கீர்த்தியான கனகசபையிலே கோவிந்த இந்திர நான்முகனும்
375. தீர்க்க தர்சியாம் சேஷமுனிவரும் தில்லையம்பலத்தி லிருக்க
பார்க்கவந்த பதஞ்சலி வியாக்ரர் பக்தியுடன்கூடி நிர்க்கின்றதை
கூட்டத்தையெல்லாங்கண்டுசதாசிவர் பார்த்துச்சிந்தையில் எண்ணிக்
[கொண்டு
ஆட்டத்தைக்கண்டு இத்தனைபேர்களும் ஆளுக்கொருபணந்தந்துவிட்டால்
பாக்கியம் மலையாகக் குவிந்திடும் என்றுபரமார்த்தமானசிவன்
போற்றும் பாதமும் சிவந்துவலிக்க புனுகுசந்தனம் கரையவே
சாற்றி சிரவில் இருந்த சந்திரன் வாடக் கங்கையும் தளம்பவே
வேர்த்துச்சொரிந்து முத்து முத்தாகவே விபூதிகளும்நனையவே
ஆட்டவேகத்தைப் பொருக்கமாட்டாமல் அஷ்டநாகமும் நெளியவே
கூத்துக்குக் கோலமாகத் தரித்திட்ட சிலம்பு கிண்கிணிமணிகளில்
380. தோட்டிலே ஒருசிலம்புதெறித்து விழுந்தது கூடத்தெரியாமல்
பார்த்தவர் முக்தி யடைய நிர்த்தனம் பண்ணினீர் அம்பலத்திலே
ஈஸ்வரருக்குப் பணங்களுண்டானால் அஸ்திமாலையை தரிப்பரோ
பூசு சந்தனம் புனுகு கஸ்தூரி வாஸனை யவர் அறிந்தாக்கே
சாம்பலைத் திருமேனி எங்கிலும் பூசிக்கொண்டவர் இருப்பரோ

புத்திரன் என்னுடன்கூட உண்ணுவிட்டால் அன்னம்புஜியேன் என்றவரே
பெற்றதெல்லாம் ஒருபிள்ளை ஸ்வாமி அறுத்துக்கறி சமைந்தாக்கிவிட்டேன்
350. அத்தனே நானென்ன செய்வேனென்று அப்போசிறுத்தொண்டர்
பக்தன்புலம்பும் பரிதாபங்கேட்டுசித்தமிரங்கியேநீருமப்போ [சொல்லலுமே
புத்திரன் பள்ளிக்கூடத்திலிருக்கிறான் போவழைத்துவா வென்றவரே
பக்தியுடனே பள்ளிக்கூடத்தி லிருந்த சீராளனைக்கூப்பிடவே
உச்சிதமாகவே பிள்ளைபிழைத்திட இஷ்டம்நிறைவேற்றி வைந்தவரே
பத்மாஸுரன் தபசைக்கண்டு பதறிவரத்தைக் கொடுத்துவிட்டு
தொட்டுப்பார்ப்பேன் சிவன்தலையை(என்று)தொடர்ந்து பிடித்தவன்ஓடிவார
பட்டுப்போகுமஸுரனைக்கண்டு பயந்துநடுங்கி விழித்துக்கொண்டு [கொண்டு
செத்துப்போகப் படாதென்று எண்ணி ஜெகத்தின் வனமெல்லாமோடிக்
ஒட்டிக்கொண்டு அந்த ஐவேலிக்காயிலே ஒளிந்துகொண்டு இருந்தவரே
355. (நீரும்) மறைந்தவுடன் வைகுண்டவாஸியும் மோகினிவேஷமெடுத்துக் கொண்டு
அஸுரனண்டைக்கு வரவச்சுதானந்தர் அதிரூபமான மோகினியாய்
மதிகெட்டஸுரன் மோகினியைப்பார்த்து வாரும்பெண்ணேசகியாகவென் [றான்
வாரும்பெண்ணே சகியாகவென்றவுடன் வைகுண்ட வாஸியுந்தான் கேட்டு
நித்திய கர்மத்தைப் பண்ணிமுடித்து நிர்மலமாக வாவென்றுசொன்னார்
கவிட்டுக்கோவிந்தன் சொன்னதறியாமல் காமாட்டியாகிய மூட அஸுரன்
மூழ்கி வெண்ணீறு முந்திவினைமுற்ற முடியின்மேல் கையைவைத்துக் [கொண்டான்
முடியின்மேல் கையை வைத்தவுடன் பிடிசாம்பலாக எரிந்துவிட்டான்
வரங்கொடுத்த மகாதேவர் சொற்படி வெடித்தவன் தலை நீறுச்சு
பத்மாஸுரனும் பட்டுவிழுந்திட அச்சுதருட அருகில்வந்நீர்
360. அதையறிந்த ஹரியுமப்போ அற்புத மோஹினியாகி நிற்க
அச்சுதமோகினி வேஷத்தைக்கண்டு ஹரியுடன் போகமடைந்தவரே
போகமடைந்த மதத்தினால்சங்கரர் வீரியமுதிக்கக் காந்தியாய்
பிரகாசத்துடனே விளங்கிய ரேதஸை ஸ்ரீஹரிகைதனில் ஏந்திக்கொண்டார்
ஸ்ரீஹரிக்கும் அரனுக்குமாகிய செல்வக்குமாரனைத் தாபட்டி
ஆதிசிவனும் ஹரியுமாகக்கூடி ஐயப்பருச்சியை முகந்துகொண்டு
ஸ்ரீமானரி ஹரபுத்திரனென்று நாலுலோகமும் அறியவைத்நீர்
பூமிக்கெல்லாம் இவர்காவற்காரரென்று வாகினியும் அவர்கைக்கொடுத்தீர
நாடகமாடியே லோகத்தைமயக்கும் ஆதிசிவனையறியோமோ [கொண்டு
வாஸுகி தக்ஷகன் கார்க்கோடகனை மகரகுண்டலமாய்ப் போட்டுக்
365. காளியன் முதல் சகலநாகத்தையும் கண்டாபரணமாய்ப் பூண்டவரே

வாதவூரடிகள் பக்திகண்டு வன்சிறை நீக்கவே எண்ணங்கொண்டு
ஊழல்நரிகளைதேய்த்துக் குதிரையாய் உச்சிதமாகக்கொடுத்தவரே
அம்மையார் பிட்டுக்கு ஆசைப்பட்டு அரைக்காசு கொடுக்க அவசமற்று
வஞ்சித் தவள் பிட்டை வாங்கித்தின்றுவிட்டு மண்ணைச்சுமந்து கழப்பி
[விட்டு
பொன்னும் பிரம்பினால் பாண்டியராஜாவின் கையினாலேஅடிப்பட்டவரே
கீர்த்தனம்பாடின பக்தனுடைய மகத்தான ஆபத்தை நீக்கவென்று
பார்த்தொரு கட்டு வெறகைச்சுமந்து பாடி ஜயத்தைக்கொடுத்தவரே
வளைச்செட்டி வேஷமெடுத்துக்கொண்டு வயிறுவளர்த்திடவேணுமென்று
வளையைத்தூக்கித் தோளிலேபோட்டு மதுரைபட்டணவீதியிலே
370. அடுக்கிக்கோமுட்டிப் பெண்களுக்குவளை ஆனந்தமாகி மறைந்தவரே
இலைச்ச வாய்க்குப் புசிக்கபக்ஷணம் மதுரமாயொன்று மில்லாமல்
நிஷித்தமாகிய வேடனெச்சிலை நித்தியமும்வாங்கிப் புஜித்தவரே
காளியுடன்கூட வாதுக்குத்தாண்டவம் ஆடமாட்டாமல் நீர் தோற்று
வாதுக்குத்தூக்கின பாதக்காலின் கூத்துக்குப்பணந்தருவரோ
பாக்கியம் ரொம்ப இருந்தசிவனும் பாகவதாள் கையிலேதோற்று
கூத்தையாடிக்கொண்டு கோலாஹலமாகப் பேத்திக்கொண்டவர் இருப்பரே
கூத்துக்குப்பணம் சம்பாதிப்பவர் (நம்ம) பாட்டுக்குப்பணந்தருவரோ
ஏத்தமாக இருந்திட்ட சங்கரர் கூத்தாடிவேஷந்தரித்துக்கொண்டு
கீர்த்தியான கனகசபையிலே கோவிந்த இந்திர நான் முகனும்
375. தீர்க்க தரிசியாம் சேஷமுனிவரும் தில்லையம்பலத்தி லிருக்க
பார்க்கவந்த பதஞ்சலி வியாக்ரர் பக்தியுடன்கூடி நிர்க்கின்றதை
கூட்டத்தையெல்லாங்கண்டுசதாசிவர் பார்த்துச்சிந்தையில் எண்ணிக்
[கொண்டு
ஆட்டத்தைக்கண்டு இத்தனைபேர்களும் ஆளுக்கொருபணந்தந்துவிட்டால்
பாக்கியம் மலையாகக் குவிந்திடும் என்றுபரமார்த்தமானசிவன்
போற்றும் பாதமும் சிவந்துவலிக்க புனுகுசந்தனம் கரையவே
சாற்றி சிரவில் இருந்த சந்திரன் வாடக் கங்கையும் தளம்பவே
வேர்த்துச்சொரிந்து முத்து முத்தாகவே விபூதிகளும்நனையவே
ஆட்டவேகத்தைப் பொருக்கமாட்டாமல் அஷ்டநாகமும் நெளியவே
கூத்துக்குக் கோலமாகத் தரித்திட்ட சிலம்பு கிண்கிணிமணிகளில்
380. தோட்டிலே ஒருசிலம்புதெறித்து விழுந்தது கூடத்தெரியாமல்
பார்த்தவர் முக்தி யடைய கீர்த்தனம் பண்ணினீர் அம்பலத்திலே
ஈஸ்வரருக்குப் பணங்களுண்டானால் அஸ்திமாலையை தரிப்பரோ
பூசு சந்தனம் புனுகு கஸ்தூரி வாஸனை யவர் அறிந்தாக்கே
சாம்பலைத் திருமேனி எங்கிலும் பூசிக்கொண்டவர் இருப்பரோ

சொம்பு தவலை ஜலபானம்பண்ணச் சிவன்கரந்தன்னில் இருந்தாக்கே
தங்கநிறம்பெற்ற கங்காதேவியை தலைதனில்வைத்துச்சுமப்பரோ
வேருங்கொழுந்தும் மல்லிகைப்பூவும் சூடப்பாக்கியமிருந்தாக்கே
மாடு தின்கின்ற அருகம்புல்லைச் சூடிக்கொண்டவர் இருப்பாரோ
செண்பகப்பூவும் செவ்வந்திப்பூவும் செவந்ததாமரைப்பூக்களும்
385. கொள்ளக்கைதன்னில் காசுமுண்டானால் தும்பை வில்வத்தைதரிப்ப பரோ
சிவக்கவே ஒரு பாக்கு வெற்றிலை தின்னப்பாக்கியமிருந்தாக்கே
விஷத்தைவாய்தனில் போட்டுக்கொண்டு கறுத்த கண்டத்தோடிருப்பரோ
உறக்கச்சொல்லப்படாதடி சிவனுக்கு அக்கினியே நெற்றிக்கண்ணடி
ஜொலிக்கும் அக்கினிபோல நெற்றிக்கண் சிவனுக்கிருக்கும் எப்போதும்
விழித்துப்பார்த்தால் மோசம்வரும் மன்மதன்பட்டதறியோமோ
சிரித்துச்சங்காரர் க்ஷணத்திலேதிரு புரத்தை எல்லா மெரித்தவர்
பணத்தைத்தாராதிருந்தாலு மிருக்கட்டும் பாடினால் முக்தியுண்டடி
பாடிவிட்டோ மித்தனைபோதாகப் பணங்காசில்லாமற் போவோமோ
ஆபரணத்தைக் கயட்டுவோமென்றால் அஸ்திமாலைதரித்திருக்கார்
390. பூஷணத்திலொன்றை வாங்குவோமென்றால் பாம்பையன்றோடிபூண் டிருக்கார்
ஹஸ்தகடகத்தைக் கயட்டுவோமென்றால் அத்தனையும் பன்னகாளடி
குண்டலத்தைக் கயட்டுவோமென்றால் குட்டிப்பாம்பின்சுருளடி
கையின் கணையாழி கயட்டுவோமென்றால் காளியன்சீறிக்கடிப்பண்டி
பதக்கத்தில் ஒன்றைக் கயட்டுவோமென்றால் பாம்பினுடைய படமடி
கண்டாபரணத்தைக் கயட்டுவோமென்றால் காலகோடிவிஷமடி
உத்தரீயத்தை வாங்குவோமென்றால் வேங்கைப்புலியின்தோலடி
வஸ்திரத்தைப் பறிக்கிறோமென்றால் ஆனையினுடையதொக்கடி
பத்மாஸனத்தை வாங்குவோமென்றால் கிருஷ்ணஜலப்பட்டையடி
இப்படிப்பட்ட பணக்காரன் நமக்கென்ன பணந்தரப்போரான்டி
395. என்று முத்தாபரணங்குலுங்கக்குலுங்க மின்கிளிமார்கள் எல்லவரும்
அட்டஹாஸமாய்க் கைகளைக்கொட்டி அசங்கதிச்சவாள்சிரித்தவுடன்
இலக்ஷ்மிதேவி அம்புஜபாணி கடைக்கண்ணைக்காட்டி ஏதுசொல்வள்
விட்டுவிடாதீர்கள் எங்கசிவனை வளையுங்கள்நான்குபுறமுமாய்
இலக்கமற்ற திரவியங்கள் நீலகண்டருக்கு உண்டடி
முக்கண்ணருக்குப் பணமில்லையென்றால் மெய்கொள்ளுறவர் ஆரடி
அத்தனையும் மறைத்துவைத்தவர் ஆண்டியைப்போலிருக்கிறார்
சற்றுமறிவில்லாப்பேர்களுக்கவர்பிச்சைக்காரன்போல இருக்கிறார்
பக்தியில்லாத பேர்களுக்கெல்லாம் பஞ்சகோலத்தைக்காட்டுகிறார்

ஜெகத்திலுண்டான பேர்களுக்கெல்லாம் சிவன்கொடுத்தாலுண்டடி
400. மதித்திருக்கின்ற பேர்களின்வாழ்வு மஹாதேவரின் கிருபையடி
மண்டலம் பதினாலு லோகமும் மலைகள் பர்வதம் நதிகளும்
அண்டத்திலுள்ள அகிலாண்ட கோடிகோடிபிருமாண்டமும்
சந்திரசூரியர் அஷ்டதிக்குப்பாலாள் சகலரிஷிகள் அமரரும்
நான்முகரும் கீர்த்தியுடைய நாராயணரும் சிவமடி
எங்கும் நிறைந்திருப்பாரடி சிவன் ஹிருதயவாஸியுந்தானடி
மந்தஹாஸ முகத்தாரடி சிவன் வேணதெல்லாந்தருவாரடி
நிந்தனைகள் செய்யாதேயுங்கோடி எங்கள் நாத்திரும்பிடையானடி
(என்று) மங்களமான மதுரஸ்துதிகள் மைத்துனர் தேவியும்
[சொன்னவுடன்
இங்கிதமாகவே சாம்பமூர்த்தியும் உல்லாஸமாகச் சிரித்துக்கொண்டு
405. சங்கையில்லாத ஆபரணங்களும் வெண்பட்டுப்பீதாம்பரங்களும்
ஒன்பதுகோடி திரவியங்களும் எடுத்துச்சொரிந்து கொடுத்தவர்
கொம்பனைமாரைக் குளிரப்பார்த்து நன்மையுண்டாகட்டு மென்றுசொல்லி
அன்புடன்பாடின பெண்களுக்கு அவர் ஆனந்தத்தாம்பூல முங்கொடுத்தார்
இந்தப்படி யவரண்டையில் ஏசி எண்ணிக்கையற்றபணம் பறித்தாள்

---

## விஷ்ணு ஏச்சு.

அத்தனைபேரும் சபைநடுவே அச்சுதரண்டையில் ஓடிவந்தாள்
கொட்டிக்கொண்டு தங்கள் கைகளிரண்டும் சதங்கைகுலுங்கக்குதித்துக்
கொண்டு
இருகுலத்திலே பிறந்து வளர்ந்த இடையனைவந்து பாருங்கோடி
மீனவதார மெடுத்துக்கொண்டு வேதத்தைத்தேடிப்பிடித்தவனே
பன்னிரூப மெடுத்துக்கொண்டு பல்லாலே பூமிபிளந்தவனே
410. ஆமைரூப மெடுத்துக்கொண்டு அமிர்தங்கடையும் பர்வதத்தை
தாங்கிக்கொண்டு இருந்தவனே உந்தன் சேதிகளெல்லாம் அறியோமோ
சிம்மரூப மெடுத்துக்கொண்டு துஷ்டனான ஹிரணியனை
இரண்டுகையாலும் பிடித்துக்கிழித்து ரத்தத்தைவாரிக் குடித்தவனே
மணிக்குடலைப் பிடுங்கிஎடுத்து மாலையாய்த் தோளிலேபோட்டவனே
தணித்துக்கோபத்தைத்தான் தொழுததாஸன் பிரஹ்லாதரைப்பார்த்து
ஹிரணியனை ஒழித்துவிட்டோம் இனி இருந்தரசாளுமென்றவனே
வாமனரூப மெடுத்துக்கொண்டு வணங்கிப்பூமி இரந்தவனே
தாருமென்றுசொல்லி மூணடிமண் சத்தியமாகவே கேட்டுக்கொண்டு
மகாராஜ ராஜரான அந்த மகாபலியை வஞ்சனையாய்

415. பாதாள உலகத்தில் பாய்ந்துவிழ உதைத்தவனே
பரசுராமனாய் வந்துதித்து பூமிகள் எல்லாந்தான் ஜெயித்து
மதத்தினாலே அரசரைவதைத்து மலையாளம் ஓடிப்போனவனே
ராமாவதாரமெடுத்துக்கொண்டு ராவணன் சீதையைக்கொண்டொளிக்க
தேடித்தேடிக் குரங்குகளோடு கூடிக்கொண்டு குலாவிக்கொண்டு
தனித்துக்காட்டில் வரும்போது சபரிகண்டு பூஜைபண்ண
நிஷித்தமான வேடச்சிஎச்சிலை நித்தியானந்தமாய் உண்டவனே
வாளரக்கனை சம்ஹாரித்து மைதலியின்சிறை மீட்டவனே
பூர்ணகர்ப்பமாய் இருந்தசீதையை பின்னையுங்காட்டிலே விட்டவனே
ஆதிசிவனுக்குப்பெண்டாயிருந்து அரிஹரபுத்திரனைப் பெற்றவனே
420. கிருஷ்ணாவதாரமெடுத்துக்கொண்டுகோபாலவேஷந்தரித்துக்கொண்டு
இச்சையுடன்கூட பாலுக்கும் வெண்ணெய்க்கும் புத்திரனாகப்பிறந்தவனே
உறியின் வெண்ணெய்திருடியுண்டு உரலுடனே கட்டுப்பட்டவனே
பெண்டுகள் கூறையை வாரிக்கொண்டு புன்னைமரத்தில் ஏறிக்கொண்டு
இரண்டுகையுந்தூக்கிக் கும்பிடச்சொல்லி பங்கம்பதினாறுங்கண்டவனே
கம்ஸனைக் கொல்லவே வஞ்சனையாய் கள்ளனைப்போல வளர்ந்தவனே
மாடுமேய்த்துத் திரிந்தவனே மத்தினால் அடிகள்பட்டவனே
கட்டழகுஇடைப் பெண்கள்மார்களைக் கண்ணைக்காட்டி அழைத்தவனே
நாமத்தை நெற்றியிலிட்டுக்கொண்டு நன்றாகத்தோளிலே சுட்டுக்கொண்டு
காமன்கணையிலே சிக்கிக்கொண்டு காமுகனாகித் திரிந்தவனே
425. மோகினிவேஷந்தரித்துக்கொண்டு தேகங்களெல்லாம் மயக்கிக் [கொண்டு
கெங்காதரன்மேலே ஆசைகொண்டு சிவசங்கரன் பெண்டாயிருந்தவனே
பாற்கடலின் நடுவினிலே பாம்பின்மேலே பள்ளிகொண்டவனே (என்று)
இத்தனைபோதாய் நாங்கள்பாடுவதைச் சற்றும்மதிக்காமல் நீயிருக்காய்
உருமாலை கட்டவிழ்ப்பாள் பெண்கள் உத்தரீயத்தைப் பிடித்திழுப்பாள்
தலைப்பாகை பிடித்திழுப்பாள் தந்துவிடடா பணத்தைஎன்பாள்
தந்துவிடடாபணத்தை என்றவுடன் சச்சுதானந்தரும் தான்சிரித்து
பணமுங்களுக்கு வேணுமானால் என்படுக்கை யுள்ளுக்குவாருங்கோடி
ஆபரணம் வேணுமானால் (என்)அண்டையிலே சற்றே வாருங்கோடி
கேட்டதெல்லாம் நான் தருவேன் கிட்டக்க வாருங்கள் என்று சொன்னார்
430. கிட்டக்க வாருங்கள் என்கலுமே கிளிமொழிமார் கோபத்துடன்
ஏண்டா இடையா நீ இடும்புகள் ரொம்பப்பேசுகிறாய்
ஏண்டா திருட்டுகிருஷ்ணா இடும்பு உனக்கு போகலையோ
இடைப்பெண்களுடன் கூடிக்கொண்டு ஜலக்கிரீடை பண்ணினவன்
கோபிமாருடன் கூடிக்கொண்டு குறண்டிபாடின கூத்தாடி

அபிமானமற்றகிருஷ்ணு நீ ஆரையடா இந்தவார்த்தை சொன்னுய்
கோபித்துக்கொண்டவாள் சொல்லலுமே கோகுலவாஷியுந்தான் சிரித்து
தாம்பூலம் பழத்துடனே தட்டிலே ரொம்பஎடுத்துக்கொண்டு
430. இங்கிதமாகப் பணத்தைச்சொரிந்து ஏத்தமாகவே தான்கொடுத்தார்
இந்தப்படியவரண்டையில் எசி எண்ணிக்கையற்றபணம் பறித்தாள்

## பிரும்மா ஏச்சு.

435. நான்முகரண்டையில் ஓடி வந்து (பெண்கள்)நாலுபுறமும் வளைத்துக் [கொண்டாள்
தாலக்கத்திம்பலம் ஆட்டிவைப்பாள் தந்துவிடடா பணத்தை என்பாள்
ஸ்ரீமன்) நாராயணருக்குப் புத்திரனுகவே நான்குமுகத்துடன் வந்துதித்து
தாயின்வயிற்றில் பிறவாதே தந்தைவயிற்றில் ஜனித்தவனே
மாதாவயிற்றில் பிறவாதே நாபிகமலத்தில் வந்தவனே
உதித்தவேளையில் ஒருவரில்லாதே எங்கும்ஜலமயமாகக்கண்டு
விழித்துக்கொண்டு இருக்கின்றபோது மதுகைடவரைக்கண்டு அஞ்சி
இதற்கு நாமென்னசெய்யப்போறேமென்று ஏக்கம்பிடித்து இருந்தவனே
மறித்தும் தாமரைத்தண்டின் வழியாய்மகாவிஷ்ணுவிடத்தில்வந்தவனே
சட்டிபானைபண்ணும் மண்ணுடையான்போல சிருஷ்டிக்கச்சேவகம் வாங் [கிக்கொண்டு
440. மனமொத்தபடிக்கு ஜனங்களை எல்லாம் சிருஷ்டித்து பூமியில்விட் [டவனே
ஊனல்ஒடிசலும் கூனும் சப்பையும் குருடும் ஊமையுஞ் செவிடுமாய்
சொத்தைவிரலும் குட்டை நெட்டையும் சப்பாணி முடம் சிலதுமாய்
அதிக அழகாய்ப் பாதிப்பேர்களை அமைத்துப் பூமியில் விட்டவனே
உவமையில்லாமல் சிலரையமைத்து ஓர வஞ்சகஞ் செய்தவனே
அண்டத்திலுள்ள ஜனங்களில்பாதிக்கு அதிகசம்பத்தை வைத்தவனே
துண்டமுஞ்சோறும் இல்லாதேபறக்கச் சிலதுபேர்களை விட்டவனே
கர்மியாகவே பாபங்களைச்செய்யக் கற்பித்து பூமியில்விட்டவனே
புண்ணியசாலியாகப் பாதிப்பேரை சிருஷ்டித்து பூமியில்விட்டவனே
விருத்தியாகும்படிக்குச்சிலது பேரைப்பூமியில் வைத்தவனே
445. அற்பஆயுஸாய்ச்சாகும்படிக்கு அனேகஞ்சீவரை வைத்தவனே
இந்தப்படிக்கு எழுதி லலாடத்தில் ஓரவஞ்சகஞ் செய்தவனே
தந்தையைப்பார்க்கச் சமர்த்தன் நானென்று சபதங்கூறிச்சபையிலே
ஸுந்தரமூர்த்திசிரஸைக்கண்டு நான் க்ஷணத்தில்ஓடிவருவேனென்று
ஹம்ஸமாகவே ஆகாசத்திலே அநேகந்தூரம் பறந்தவனே

சந்திரசேகரர் சிரஸைக்காணுமல் தவித்துப்பூமியில் வந்தவனே
பிரும்மரிஷிகள்நிறைந்தசபையினில்பொய்யைத்திடுக்கென்றுசொன்னவனே
சாம்பமூர்த்தியைக்கண்டு வந்தேனிப்போ சாட்சி தாழம்பூ என்றவனே
வேலவர்க்கு விடைசொல்லத்தெரியாமல் வெட்கமடைந்து இருந்தவனே
கோபத்துடனே மணியர் பிடித்து காவற்கிடங்கில் அடைக்கவே
450. வாய்திறக்கவழக்குமன்றியிலே வைத்த சிறையில் இருந்தவனே
சாம்பமூர்த்தியும் வந்துவிடுவிக்க பின்னையும்சிருஷ்டிக் கவந்தவனே
(அதி) ரூபமாகவே திலோத்தமையை எடுத்துக்கூட்டிப்பிடித்தவுடன்
மோகமடைந்த பிரும்மாநீயென்று மூன்றுலோகமுஞ்சொல்லாதோ
அகமுடையாளை நாவில்தரித்த அதிமோகனென்று அறியோமோ [என்றாள்
போரும் பிரும்மாவே பிரதிஷ்டைரொம்பத்தான் போடுமிங்கே பணத்தை
நான் முகவருங்கேட்டுச்சிரித்து நன்றாக இருக்கிறதபாட்டென்று
கோடிதிரவியம் வாரிக்கொடுத்து நான்முகவரும் போனபின்பு

## தேவேந்திரன்ஏச்சு.

(கொண்டாள்

தேவராஜாவைக் கண்டுகொண்டு பெண்கள் சுற்றிலும்வந்து வளைந்து
ஓடநல்ல சமர்த்தனடா உன்னுடசேதிகளை அறிவோம்
455. சூரனென்றுன்னைச் சொன்னது அபத்தம் சற்றுமுனக்கது இல்லையடா
தாருகாஸுரனுக்குப்பயந்து தலையைவணங்கியே நின்றவனே
சூரபத்மனண்டையிலே தொண்டுப்பணிசெய்து நின்றவனே
வலையனைப்போல் மீன்பிடித்து சுமைசுமையாய் கட்டிக்கொண்டு
காணிக்கையாக அஸுரன்முன்வைத்து ஸேவித்துக்கொண்டு இருந்தவனே
தம்பல வட்டிலை ஏந்திக்கொண்டு சூரபத்மன் அண்டையிலே
இரண்டுகாலுங் கடுத்துவலிக்க லஜ்ஜையுடன் கூடநின்றவனே
தாருகாஸுரன் சூரபத்மன் சிங்கமுகாஸுரன் தன்பயத்தால்
கண்டஇடமெங்கும் காடுமலைகளும் கலங்கிமயங்கித் திரிந்தவனே
சலந்திராஸுரனுக்குப்பயப்பட்டு சொர்க்கம்விட்டோடி ஒளிந்தவனே
460. இராவணராக்ஷதனுக்குப்பயப்பட்டு ஓடிக்குகையில் ஒளித்தவனே
வஞ்சனையாய்விருத்திராஸுரனைக்கொன்றுபிரும்மஹத்திவதைப்பட்ட
[வனே
தங்கநிறம்பெற்ற இந்திராணியம்மன் அண்டையில் எப்பொழுதுமிருக்க
ரம்பை ஊர்வசி மேனகையோருடன்நித்தியமும் போகித் திருந்தவனே
அகலிகைதேவிக்கு ஆசைப்பட்டு அந்தணர்வேஷமெடுத்துக்கொண்டு
கௌதமருடைய தேவியைத்தொட்டு கேடுகெட்ட காரியஞ்செய்தவனே

கௌதமருடைய சாபத்தினாலே கிடுகிடென்று நடுங்கிக்கொண்டு
அங்கமெல்லாம் பங்கமாகி ஆயிரங்கண்ணை யடைந்தவனே
சரீரமெல்லாம் பங்கமாகி சபைதனில்வர வெட்கப்பட்டு
தாமரைத்தண்டில் ஒளித்திருந்த சமர்த்தனென்று அறியோமோ
465. எல்லாருஞ்சரி என்றுஎண்ணாது உன்னுடஜீவனதிகமென்று
சாகச்சோம்பி அமிர்தங்கடைந்து சதித்துவிட்டு அஸுரரை
வஞ்சித்துவிட்டு அமிர்தங்கடைந்து மட்டில்லாச்சம்பத்தடைந்தவனே
மற்றுமுள்ள அஸுரரைக்கொன்று சொர்க்கத்தில் வாழ்ந்து இருந்தவனே
சக்கரபாணியைச்சரணமென்று சந்ததம்வந்து அடைந்தவனே
கேசவருடைய கிருபையாலன்றோ தேவராஜனாய் நீயிருக்காய்
ஆதிகேசவர் கிருபையில்லாவிட்டால் அரைநாழிகை சொர்க்கம் ஆளவறியாய்
சமுத்திரத்தினில் கொள்ளையிட்டபணம் சங்கையில்லாமற் கிடக்கிறதே
எடுத்தொருபொதிமாணிக்கத்தை கொடுத்துவிட்டு நீ ராஜாவே
பொடுக்கெனவே நீ போடா போருமுந்தன் பிரதிஷ்டையென்றாள்
470. தேவராஜாவுங் கேட்டுச்சிரித்து சம்பிரம மிந்தப்பாட்டென்று
எடுத்துப்பிடித்துமவாள்நம்ம ஏழுஜன்மத்தின் உள்ளதெல்லாம்
விடுத்துவிடுத்துஏசிவிட்டாள் வெட்கமன்றோ நமக்குமிது
இருக்கப்படாதிங்கே இனிமேல் இன்னமும் இவாள்ஏசுவாள்
கலக்கிவிட்டாள் நம்மை இவாள்கிட்ட இருந்துகண்டார்போல்
எடுத்தொரு பொதிமாணிக்கத்தை கொடுத்துவிட்டந்தராஜாவும்
க்ஷணத்திலே குதித்தோடிவிட்டான் தேவலோகத்து இந்திரனும்

## திக்குப்பாலகர்கள் முதலானவர்கள் ஏச்சு.

சூரியருடைய புத்திரராம் எமதர்மராஜாவைக் கண்டுகொண்டாள்
ஏண்டா இந்தமணியத்தைவாங்கி எல்லோரையுங்கொன்று கொண்டிருக்காய்
தாயிருந்துதவித்துப்புலம்ப சந்ததியைக்கொண்டுபோறவனே
475. மாதாவிருந்து தவித்துப்புலம்ப மக்களைக்கொண்டோடிப்போறவனே
காலுந்தலையுமாய்ச் செய்கின்ற காலனென்றுன்னை அறியோமோ
நீதியறியாமற்செய்யுகின்றநிஷ்டூரனென்று அறியோமோ
உனக்குப்பாடப்பயப்படுவோமென்று ஓடிநடந்தார்பெண்களெல்லாம்
சந்திரன்சூரியன் அஷ்டதிக்குப்பாலாள் சப்தமருத்துக்கள் அக்னிவாயு
அஷ்டநாகரும் பிரசித்தகுபேரனும் ஆதிசேஷர்முதலாக
பெற்றஹிமவானும் அநேகராஜரும் முப்பத்துமுக்கோடிதேவருடன்
அத்தனைபேர்க்குமுள்ள பிரதிஷ்டையை ஏசிஏசியேபார்த்துக்கொண்டு

பத்துக்கோடிபணந்தான் பறித்து பாடிச்சலித்துவிடாய் மிருந்து
ஒருத்தி மனையில் பணத்தைகொண்டுவைத்து ஏழுமலைபோலேதான் குவித்து
480. பத்திரமாக பதனம் பண்ணிவைத்தால் பத்துக்கோடிபொன் உனக்குத்
(தருவோம்
சற்றுமிதினில்குறைந்துவிட்டுதானல்வைத்தபொன்னுக்கு இரண்டாகவாங்கு
(வோம்
கட்டுமுட்டாய்ச்சொல்லிவைத்துவிட்டு காரியக்காரிகளெல்லோரும்
ஒப்பாகவெல்லாருங் கூடிக்கொண்டு ஒருபுறமாக நின்றுகொண்டு
படிக்கீழ்ச் சறுகித்தே பாதிமுற்றமும் நிழலாச்சே
வயிற்றைப் பசிக்கிறதே வடிவழகியைப் பெற்றவளே
உண்ணப்பசிக்கிறதே உன்னோடுசொல்லப் பயப்படுறோம்
கத்தரிக்காய்க்குப் புளியைக்குத்தி காருமல் நன்றாய்ப்பொடியைத்தூவி
புத்துருக்குநெய்யை ரொம்பவிட்டு புதுக்கடுகைப் பொரித்துக்கொட்டி
வற்றல்வறுத்து வடாம்பொரித்து முத்தினதேங்காயைக் கீறிவைத்து
485. சருவந்தனிலே தீர்த்தமெடுத்து சம்பாஅரிசியை அரிச்செடுத்து
வறுத்தபருப்பும் அரிசியுங்களைந்து வங்களாமஞ்சள் அரைத்துவிட்டு
தங்கநிறம்போல பொகங்கலைப்பொங்கி எங்கள்கலத்தினில் இட்டுவிடு
ஆயிரம்பொன்னை முடிப்புக்கட்டி (எங்கள்) அண்டையில்வைத்தால்பிடிஎடுப்
(போம்
ஆயிரந்தரமாய்க்கெஞ்சினலும் அத்தை ஒருபோதும் கூட்டாக்கோம்
தண்ணீரிருக்கின்ற சாலுடைப்போம் தலைக்கடைக்கதவைப் பேர்த்துவைப்
போம்
எண்ணிப்பணத்தைக் கொடுக்காவிட்டால் அன்னத்தை எங்கு மிறைத்திடு
(வோம்
இந்தப்படி பெண்கள் சொன்னவுடன்உகந்துகொண்டந்த மேனையும்
அந்தப்படிக்கு சமைத்துமிட்டு ஆயிரம்பொன்னும் முடிந்துவைத்தாள்
பந்திஇருந்து புசித்துவிட்டுப்பெண்கள் பாக்குவெற்றிலை போட்டுக்கொண்டு
490. புட்டுக்குமண்ணைச்சுமந்த சிவனரின் பட்டமகிஷியாம் பார்வதியை
வட்டமணைமேலே வைத்துக்கொண்டு இஷ்டத்துடன் பாடிக்கொண்டிருந்
தாள்

## மேனையம்மாள் பிட்டுச்சமைத்தல்.

மூன்றும்நாளின் உதயத்திலே விடியரெண்டரை நாழிகைக்கே
சட்டமாக மேனையம்மாளும் தியாஜ்யராகுகால மெப்போவென்றாள்
சதுரானவாந்தியார் பார்த்து தியாஜ்யராகுகால மில்லையென்றார்
முத்துச்சம்பா அரிசியிலே முப்பதுகலமுந் தான் நனைத்தாள்
பவழச்சம்பா அரிசியிலே பத்துக்கலமும் நனைத்தாளாம்

காரியக்காரிகள் சேர்ந்துகொண்டு களைந்துவாரி எடுத்தாளாம்
பர்வதராஜாவின் கூடத்திலே பவிழக்குந்தாணி வைத்தாளாம்
முப்பதுபெண்டுகள் மாவிடிக்க மூந்நூறுபெண்டுகள் தெள்ளிப்போட
495. பொன்னும் முறத்திலே புடைத்துவாரி எடுத்தாளாம்
புட்டுச்சுடும் அடுப்புக்கு முத்துமுத்தாகவே கோலமிட்டு
சந்தனக்கட்டையை வெட்டிப்போட்டு தள்ளியடுப்பை எரியவிட்டு
பத்துஉருளி அடுப்பில்வைத்து பதமாக வறுத்துக்கொட்டி
முப்பதுசருவம் வாயைக்கட்டி முகூர்த்தம்பார்த்து அடுப்பில்வைத்தாள்
புஷ்பம்போலவே புட்டைச்சமைத்து புன்னிவாரி எடுத்தாளாம்
கொப்பரைநிறையப் பாகைக்காய்ச்சி கோத்துக்கிளரி எடுத்தாளம் [ட்டு
துவரம்பருப்பைச் சமைத்துக்கொட்டி கொப்பரைத்தேங்காய் துருவிப்போ
குடத்துநெய்யைச் சரித்துவிட்டு கோத்துக்கிளரிக் கலந்தாளாம்
ஏலக்காயை இடித்துக்கொட்டி நேர்த்தியாகக் கலந்தாளாம்
500. பொற்பிரப்பங்கூடைகளிலே புட்டைவாரி எடுத்தாளம்
தங்கத்தம்பாளத்தில்புட்டைஎடுத்து சாம்பமூர்த்திக்கு முன்னேவைத்தாள்
பெற்றஹிமவானும் சாம்பமூர்த்தியும் மற்றுமுள்ளவரும்தான் புஜித்தாள்
அருந்ததியும் லக்ஷ்மியும் அழகாய்க்கோலங்கள் செய்துகொண்டு
தலையைவாரிச் சொருகிக் கொண்டு சரிகையாடையுடுத்திக்கொண்டு
ஆவாரை பூத்துச்சொரிந்தாப்போல் ஆபரணங்களும் பூட்டிக்கொண்டு
மேளமுடனே வாத்தியமும் நாகஸ்வரமும் முழங்கிவர
ஹிமோத்கிரி வீதியிலேயுள்ள எல்லாருடைய கிரகங்களுக்கும்
அருந்ததியும் லக்ஷ்மியும்கூடி ஆங்கள்தோறும் புட்டை இட்டுவந்தாள்

---

## ஸ்ரீ பார்வதிதேவிக்கு மங்கள ஸ்நானம் பண்ணி வைத்தல்

நான்காம்நாளின் உதயத்திலே நாலாஞ்சாமக் கடைசியிலே
505. கேசவர்பூமி அளந்தமிருத்திகையால் கரங்கள் அம்புஜபாதத்திலும்
தேவியும்எட்டுத் தலைவானும் தீர்த்தத்திலும் சுத்தமானபின்பு
கூடியிருந்த குமாரிகளும் கூடப்பரிசுத்த மானபின்பு
ஈரத்துகில்விழுத்துமவாள் இந்திரவாளிப்பட்டுடுத்தி
அச்சாப்பெண்காச் சோபனம்பாடி அரண்மனைக்கு வந்துவிட்டாள்
அம்மனைமணேமேல்வைத்துக்கொண்டு அன்புடன் பெண்களும் பாட்டுப்பாடி
போராதுநீங்கள் பணங்கள்சுதந்தது பாட்டைரொம்பவும்பாடிவிட்டோம்
மூன்றுநாளும் உடுத்திவிழுத்த புடவைக்கு ஆயிரம்பொன்னுமுண்டு
சப்பைவைக்க ஆயிரம்பொன் தங்கமாலைக்கு ஆயிரம்பொன்

பட்டுப்பாய்க்கு ஆயிரம்பொன் பொன்னுஞ்சிப்புக்கு ஆயிரம்பொன்
510. உண்டுஎங்களுக்கென்றுசொல்லிப்பெண்கள்உறக்கக்கூறித்துப்பாடிஞ
கேட்டுமேனேயும்கொக்துச்சரப்பளி குலுங்கமெள்ளச் சிரித்துக்கொண்டு
ஏத்தமாகவே ஐயாயிரம்பொன்னே எடுத்துமெள்ளக் கொடுத்துவிட்டு
காட்சியாஇயகாரியந்தன்னிலே கடுகெனவே போய்ப்புகுந்தாள்.
பார்த்துப்பார்த்து பணத்துடனேபணம் சேர்த்துகொண்டுபோய்வைத்து விட்டு
ஓட்டமாகவேஓடிவந்தார்பெண்கள் என்னசொல்லியும் கேளாமல்
நாலுகால்மண்டப மத்தியிலே நன்மைகளான தோர் கூடத்திலே ள்
கோமயத்தாலே குருக்கும்நெடுக்குமாய் கோணக்கமாணக்கக் கோலமிட்டா
அம்மனேரத்ன மணே தன்னிலே அன்புடன் தாயார் கொணர்ந்துவைத்தாள்
அத்தையரும்வந்து எண்ணெய்தேய்க்க ஆயிரம்பெண்டுகள்பாட்டுப்பாட
515. நன்மைகள்ரொம்ப வருகின்றதேவிக்கு எண்ணெயினுலே உபசரித்தாள்
ஆயிரம்பெரிய பெண்டுகளும் பதினயிரம்குஞ்சு குழந்தைகளும்
தோயவேஎண்ணெய்யைத்தேய்த்துக்கொண்டு தேவியுடனேநடந்துவந்தாள்
செண்பகப்பூவும்ஜெவ்வந்திப்பூவும் சேர்த்துவாரி இறைத்துக்கொண்டு
அடிக்கடிபெண்கள் ஓடிவந்து அம்மனேயுஞ்சப்பைவைக்கலுமே
ஏதடியோ அடிபெண்களா நீங்களும் இப்படியுஞ்சப்பை வைப்பயளோ
போருமடியோ பெண்களா எங்களின் புத்திரிக் குடம்புக்காகாது
கடுகடுத்து மேனேயுஞ்சொல்லி கையைப்பிடித்து விலக்கிவிட்டாள்
அழகானகங்கைப் படித்துறையிலே அத்தனேபெண்களும் வந்திறங்கி
சிகைக்காய்நெல்லி அரப்புடனே சிறுபயறு கஸ்தூரிமஞ்சள்
வாஸனேப்பொடியுந்தேய்த்துக்கொண்டு மங்களஸ்நானமும் பண்ணிவிட்டு

---

## ஸ்ரீபார்வதிதேவி ஊர்கோலம் வருதல்.

520. அத்தனேபேர்களும் பட்டுப்புடவையை அழகாக உடுத்திக்கொண்டு
பத்தினிமார்களுடன்கூட அம்மன் பாலும் பழமும் புஜித்துவிட்டு
ஏழு உலகமும் விலேமதிக்கும் இந்திரவாளிப் பட்டுத்தானுடுத்தி
பச்சைமுத்தணிரவிக்கையை அம்மன் பாங்காகத்தரித்துக்கொண்டு
மஞ்சள்ஒளிவிடும் நெற்றிதனில் அம்மன் மண்டலம்போலவேபொட்டுமிட்டு
கண்ணுக்கு அஞ்சனமிட்டுக்கொண்டு கந்தங்கலந்து தரித்துக்கொண்டு
குமுகுமென்று மணக்கமணக்க குளிரச்சந்தனம் பூசிக்கொண்டு
தங்கக்கலசங்கவிழ்த்தாற்போன்ற கொங்கையிரண்டு நடுவினிலே
தங்கமணியும் சரப்பளியும் திருமங்கிலியத்துடனேவிளங்க
உண்டைக்காரை உத்தண்டாவும் வண்டயம்முத்துப்பதக்கமும்

525. முன்கைமுல்லாரி ஹஸ்தகடகம் மோதிரம் நெளி பூடமும்
முத்துக்கட்டினபாவலியுடன் முருகுடன் முத்துவாளியும்
நெற்றியின்சுட்டியும்சூரியப்பிரபையும் சேர்த்தியான சந்திரப்பிரபையும்
பக்கத்திலுதித்த சூரியனொளிபோல் பார்வதிதலையில் ஆழ்வானும்
ராக்கோடியுந்தாங்கலுடனே ஜடைநாகம்ஜடை கொத்ஸும்
பாடாந் தண்டையும்பாதஸரத்துடன் காலாழியுடன் பீலியும்
காலோடுதலை யம்மனுக்கு காந்தியுடன் அலங்கரித்தாள்
சுந்தரியாளுட மார்தனிலே சொர்ணபுஷ்ப மாலைகளும்
வில்வபத்திர மாலைகளும் மகிழம்பூவின் மாலைகளும்
பாதிரிப்பூமாலைகளும் நல்ல பாரிஜாதப்பூமாலைகளும்
வெட்டிவேருடன் முல்லை மல்லிகை மருக்கொழுந்து மாலைகளும்
530. ருக்வேத மாலைகளும் யஜுர்வேத மாலைகளும்
சாமவேத மாலைகளும் சாஸ்திரங்களின் மாலைகளும்
எத்தனையோ புஷ்பமாலைவகைகளை ஏற்றமாகத்தரித்துக்கொண்டு
தங்கமயமாய் விளங்கிமின்னும் (சொர்ண) தண்டிகைதன்னில் ஏறிக்கொண்டு
சப்தரிஷிகள் விநோதமுடன் கூடத்தண்டிகை தன்னைச்சுமந்துவர
இந்திரையுடன் சகலதோழிகளும் இருபுறங்களும் பாடிவர
அம்மன் தண்டிகை பின்னுடனே ஆயிரம் பெண்டுகள் சூழ்ந்துவர
சுந்தரியம்மன் இருபுறமுநின்று தோழிகள்வெண்சாமரைவீச
அஷ்டவசுக்களும் தேவர்களுஞ்சூழ அஷ்டதச வாத்தியம் முழங்க
535. அடிக்கடி அந்தவீதியிலே ஆனந்தமாய்தேவாள்பூச்சொரிய
அப்ஸரஸ்திரீகள் அணியணியாய் அபிநயத்துடன் பாடிவர
துலக்கமாகின்ற வீதியிலேதேவி சூரியஉதயம் போல்வரவே
தனக்குவந்த பெருமைபோல் பெண்டுகள் தங்கள் தங்கள் அரண்மனையை
விளக்குகளால் அலங்கரித்து முத்துமுத்தாகவே கோலமிட்டு
தெளித்து எங்கிலும் பனிநீரிலேலே தோரணங்களும் கட்டிவைத்தாள்
மங்களமான சுந்தரிக்கு (பஞ்ச) வர்ணப்பொடி போட்டதட்டினிலே
பக்தியுடன்கூட மங்களஹாரத்தி பார்வதிதேவிக்குத்தானெடுத்தாள்
ஆங்கள்தோறும் ஹாரத்திஎடுத்து ஆனந்தசாகரத்திலமிழ்ந்தாள்
நாலுதெருவீதி சுற்றிக்கொண்டுதேவி ராஜஅரண்மனைவாசல்வந்தாள்
540. கோடிஜனங்களோடேயம்மன் கோட்டை வாசற்படியில் வந்தாள்
தண்டிகைவிட்டு இறங்கினஉடனே தாயாரும் ஹாரத்திக் காப்பெடுத்தாள்
மங்களஹாரத்திக் காப்பெடுத்தாள் வாஸுதேவர்சகோதரிக்கு
வாணி இந்திராணியும் லக்ஷ்மியும் வணங்கிதேவிக்குக் கைகொடுத்தாள்
ஆதரவுடனே பார்வதிதேவியை அந்தப்புறத்தில் அழைத்துவந்தாள்

# பார்வதிதேவிக்கு ஏற்றி இறக்குதல்.

தங்க ஆஸனத்தின் மேலிருந்தாளம்மன் சந்திரோதயமானுப்போல்
அருந்ததியம்மன் தேவியிடம் வந்து அமர்ந்து சுந்தரி பூங்குழலை
வகுந்து தூவலாற்றி மாணிக்கச் சிப்பினால் வாரிவிட்டு
ஒவ்வோர் மயிருக்கும் பூவிதழும் ஒவ்வோர்மயிருக்கும் பொன்னிதழும்
வைத்துமுடிந்து பின்னிவிட்டாள் மான்சவரி தன்னாலே
545. நவரத்தினத்தாலிழைத்த அழகுள்ள சூடாமணியை
சிவனுடைய நாயகியாளுக்கு சிரஸின்மேலே தான்தரித்தாள்
மங்களமான சோழிகழக்கோடி அம்மானை எழுத்தாணி சங்கும்
மரப்பாச்சி நடுவில்வைத்துமூடி வைத்தாள் மறைவாகவே
தங்கத்தினாலே அமைத்த தலைவாழையிலை போட்டாள்
கெங்காஜலந் தெளித்து குளிர்நல்ல முத்துப்போல்
சொர்னக்கெண்டியில் தீர்த்தம்வைத்து சுந்தரனார் நாயகிக்கு
பொற்கொடியாள் மேனையம்மாளும் புத்திரிக்குப் பரிமாறினாள்
மதுரமானபச்சடி ஐம்பதும் வாஸனையுள்ள பொரிகறி நூறும்
பழவகைதனில் ஆயிரமும் பணியாரவகைகளில் கோடியும்
550. திரட்டுப்பாலும் சர்க்கரையும் தித்திக்கும் பரமான்னமும்
குழம்புப்பாலுந் தேனுடனே சொர்னக்கிண்ணியில் ஆச்சியமும்
முத்துச்சம்பாவின் அன்னமும் பருப்பும் முப்பருப்புச்சேர்ந்த சர்க்கரைப் [பொங்கலும்
ஷட்ரஸமான போஜனத்தைச்சிவ சங்கரிக்குப் பரிமாறினாள்
பொற்றளிகைதனைமூடி பெரியபெண்டுகள் கூடிக்கொண்டு
அற்புதமான சிகாயப்பத்தை அந்தந்தஸ்தானங்களிலே வைத்து
குத்துவிளக்கு ஒருகையிலும் கெங்காஜலம் ஒருகையிலும்
முத்துநாழியும் கையிலேகொண்டு மின்கிளிபோலவே ஐந்துபெண்டுகள்
இஷ்டமாகவே ஈஸ்வரிதேவிக்கு ஏத்தி இறக்கிப்பாடினாள்
பக்தியுடன் சிவசங்கரியும் பரமேசரைச் சிந்தையில் எண்ணிக்கொண்டு
555. பத்தினிமார்கள் சபைநடுவே பார்வதிதேவி நமஸ்கரித்தாள்
முத்துக்குமாரன் பிறக்கவேணுமென்று அச்சுதம் எல்லவருந் தெளித்தார்
புத்திரன் பொட்டெனவேணு மென்று சுற்றுமிருந்திட்ட வஸ்துக்களை
அன்புடன் அம்மன் மறைவாக அடிமடியினில் வைத்துக்கொண்டாள்
முத்தாசனந்தன்னில் வீற்றிருந்தாள் சச்சுதானந்த ரூபிணியும்
சுற்றிலும் ஆயிரங்குஞ்சுகளை தேவிவளையவே வைத்துக்கொண்டு
அம்புஜ கரத்தினாலே கலந்து அன்னமுருட்டி வழங்கினாள்
அன்னம் புஜித்து சகலபேருடனும் அன்புடன் தேவிமகிழ்ந்திருந்தாள்
சந்தனபுஷ்பமும் தாம்பூலத்துடன் சகலபேருக்கும் வழங்கி நின்றாள்

தலைவான்பெண் கூடிக்கொண்டு தனம் தங்களுக்குப் பாதிவைத்துக் [கொண்டு

560. தலைக்குநாழிப்பணம்வீதம்போட்டு தப்பாமல் எல்லவர்க்கும்கொடுத் [தாள்

---

## ஸ்ரீபார்வதிதேவியின் சாந்திகலியாண வைபவம்.

கைலாஸநாதரும் நல்லதினத்திலே கனகபூஷணம் பூட்டிக்கொண்டு
கைலாஸத்துள்ள தேவரிஷிகளை சேகரித்து அழைத்துக்கொண்டு
வெள்ளிரிஷபத்தில் ஏறிக்கொண்டு வெண்கலபேரி முழங்கிவர
வெள்ளிமலையில் இருந்து புறப்பட்டு வேணவிருதுகள் சூழ்ந்துவர
வெள்ளிக்கிழமை உதயத்திலே வேதநாதர் ஹிமோத்கிரிக்கு
பார்வதிதேவி மனம்மகிழப் பரமேச்வர மூர்த்தியும் வந்துவிட்டார்
விச்வகர்மாவும் அந்தக்ஷணத்திலே விஸ்தாரமான ஜனங்களுக்கு
அற்புதமாகவே கலியாணமண்டபம் கற்பித்தாரந்த க்ஷணத்துக்குள்ளே
நாலுகால்மண்டப மத்தியிலே நாலுமூலைப்படமேருப்போட்டு
565. நாலுபுறமும் கொடுங்கையிறக்கி நன்றுகச் சுற்றிலும் கோலமிட்டு
மல்லிகைமுல்லைமுதலான மாலைகளை எங்குந்தொங்கவிட்டு
அல்லியரசாணி கலியாணமண்டபம் அற்புதமாக அலங்கரித்தாள்
ஆதிசிவனுக்கும்பார்வதிதேவிக்கும் அப்பியங்கஸ்நானமும்பண்ணிவைத்தாள்
மணமுடையதோர் தைலங்களிட்டு மங்களஸ்நானமும் பண்ணிவைத்தாள்
ஈரத்துகிலும் விழுத்து இழை சேர்ந்த பட்டுமுடுத்து
கால்அலம்பி ஆசமனம் கடுகெனவே பண்ணிவந்தாள்
நீலகண்டர்க்கும் பார்வதிதேவிக்கும் நிறைய புஷ்பங்கள் சாத்தியே
காந்தியுடன் மணையிலிருந்தாள் காமரூபி யருகினிலே
சாந்தி நாந்தி மந்திரங்களை சகலரிஷிகள் ஜபிக்கவே
தங்கக்குடத்தினில் கங்காதீர்த்தத்தை சாம்பமூர்த்தியின் முன்னேவைத்து
மங்களமாகவே மாவிலைக்கொத்தும் மணித்தேங்காயும் மேலேவைத்து
570. அழகான பொன்னுங்குடத்திலே அண்டையில் வைத்த ஜலஞ்செபிக்க
தஙகக்குடத்தின் கங்காதீர்த்தத்தை சாம்பமூர்த்தி கையிலெடுத்து
பாவனமாகவே ஈசரும் கையினால் பார்வதிக்கு அபிஷேகம்பண்ணி
அம்புஜபாணிக்கு கூறையுடுத்தி அன்புடன் தோழிமார் நின்றுகொண்டு
மங்களநாயகி யம்மனையப்போ மறைச்சுக்கொண்டவாள் பாடினாள்
ஈஸ்வரியை விடமாட்டோமென்று இன்பமுடனே பாடினாள்
சப்தரிஷிகளும் அப்பொழுது சாம்பமூர்த்தியைப் பார்த்துச் சொல்வார்
அர்த்தங்கொடுத்து அழைக்கவேணுமென்று ஆதிசிவனுக்குச் சொல்லலுமே
பரமேச்வரரும் மனதுக்குள்ளே பரிபூர்ணமாக மகிழ்ந்துகொண்டு

ஆதரவாகப்பணத்தைச் சொரிந்து ஆனந்தத்தாம்பூலங் கொடுத்தார்
575. சங்கரிதேவி சகிகளும்ப்போ சந்தோஷத்துடன் வாங்கிக்கொண்டு
மங்கையரை மணைதனில்வைத்து மனமகிழ்ந்தவாள் பாடினாள்

## ஸ்ரீ பார்வதிதேவிக்கு சீதனவரிசை வைத்தல்.

அம்புஜவல்லி மணையிருக்கும் ஆசிர்வாத சமையத்திலே
மூர்த்திக்கு மாமியார்மேனையம்மாளும் முப்பதுகலப் பயறெடுத்து
உற்றார்பெற்றா ருடன்கூடவறுத்து உடைத்துசெரித்து எடுத்துக்கொண்டு
கோடிதுலாம் வெல்லம்டோட்டு கொப்பரை நிறையப்பாகுகாச்சி
ஏழுகலஎள்ளை வறுத்துக்கொட்டி ஏழாயிரம் தேங்காய் கீறிட்போட்டு
கூட்டிப்பாகுடனே கலந்தாள் கோபுரம்போலவே பருப்புத்தேங்காய்
சேர்த்துக்கலந்து பிடித்து நிமிர்த்தினாள் சித்திரத்தேர்போல தேங்காயை
ஐங்கலம் பிடிக்கும் சால்பருமன் அப்பதில் ஆயிரங்கோடியாம்

580. முந்நூறுசுற்று போட்டமுறுக்கிலே மூவாயிரம் கோடிவைத்தாளாம்
முப்பதுகோடிவெல்லச்சீடை முந்நூறுமரக்கால் உப்புச்சீடை
மதுரமான திரட்டுப்பாலும் வைத்தாள் கோடிகிடாரத்திலே
பருப்புத்தேங்காய்க்குச் சுற்றிவளையக்க பத்துக்கோடி பாக்குவெற்றிலையும்
நிறுத்தித்தேங்காய்க்கு அலங்காரம்பண்ணி நீலகண்டரின் முன்னேவைத்தாள்

ஆயிரக்கலம் அரிசியுடனே அதற்குவேண்டிய சாமான்களும்
ஆயிரங்கூடை காய்கறிவகையும் ஐந்நூறுகூடை பழவகையும்
பட்டுச்சரிகை சோமனும்மடித்து பட்டுப்புடவையும் மேலேவைத்து
வேதப்பிராமணாள் பஞ்சாதிசொல்ல மேளவாத்தியம் முழங்கிவர
உடற்பிறந்தான் அச்சுதரும் ஊர்கோலத்தின் கூடவரவே

585. சிப்பல்அகப்பைவெண்கலப்பானைகள் சேத்தடுக்கியஅடுக்குப்போகணி
அடுக்குத்தவலை சோட்டுத்தவலை அழகானகுடந்தோண்டி
வென்னீர்த்தவலை பெரியதவலை விளாவிவைத்திடக் கெங்காளம்
மொண்டுகொடுக்க வெண்கலச்சொம்பு ஆற்றிக்கொடுக்க அருக்கஞ்சட்டி
எண்ணெய்காய்ச்ச இலுப்பச்சட்டி எடுத்துத்தேச்சுக்க வால்கிண்ணம்
அரப்புக்காய்ச்ச உருளியும் அள்ளித்தேச்சுக்க கிண்ணமும்
தம்பலவட்டிலும் வெள்ளிப்பேலாவும் தாம்பூலத்துடன் தங்கத்தட்டும்
குத்துவிளக்கும் தொடவிளக்கும் கொஞ்சுங்கிளி விளக்குகளும்
ஆனைவிளக்கும் ஹம்ஸவிளக்கும் அழகான சாவிவிளக்கும்

பதினாயிரம் யானைகள்மேல் பாத்திரங்கள் எடுத்துக்கொண்டு

590. பத்துலக்ஷம் யானைமேல் பக்ஷணங்க ளெடுத்துக்கொண்டு
பந்தலிடம் போராதே பரத்தினாம் பாத்திரங்கள்
நிற்கவிட மில்லாமல் நிறைத்தாளாம் வெண்கலங்கள்
பால்பசுக்கள் ஆயிரமாம் பாங்கிமார்களில் ஆயிரமாம்
ஆனைகுதிரை ஆயிரமாம் அச்சுத்தேர்களில் ஆயிரமாம்
மெத்தை தலையணை தூங்குமஞ்சம் வெள்ளிக்கரண்டகம் பாக்குப்பையும்
விலையில்லாத வெண்பட்டுஆடையும் முப்பதுபைதன்னில் மோகராவும்
சதுரான வாத்தியார் சபைநடுவே எழுந்திருந்து
அழகாய்ப்பஞ்சாதி சொல்லிக்கொண்டு அண்டமெல்லாம் அதிரவே
பெண்ணுக்குப் பட்டுப்புடவை என்றுசொல்லி பெருமையாகவே ஓதினார்
595. மாப்பிளைக்கு வெண்பட்டு என்று மதிப்பாகவே ஓதினார்
அப்போதந்த ஹிமவானும் ஆயிரம் பொன்னை முடிப்புக்கட்டி
எடுத்துக்கொண்டவர் தாம்பூலத்துடன் ஈச்வரனார்முன்னே நின்றுகொண்டு
ஜகத்பதியே உமக்கெதிரில்நான் கொடுக்கப்போவது ஏதய்யா
பத்திரம் புஷ்பம் தாம்பூலம் அக்ஷயமாயெண்ணிக் கொள்ளுமையா
அக்ஷயமாய்க் கொள்ளுமையாவென்று ஆதிசிவன்கையிலே கொடுத்தார
அற்புதமாகிய அங்கமணிகண்டு அந்தச்சபையோரும் மெச்சிக்கொண்டாள்
அன்றைக்கு ராத்திரிவேளையிலே அற்புதமாகிய லக்னத்திலே
அன்னதானமும் பலதானங்களும் அத்தனைபேருக்கும் பண்ணிவைத்தாள்
அம்மன் நாபியைத்தொட்டுச்செபித்து அந்தப்புறத்தில் அழைத்துவந்தாள்
600. பஞ்சைவேஷத்தைத்தான்களைந்து சிவன் பாங்காய்ப்பூஷணம்பூட்டிக் கொண்டு
சரிகைப்பீதாம்பரமணிந்து தங்க அரைஞாணும் போட்டுக்கொண்டு
உத்தரீயம் மேலேபோட்டுக்கொண்டு முத்திரைமோதிர மிட்டுக்கொண்டு
மன்மதனைப்போல சாம்பமூர்த்தியும் மந்தஹாஸமாகத் தானிருந்தார்
தூங்குமஞ்சத்தில் சாய்ந்துகொண்டு தங்கத்தூணிற் காலையுதைத்துக் கொண்டு
சற்றேமெள்ளச் சிரித்துக் கொண்டு சங்கரியையே நினைத்துக்கொண்டு
எப்போவரப்போராள் என்று எட்டிஎட்டிச் சிவன் பார்த்திருந்தார்
உலகத்திலுள்ள மங்கையரைப்போல உமையுமுபசாரம் பண்ணிக் கொண்டாள்
ஜகத்தினிலுள்ள பெண்களைப்போலவேதேவியும் சற்றே அலைக்கழித்தாள்
உலகவாடிக்கை போலவேயம்மன் போகமாட்டேன் என்று சொன்னாள்
605. அம்மன்கையைப் பிடித்தழைத்து ஆதிசிவனிடங் கொண்டுவிட்டு
ஈச்வரியை உள்ளே கொண்டுவிட்டு இப்புறந்தா ளிட்டுக்கொண்டு

பெண்களெல்லாரும் கூடிக்கொண்டு பொன்னுங்கதவின் இடுக்காலே
என்னபேசிக்கிறாள் இவாளென்று ஓட்டுக் கேட்டுக்கொண்டிருந்தாள்
அம்மனுங் கதவுமூலைதன்னில் ஆந்தையைப்போல் விழித்துக்கொண்டு
சித்தமும் ஹஸ்தமும் திருப்பாதங்களும் கிடுகிடென்னவே பறக்கவே
நெஞ்சும்மாரும் திடுக்குத்திடுக்கென்ன நெற்றியில் முத்துப்போல்வேர்த்
[தரும்ப
வலையிலகப்பட்ட மீன்போலம்மன் மலங்கமலங்க விழித்து நின்றாள்
சாம்பமூர்த்தியும் அந்தசமயத்தில் காமன்கணை தன்னில் சிக்குப்பட்டு
அம்மன் கையைப்பிடித்தழைப்பர் அகப்படாமலே ஓடுவள்
610. தேவியின்கையைப் பிடித்தழைப்பர் திமிறிக்கொண்டம்மன் ஓடுவள்
பின்னையுங்கையைப் பிடித்தழைப்பர் பிடிபடாமலே ஓடுவள்
தன்னையறியாத மோகத்தினாலே சங்கரியண்டையில் கெஞ்சுவர்
அண்டையிலே ரோய்க்கெஞ்சுவர் அப்பாலே முகந்திருப்பிக்கொள்வள்
தோளுடன் அம்மன் தன்னையணைத்து தோழமையுடன் அணையப்போவர்
சாம்பமூர்த்திக்கு முகத்தைக்காட்டாமல் தலையைக்கீழே குனிந்திடுவள்
காலம்போகுது என்றுசிவன் கட்டியணைத்துமே கொண்டுவந்து
துணிந்துகையாலே தானழைத்து தூங்குமஞ்சத்தில் வைத்துக்கொண்டார்
பரிமளமான புனுகு சந்தனம் பார்வதிதேவிக்குப் பூசிவிட்டார்
கொழுந்துவெட்டிவேர் மல்லிகைப்பூ கொம்பனையாளுக்குச் சூட்டிவிட்டார்
615. ஏலம்லவங்கம் சீவல்வெற்றிலை ஈசரும் திருத்தேவியுடன்
கூட்டித்தாம்பூலம் வாயிலடக்கி குமுகுமென்று மணத்திடவே
கழுத்தைக்கட்டியணைத்துக்கொண்டு கட்டிக்கொண்டு முத்தமிட்டுக்
[கொண்டு
சரஸமாகவே வார்த்தைகளைச்சொல்லி சந்தோஷமாகவே தானிருந்தார்
சகிஎல்லாருங் கதவருகில் நின்று சந்தைவைத்து ஏசல்பாடலுற்றாள்

## கதவுதிறக்கும் பாட்டு.

1. மலைய ராஜகுமாரி மங்கையே மாது நான்
சங்கரர் தானடி மானே
சொர்னக்கதவு திறவடி என் தேனே
2. விந்தையுடன் நடந்து சங்கரி பொற்கதவை
சிக்கெனத்தாள் திறந்தாள் மாது
சொர்னச்சங்கிலி திறந்தாளப்போது
3. அஞ்சன விழியாளே ஆயாஸமாக வந்தேன்
வெண்சாமரம் வீசடி மானே
திவ்ய பரிமளங்கள் பூசடிதேனே

4. அறுகு சிரஸில் வைத்து விபூதி யணிந்தோர்க்கு
பரிமள கந்த மேது சுவாமி
உமக்கு பரிமள கந்தமேதுசுவாமி

5. அர்ச்சுனன் பூஜை செய்தான் அளவற்ற கந்த புஷ்பம்
வாஸனை வீசுதடி மானே
திவ்ய பரிமளம் வீசுதடி தேனே

6. எனையாளும் ஈஸ்பரரே இளைப்பு மிகுந்ததென்ன
எந்தனிடத்தில் சொல்லும் சுவாமி
நிஜம் எந்தனுடனே சொல்லும் சுவாமி

7. அந்தர வனந்தனிலே அடமுடன் பத்மாஸுரன்
அதட்டி வந்த இளைப்பு பெண்ணே
என்னை விரட்டி வந்த இளைப்பு கண்ணே

8. பரஞ்சோதியாய் நிறைந்த பரமசிவமே உம்மிட
பக்கத்தில் காய மென்ன சுவாமி
ஒரு பக்கத்தில் காய மேது சுவாமி

9. வெந்த பிட்டுக்காக உந்தன் தகப்பன் கையால்
சந்தில் அடிபட்டேண்டி மானே
சொர்னப்பிரம்பால் அடிப்பட்டேண்டி தேனே

10. பஞ்சமுகங்களெல்லாம் கஞ்சமலர்கள் போலே
கொஞ்சம் சிவந்த தென்ன சுவாமி
கண்கள் கொஞ்சம் சிவந்த தென்ன சுவாமி

11. பக்தியாய்ப் பாணனென்னை சிரத்தையாய்ப் பூஜைசெய்தான்
நித்திரை விழித்தேண்டி பெண்ணே
கொஞ்சம் நித்திரை யற்றிருந்தேன் கண்ணே

12. சங்கரர் தேகமெல்லாம் தாங்காமல் வேர்வை என்ன
சாகாஸம் சொல்லாதேயும் சுவாமி
மெத்த சாகாஸம் பண்ணுதேயும் சுவாமி

13. கவிபாடும் பக்தனுட கவலைகள் தீர்க்கவென்று
வெறகு சுமந் தேனடி பெண்ணே
கட்டு வெறகு சுமந் தேனடி கண்ணே

14. கோமள வடிவான குந்தள நாயகியே
கோபங்கள் செய்யாதேடி மானே
என்மேல் பேதங்கள் எண்ணுதேடிதேனே

15. முத்துமூக்குத்தி நவரத்னமணி சுவலிக்க
கர்த்தன்பாதத்தை வந்து நாடினாள் தேவி
கண்டுவணங்கிக் கொண்டாடினாள்

16. சங்கீதங்கள் கோஷிக்க சங்கரியும் பூஜித்து
மங்களத்தாம்பூலம் மாற்றினாள் தேவி
தங்கக்கதவை மெள்ளச்சாற்றினாள்

17. மந்தஹாஸ சுந்தரி சிந்தை மகிழ்ந்தப்போது
கந்தங்கலந்து மார்பில் பூசினாள்
அதி சந்தோஷமாய் சாமரை வீசினாள்

18. ஆணிமுத்துமாலை ஹாரங்களுங்குலுங்க
மாணிக்கப்பொன் கவரி வீசினாள்
கையில் வீணை எடுத்து கீதம்பாடினாள்

19. ச்யாமள வடிவான சுந்தர நாயகிமேல்
காமதகனர் மெத்த மோகித்தார்
அதி பிரேமையுடன் உருகிப் பாவித்தார்

20. அஷ்ட லெட்சுமி பதியாம் அரி சகோதரியப்போ
இஷ்ட நாதரிடத்தில் சென்று களித்தாள்
அதிமட்டற்ற ஆனந்தம் கொண்டு சுகித்தாள்

21. பச்சைப்பதக்கம் மார்பில் உச்சிதமாய் ஜ்வலிக்க
அச்சுத சகோதரியும் மோகித்தாள்
அதி இச்சையுடன் பாவனை பாவித்தாள்.

---

## ஸ்ரீபார்வதிபரமேசருடன்கைலையங்கிரிக்குச்செல்லுதல்

மற்றைநாளின்உதயத்திலே மங்கையைக் கைவசம்பண்ணிக்கொண்டு
பெற்றோருற்றோருடன் சொல்லிக்கொண்டு பார்வதிதேவியைக்கூட்டிக் [கொண்டு
கொஞ்சிக்கொஞ்சி மருவிமருவிக் கோடிவார்த்தைகள் சொல்லிக்கொண்டு
வெள்ளிமலையின் சமீபத்தினில் விடையைவிட்டுக்கீழிறங்கி

620. கைலாஸந்தன்னில்தேவியுடன் காக்ஷியுடனே இருக்கும்போது
சூரபத்மனின் ஹிம்சையினால் தேவர்களும் அவதிப்பட்டு
நீலாயதாக்ஷியுடனிருக்கும் நீலகண்டரிடத்தில்வந்து
ஆலஹாலவிஷத்தைபுஜித்து அன்றைக்கு ரக்ஷித்ததேவரன்றோ
கேடுசெய்திடும் அஸுரனைக்கொன்று காத்துரக்ஷிக்கவேணுமென்று
பாடுகள்சொல்லிமுறையிடவே பரமசிவனுமாதரவாய்
மட்டுமரியாதைவார்த்தையினால் கஷ்டத்தைநீக்குவோமென்றுசொன்னார்
ஹிமயராஜகுமரியுடன் சிவனுமந்தப்புரந் தனிலே

தேவவருஷத்தில் ஆயிரம்வருஷம் தேவியுடனே இருக்கும்போது
தேவர்கள் எல்லாருங்கூடிக்கொண்டு சிந்தைகலங்கிவிசாரத்துடன்
625. வேலவரும்பிறக்கவில்லை வெளியிலேசிவன் வரவில்லை
ஏதோஇந்தஅதிசயமென்று உம்பர்கள்எல்லாருமெண்ணமிட்டு
பகவனையப்போதானனுப்பி பார்த்துவரச்சொல்லிப்போகச்சொன்னார்
தேவர்கள்சொல்லியனுப்பவுமே தடையில்லாமலேஅக்கினியும்
ஓடிவந்தாரவர் அச்சமில்லாதே உம்பர்பிரானண்டையிலே
எக்யமூர்த்தியைக்கண்டவுடன் எழுந்திருந்தம்மன்விரைவுடன்

## சுப்பிரமணியர் அவதாரம்.

வெட்கத்துடனே பீதாம்பரத்தை மின்னொளிபோலேதரித்துக்கொண்டு
பொற்கதவின் மூலையிலே பூர்ணரூபி ஒதுங்கிநின்றாள்
தேவியும்அப்புறப்பட்டபின்பு சிவனும்தம்முட வீரியத்தை
சூரர் அக்கினிகரத்தினிலே சாம்பமூர்த்தியும் விட்டுவிட்டார்
630. எக்யமூர்த்தியும் வாங்கியதை எடுக்கமாட்டாமலே தவித்து
பொறுக்கமாட்டாமல் அக்கினியும் பூர்ணகங்கையில் விட்டுவிட்டார்
தரித்தவுடனே கங்காதேவியும் தாங்கமாட்டாமல் தாபத்தை
சகிக்க ஆற்றாமல் கங்காபவானியும் சரவணையில் ஒதுக்கிவிட்டாள்
நாணற்புதரான ஓடையிலே நட்டநடுவில் ஒதுக்கிவிட்டாள்
ஆறுகுழியிலேதங்கி அது அந்த க்ஷணத்தில் ஜீவனுண்டாய்
ஆறுவிதமாகச் சூரத்தனத்துடன் அற்புதரூபங்க ளாச்சுது
வேதங்களாலும் அறியப்படாத வேணுகோபாலர் மருமக்களை
விஷ்ணுதேவர் மருமக்களும் வீறிட்டழுகின்ற வேளையினில்
கிருஷ்ணதேவர் நினைக்கலுமே கிருத்திகைதேவிகள் ஓடிவந்து
635. ஆறுகுழந்தையை வாரியெடுத்து ஆதரவுடனே பால்கொடுத்தாள்
தாங்கள்பெற்ற குழந்தைகளைப்போல தாராட்டிக்கொஞ்சிக் கொண்டிருந்
(தாள்

## பார்வதிதேவி தேவர்களை கோபத்துடன் சபித்தல்.

தேவர்கள்எல்லாரும் கூடிவந்து சாம்பமூர்த்தி குமாரர்தன்னை
காதலாகவே கண்டுகந்து கவலைவிட்டு மனமகிழ்ந்தாள்
பகவனாரும் போனவுடன் பார்வதிதேவி மனந்தளர்ந்து
கொள்ளாமனக் குறையுடனே குறைந்துபெருமூச்சு விட்டுக்கொண்டு
கோடிகாலம் தவமிருந்துநான் கூடினேன் சிவசங்கரரை
பூரணமாய்த்தவஞ் செய்திருந்தால் நான்புத்திரனையுண்டாகேனோ

தேவி அதரந் துடிக்கத்துடிக்கச் சிவந்தநயனஞ் சொயளவே
ஆதிநாயகி அமராளேப்பார்த்து அதிகோபத்துடன் ஏதுசொல்வள்
640. பூஷணலோசனர் தன்னுடனே நான் பூரித்திருக்கின்ற வேளையினில்
நீதிதப்பியே எங்களையும் நீக்கிவைத்தீர்கள் அக்கினியால்
போதுமின்றுடன் அம்மருக்கெல்லாம் புத்திரனில்லாமற்போக வென்றே
சாபத்தையிட்டம்மன் தேவர்களை சாம்பமூர்த்தியை விட்டுச்சென்றாள்
பார்வதிதேவியும் ஈசர்மேல் கோபமாய் படபடப்பாய் விரைந்துசென்றாள்
கையினுல் ஈசர்தடவித் தணிக்க கையைத் திமிறிக்கொண்டு நடந்---
(மன)ஸ்தாபத்தை நீக்கிப் பரமசிவன் ஆதரவாக அணைத்தாலும்
தேவிக்குச்சித்தம் திரும்பாமல் சிவன் முகத்தையும் பாராமல்
ஆஸனந்தன்னில் அமராமல் அந்தப்புரத்தினில் போகலுற்றாள்
கல்யாணிதேவியும் கோபமதாகவே கில்லாதுபோகின்ற வேளையினில்
645. பாதத்தைத்தூக்கி உதறிக்கொண்டு பார்வதியம்மனும் ஓடும்போது
சித்தடி ரத்னச் சிலம்பிலிருந்து தெறித்ததொன்பது நவரத்தினம்
பத்துக்கொன்று குறைய நவரத்தினம் பளிச்சென்று பின்னால் உதிரவே
உச்சிதமான மணியிலிருந்து ஒன்பதுபெண்டுகள் உண்டானாள்
முக்கண்ணர் ஒன்பது பெண்டுகளைப்பார்த்து கிட்டக்கவாருங்கள் என்று
[சொன்னார்
இஷ்டமாய் ஈசரழைக்கலுமே உமையவளுட வடிவம்போல்
மட்டற்றமாணிக்க பூஷணங்களும் வகைவகையாகத் தரித்துநின்றாள்
அத்தனைபேரும் அடுக்கடுக்காய் ஆதிசிவனண்டை வந்துநின்றாள்
சாம்பமூர்த்தியும் வேலவமூர்த்திக்கு சேனாபதிகள் உண்டாக்கவென்றே
பூரண கிருபை திருஷ்டியினாலே பார்த்தார் ஒன்பது பெண்களையும்
650. ஆதிமூர்த்தியும் அமிர்த திருஷ்டியால் அன்புடன்பார்த்த க்ஷணந்
[தனிலே
பூரண கர்ப்பத்தை தரித்துவிளங்கி பிள்ளைகள் அத்தனை பேருமுண்
[டாய்
கனத்து வயிறுபெருத்துக்கொண்டு காந்தியுடன்கூட நிற்கின்றதை
குதித்துப்போறவள் திரும்பிப்பார்த்து குடிகெட்டுப்போச்சுதென்றே
[டிவந்தாள்

---

## தேவி பரமேசர்மேல் ஆயாஸமடைதல்.

சதித்துவிட்டார் நம்மையிவர் சக்களத்திமாரை வைத்துக்கொண்டு
விழித்துப்பார்த்தந்தபெண்களையும் வெடுவெடுத்தம்மன் ஏதுசொல்வள்
ஆரடி பெண்களா நிற்கின்றது எங்கள் ஆதிசிவனார் அண்டையினில்
சூடுசொரணை வெட்கமன்றியிலே துணிச்சலுடன் இருக்கையளே

அருந்தவசு செய்தயளோ அக்கினிசாக்ஷியாய்க் கொண்டாரோ
வெகுகாலம் பரமசிவனுடன் வாழ்ந்துகொண்டு மிருந்தயளோ
655. ஆயிரங்காலம் பழகினவர்களும் அஞ்சிநடுங்கி இருப்பாளே
பட்டமகிஷி நானிங்கிருக்க சற்றும் மரியாதையில்லாதே
உத்தரவு மென்னைக் கேளாமால் கருப்பமும்நீங்கள் தரித்தயளே
அப்படித்தானே இருக்கட்டுமுங்கள் கருப்பங்கள்உங்கள்வயிற்றுடனே
சாபத்தையிட்டம்மன் சக்களத்திமாரை சாம்பமூர்த்தியைப்பார்த்துச்
ஏகதார விருதரென்றீர் இரண்டுபெண்டு எனக்கில்லையென்றீர் [சொல்வள்
பார்வதியே உன்னைத்தவிர பாரேன்ஒருத்தியை என்றுசொன்னீர்
ஈச்வரியேஉன்னைத்தவிர ஏருள்ஒருத்தியு மென்றுசொன்னீர்
சத்தியவாக்கியர் என்றும்மைச்சொன்னதைச்சுத்தமாக இப்போகண்டேனே
தத்துவஞ்சொல்லியே யோகீச்வராளுக்கு தாரகா உபதேசஞ்செய்தீர்
660. நித்தியப்பிரும்மசாரிபோலஇருந்ததைநிச்சயமாயிப்போ கண்டேனே
அர்த்தனாரீசுவரர் என்றும்மைச்சொன்னதை வெட்டவெளிச்சமாய்க்
[கண்டேனே
எத்தனைபொய்யும் பொரகடம் பூதஞ்சி எத்தனைவஞ்சனை செய்தாலும்
பர்த்தாவே தெய்வ மென்றெண்ணிக்கொண்டுநான் பொறுத்துக்கொண்டு
[மிருந்தேனே
சக்கரபாணியைப்பெண்டாகப்பாவித்தீர் தமையனென்று சகித்திருந்தேன்
புத்திரன்ஒன்றையும் பெற்றுக்கொண்டீர் போனால்போகட்டு மென்றிருந்
[தேன்
முக்தி கங்காநதியை யழைத்துநீர் முடியின்மேலே தரித்துக்கொண்டீர்
கங்காதேவி இருந்தாலிருக்கட்டும் (நம்ம) தங்கையென்று சகித்திருந்
[தேன்
இத்தனைபேரின்மேல் மோகமிருந்தால் எந்தனைவந்து நீர் வேட்பானேன்
இத்தனைபேரையும் அணையவேணுமென்று உம்பருக்குண்மையைச்
[சொல்லிவைத்து
665.எப்போ இவளோடிப்போகப்போறுளென்று இத்தனைபேரை யணைந்தீரே
வெட்டியாகவே இங்கே இருந்து நான் வீணுக்குத் துக்கப்படுவானேன்
ஒன்பதுபெண்டும் உமக்காச்சே உமக்குக்குமாரனும் உண்டாச்சே
சங்கரிநான்செய்த தவங்கள் எல்லாம் சாம்பலில் ஆகுதியாய்ப் போச்சே
உதவேது உமக்கெனக்குமென்று உதறிக்கொண்டம்மன் ஓடினள்

## நவவீரர்களும் இலட்சம் சேனாதிபதிகளும் உற்பத்தியாகுதல்.

(ஈசர்) அண்டையில் ஒன்பதுபெண்டுகளும் திண்டுமுண்டாடும் வேளை
[யினில்
அண்டர்கள் பூஷணரும் பார்த்துத்தேவி அண்டையிற்போய் வேண்டிககொள்
[ளச்சொன்னார்
பார்வதிதேவி யருகில்வந்துபெண்கள் பாதபத்மந் தீனப்பணிந்து
கோர்வையாகவே நின்றுகொண்டம்மனை கூடிக்கொண்டு துதிக்கலுற்றாள்
இரக்கத்தோடம்மன் பெண்களைப்பார்த்து பிறக்க உத்தரவுங்கொடுத்
[தாள்
670. உறக்கவீறிட் டழுதுகொண்டடனே ஒன்பது பிள்ளைகள் பிறந்தது
ஒன்பதுபிள்ளை பிறந்தவுடன் ஒவ்வொருரோமத்துக் கொன்றுவீதம்
ஒன்பதுலட்சங் குழந்தைகளும் ஒருநொடியினில் உண்டாச்சு
அத்தனைகுஞ்சு குழந்தைகளைக்கண்டு அலறிக்கொண்டந்தப் பார்வதியும்
மக்கட்டிமக்கட்டிஎன்றவள் மார்பினில் சிக்கெனச்சிக்கெனப் போட்டுக்
வயிறு கொதிக்கிறதே வஞ்சனைசெய்து கெடுத்தீரே [கொண்டாள்
பயறு விதைத்தவர்களுக்கு பதராய் விளைந்தாப்போலாச்சுதே
சம்பா விளைத்தவருக்குச் சாவியாய்ப்போனாற்போ லாச்சுதே
நாலுபக்கம் விளைந்துசொரிய நடுச்சாவிபோனாப்போ லாச்சுதே
ஒருபானையின் சோற்றிலே ஒதுக்கரிசிபோ லாச்சுதே
675 ஒருகுலையின் காயிலே ஒல்லிக்காய் ஆனாற்போலாச்சுதே
மாலையைப்போட்டு தாலியைக்கட்டி வைப்பாட்டியாய் வைத்துக்கொண்டீரே
தொடுத்தமாலையைத்தோளிலேபோட்டுதெண்டப்பெண்டாகவேகொண்டீரே
சலிப்படைந்துநீர் என்மேலே சக்களத்திமாரைக் கொண்டீரே
ஒருகுழந்தை பிறக்கவேணுமென்று உம்மையடைந்ததும் வீணாச்சே
சற்றுப்போதானாலும் விட்டுப்பிரியாதே சிச்ருஷைசெய்ததும் வீணாச்சே
போக்கிரி என்று அறிந்தும்எங்கள்பிதா போக்கிடங்கெட்டுக் கொடுத்தாரே
பாக்கியத்தை புஜிப்பனென்று எண்ணி பெற்றவரிங்கே மடுத்தாரே
உற்றார்உறவாரை எண்ணாதேநானும் உம்முடமனமுங் கோணாதே
(அரை) நாழிகையாகிலும் உம்மைப்பிரியாது நாயகரே பக்ஷமென்றிருந்தேன்
680. ஏதுக்கானாலும் என்னை இனிமேல் என்ன வருந்தி அழைத்தாலும்
வாதுக்கானாலும் உம்மமுகத்தை மறிச்சுமுழியேன் பார்த்துக்கொள்ளும்
சாமளரூபபடும் வருத்தங்களை சங்கரர்பார்க்கச் சகியாமல்
அம்பிகையைக்கிட்ட வைத்துக்கொண்டு ஆறுதலாகவே சேதிசொல்வர்
மப்புத்தட்டியவர் முதுகினிலே மாருடன்சேர்த்து அணைத்துக்கொண்டு
சிங்காஸனத்தினில் வைத்துக்கொண்டு தேவிக்குச்சேதிகள் சொல்லிடுவர்

(உன்) தந்தைஹிமவான் உகப்பாய்உனக்கிட்ட தண்டைபா்டகம் சிலம்புகளில்
திடுதிடென்றுநீ ஓடியவேளையில் தெறித்ததொன்பது நவரத்தினம்
உன்னுடசாயல் அதனில்விளங்கவே உதித்தாள் ஒன்பது பெண்களப்போ
உன்னுட பிள்ளைகரு பகாரமாகமே கண்ணாலே பார்த்திட்ட தோஷமுண்டு
685. இந்துவிரலினால் தொட்டிருந்தேனானால் இந்தஅண்டத்தைஎல்லாம்விழுங்
என்னையுமிங்கே யிருக்கவொட்டாய் உன்னுடசேதியை நானறிவேன் [கிடுவாய்
உம்பருக்காகவே அம்புஜக்கண்ணரும் எடுத்தார் மோகினிவேஷத்தை
கண்டுகொண்டாடிநான் சக்கரபாணியை கட்டியணைத்ததும் ஏச்சாச்சே
அந்தசமயத்தில் ஐயனார்வந்து உதித்ததொரக்கிப்போ ஏச்சாச்சே
வையகமெல்லாம் ஓரடியகவே வாஸுதேவர் அளந்தவுடன்
பிரும்மாண்டமான கடமுடைந்து கங்கைகருவத்துடனே வந்தாள்
அண்டத்திற்கெல்லாம் உபகாரமாகவே அடக்கினேன் கங்கை கருவத்தை
பெண்டாட்டியாய் வைத்துகொண்டா யென்றென்னை போகவர நீ ஏசுகிறாய்
பிள்ளைஉனக்கிப்போ இருந்தால்போதுமே பர்த்தா உனக்கினி வேண்டாமே
690. என்று சொல்லிச்சிவ சங்கரரும் மஞ்சத்தைவிட்டுக் கீழேகுதித்து
துப்புரவான ரிஷபத்தின்மேலே தேவியைய அழைத்து வைத்துக்கொண்டு
தண்ணீர்தளம்பிடும் பொய்கையினில் தாமரைப்பூவுள்ள ஓடைதன்னில்
புண்ணியவேளை தனிலே ஜனித்துப் பிறந்துவளர்கிறான் உன்குழந்தை
ஆறுகுழந்தையைப் பார்க்கலாமென்று அம்மனுடனே வரும்போது

## பார்வதிதேவி ஆறுவடிவான குழந்தையை அணைத்து ஆறுமுகத்துடன் கூடிய ஒருகுழந்தையாக எடுத்துக்கொள்ளுதல்.

பார்வதிதேவி மனமகிழ்ந்து பாலகரைஎண்ண ஆவலுடன்
மாருக்குள்ளே நிறைந்திருக்கும் மன்மதன்கணை ஜயிக்கவைக்கும்
கொன்றைக்காய்போலவே தான்விளங்கும் கொங்கையிரண்டுஞ் சுரந்துவர
பொன்னுங்கலசத்தைப்போன் றஸ்தனத்திலே பொங்கிவழிந்திடப்பாலமுதம்
இரக்கமாகவே கன்றுக்குவேண்டி இரங்கிச்சுரந்த மடிபோலே
695. அருவிபோல பெருகிடும்பாலை அடிக்கையினால் அரக்கிக்கொண்டாள்
பிள்ளைப்பெறாத மலடிகளுக்குப் பெருகுமோ இப்படிப்பால்தானும்
உள்ளும்புறமும் நிறைந்தவரைப்பார்த்து உள்ளபடிக்குஉரையுமென்றாள்
தேவியும் இப்படிச் சொல்லலுமே சிவனும்மெள்ளச் சிரித்துக்கொண்டு
ஆடாடென்று ஆடினாயே ஐயனார்கோவில் பிடாரிபோலே
கூடாதென்று அலையக்குலைய கோபித்துக்கொண்டு நடந்தாயே
அனேகங்காலமாக அமராள் அஸுரன்கையினால் அவதிப்பட்டு

சுவாமி யுந்தன்சரணங்கெதியென்று சந்ததமெநதனை வேண்டினாள்
சூரனுய்ஒரு புத்திரனை தேவியே உன்னிடம் உண்டாக்கி
அஸுரசம்ஹாரம் பண்ணவென்று ஆயிரங்கால மிருந்தோமே
700. தேவவருஷத்தில் ஆயிரம்வருஷம் தேவியே நாமுமிருந்தோமே
வீரியம் வெளியாகுஞ்சமயத்தில் வந்துவிட்டாரே அக்கினியும்
ஓடிப்போனுய்நீ எந்தனைவிட்டு எங்கேவிடுவேன்நான் வீரியத்தை
பகவனுர் கையிலேகொடுத்தேன் அவர்போட்டார் பவித்திர கங்கைதனில்
தாங்கமாட்டாமல் கங்காதேவியும் சரவணையில் ஒதிக்கிவிட்டாள்
நாணற்பயிரான திட்டினிற்குழந்தை நாராயணர் பாதுகாத்திருக்கார்
ஆறுகுழந்தைபிறந்து உனக்கிப்போ ஆதரவாகவளர்கின்றது
இஷ்டம்உன்மேல பரிபூர்ணமாகவே முத்துக்குமாரனைத் தநதுவிட்டேன்
பிள்ளைஇருநதிட்டாற்போது முனக்கிப்போ பர்த்தாவு மினித்தேவையில்லை
வீணுக்குவீணுய் உழைத்தேனென்றுநீ வீணுய் வருந்திக் குதியாதே
705. ஒன்பதுபேரை படைத்தேனென்றுநீ தம்பட்டம்போல இரைநதாயே
உன்னைத்தவிரவே இன்னமொருத்தியும் என்னோடிருந்ததைக்கண்டாயா
அன்னியதேசத்துப் பெண்ணைவிசாரித்து அர்த்தங்கொடுத்துநான்
(கொண்டேனே

உன்னைப்போலாயிரம் பெண்டுகளும்ஒருகோடி கொடிக்கின்றபோதுக்குள்ளே
பன்னகபூஷணருக்கு நினைத்தக்கால பஞ்சமோவேறு கிடையாதோ (கிறுப்
என்னத்தைக்கண்டுநீ இத்தனைபோதாக உத்தண்டமாய் வார்த்தைசொலலு
இன்று துவக்கி உனக்கும்நமக்கும் இத்துடன் தீர்ந்ததுஎன்றுசொன்னார்
சொன்னவுடன் சிவசங்கரியும் இங்கிதமாகச் சிரித்துக்கொண்டு
என்னைவிட்டால்கெதி ஏதுஉமக்கு உம்முடசேதியும் நானறிவேன்
நானேஜகத்திற்கு நாயகிஎன்பதை நாலுவேதங்களுந் தானறியும்
710. மானுபிமானங்கள் ஏதுக்குமக்கு மனதுகுழம்பிமயங்குகிறீர
போதும்உமக்கிப்போ கோபங்கள்ஏதுக்கு போதங்கெட்டவரைப்போல
பார்வதியை அரைநாழிகையாலும் பாராதிருக்கவும் மாட்டீரே
என்னமகிமை யிருந்தாலும்பெண்டுக்கு மன்னவரன்றிமகிமையில்லை
என்று சொலலிஈசர் பாதபத்மத்தை ஏற்றித்தொழுதாள் பொறுக்கவென்றே
கையிற்குழநதையும் வேணுமென்றுசொல்லிக் காலடியிலபணிந்துநின்றாள்
கையினல் தேவியை வாரியெடுத்து (காள) கண்டர் ரிஷபத்தி ]ல வைத்து
ஃகொண்டு

மங்களமான மகாமூர்த்தவேளையில் மைந்தரைக்காணவே வந்துவிட்டார்
பொன்னுங் குமாரனைக் கண்டவுடன்தேவி பேரானந்தமாக வாரியெடுத்து
ஆறுகுழந்தையைக் கண்டவுடனம்மன் ஆவலுடனே யணைத்துக்கொண்டாள்
715. ஆறுமுகம் பன்னிருகை யொருதேகம் அற்புதக்குழந்தை யாய்விளங்க

உற்றுப்பார்த்துத் திகைத்துசிவன்தான் இரண்டாய்ப்பிரிந்தாரோ
வேறேசந்தேகம் ஒன்றுமில்லையென்று வெட்டவெளியாயறிந்துக்கொண்டு
முத்துக்குமாரனைப் பக்கத்திலணைத்து பார்த்தாவுடன் கைலாஸம் வந்தாள்
பொன்னுங்குமாரனைக் கொண்டுவந்து (பூரண) சந்திரன்போலவே மெத்தையி
சுந்தரிதேவி வளரவிட்டுச் சகி தங்களுடனே தாராட்டினாள் (னில்

---

## மங்கள வாழ்த்து.
## லாலி மெட்டு.

1. லாலிமுத்தையலாலி ஓங்கார லாலிமால் மருகலாலி
லாலிசிவபுத்ரலாலி செந்தில்வளர் லாலிசிருங்காரலாலி
2. அம்பிகாநாத்ரான மஹாதேவர் கண்மணியான புத்திரன்
தும்பிக்கையான்பதத்தை அனுதினமும் சூடினேன் சென்னிமீதில்
3. கச்சுமுலைமாதுவள்ளி தெய்வானை காதலன் சூரகாலன்
பச்சைமயில் ஏறுகலாபன் சிவதிருப் பரங்குன்றன் துணையாகவே
4. சந்திரக்கைலைநாதன் ஹிமகிரியில் தேவியுடனுல்லாஸமாய்
சிந்தைமகிழ்ந்திருக்கும்போது ஆறுமுக சுதன்வரவேமனநினைந் (தார்
5. கோடிரவி உதயஒளியாய் ஆறுமுடி கொண்டு ஈராறுபுஜமும்
தேடியே அமரர்போற்ற மால்மருகன் சிவந்தவடிவோடுவந்தான்
6. வந்தபாலகனை உமையாள் அன்புடனே வாரியே மடியிலவைத்து
விந்தையாய் உச்சிமுகந்தாள் மஹாதேவர் வேகவதிநீராடினார்
7. வெண்புலித் தோலணிந்துபளபளென விபூதிக்கீற்றுமிட்டு
பண்புடன் மணிகள்சொர்னம் மறையோர்க்கு பாங்குடன் தானஞ் (செய்தார்
8. கன்னிகாதானமீந்தார் சிலபேர்க்கு கன்றுடன் பசுவுமீந்தார்
அன்னதானங்களீந்தார் சிலபேர்க்கு ஆடையாபரணமீந்தார்
9. காசினியோர்கள்வாழி விண்ணுள்ள கடவுளர்முனிவர் வாழி
தேசமெங்கும் நீதிவாழி எங்கள்திருச்சுப்பிரமணியேந்திரன்வாழி

சோமாஸ்கந்தரைக் காணவேணுமென்று ஸுரகன்னிகைகள் கூடிவந்தார்
வாமதேவரின் பாலகரைக்கண்டு மகிழ்ந்து ஹாரத்திக் காப்பெடுத்தாள்
பன்னிரண்டாநாளின் உதயத்திலே பார்வதியாளுட பாலனுக்கு
வாஸனையான தைலமிட்டு மங்களஸ்நானம் பண்ணிவைத்தாள்
720. பரமசிவனும் பாலகனைப் பரிவாகமடியின்மேல் வைத்துக்கொண்டு
பன்னிரண்டுக் கொன்று குறைந்த ருத்ராளுடன்உம்பர் முனிவருங் கூடிக் கொண்

முன்பாக அக்கினி நின்றுஜொலிக்க இந்திராதிதேவர்மலர்சொரிய
அந்தணர் வேதங்கள் ஓதிப்புகழஆறுசாஸ்திரமும் சொல்லி முழங்க
சுந்திரமூர்த்தியும் அந்தசமயத்தில் சுவாமி நாதர் வலச்செவியில்
கந்தனென்றும் சுப்பிரமணியனென்றும் கார்த்திகேயன் முத்துக்குமார
னென்றும்
ஷண்முகனென்றும் வேலவனென்றும் சொன்னார் செவியில் மூன்றுதரம்
கீர்த்தியாகின்ற நாமகர்மத்தை சாத்தி யானந்தமானபின்பு
மூர்த்தியானந்தர் உச்சியைச்சங்கரர் முகந்துகொண்டு மகிழ்ந்திருந்தார்
சேர்த்துப் பாலரை முத்தமிட்டுக்கொண்டு தேவியிடத்திலே தான்கொடுத்
725. கொடுத்தவுடனே குந்தளநாயகி பெருக்கமாய் இருகரத்தினால் தார்
ஜகத்பதியையும் வாங்கிக்கொண்டு அம்மன் திருமடியின்மேல் வைத்துக
கொண்டு
வலப்புறத்து ஸ்தனத்தின் பாலை திருக்கனிவாய் தனிற்கொடுத்தாள்
மகத்துவமான ஆதிசங்கரர் விருப்பமாகவே அந்தணர்க்கு
கொடுத்துசொர்ணங்கள் விதவிதமாகக் கோடிபசுவுந் தானஞ்செய்தார்
மதிக்கவே சொர்னம் ஆயிரங்கோடி வாரிவழங்கினார் பூரணமாய்
ஜகத்பதி சுப்பராயர்மண்டல முகத்தைப்பார்த்து மகிழ்ந்திருந்தாள்

## பாலசுப்பிரமணியரின் பாலசோபை.

திருக்கலியாணத்தை சுவாமிக்குச்செய்து திருநாமங்களுஞ் சாற்றியபின்
ஜகத்பதிபாலசுப்பிரமண்யரின் திருவிளையாட்டைக் கண்டுகந்தாள்
சிவந்த அம்புஜம்போல சுவாமியின் பாதபங்கஜக்காந்தியும்
730. அமைந்ததண்டையும் சிலம்புவெண்டயம் அரும்புச்சலங்கை நூபுரம்
திசைகள் திக்கெட்டும் விளங்கிச்சோபிக்க சுப்பிரகாசமதாகவே
இடைதனில் அரைவடமும் கிண்கிணி ஒட்டியாணம் பட்டை அரைஞாணும்
அரைதனில் அரைச்சலங்கைத்தொங்கலும் மருங்கினில்கடுசூத்ரமும்
கனகபீதாம்பரமும் சுவாமிக்கு (சூர்யன்) உதயமானாற்போல் விளங்கவே
உதரநாபியில் அனந்தங்கோடி பிரமாண்டங்களும் அடக்கமாய்
அமைந்தவயிறும் தளதளென்னவே கமலஉந்தியுங் காந்தியுடன்
புனுகுதங்கத்தூள் கந்தங்கலந்து பூசினதிருமார்புதன்னில்
கதிரவன்வந்து உதயமானாற்போல் கண்டசரப்பளி பதக்கமும்
நவரத்தினமாலை பவழமாலையும் நாலுதிக்கிலும் விளங்கவே
735. இழைத்ததங்கத்தில் நவரத்தினங்களால்உருண்டமாணிக்கக்காரையும்
புலிநகத்துடன் சக்கரப்பதக்கமும் பூர்ணசந்திரனுதயம்போல்
பச்சைக்கல்லுடன் வஜ்ஜிரமிழைத்த பதக்கம் வரிசையாய்விளங்கவே
முத்துமாலையும் மோகனமாலையும் வஜ்ஜிரப்பச்சைக்கல்மாலையும்

சுந்தரமான வீரசங்கிலி கந்தர் கரத்தினில்விளங்கவே
பஞ்சாட்சரமாலை ஆயிரம் கந்தசுவாமி திருமார்பினில்
சங்கையில்லாமாலை சுவாமிநாதர் கண்டத்தில் பரிபூர்ணமாய்
உன்னதமாகநீண்டு உருண்ட பெருத்தசுவாமியின் கரத்தினில்
கங்கணத்துடன் குலுங்குந்தோள்வளை தங்கக்குஞ்சியுந் தாழித்தும்
ஜகத்திற்கெல்லாம் அபயங்கொடுக்கும் சுவாமிநாதர்கரத்தினில்
740. அடுக்குமோதிரம் பவித்திரங்கணையாழி உருட்டும் வைரத்தால்
நிறைத்துசுவாமி பத்துவிரலுக்கும் திசைகள் எட்டும்விளங்கவே
இந்துவினில் கோடானுகோடிகள் உதயமாகிய காந்தியைப்போல்
பவழம்போல சிவந்தஅதரமும் பொன்னும்பணம்போற் கனிவாயும்
நல்லமுத்துப்போல் தந்தஒளியும் நகையும் மின்னலொளிபோல
கொஞ்சிக்கொள்ளும் கிளிமூக்குப்போல கந்தருடைய நாசிகையும்
பஞ்சவர்ணக்கிளிகள்கோதும் பழத்தைப்போல அதரமும்
தங்கக்கண்ணாடிபோலசுவாமி கன்னக்கமலக்காந்தியும்
சொர்னத்தாழை மடலைப்போன்ற சுவாமிபன்னிருகாதிலும்
சங்குசக்கர முத்துக்கடுக்கனும் தளதளென்னப் பச்சையும்
745. சுந்தரமான தோள்புஜத்தினில் தொட்டுக்கொண்டசைந்தாடவே
மந்த ஹாஸமும் குளிர்ந்தபார்வையும் வளைந்தபுருவக்குறிகளும்
சந்திரப்பிறைபோன்றநெற்றியில் சாதிமாணிக்கச்சுட்டியும்
கந்தர் ஆறுமுடியில்நீண்ட கறுத்தகுழலினகற்றையும்
வந்துநெற்றியில் வளைந்து சுருண்டு சுந்தரமாகவிளங்கவே
ஷண்முகருடைய ஆறுசிரஸில் தரித்தமாணிக்கக்கிரீடமும்
மந்தஹாசமும் சுவாமியின் ஆறு மண்டலமுக காந்தியும்
மன்மதனில் கோடிகோடிப்பேர் வந்துஉதயமாய் நின்றாலும்
கந்தருடைய வடிவழகிற்கு கால்வாசி ஈடாகமாட்டாது
அந்தவடிவை ஆதிசேஷரே அளவிட்டாலுந் தானுமுண்டு
750. பின்பு ஒருவரால் கண்டுஅளவிடப் பிரம்மாதிகளாலுங்கூடாது
உற்பாதமானவடிவழகுடன் உதயமாய்வந்த பாலகரை
கற்பூரநாயகி கண்டுகளிப்புடன் ஒக்கலையிலம்மன் வைத்துக்கொண்டாள்
முத்துக்குமாரரை ஆறுமுகவரைமுத்தமிட்டுக் கண்ணிலொத்திக்கொண்
(டாள்

---

## கந்தமூர்த்தியின் பால லீலை.

மூர்த்திமூவரும் முக்கோடி தேவரும் முனிவருங்கண்டு மகிழவே
கீர்த்தியாகிய மணியரும் பால லீலைகளையுங் காண்பித்தார்
மாற்றிலுயர்ந்தசொர்னத்தங்கத்தை சேர்த்து உருக்கிப்பூமியில்

வார்த்துவைத்த வடிவழகுபோல் வாஸுதேவர் மருமகனும்
தீர்க்கமாக ஒருக்களித்துக்கொண்டு திரும்பிக்கீழே குப்புறித்து
சாஸ்திரப்படி சேஷர்தன்னுடை சிறுபடமெடுத்தாடுதல்போல்
755. மகத்துவமான சுப்பிரமணியர் மாரால்நகர்ந்த திருவழகை
அனுக்கிரகஞ்செய்யும் திருக்கரங்களை அழுந்தப்பூமியில் ஊன்றியவர்
சிறுத்த திருமுழங்காலை மடித்துத் தவிழ்ந்து சுவாமியும் வருகவே
எடுக்கவேணுமென்று ஈஸ்வரிசகியும் உகந்து சுவாமி முன்னே வந்தாள்
பெருக்கத்துடனே ஆறுமுகவரும் பின்திரும்பிப்பார்த்துச் சிரித்தவர்
எடுக்கவந்திட்ட தாஸிகையினில் அகப்படாமலே மணியரும்
சுருக்காகத் தவிழ்ந்தோடியேவந்து தேவிமடியில் ஏறினார்
ஏறிமடிமேல் இருந்த சுவாமியின் கோடிமன்மத ரூபத்தை
வாரித்தேவி திருக்கரத்தினால் மடியினில்வைத்து முத்தமிட்டு
பெருத்த அமிர்த கலசம்போன்ற எதிர்த்த கொங்கையின் பால்களை
760. வேலவர்திருவாயில் கொடுத்துமணியரை விடாயாற்றினாள்
ஆறுமுகத்துள்ள பன்னிரண்டுகாதிலும் அசையமகர குண்டலங்கள்
கந்தரும்மனங்குளிர அம்மைக்கு காதாட்டி முகங்காண்பித்தார்
செம்பொன்உருட்டுத் திருக்கணையாழி திக்குகளெங்கும் விளங்கவே
சிவசங்கரிகண்டு கண்குளிரவே சப்பாணிகொட்டிக் காண்பித்தார்
கங்கணத்துடன் ஹஸ்தகடகமு முன்கைமுல்லாரியும் தாழித்தும்
சுந்தரமான பொன்னணி மின்ன தோள்வீசி முகங்காண்பித்தார்
தத்திக்குதித்துவிழுந்து பூமியில் தாவிமண்ணெல்லாம் அளைந்தவர்
எட்டிக்காலைவைத்துப் பத்தடி தத்தடியிட்டுக் காண்பித்தார்
கொட்டிக்கைகளை குதித்துக்கூத்தாடி குலுங்கநகைத்துச்சிரித்தவர்
765. முத்துமுத்தாய் வேர்த்தரும்ப நிர்த்தனம்பண்ணிக்காண்பித்தார்
ஒட்டியாணமும் பட்டை அரைஞாணும் இடையிற் கிண்கிணிமணிகளும்
கட்டினகடுசூத்திரத்துடன் கனகரத்தின அரைவடங்கள்
சலங்கை குலுங்கிச் சலசலென்க மகிழ்ந்து நிர்த்தனங்காண்பித்தார்

## முத்துக்குமாரரின் திருவிளையாட்டு.

வனத்தினிலுள்ள மயில்கள் குயில்கள் மாடப்புறவுடன் கிளிகளை
பிடித்துக்கூட்டினில் அடைத்து சுவாமியும் பஞ்சவர்ணக்கிளிகளை
கொடுத்து மதுரமானபழத்தை கிளிக்குவாசகம் பழக்கினார்
காட்டினிலுள்ள கரடிசிங்கம் வேங்கைப்புலியுடன் கலைகளை
பிடித்துஇழுத்துத் திருக்கரத்தினால் சுற்றியே விளையாடினார்
ஒத்ததோழர் கணநாதருடன் உகந்து வீதியில் ஓடிவந்தார்

770. மத்தகஜங்கட்டி சகடைநாலுள்ள மாணிக்கப்பொன்தேர்களில்
சித்தடிவைத்துத் தேரின்மேலேறி தோழமாருடன் கூடியே
பொற்பாதத்தினால் குந்துப்பிடித்து பிரிந்துநின்று பந்தடித்தவாள்
ஒருத்தருக்கொருவர் கோத்துக்கைகளை கட்டுந்தோரணம் போல நின்று
கட்டுக்கண்ணும்பூச்சிபொத்தி காணமலோடி மறைந்தவாள்
உக்கிரமாக இரைந்துவெளிவந்து ஓடியேவிளையாடினாள்
கோடிமன்மதரூபமான கொஞ்சுங்குமாரனும் கோலத்துடன்
ராஜவீதியில் ஓடிவிளையாடி நவவீரர் லக்ஷஞ்சேனையுடன்
வீசிவீசித்தெருவில் நடந்து விழிகளினால் மிரட்டிக்கொண்டு
உலகத்திலுள்ள கன்னிகைமார்களும் மோகிக்க விளையாடினார்
775. விருத்தவேஷமெடுத்து கொண்டு முக்கிக்கொண்டு தடிஊணிக் [கொண்
பொக்குப்பொக்கென்று இருமிக்கொண்டு பொட்டையைப்போல் கண்ணை [மூடிக்கொண்
எப்படியப்பா வழிசொல்லுங்களென்று அப்படியும் விளையாடினார்
பச்சைக்குதிரையின் மேலேறி பொன்னுங்கடிவாளங் கைப்பிடித்து
இந்திரருலகம் சந்திரருலகம் எல்லாஉலகமும் சுற்றிவந்தார்
பட்டணமெங்கிலும் சுற்றியேமணியர் பரிபூரணமாய் விளையாடினார்
பச்சைக்குதிரையை விட்டிறங்கிவந்து பார்வதிதேவியைத்தான்பணிந்த
வந்துபணிந்த பாலகரை கண்டு மகிழ்ந்து பார்வதிதேவியும்
கைலாஸநாதர் புத்திரனுக்குக் கர்பூரஹாரத்திக் காப்பெடுத்தாள் [தா
திருஷ்டி தோஷங்கள் வாராமல்தேவியும் திருவந்திக்காப்புத் தானெடு
780. கர்பூரநாயகி கண்டுகளித்து ஒக்கலையில் தூக்கிவைத்துக்கொண்டா
முத்துகுமாரனை ஆறுமுகனை முத்தமிட்டுக் கண்ணிலொற்றிக்கொண்டு
நெற்றியிற்கண்ணைப்படைத்த சிவனிடம் நித்தியகல்யாணியுந்தான் கொடு [தா
அர்த்தனாரீசரும் வாங்கிக்கொண்டு ஆனந்தமாரோ டணைத்துக்கொண்டு
உச்சியைச் சங்கரர் மோந்துக்கொண்டு உல்லாசமாக அணைத்துக்கொண்டு
உற்றுற்றுப்பார்த்து மகிழ்ந்துகொண்டு ஈசர் உமைக்கும் நடுவினிலே
முத்துக்குமாரனை வைத்துக்கொண்டு நித்தியானந்த மடைந்திருந்தாள்

---

## சக்திவேலாயுதமூர்த்தி சூரபத்மன் முதலியோரை ஸம்ஹரித்தல்.

அப்புறமுஞ்சிலநாட்கள் கழிந்தபின் சுக்கிலபக்ஷத்துச் சந்திரன்போல்
உச்சிதமாக உயர்ந்துவளர்ந்த சுப்பிரமண்யரைக் கண்டுமாாள்
கட்டிக்கரங்களைக் கூப்பிக்கொண்டு சிவசங்கரரே கிருபைபாருமென்றாள்

785. அப்படியாகட்டும் என்று சதாசிவர் ஆறுமுகவரைக்கிட்டழைத்து
சக்திவேலாயுதங் கைக்கொடுத்து அஸ்திரமப்பிரோப தேசம்பண்ணி
வெற்றிவேலினால் மடியவடித்துவா ஆயிரத்தெட்டு அண்டமெல்லாம்
என் அப்பனேநீ ஜெயித்துவாவென்று ஆதிசிவனும் விடையளித்தார்
அப்படியாகட்டும் என்றுசொல்லிக்கந்தர் ஆனந்தமாகச்சிரித்துக்கொண்டு
பக்தியுடன் சிவசங்கரரை பார்வதியை நமஸ்காரம்பண்ணி
சட்டமாய்த்தம்பிமார் ஒன்பதுபேருடன் சேனாபதி வீரவாகுவுடன்
மட்டமித மற்றசேனையும்மந்திரியும் வாசப்பிரதானி தளபதியும்
கட்டுமுட்டாகவே வந்திறங்கிக்கந்தர் கிரௌஞ்சபர்வதத்தைப் பிளந்து
விஸ்தாரமாகவேபோயி தங்கியந்தவீரமாயேந்திரப் பட்டணத்தில்
790. அற்புதமாகவே யுத்தந்தொடுத்தார் ஆறுமுகவர் அஸுராளுடன்
துஷ்டசூரனைத்தாருகனை சிங்கமுகனுடன்சேனைகளை
சக்திவேலாயுதம் விட்டுப்பிளந்து சூரபத்மனுட சேனைகளை
பஸ்மமாகமடியவடித்த சுப்பிரமண்யர்க்குச் சோபனம் சோபனம்
சக்திவேலாயுதம் பட்டுவிழுந்திட்டசூரபத்மனின் ஜீவனப்போ
விஸ்தாரமாக இரண்டாய்ப்பிரிந்துமுத்துக்குமாரர்க்கு வாகனமாய்
அக்கினிஆதித்தன் காந்திபோல்விளங்கிக்கொக்கோழியுடன் மயிலுமாய்
சுப்பிரகாசமாகஓடிவந்து சுவாமியின் பாதத்திலே பணிந்து
சச்சுதானந்த மூர்த்திதன்னுடன் சேர்ந்து போனான் சூரபத்மன்
அத்தைக்கண்டு அமராளெல்லாம் ஆனந்தசாகரத்தில்அமிழ்ந்தாள் [நின்றாள்
795. சுப்பராயருக்கு சொர்னபுஷ்பத்தை சொரிந்துபோற்றித் தொழுது

## ஷண்முகமூர்த்தியின் திருக்கலியாணம்.

சொர்க்கலோகத்தில் கூட்டிவந்து சிங்காஸனத்தினில்வைத்து ஷண்முகரை
வைத்துஅமராள் அபிஷேகம்பண்ணி மணியரைச் சேனாதிபதிஎன்று
இந்திரன்கன்னிகை தெய்வானையை சுந்திரமூர்த்தி குமாரனுக்கு
மங்களமாகக்கொடுத்து கலியாணத்தை மாட்சிமையுடன் நடத்திவைத்தான்
சங்கையில்லாத மாணிக்கம்சொர்னம் சுவாமிக்கும் உசிதமாய்க் கொடுத்தாள்
மஞ்சக்காணியும் தெய்வயானைக்கும் மட்டுமிதமில்லாமற் கொடுத்தாள்
சிங்காசனந்தன்னில் தெய்வானையுடன் மங்களமாகவே வீற்றிருந்தார்
வள்ளிநாயகி அம்மனும்வேடரின் கன்னிகையாக வளர்ந்திருந்தாள்
சுந்தரமுகவடிவுடனே வள்ளி தினைக்கொல்லை தன்னில் காத்திருந்தாள்
800.ஷண்முகர் அதை அறிந்துகொண்டு க்ஷணப்போதினில் அங்கு ஓடிவந்து
இன்பமுடனேகச். சுந்தரிவள்ளியை ஏற்றமாய்க் கலியாணஞ் செய்துகொண்டு
ஆறுமுகவரும் நாயகிமாருடன் ஆதிசிவனுமை யண்டை வந்தார்

கணமூனறுடைய கைலாஸநாதரை காமாக்ஷிமுதலி சுநதரியை
ஷண்முகர் தன்னுடதேவிமாருடன் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார்
கொஞ்சுங்குமாரனின் இரண்டுபுரத்திலும் வந்துபணிந்த மருமக்களை
மங்களமாகவே ஆசீர்வாதம்பண்ணி மாணிக்கமுத்தாரத்தி எடுத்தாள்
கண்டவுனே ஆனந்தமாய் நீலகண்டரும் பார்வதியம்மனுமாய் (ருந்தாள்
அந்தப்புரத்தினிற் கூட்டிப்போய் ஆணிப்போன் ஆஸனந்தன்னில் அமர்ந்தி

## இச்சோபனத்தின் வைபவமும் மங்களவாழ்த்தும்

பார்வதிதேவி சாம்பமூர்த்திக்கு மாலையிட்ட வைபோகத்தை
805. பரதேவியுடனே சாம்பமூர்த்தி கூடியிருந்த கதைகளை
ஆறுமுகவர் பூரணமாய்வந்து அவதாரமான புதுமையை
தேவருக்கனுகூலமாகியே துஷ்டாளைத் துண்டித்தவீரத்தை
பூமிதேவியின் பாரமிறக்கி பிரஜையைரக்ஷித்த கிருபைகளை
ஆதிவேத வியாஸமுனியே அப்பாசாஸ்திரிரூபமாய்
பூமியில்வந்து அவதாரமாகி வேதாந்தவடிவாகியே
பாதிச்சோபனம்தன்னைச் சுயங்கட்டி பிரசித்தமாக்கியே ஜகத்தினில்
காலாந்தரத்தை அடைந்து சாம்பமூர்த்தி தன்னுடன் சேர்ந்தபின்பு
குறையானகந்தர்சோபனம் பாதியாயிருக்கலாகாதென்று
நிறைந்துசோபனம் பூரணமாயெங்கும் பரவஅம்மனும் எண்ணிக்கொண்டு
810. ஆதிபராசக்தியம்மனே அலமேலு அம்மாள் ஹிருதயத்தில்
அமிர்தம்போலெங்கும் பெருகவேவைத்து அந்தர்த்தானம் அடைந்தபின்
வேப்பத்தூர் அலமேலுஅம்மாள் வெங்கடேசருட கிருபையினால்
தீர்க்கமாகவே தேவிகலியாணச் சோபனந்தன்னைப்பூரித்தாள்
வாக்கினாலே அமிர்தம்பொழிந்து கூட்டிக்கட்டினமாலையை
சாற்றித்தேவியின் திருக்கழுத்தினில் சம்பூரணமான சோபனத்தை
வாக்கும்மனதும் குளிரவிளங்க வந்துசொல்லிக்கொண்ட பேர்களும்
தீர்க்கமான கருத்துடன்சொல்லிக் கற்றுக்கொடுத்தபேர்களும்
கேட்டுச்செவியும் மனமுங்குளிர்ந்து ஆனந்தமாகியபேர்களும்
815. மோக்ஷமடைந்து விசுவம்பரநாதர் சுவாமிபாதத்தில் சேருவாள்
மோக்ஷம்நெல்லிக் கனிபோல் கைவரும் முக்தியாகும் பலப்பழத்தை (ளை
தீர்க்கமாகவேதந்தேன் தந்தேனென்று ஸ்ரீ பார்வதி சத்தியமாகச்சொன்
மோக்ஷம்தந்த சிவராஜயோகிக்கும் முக்திக்கும் பராசக்திக்கும் சோபனப்
நாற்பத்தெண்ணாயிரத்தெட்டு ரிஷிகட்கும் பத்தினிமாருக்கும் சோபனம்
(சோபனப்
ஐம்பத்தாறுதேச ராஜராஜருக்கும் நன்மையுண்டாகவே சோபனம்
(சோபன

அறுபத்தாறுகோடி தீர்த்தமுதலான ஆதிகாவேரி கங்கைக்குஞ் சோபனம்
அண்டத்திலுள்ள ஜனங்களெல்லாரும் ஆனந்தமுக்தியடையவே சோபனம்
பக்ஷிக்குள்ராஜன் கெருடன்முதலாக அச்வத்தவிருக்ஷமனைத்திற்குஞ் சோ
(பனம்
அக்குரூரர்நாரதர்பிருங்கிமுதலானசிஷ்டப்பிரஜாளுக்குஞ்சோபனம்சோபன
820. வசிஷ்டர் அகஸ்தியர் பாரத்வாசர்முதல் மார்க்கண்டேய முனிவர்க்[ம்
[குஞ்சோபனம்
தருமபுத்திராதிகள் தாசரதிராமர் சதுர்முகர் நாராயணருக்குஞ் சோபனம்
ஆதிடையம்பிகை மீனாக்ஷியம்மை அழகிய சொக்கநாதர்க்கும் சோபனம்
அறம்வளர்த்திட்ட ஆனந்தமூர்த்திக்கும் ஐயாறப்பர்க்குஞ் சோபனம் சோ
(பனம்
சிதம்பரேசர் சிவகாமியம்மை தில்லைமூவாயிரத்தாருக்குஞ் சோபனம்
கச்சியில்வாழும் ஏகாம்பரநாதர்க்கும் காமாக்ஷி மகாதேவிக்கும் சோபனம்
விச்வநாதர் விசாலாக்ஷியம்மை மேனை பர்வதராஜர்க்கும் சோபனம்
சக்திகணபதி ஷண்முகர்தன்னுட தேவிமார் இருபேர்க்கும் சோபனம்
அஷ்டகஜத்துடன் திக்குப்பாலர்முதல் அக்கினி வாயு வருணர்க்குசோ
(பனம்
சுக்கிரன்சூரியன் சந்திரன்முதலாம் கின்னரகிம்புருடாளுக்கும் சோபனம்
825. மல்லிகைமுல்லை மந்தாரைமுதலாக வில்வந்துளஸிக்கும் சோபனம்
(சோபனம்
ஆதிமூர்த்தி கைலாஸநாதர்க்கும் அன்புள்ள பார்வதியம்மைக்கும்சோபனம்
அகண்டசச்சுதானந்த வடிவான ஆதிபிரமத்துக்கும் சோபனம் சோபனம்

ஓம் சுபம்.

## மங்களம்.

ராகம் —— அசாவேரி.

சோமாஸ்கந்த மூர்த்திக்கு ஜெயமங்களம்——எங்கள்
சுந்தரியாள் மைந்தருக்கு சுபமங்களம்

சாமள ரூபிணிக்கும் சக்தி கணேசருக்கும்
காமதகனருக்கும் கந்தசுவாமி நாதருக்கும்

சரணங்கள்.

1. நவவீரர்களுடனே விளையாடும் வேலருக்கு
நான்முகனைச் சிறையில் வைத்திட்டலோலருக்கு

பிரணவமுபதேசித்த பாலசுப்பிரமணியருக்கு
தவமுனி அகஸ்தியர்க்கு சாஸ்திர முரைத்தவர்க்கு (சோம

2. தாருகன் சிங்கமுகன் பானுகோபன் முதலாய்
சூரனையும் வதைத்த சக்தி வேலாயுதர்க்கு
தேவசேனை பதிக்கு தெய்வானை மணாளருக்கு
வள்ளியை மணம்புரிந்த மயிலேறும் ஷண்முகர்க்கு (சோம)

3. அவுணர்கள் பயநீங்கி அரசாளுந் தேவருக்கும்
நவவீரர் லட்சருடன் நான்முகர் விஷ்ணுவுக்கும்
சகல ரிஷிகளுடன் சரஸ்வதி லெட்சுமிக்கும்
அகிலஜனங்களுக்கும் ஆதிபராதேவியர்க்கும் (சோம

## ஸோமாஸ்கந்த மூர்த்தித்தியானம்:

"பலவகைய தெனவுரைக்கு முயிர்களெல்லாம்
பாரினிடைக் கான்முளைகள் பயக்கு மாறு
நிலவியதென் றருமறைகள் நிகழ்த்தா நின்ற
நிருமலனைக் கௌரியொடுங் குமரன் றன்னை
இலகவனைத் திருந்தருளும் பெம்மானெம்மை
யிணையில்சிவ லோகத்தே யிருக்கச் செய்யுஞ்
சலசமல ரடியினைகொ டலைவன் றன்னைத்
தண்மலர்தூய்க் கரங்குவித்துத் தாழ்ந்து வாழ்வாம்'

ஓம் சுபம்.

Commercial Press, Madras, S. E.

544 அப்பமுடன் அதிரஸமும் சுகியன் தேன்குழலும்
முப்பழமும் திருத்தியவாள் முடிய எங்கும்போட்டாள்

545 நாவு உணராதிருக்க நல்ல கங்காதீர்த்தம்
ஜாம்பவானும் கொண்டுவந்து சகலருக்கும் கொடுத்தார்

546 காய்ச்சின பால்விடுதயிரு கட்டுமுட்டா யெடுத்து
பந்திக்கெல்லாம் பரிமாறினள் மந்திரிமார் கொணர்ந்து

547 உத்திர ஆபோஜனம் வாங்கியவாள் எழுந்து
ஆவல்கெடக் கையலம்பி ஆசமன்யம் பண்ணி

548 போஜனங்கள் செய்தபின்பு பொன் ஸ்னலைத்திருக்க
தாம்பூலங் கந்தபுஷ்பம் சகலருக்கும் கொடுத்தாள்

549 கௌஸல்யையும் சுமித்திரையும் காக்ஷிகளைக் கண்டு
கமலமுக ஜானகியை நினைத்துமிக அழுதாள்

550 வசிஷ்டருடன் அருந்ததியும் அருகினிலேவந்து
தவியாதே கௌஸலாநீர் மனந்தவியா தேயும்

551 (உம்ம) மைந்தர்பெத்த பாலகரை மடியில் வைக்கப்போரீர்
(என்று) வாழ்த்தியே வசிஷ்டமுனி தேற்றியே இருந்தார்

552 அன்புடைய ராமரிங்கே யாகந்தன்னை நடத்த
இன்பமுள்ள சீதையரும் இருந்த வனந்தனிலே

553 கண்மணியாம் பாலகரின் கமலமுகம் பார்த்து
அன்புடைய மாதாவும் அகமகிழ்ந்தே இருந்தாள்.

## வால்மீக ராசிரமத்தில்
## சீதாதேவி பாலகருடன் சம்பாஷித்தல்
## சீதாதேவிக்குப் பல்லி நற்சகுனஞ் சொல்லுதல்.

வேறுமெட்டு

554 மைந்தர் இருவரும் மாதாவுடன்
மயளச் சொல்வார்த்தை ஏதுசொல்வாள்

555 கோடி யானைகள் குதிரைகளும்
கொலைக்கு அஞ்சாத சூரர்களை

556 தேசமாள்கின்ற ராஜாவையும் (நான்கு)
திக்கையும் நாங்கள் ஜயிப்போமென்றார்

557 மந்திரமாயங்கள் கற்றோமென்றார்
மன்னர்களையும் நாம் ஜெயிப்போமென்றார்

558 பாலகர்சொல்லும் வீரியத்தை
பரிவாய்க்கேட்டம்மன் மனமகிழ்ந்து

559 மைந்தர் மாதாவுங்கேட் டுகந்து
வண்ண மடிமேலே அரவணைத்தாள்

560 அடிசில் இட்டம்மன் உச்சியிட்டு
அழகு மைந்தர்க்குக் குடுமிபின்னி

561 மருங்கு நெற்றிக்குத் திலதமிட்டு
மான் குவளைக்கு மைஎழுதி

562 பாங்காய் நாகமும் பருத்தமுத்தும்
பதிவாய் இழைத்ததோர் கடுக்கனிட்டு

563 மைந்தர் இருவரும் விளையாட
வனந்தனில் விட்டு மகிழ்ந்திருந்தாள்

564 சிறுவர் இருவரையும் அனுப்பிவைத்து
சீதாதேவியுந் தனித்திருந்தாள்

565 மாலைக்குழலாளின் தலைக்கு நேராய்
மங்கள வாக்கியமாய்ப் பல்லிசொல்ல

566 மைந்தர் மாதாவுங் கேட்டுகந்து
மாத்திரைப்போதில் துயில் முடிந்தாள்

567 சிறுவர் மாதாவுங் கேட்டுகந்து
சீரான பல்லிதனைப் பார்த்து

568 கரடி பன்றிகள் காட்டானைகள்
காட்டு மிருகமது பாயாமலே

569 சிறுவர்படைபண்ணித் தளராமலே
ஜயமுண்டாகவே பல்லி சொல்வாய்

570 (அப்போ) அழகு கூடல்வாய்ப் பல்லிதானும்
அருமையாகத்தன் வாய்திறந்து

571 (நான்) மலையின் குறவனோ குறத்திதானோ
மருந்துகள் சொல்லும் பண்டிதனோ

572 ஜோதிஷனோ நான் வாத்தியாரோ
(உன்போல்) சோறுண்டில்வாழும் மனுஷர்தாமோ

573 (என்று) மாலைக்குழலாளின் மனதுநோக
மனையின் சிறுபல்லி வாய்முடித்து

574 மாலைப்பொழுதுகள் ஆனவுடன்
மைந்தர் இருவருந் திரும்பிவந்தாள்

575 சிறுவர் இருவருந் திரும்பிவந்து
சீதாதேவியின் அடிபணிந்தாள்

576 மைந்தர் இருவரின் முகத்தைப்பார்த்து
மாதா சீதையும் எடுத்துரைப்பள்

577 செம்பொன் அலேமோதும் சமுத்திரத்தில்
சிதறித்த விக்கிற மீனதுபோல்

578 கப்பல் ஓடுகிற சமுத்திரத்தில்
கலங்கித் தவிக்கிற சிறுமீனைப்போல்

579 (இந்த) ஊசிநுழையாத காட்டினுள்ளே
ஓடிவிளையாடுங் கண்மணிகாள்

580 அணில்கள் ஓணன்கள் ஆந்தைகளை
அழகாய் திரிகிற கிளியினத்தை

581 பக்ஷிகள் தன்னைக் கண்ணிவைத்து
பசித்துத் திரிகிற மலைவேடர்கள்

582 (அவாள்) கூடுகட்டியே வலைவிரித்து
கோர்வையாகவே திரைவளைத்து

583 தாகம் பசியுடன் அம்பெடுத்து
(உங்கள்) தவமார் புதன்னில் எய்தாரானால்

584 மான்குட்டியோ வென்று அம்பெடுத்து
மயிர்முடி தன்னை எய்தாரானால்

585 எய்தவேடனும் ஓடிவந்து (பார்த்து)
ஏழைத்தனஞ் செய்தோ மென்றெடுத்து

586 காசாம் பூவர்ணர் மைந்தரிந்த
காட்டில் வருவானேன் என்றிரங்கி

587 (அந்த) வேடன்வந்து சொன்னால் கதியொழிய
வேறுகதியில்லை எந்தன் கண்காள்

588 (அம்மா) பேதையானதாயே உன்பொருட்டால்
(ஒரு) பிழைகள்வாரா்து எங்களுக்கு

589 தசக்கிரீவன் என்று உலகமாண்ட
மகதாஷ்டிகமான ராவணனை

590 ஐயம் பிச்சையுந் தாணிடாமல்
அமராளுக் கிடர்செய்த ராவணனை

591 கொடுமையாய் ஆண்ட ராவணனை
(எங்களய்யர்) குலநாசமாக ஸம்ஹரித்தார்

592 தசமுடி தன்னை ஸம்ஹரித்த
சூரர் தன்னுட சிறுவர் நாங்கள்

593 எங்கள் தந்தையின் நன்மையாலே
(ஒரு) இடுக்கண்வாராது தாயே என்றாள்.

வேறு மெட்டு முற்றும்.

594 மைதலியும் பாலகரை வாருங்களென் றழைத்து
மணமுடைய அரப்பரைத்து மஞ்ச நீராட்டி
595 சிறுகுழற்கு மலர்முடித்து அறும்பு குழல்பின்னி
உவமையற்ற திருநெற்றியில் ராமர் சிலையெழுதி
596 அறமுனிவர் இல்லையிங்கே அதிகதூரம் போகாதே
விஷப்பாம்பு புலிகளுண்டு வேடருண்டு வனத்தில்
597 கடுகெனவே நானுஞ்சென்று நீராடி வருவேன்
என்னிளம் பாலரே இருங்களென்று நதியாடவே நடந்தாள்.

## அச்வமேதக் குதிரையை லவன்பிடித்துக்கட்டுதல்

ஏலேலோ—குசலவரும் தத்தய்யா
தந்தையரை—ஜெயித்தகப்பல்
(என்பதைப் பல்லவியாய் வைத்து 700 வரையில் பாடலாம்.)

598 மாதாசீதை போனபின்பு மைந்தர் இருபேரு மாய்
வாகுவில்லுந் தானெடுத்து வேட்டையாடலுற்றார் கள்
599 கந்தவேளைப் போலேயந்த காகுஸ்தக் குமாரா ளும்
அந்தரமான வனங்களெல்லாஞ் சென்றுவிளை யாடினார்கள்.

முடுகு.

600 பன்றி முயல் மான் கரடி பலமிருகத்தைக்கொன்று
கண்டதொரு மிருகங்களெல்லாம் கலங்கி விழத்துரத்தி
601 செம்பொன் முயல் கரடி சிங்கம் மான்வேட்டையாடி
விடாய் தணியக்குசலவரும் உகந்து கனிபுஜித்து
602 தாகங்கெடப் பொய்கையிலே தண்ணி யள்ளிக்குடித்து
தனித்தனியாய்க் குசலவனும் பிரிந்து வரும்போது
623 கொந்தளக் குழல் சுருளக் கோவாயும் உலர
புண்டரீகக் கால்துவளப் பொன்மேனி சிவக்க
604 செழித்த வனந்தாண்டி லவன் திரும்பி வரும்போது
கனவேக அச்வமொன்று கண்ணிரண்டுங் கட்டி
605 சிலைவீர ராமரென்று திருநாம மெழுதி
திரளான சேனைகளும் பின்னாக வரவே
609 இகலான ரிஷிகள் அங்கே எண்ணிக் குளப்படியை
அடிகள்போகும் வழிதனிலே அறமாதிபண்ணி நடந்தாள்

607 தேர்டர்ந்துவருங் குதிரைவெகு தூரவழிதாண்டி
வாயுவேக மனோவேகமாக வழிநடந்து

608 குறிப்புடைய ரகுநாதர் குமாரர் விளையாடும்
இலக்கமற்ற காடுதன்னில் எதிராக வரவே

609 குசன்தம்பி லவன்கண்டு கொக்கரித்து ஓடி
முனிகுமாரர்களே பாரும் பரிபழகை என்றான்

610 பரிமுகத்திலே யிருந்த பட்டந்தன்னைப் பார்த்து
பட்டமதைக் கயட்டி பார்க்கின்றபோது

611 தசரத குமாரனே ரகுநாதனே தீரன்
(இந்தப்) பதினாலு உலகத்திலும் எதிரொருவரில்லை

612 (என்ற) விருதுதனைத்தான் படித்துக் குதிரைதன்னைப் பிடித்து
மரந்தனிலே தணைந்துகட்டி மறுவசனம் உரைப்பன்

613 ஜனகர்மகள் வயிற்றில் நாம் ஜனித்திராவிட்டால்
தசரத குமாரனே ரகுநாதனே தீரன்

614 சந்தோஷமாய் லவனுமப்போ சவுரியங்கள் பேசி
சேனைவரும் வழிகள்தன்னைப் பார்த்து மவனிருந்தான்

615 வேள்விப்பரி தன்னையவர்கள் விட்டெடங் காணாதே
தேடித்தேடிப் பரியுடனே சிறுபாலரைக் கண்டார்

616 சிறுபாலரைக் கண்டவுடன் சிறுதந்தையும் மலைத்து
(என்) பரிபிடித்து ஏன்கட்டினீர் (இளம்) பாலகரே என்றார்

617 பரியைவிடு மென்னலுமே பாலகனுங் கேட்டு
(பரி உங்களுக்கு வேணுமானால் படைபண்ணிக் கொள்ளென்றான்

618 படைபண்ணிக் கொள்ளென்ற சிறுபால லவன்மேலே
சொரிமாரிபோற் கணைசொரிந்து திகைக்கவே அடித்தார்

619 சொரிமாரிக் கணைகளெல்லாம் சூரலவன் தடுத்து
(தன்) பாரமுள்ள வில்லெடுத்து பாணமழை சொரிந்தான்

620 பாலன்விடுங் கணைவேகத்தை இளையதந்தைபார்த்து
தன் ஆர்வமுள்ள கணையுருவி பாலன்விழ அடித்தார்

621 திகைத்து வீழ்ந்த பாலகனைத்தேரின் மேலேற்றி
அசுவம் தன்னைநடத்தி ஆரவாரிபண்ணி நடந்தார்

622 அருகில்நின்று பார்த்திருந்த அறமுனி குமாரர்கள்
விரைந்து பர்ணசாலைவந்து மிதிலைவாழ் வோடுரைப்பாள்

623 அம்மா யாரோவொரு ராஜாவாம் யாகம்பண்ணுராளாம்
அந்தவேள்விப்பரி தன்னைலவன் வாகையோடுதணைய

624 லவனுடனே யுத்தம்பண்ணி ராஜாக்கள் ஜெயித்து
சிறுபாலனைத்தேரின்மேலே கட்டிக்கொண்டு போரான்

625 முனிகுமாரான் உரைக்கலுமே அகிலமாதா கேட்டு
(என்) முனி குசன் எங்கேஎன்று மூர்ச்சை யவளடைந்தாள்.

626 குசன் அங்கே வனந்தனிலே அலர்ந்த புஷ்பமெடுத்து
சிறுதர்ப்பை தானெடுத்துத் திசைநோக்கி வந்தான்

627 வந்துமங்கே மாதாவின் மலரடியிற் பணிந்து
எந்தனுட தம்பிலவன் எங்கேஎன்று கேட்டான்

628 (அப்பா) யாரோ ஒருராஜாவின் யாகப்பரிதன்னை
பாலகனும்லவன் பிடித்து வாகையுடன் தணைய

629 கணைதொடுத்து யுத்தம்பண்ணி ராஜாக்கள் ஜெயித்து
லவனைக்கட்டித் தேரின்மேலே கொண்டு போகிறுளாம்

630 சீரான லவனைக்கொண்டு செல்லுதற்கு முன்னால்
(உன்) நரத்தனந்தான் காட்டி மீளத்தம்பி கொண்டுவா

631 மைதலியாள் பாலகனை மனங்குளிர வாழ்த்தி
நாணும் வில்லுந் தான்கொடுத்தாள் ராஜாக்களை ஜெயிக்க

632 மாலயனும் சங்கரரும் மூவர் பொருதாலும்
யார்தான் கூடிராஜமன்னர் அடங்கலுஞ் சூழ்ந்தாலும்

633 (என்) பாலகரே நீபொருதி படைஜெயித்து மீண்டு
பாலமிர்த மேபுஜித்து நீயிருக்க வேணும்

634 மாதாவை வளையவந்து மலரடிக் கீழ்ப்பணிந்து
போய்வாரேன் என்கலுமே போகவிடை கொடுத்தாள்.

## சத்துருக்கனரோடு யுத்தம்பண்ணி ஜெயித்தல்.

635 பாரதிரக் கோஷமிட்டு வேகத்துடன் நடந்து
சேரநின்ற சேனையுடன் தேர்க்கொடியுங் கண்டான்

636 வேகத்துடனே போகும் பார்மன்னரைப் பார்த்து
(அட) போகாதே நில்லுமென்று நாணிஞ்ஞைசை காட்ட

637 நாணிஞ்ஞைசை கேட்கலுமே ரகுசேனை யெல்லாம்
காலனேகுசன் என்று கைகாலோய்ந்து நின்றார்.

638 நின்றதொரு மன்னர்மேல் நெடுங்கணைகள் போட்டு
கொன்றுமந்தச் சேனைகளைக் குருதிவெள்ளந் தேக்கி

639 எதிர்த்துவந்த சிறுதர்தையை நிலத்தில் விழவடித்து
தம்பிலவனை மீட்டுச் சந்தோஷமா யிருந்தான்

640 சத்துருக்கன்நிலத்தில்விழத் தப்பிஓடினோர்கள்
வணங்கி ரகுராமன்பாதம் நடுங்கியே உரைப்பார்

641 இந்துபோலே இருபாலர்கள் சென்றசேனை யெல்லாம்
நொந்துவிழவே பொருது வந்துபரி பிடித்தார்

642 (உம்ம) தந்தைசாயற் போலேயிரு சுந்தரரு மிருக்கார்
(உம்ம) தம்பியரை விழவடித்துச் சந்தோஷ மாயிருக்கார்.

## லக்ஷ்மணரோடு யுத்தம்பண்ணி ஜெயித்தல்.

643 தூதரஞ்சி உரைக்கவுமே ராகவருங் கேட்டு
பூமியிலே தான்விழுந்து புலம்பியே அழுதார்

644 அபிராமர் மனந்தேற்றி ஆறுதலுஞ் சொல்லி
இரதமேறிச் சேனையுடன் இளையவரும் போனார்

645 சேனைபட்ட பாடுகளும் சிறுவர் சூரத்தனமும்
ஆண்மைமிக்க இளையோர்கண்டு ஆச்சரியப் பட்டு

646 (பிள்ளைகள்) அறிவுகளை ஒழுக்கங்களை ஆண்மை சூரத்தனத்தை
களிப்புடைய குசலவரின் கந்தனைப்போல் வடிவை

647 வடிவுடைய மலர்மகளோ பூமகளோ பயன்றாள் (என்று)
வடிவுடைய பாலகரை மயங்கிப் பார்த்திருந்தார்

648 சீதையரைக் காட்டில்விட்ட சிந்தையை எண்ணாதே
வடிவுடைய பாலகரை வாழிளங்கோ பார்த்தார்

649 இளையகோவும் பார்க்கவுமே சிறுவர்கோபமண்டி
(அட) நானே பரி கொண்டொளித்தேன் வேறு யாருமில்லை

650 பரியொளித்தேன் என்கவுமே பகைத்துப் பாலர்மேலே
(தன்) பாரமுள்ள வில்லெடுத்துப் பாண மழைசொரிந்தார்

651 வேடர்களும் வில்லியருங் கூடிப் பொருதாப்போல்
சீருடைய தந்தையரும் செல்வருமாய்ப் பொருதார்

652 சிறுவர்விட்ட கணையுருவிச் சீரிளங்கோ விழவே
தூதரஞ்சி யோடிவந்து ராமருடன் சொன்னார்.

## பரதரோடு யுத்தம்பண்ணி ஜெயித்தல்.

653 இளையகோவும் விழுந்தாரென்கப் பரதர் கோபமண்டி
சகல ஆயுதமெடுத்துத் திரளாகச் சேனைசூழ

654 கோடிவெள்ளஞ் சேனைசூழ கொண்டல் வர்ணர்தம்பி
தேடியந்த வனத்திலேவந்து சிறுபாலரைக் கண்டார்

655 சேனைபட்ட பாடுகளும் சிறுவர் சூரத்தனமும்
ஆண்மைமிக்க பரதர் கண்டு ஆச்சரியப்பட்டு

656 (நீங்கள்) அரன்மகனோ அரிமகனோ அயனுதிமகனோ
எவர்மகனோ பாலர்களா எனக்குரையு மென்றார்

657 (ஐயா) நாங்கள் அரன்மகனும் அரிமகனும் அயன்மகனுமல்ல
அருந்தவவுஷி வால்மீகர் அடைக்கலக் குமாரர்கள்

658 குதிரைகேழ்க்க வந்தாயோ நீகுலங்கேழ்க்க வந்தாயோ
பரிஹாஸம் பண்ணாதே இப்போ பரிவிடுவதில்லை

659 பரிவிடுவதில்லை யென்ற பாலகரின்மேலே
சொரிமாரிக் கணையெடுத்து (வெகு) சூரத்துடன் விட்டார்

660 சிறுதந்தையும் கணைசொரியச் சூரலவன் கண்டு
(தன்) கார்முகத்தைத் தானெடுத்து பாணங்களை யறுத்தான்

661 பாலகனுர் தடுக்கவுமே பரதர்கோபமண்டி
அதிசூரமாய் நாணேற்றிச் சிலபாணங்கள் தொடுத்தார்

662 அந்தரத்து தேவர்களும் அமிர்தமங்கே கொடுக்க
காரிகையாள் சீதைமைந்தர் கனைதீரப் புஜித்தாள்

663 கனைதீர்ந்த குசலவரும் கணைமாரி சொரிந்து
வண்மையுள்ள பரதரையும் மண்ணில் விழவடித்தாள்

664 பரதர் கீழே விழுந்தவுடன் அருகிருந்த மன்னர்
மதிமயங்கி ஓடிவந்து மன்னராமர்க் குரைத்தாள்.

## ஸ்ரீராமரோடு யுத்தம்பண்ணி ஜெயித்தல்.

665 ஸ்ரீராமர் அதுகேட்டுச் சிந்தைமிகத் தளர்ந்து
அனேகங்கோடி சேனையுடன் அதிவேகமாய் வந்தார்

666 அனுமானுஞ் ஜாமபவானும் அங்கதனுங் கூட
சுக்ரீவன் சேனையுடன் சேர்ந்துமங்கே வரவே

667 ரணகளத்தைப் பார்த்தளவில் ரத்தவெள்ளமோடி
சேனைகளுந் தம்பிமாரும் செருக்களத்திற் கிடந்தார்

668 ரகுபதியுங் கண்டழுது நெடுஞ்சோக மண்டி
இன்பமான தம்பிமாரை எடுத்தணைத்துக் கொண்டு

669 பிரியமான தம்பிமாரின் பேரறிவுங் குணமும்
படைஜெயித்த பாலர்முன்னே பிரலாபித்தவர் அழுவர்

670 பாரமுள்ள அயோத்திநகர் பாருலகுத் தலைத்தை
(ராஜன்) ஆளுமுன்னைம் ஆளேனென்று என்னடி பிடித்துநடந்து

671 எந்தன்பாதுகை வாங்கித் தன்தலைமேலே கொண்டு
அந்தமுடன் பட்டங்கட்டி நந்திக்கிராம மிருந்து

672 அல்லும்பகலும் என்னை நினைத்து அண்ணரே என்றலத்தும்
அன்புடைய பரதாதம்பி என்றழைத்து அழுதார்

673 கானகத்திலே திரிந்து எந்தனுக்குத் துணையாய்
காய்கனியும் புஜியாமல் கண்க ளுறங்காமல்

674 அல்லும் பகலும் பணிவிடைகள் அன்புடனேசெய்த
இன்பமுள்ள இளையதம்பி என்றழைத்து அழுதார்

675 சாகாத வைணுலஞூரன் தனைக்கொன்ற சூரன்
(உன்) அம்புவில்லின் சேவகமும்எங்கே போச்சுதையா

676 (என்) பின்பிறந்த சேவகனே மின்னலையாள் மகனே
எங்கள் மூவருக்கும் இளையவனே என்றழைத்து அழுதார்

677 அழுதுதெளிந் தெழுந்திருந்து அதிகோபத்துடனே
(நீ) ஆரடா என்பரிபிடித்து வேள்விதனைக் குலைத்தாய்

678 (என்று) பங்கயச் சீர்கண்கள் ரெண்டும் செங்குறுதிமண்ட
மைந்தருடன் மார்புதட்டி வந்தெதிரே நின்றார்

679 (நீங்கள்) அருந்தவசி புத்திரரோ அண்டர் பெருமானோ
அரி அயனார்தன்மகனோ அறியவுரை என்றார்

680 அரி அயனார்மகனுமல்ல அண்டர்பிரானுமல்ல
அருந்தவசி வால்மீகர் அடைக்கலக் குமாரர்கள்

681 குதிரை கேழ்க்க வந்தாயோ குலங்கேழ்க்க வந்தாயோ
பரிஹாசம் பண்ணாதே இப்போ பரிவிடுவதில்லை

682 குடிகுலமும் குலகுலமும் கோத்திரமுங் கேட்டாய்
ஈனனே நீராஜாவே என்றுசொல்லி நகைத்தார்

683 நகைக்கலுமே குசலவர்கள் ராமர்பாண மெடுத்து
குறிப்புடைய கோதண்ட வில்லும் நாணும் பூட்டி

684 கடுகடுத்துப் பாலகர்மேல் கணைமாரி சொரிய
சொரிந்தகணை மாரிகளைச் சிறுகுசலவர் அறுத்தார்கள்

685 கண்டு ரகுராமரப்போ கடுங்கோபத் துடனே
பரிவுடைய பாலகர்மேல் பாணமழை சொரிந்தார்

686 இந்திரரும் ஈஸ்வரரும் நின்று பொருதாப்போல்
சந்திரரும் சதுர்முகரும் தானும் பொருதாப்போல்

687 மந்திரகிரி தன்னுடனே அண்டம் பொருதாப்போல்
பந்தமுள்ள மைந்தருடன் தந்தையரும் பொருதார்

688 மைந்தருட வீரியத்தை வைதேகி கேட்டுப்புகழ
அருமைமைந்தர் கணையினாலே அபிராமர் விழுந்தார்

689 நால்வர்களும் விழுந்தவுடன் பாலகருங் களைத்து
தாகங்கெடப் பொய்கையிலே தண்ணியள்ளிக் குடித்து

690 பார்த்துமந்தப் படுகளத்தை சீக்கிரமாய் லவனும்
கோப்புடைய ரகுநாதர் குண்டலமும் பணியும்

691 வாய்த்தமன்னர் மகுடங்களும் வாழ்பரதர் அணியும்
காக்ஷியுள்ள சிறுதந்தைமார் கைவளையும் பறித்தான்

692 தூர்நின்று மனதுநொந்து ஜாம்பவந்தர் அனுமார்
அபிராமர் படுகளத்தைக் கண்டு மனமிளகி

693 அதிசூர ராக்ஷத ராவணனைக் கொன்றந்திரன்
(உம்ம) அம்புவில்லின் சேவகமும் எங்கே போச்சுதய்யா

694 அனுமாருஞ் சாம்பவானும் அழுது பார்த்தே இருக்க
(அதைக்) கண்டுமந்த லவனுமப்போ அண்ணருடன் சொல்வன்

695 (நம்ம) வாய்த்தசீதை மாதாவுக்குக் காட்டவேணுமென்று
மாருதியைச் சாம்பவானை வரிகயிற்றால் தணைந்தான்

696 மாதா சீதைஎன்றுசொல்ல மாருதியுங் கேட்டு
தாயாரைக் காண்போமென்று சந்தோஷமாய் வந்தார்

697 மணிமகுட மூட்டைதன்னை மாருதிமேலேற்றி
வரிகயிற்றைக் கைப்பிடித்து இழுத்து வனங்கடந்தான்

698 இருண்ட அந்தச்சோலைதாண்டி (ரிஷி) ஆசிரமத்தில்வந்து
பாகுவில்லைத் தானிறக்கி மாதா அடிபணிந்தான்

699 பணிந்தெழுந்த பாலகரைப் பரிவுடனே அணைத்து
இருவரையும் உடன் நிறுத்தித் திருவந்திக்காப்பெடுத்தாள்—ஏலே

கப்பல் மெட்டு முற்றும்

700 பூவண்டங்கள் புவனண்டங்கள்
பூமகளைத் திருமகளை புண்ய ராஜர்மகளை

701 காகுஸ்தனார் தேவியரே கருணையுள்ள தாயே (என்று)
மாருதியும் ஜாம்பவானும் மாதா அடிபணிந்தார்

702 மாருதியைஜாம்பவானை மைதலியும் வாழ்த்தி
(என்) சிறுபாலர்காள் நீங்களிவரைச் சேவியுங்களென்றாள்

703 (அம்மா) எந்தவனம்பார்த்தாலுஞ் செங்குரங்கு உண்டு
இந்தவொருகுரங்குதன்னை ஏன் பணிவதென்றார்

704 (அப்பா) என்னுவிகுன்றிப்போகாது காத்ததிந்த அனுமார்
அரக்கர்குலச்சேனை விழவடித்தாரிந்த அனுமார்

705 (நான்) சீவன்விடும்வேளையிலே காத்தாரிந்தஅனுமார்
தென்னிலங்காநகரந்தன்னைச் சுட்டாரிந்தஹனுமார்

706 (என்) சிறுபாலரே நீங்களிவரைச் சேவியுங்களென்க
மாதாசொல்லைத்தட்டாமல் மைந்தர்களும் பணிந்தாள்

707 மாருதியை ஜாம்பவானை மைந்தர்களைவைத்து
காய்கனிகிழங்கமுது கலந்துமங்கேபோட்டாள்

708 மைதலியாள்கனியளிக்க மாருதியும்புஜித்து
போய்வரோமென்றுசொல்லப் போகவிடைகொடுத்தாள்.

## மைந்தர்மேற் காயங்களைக் கண்டு சீதாதேவி சோகித்தல்.

709 மைதலியாள்பாலகரை மடியில்வைத்துக்கொண்டு
பண்டுவாழ்ந்தபோகந்தன்னைப் பாரதத்தை நினைத்து

710 சுந்தரமாமைந்தருட காயங்களைப்பார்த்து
இந்துமதிவாழ்முகத்தாள் ஏங்கி ஏங்கி அழுதாள்

711 அறியாதசிறுபாலர்கள் அச்வந்தன்னைப் பிடித்தால்
வேள்விநின்றுபோமேயென்று வேண்டியன்னோகொள்வாள்

712 பாணமழைதான் சொரிந்து வாடஅடிப்பாருண்டோ
அம்புவில்லாலே பொருது அஞ்ச அடிப்பாருண்டோ

713 ஆருமில்லாத இந்தஅருங்காடு தனிலே
நான் பரதேசிபெற்றபிள்ளை பரவிப் படாதோ

714 அகதிபரதேசி என்பாள் ஆருமற்றதென்பாள்
அறமுனியின் சிஷ்யரென்பாள் அறவப்பிள்ளை என்பாள்

715 காகுஸ்தரும் தம்பிமாரும் கருணைக்கடல் என்பாள்
(என்) கடும்பாலர்மேல் கணைகள்விடக் கையுமெழும்பிற்றோ

716 (என்று) சோகிக்கவே ஜானகியும் சுற்றிலுள்ளமாதர்
சூரரம்மா உன்குமாரர் சோகம்விடும் அம்மா

717 (அந்த) ஹரிவம்சான்நால்வரையும் உன்பாலர் விழவடித்து
அறியாதுபோல் உன்பாலர்கள் (உன்) அருகில்வந்தாரம்மா

718 வைதேகிதான்கேட்டு மனது மெத்தக்கலங்கி
அதுவும் விதிவசமோவென்று ஆரணங்குமழுதாள்

719 மாதாசீதை அழுதிடவே மைந்தர்களுந் திகைத்து
அந்தஹரிவம்சர்நால்வருட ஆண்மைகளைச் சொல்வார்

720 அதிர்ந்துவந்த சேனைகளின் அமர்க்களத்தை ஜெயித்து
திரும்பினாங்கள் வந்ததுவும் தெய்வகிருபையம்மா

721 அடர்ந்து வந்த சேனைக்கெல்லாம் அதிகாரி ஒருத்தன்
(அவன்) மதிமுகத்து வடிவழகைச்சொல்லிமுடியாது

722 வளைந்த புருவத்தழகும் முகிழ்போன்ற மூக்கும்
மண்டலம்போல் திருநெற்றியும் விசாலமானவிழியும்

723 செவந்த அதரத்தழகும் செவ்வாயுங்கண்டு
செய்வதொன்றுந்தோணுமல் திகைத்துநின்றோம் அம்மா

724 முகில்நீலம் பூப்போலே இருக்குமவர்மேனி
முந்திவந்த சேனைக்கெல்லாம் முதலாளியவனும்

725 (அவர்) ஆக்ஞையுள்ள பொற்றேரும் ஆனைசேனையுடனே
அட்டம் நமக்கில்லை என்று அவர்பொருதாரம்மா

726 அந்தச்செல்வத்துடன் வந்தவரைச்சிந்து சிந்தாயடித்து.
சுற்றி நிற்குஞ்சேனைகளை சிதறநாங்கள் துரத்தி

727 மன்னரந்த ராஜரையும் மண்ணில் விழவடித்து
மாதாவேஉம்முடைய அருகில் வந்தோமென்றுள்

728 அன்புடைய பாலர்சொன்ன அடையாளங்கேட்டு
மன்னவனூர் ராமரென்று மனதிலெண்ணியழுதாள்

729 சீதையருந் தானழவேசிறுவர்களும் வருந்தி
மாதாசீதைமுகநோக்கி மைந்தர்களு முரைப்பாள்

730 (அந்த) அமர்க்களத்தில் விழுந்தமன்னன் அதிக உறவுண்டோ
அன்னையரே எங்களுட தந்தைஎங்கே என்றார்.

731 (அந்தப்) போர்க்களத்திலே விழுந்த புகழ் வீரமன்னர்
பூங்கிளிகாள் உங்களுட தந்தையவரென்றுள்

732 தந்தை என்றுசொல்லலுமே (பிள்ளைகள்) சகிக்க அறியாதே
தாயாரே நீரவரைப்பிரிந்த வகையென்ன

733 உத்தரங்கள் சொன்னீரோ உம்மையறியாதே
உம்மையிந்த வனந்தனிலே தனித்துவிட்டதென்ன

734 சத்தியங்கள் தப்பினீரோ தாயாரே சொல்லும்
(சற்றும்) தாக்ஷிண்ய மன்றியிலே தள்ளிவிட்டதென்ன

735 (எங்கள்) சீருடைய தந்தையரும் செல்வக்காரா (இந்தச்)
செங்காட்டு வனந்தனிலே இருந்தவிதமென்ன

736 (எங்கள்) புகழுடைய தந்தையரும் (இந்தப்) பூமிதனை யாளப்
பொடி வீசும்கானகத்தில் நீர் இருந்தவிதமென்ன

737 உத்தமியே தாயாரே உம்மையொன்றுஞ் செய்யோம்
எங்கள் உயிருடனே அங்கந்தனை உயிர்மாய்த்துக்கொள்வோம்

738 உத்தமியே தாயாரே ஒளியாமல் உரையும் (என்று)
ஓங்கியந்தப் பாலகரும் வாளெடுத்து நின்றுள்.

## பாலகருக்கு சீதாதேவி தன்சரித்திர முரைத்தல்.

739 அருமைமைந்தர் சமத்துக்களும் ஆண்மைகளுங்கண்டு
மைந்தர்கட்கு மனக்குறையை மாதாசீதையுரைப்பாள்

740 மண்டலத்தில் ஒருத்தரில்லை என் மனக்குறைகள் சொல்ல
மாதமொன்றும் போராது என் குறைகள் சொல்லி முடிக்க

741 அந்தமுள்ள கலப்பையுழும் பூமியிலே பிறந்தேன்
ஆகாசவாணி எந்தன் தந்தை என்று சொல்வாள்

742 பொன்கலப்பை கொண்டுழுத பூமியிலேபிறந்தேன்
புகழுடைய ஜனகராஜா அரண்மனையில் வளர்ந்தேன்

743 அயோத்திவாழும் தசரதனார் மைந்தரங்கேவந்து
அழகான வில்முறித்து மணம்புரிய நினைத்து

744 சரப்பளியும் பதக்கங்களும் தன்தோளில் துலங்க
சகலபேருங் கொண்டாடத் தநுவொடித்து நின்றார்

745 ஜனகரப்போ கொண்டாடித் தாரையதுவார்க்க
ஆனையின் மேலேறி மணமாலையிட்டுக் கொண்டோம்

746 மாலையிட்டு அயோத்திவந்த மன்னோராமர் தனக்கு
செம்பொன்முடி சூட்டவென்றே தசரதர் கோடித்தார்

747 மாதா வென்னுங்கைகேசி கேட்டவரத்தாலே
வனவாஸம போகவென்று வாழ்த்திவிடை கொடுத்தாள்

748 மாதாவாக்கிய நிறைவேற்றி வனந்தனிலே நடந்தோம்
அழகான பர்னசாலை தன்னில் நாங்களிருந்தோம்

749 அமர்ந்து நாங்களிருக்கும்போது அதி பாவிமாரீஜன்
ஆச்சரியப் பொன்மானாய் எங்களருகினிலே வந்தான்

750 மாயமான் என்பதைநான் மனதிலே எண்ணுமல்
மான்பிடித்துத் துத்தாருமென்றேன் மகானுபாவரோடே

751 அதிதூரம் நடந்துராமர் அம்பெடுத்துஎய்ய
ஆ சீதா லக்ஷ்மணு என்றலறி விழுந்தான்

752 அலறியவன் விழுந்தவுடன் என் ஆகாதகாலம்
அபிராமர்தளம்புகின்ருர் அடவியிலே என்றேன்

753 மன்னரபிராமருக்கு வாராதுபயமொன்றும்
சிந்தைகலங்காதீரென்று சீரிளங்கோவுரைத்தார்

754 மதியுரைத்த இளங்கோவுக்கு மகாகொடியவார்த்தை
(என்) வாயினலேசொல்லிவிட்டேன் வருவதறியாதே

755 சீரிளங்கோதான்கேட்டு செவியிரண்டும்பொத்தி
அபிராமாஎன்று சொல்லி அண்ணரருகினிலேசென்ருர்

756 சன்யாசிவேஷங்கொண்டு சாகஸ ராவணனும்
தேரின்மேலேற்றி என்னைத் தென்னிலங்கைசென்ருன்

757 அசோகவனந்தனிலே அருஞ்சிறையில்வைத்தான்
வானரசேனைகளுடன் வந்துரகுராமர்

758 அணைகள் கட்டிச்சேனையுடன் அலைகடலைத்தாண்டி
அரக்கன் இந்திரசித்தன் கும்பகர்னனையும் விழவடித்து

759 தணல்வளர்த்துத்தெளிவுகொடுத்து ஸகலவரும்போற்ற
சந்தோஷமாய்த்தேரேறி அயோத்திவந்துசேர்ந்தோம்

760 செல்வமுள்ளராமருடன் சிலகாலம்வாழ்ந்தேன்
சென்றெருக்கால்வனங்காணவேணு மென்று சொன்னேன்

761 அரக்கன்சிறைகொண்டுபோன அபவாதச் சொல்லால்
அடவியிலேகொண்டுவந்து தனியேவிட்டுப்போனர்

762 அபிராமரைநான் பிரிந்து அழுதுநிற்கும்போது
அறமுனிவர்வால்மீகர் கிரகந்தனில் வாவென்ருர்

763 வால்மீகர்கிரகந்தனிலே வந்திருக்கும்போது
ஸமைந்தர்களே உங்களையும் மனமகிழப் பயின்றேன்

764 அன்புடைய வால்மிகர் ஆதரவால் வளர்ந்தீர்
(என்று) பண்டுவாழ்ந்தபோகந்தன்னைப் பாலகருக்குரைத்தாள்.

## ஸ்ரீராமர் முதலியோரை வால்மீகர் எழுப்புதல்.

765 நாரதரும் ரணகளத்தில் நால்வர் முகங்கண்டு
வால்மீகர் எக்யம் பண்ணும் பாதாளம்நடந்து

766 அரி வம்சாள் நால்வரையும் (உம்ம) சிஷ்யாள் விழவடித்தார்
வால்மீகரே நில்லாதேயும் வாருமய்யா வென்றார்

767 வால்மீகர துகேட்டு மனஸுமெத்த இரங்கி
ராமர்சேனைமுகநோக்கி ரணகளத்திலடந்தார்

768 ரணகளத்தைப்பார்த்தளவில் ரத்தவெள்ளமோடி
சிலைமன்னவர்நாலுபேரும் செருக்களத்தேகிடந்தார்

769 சிங்கத்துக்குப் பிறந்ததுகள் சிங்கங்கள் ஆகாதோ
சிறுவரானபோதிலுமே சீதை யருளன்றோ

770 கமண்டலத்தின் ஜலமதனைக் கைதனிலேயள்ளி
சிலைமன்னவர் நால்வர்மேலுஞ் சேனைமேலுந்தெளித்தார்

771 அறமுனிவர்தெளிக்கலுமே அனைவர்களுந்தெளிந்து
ஸகலரும்விடாய்தணிந்து சடுக்கெனவே எழுந்தார்

772 எழுந்தவுடன் சேனைகளும் ராகவருங்கூடி
அறமுனிவர் தாளிணையில் அனைவர்களும் பணிந்தார்

773 அறமுனிவர் மனமகிழ்ந்து அபிராமர்முகநோக்கி
மகவேள்விமுடியுமென்று மகமுனியும் உரைத்தார்

774 வால்மீகர் உரைக்கலுமே மன்னர்ரகுராமர்
ஜானகிமனோகரனார் தவசியுடனுரைப்பார்

775 சுவாகுவையும் தாடகையையும் தசக்கிரீவன் தனையும்
வாலியையும் மார்பு பிளந்த மகிமையறிவீரே

776 (ஐயா) வந்தசேனுசமுத்திரத்தை மண்ணில்விழவடித்து
(என்) தம்பிமாரை விழவடித்து என்னெதிரில்நின்று

777 ஈனஞேனென்றுகேட்டு எந்தனையுஞ்ஜெயித்த
உம்மபாலகர்க்குச்சொல்லி எந்தன் பரியை விடுமென்றார்

778 வால்மீகர துகேட்டு மனதுமெத்த இரங்கி
ஜானகியாள் பாலரிடம் தானுமங்கேவந்தார்

779 அகிலபுவன நாயகரின் அண்டர் பெருமானின்
ஆதிரகு நாதருட வேள்வி குலைப்பாளோ

780 காற்றுமாகித் தீயுமாகிக் கலந்திருப்போர் அவரே
கௌசலையாள் திருவயிற்றில் அவதரித்த மணியை

781 மாற்றில்லாத செம்பொன்னை மலர்மகள் நாயகரை
மனதுநோகச் செய்வீரோசீதைமைந்தர்காள் என்றதட்டி

782 பரியைவிடும் பாலகர்காள் (என்று) சொல்ல வால்மீகர்
பாலர்கள் பயந்தவர்போல் வால்மீகரோடுரைப்பார்

812 ஒப்பற்ற வார்காதில் குண்டலமும்விளங்க
பூர்ணச்சந்திரன் போல்முகத்தில் புன்சிரிப்பின் ஒளியும்

813 சாய்ந்தகுஞ்சியின் அழகும் சிறுவருட அழகும்
விஸ்தார நெத்திகளில் கஸ்தூரிப்பொட்டொளியும்

814 சித்தரோடு கின்னரரும் வெட்கித்தலைகுனிய
சற்குணமாம் ராமகதை தப்பாமலே படித்தார்

815 சற்குணமானகதையை சகலவருங்கேட்டு
ஒப்பற்றபாலகர்மேல் புஷ்பம்வருஷித்தார்

816 சிறுவருடவடிவழகை ஸ்ரீராமரும் உகந்து
பரிவானதம்பியரைப் பார்த்துமவர் உரைப்பர்

817 இந்துபோலே பாலகர்கள் இந்த வயதுதனிலே
கோகிலங்கள் போலிருந்து கீர்த்தியுடன் பாடி

818 கொஞ்சும் கிளிபோலிருக்கும் பாலர்கள் தனக்கு
பச்சைசால்வை முத்துக்குல்லாய் பருத்தமுத்துமாலை

819 உருண்ட முத்துமாணிக்கத்தால் உசிதமாம்பணிகள்
சீருடனேகொண்டுவந்து சிறுவருக்கு அளியும்

820 அளியுமென்று சொன்னவுடன் அன்புடைய பரதர்
கொந்தளப்பொன்சரக்கறையைத் திறந்தெடுத்துவந்து

821 பாலகனுர் இருவருக்கும் பரிசுரொம்ப அளிக்க
சிறுபாலகர்கள் தான் நகைத்து ஸ்ரீராமருக்குரைப்பர்

822 ஐயாகானகத்திலே திரிந்துவால்மீகர் அருளால்
காய்கனி கிழங்குகளைக் கலந்து புசிப்போர்க்கு

823 சீருடைய வரிசைஎல்லாம் தேவையில்லை நமக்கு
ஏத்தமான உடுபணதி இருக்கட்டும் உங்களுக்கு

824 பட்டமாளும் ராஜர்களுக்குப் பட்டுக்குடைவேணும்
முடிபொருத்த மன்னருக்கு முத்துக்குல்லாய் வேணும்.

## ஸ்ரீராமர் குசலவாள் தன் புத்திரர்களென்று வால்மீகரால் அறிதல்.

825 (என்று) மைந்தர்களும் உரைக்கலுமே வால்மீகர்வருந்தி
மன்னராமா உம்முடைய மைந்தரிவாளென்றார்

826 மைந்தரிவாள் என்கலுமே மணிப்பரதர் உகந்து
இன்பமுள்ளபாலகரை எடுத்தணைத்துக்கொண்டு

827 பண்பொழுந்தபோகந்தன்னை பாரதத்தைதணைத்து
பாலகரை மடியில்வைத்து பரதர்சொல்லிஅழுவர்.

828 (நாங்கள்) தசரதர்குமாரர்களாய்ப் பிறந்தநாள் துவக்கி
என்னசுகமெங்களுக்கு இந்தப்பூமிதனிலே

829 சிலநாட்கள் கழித்தபின்பு சடைநாங்கள் தரித்தோம்
பிள்ளைகள் பிறக்கிறத்தே சடைதரித்தசிறுமைகள் ஆராதே

830 பரதாழ்வார்கண்கள் இரண்டும் பிரவாகநதி போலே
தாராளமாய்ப்பெருக சேஷாத்திரி உரைப்பர்

831 பரதா நீ என்ன செய்வாய் பாவியாகநானும்
தோஷமென்று பாராதேதூரவடவி தன்னில்

832 சிங்கங்களுக் கிரையாகச் சீதையரை விட்டேன்
(என்று) ஏங்கியேதானழுது இளையகோவும் உரைத்தார்

833 தயங்கியே மிகவழுது சத்துருக்கனும்
லவணாஸுரனை வதைத்த அன்றி ராத்தரித்தேனங்கே

834 மைந்தரவாள் பிறந்ததுவும் (வால்மீகர்) மகதானஞ் செய்ததுவும்
அறிந்து நான்தானிருந்தும் அறியாது போலிருந்தேன்

835 அன்புடைய பாலகரைக் காண ஆசை இருந்தும்
ஆற்றமாட்டாள் ஜனகி என்று அறியாதுபோல் வந்தேன்

836 தம்பிமார் மூவர்களும் சகிக்காமலே அழுது
மன்னராமர் மடியின்மேலே மைந்தர்களை வைத்தாள்

837 மடியிருந்த பாலகரை மன்னர் ரகுராமர்
அன்புடனே தானணைத்து அபிராமர் உரைப்பர்

838 அகதி பரதேசியர்போல் ஆருமற்றார் போலே
காய்கனிகளைப் புஜித்து (என்) கண்காள் வளர்ந்தயளோ

839 அறமுனியின் சிஷ்யர்களா உங்களன்னை எங்கே என்க
வால்மீக ரதைக்கேட்டு மனது மெத்தமகிழ்ந்து

840 வைதேகி ஜானகி என்மனைதனிலே இருக்காள்
கபடம் நீர் எண்ணிணுக்கே காகுஸ்தரே கேளும்

841 (நான்) ஆயிரம்கோடிகாலம் தவங்கள் செய்ததெல்லாம்
விழுந்து போகக்கடவதென்று முனிசபதஞ்செய்தார்

842 கல்மிஷங்களில்லை அய்யா வைதேகியிடத்தில்
(என்று) காகுஸ்தனுர் ராமருடன் வால்மீக ருரைத்தார்

843 முனிசபீதஞ் செய்யவுமே அனைவர்களும் பயந்தாள்
அபிராமர் முனியைப்பார்த்து(சீதையை) அழைத்துவாருமென்றார்

## சீதாதேவி ஸ்ரீராமரிடம் வருதல்.

844 வால்மீகர் ஓடிவந்து மைதலியைப் பார்த்து
பனிரெண்டு ஆண்டின் தவசு பலித்ததம்மா உமக்கு

845 (உம்ம) பிராணனுன நாயகரின் பாதமலர்காண
வாரும் அம்மா என்று சொல்லி மாமுனியு மழைத்தார்

846 வால்மீகர் உரைக்கலுமே [illegible] மனஸ்தாபமகற்றி
மகமுனிவர் தன்னுடனே வைதேகி நடந்தாள்

847 புஷ்பகத்தில் ஏறிவரும் புண்டரீகமாது
பூமியிலே நடந்துவந்தாள் பொன்னடியுஞ் சிவக்க

848 பார்த்திருந்த பேர்களெல்லாம் பரிதாபம்கொண்ட
பங்கயச் சீர்கண்ணாளும் பாதமோக நடந்தாள்

849 உடுத்த காஷாயத்துடன் உடம்பு தன்னை யொடுக்கி
ஹம்ஸம்போலவே நடந்து ஸ்ரீராமரடி பணிந்தாள்

850 அடிபணிந்த ஜானகியை அ்ராமரும்பார்த்து
பொற்கொடியே உன்மனதைப் பொருந்த நானறிவேன்

851 ராக்ஷதர்கள் தானறிவாள் லக்ஷ்மணர் அறிவர்
(இந்த) அநேகங்கோடி மானிடர்கள் அறியமாட்டாளென்றார்.

## சீதாதேவி ஸ்ரீராமரிடம் சபதம் செய்து பூமிக்குள் செல்லுதல்.

852 ஜொலிக்கின்ற அக்கினிபோல் இருக்குஞ்சீதை தன்னை
ஸ்ரீராமர்சிந்தைபண்ண (இந்த) தேகமிருந்த தன்னே

853 நிறைந்த சபைதனிலே நான்நின்றநிலைபோரும்
நீதியாக எந்தனுக்குப் பூமியிடந்தாரும்

854 பொற்கொடியாள் உரைக்கலுமே பூமிவழிபிளந்து
பொன்னுமணித்தேரிலேற்றி பூமிகொண்டுசென்றாள்

855 நாகலோகக்கன்னியர்கள் நத்திமலர் தூவி
திருவடியிலேபணிந்து சென்றழைத்துக்கொண்டாள்.

## ஸ்ரீராமபிரான் உத்திரவால் பூமாதேவி சீதையைக் கொணர்ந்து விடுதல்.

856 புருஷோத்தமர்தான் கலங்கி (புருவ) நெறித்துக்கொண்டு
பார்மகளும் அறியாளோ என் பராக்கிரமந்தன்னே

857 தரணிதன்னைப்பிளந்திடுவேன் சமுத்திரத்தைப்பிளப்பேன்
சடுதியிலேகொண்டுவந்து ஜானகியைத் தாராவிட்டால்

858 புருஷோத்தமர்சினந்துரைக்க பூமிமெத்தநடுங்கி
பொன்னும்மணித்தேரோடு பூமிகொணர்ந்துவிட்டாள்

859 மகிழ்ந்துமந்தராகவரும் மைதலியாளுடனே
பாலகனுருடன் கூடிப்பட்டணம்போய்ச்சேர்ந்தார்.

## கௌஸல்யம்மன் மருமகளையும் பேரன்மாரையும் தழுவி அணைத்து வாழ்த்துதல்.

860 கௌஸல்யும் சுமித்திரையும் மருமகளைக்கண்டு
கமலநயனம் உருகி கலங்கிமெத்த அழுதாள்

861 மைந்தர்களைக்கௌஸலையும் மடிதனிலேவைத்து
பண்டுவாழ்ந்தபோகம் தன்னைப் பாரதத்தை நினைந்து

862 வடிவுடையபாலகரும் என்மாளிகையில் பிறக்க
(நான்) மாதவங்கள் செய்யல்லையே சீதைமைந்தர்காள் என்றழுதா[ள்]

863 நவரத்தினத்தாலிழைத்த நல்லமண்டபத்தில்
மதிப்புடையமைதலியாள் பாலரிங்கே பிறக்க

864 (நான்) குறிப்புடைய கோ கோடி குஞ்சரங்கள் கோடி
அதிதுரிதமாய்விளங்கும் அச்வம்ஒரு கோடி

865 மகத்துக்களுக்கு தானம்செய்து மகிழ்ந்திருக்க பூஜை
(நான்) மாபாவி செய்யல்லையே (சீதை) மைந்தர்காளென்றழுதாள்

866 மஹானுபாவர் பேரன் என்றும் மன்னன்பிள்ளை என்றும்
கதிர்குலத்தை ஈடேற்றும் காதலர்களென்றும்

867 குவலயத்தோர் கொண்டாடக் குமாரர்வளராதே
(என்) அறிவுகெட்டபிள்ளையாலே அவபலன் கண்டேனே

868 (அப்பாநீங்கள்) ஆல்போலவேதழைத்து அருகுபோல் வேரோடி
மூங்கில்போலவே சுற்றம் முகியாமலேவாழ்வீர்

869 (என்று) மைந்தர்களை ஜானகியை மகிழ்ந்து மிகவாழ்த்தி
கௌஸலையும் சுமித்திரையும் களிப்புடனே இருந்தாள்

870 அபிராமரும் சீதையுடன் அருமை மைந்தரோடும்
தம்பிமாருடன் கூடிச் சந்தோஷமாய் வாழ்ந்தார்.

ஓம் சுபம்.

பரதேவி துணை.

உ

பரதேவி துணை.

# வேதாந்தப் பாட்டுகளும்

# தினஸரி ஸ்தோத்திரங்களும்.

இவை

சென்னை

V. S. வாலாம்பாள் அம்மாளால்

பிரசுரிக்கப்பட்டன.

நான்காம் பதிப்பு.



MADRAS:

PRINTED AT THE COMMERCIAL PRESS

1920.

*Price Annas 3]* [விலை அணா 3.

# முகவுரை

முதற்பதிப்பிலச்சிட்டிருந்த பாட்டுகளுடன் நமது தமிழ் நாட்டு ஸ்திரீகள் பிரதி தினமும் கடவுளை நினைத்துத் துதிக்கும்பொருட்டு ஏற்படுத்திக்கொண்டுள்ள சில பாடல்களை "தினஸரி ஸ்தோத்திரப் பாடல்கள்" என்பதாக இப்பதிப்பிற் சேர்த்திருக்கிறேன். காலையிற் படுக்கையைவிட்டெழும்பொழுது எல்லாத் தெய்வங்களையும் சொல்லும் இதன் முதற்பாட்டை உதயராகத்தில், பாடுவார்கள். சுருசுருப்பையும் மனதிற்குத் தெளிவையும் உண்டாக்கும் அதிகாலையில் கடவுளைத் தியானம்பண்ணித் துதிப்பதும் மகாரிஷிகள் பெரியோர்களை நினைத்து ஸ்தோத்திரஞ் செய்வதும் சந்தோஷத்தையும் ஊக்கத்தையு முண்டுபண்ணுகிறது.

பிறகு நதிஸ்தோத்திரங்களைச் சொல்லி ஆற்றிலோ அல்லது குளத்திலோ ஸ்நானஞ்செய்து அங்குள்ள திருமூர்த்தி ஸ்வொரூபமான அச்வத்த விருக்ஷத்தை அதன் ஸ்தோத்திரத்தைச் சொல்லிக்கொண்டு பலதரம் வலம் வருவார்கள். பிறகு சூரியநாராயண ஸ்தோத்திரத்தைச் சொல்லிக்கொண்டே வீடு சேர்ந்து மடியுடுத்து நெற்றிக்குக் குங்குமம் திருநீறு இட்டு துளஸிமாடத்தினடியில் மெழுகிக் கோலமிட்டு துளஸியம்மன் ஸ்தோத்திரத்தைச்சொல்லி ஸ்துதித்து பூஜிப்பார்கள். அதன்பின் மானஸீகபூஜை முதலியவற்றால் பகவானைத் தியானம்பண்ணிக்கொண்டு சமையல் முதலிய வேலைகளைச்செய்து வீட்டிலுள்ள பெரியோர்கள் குழந்தைகள் முதலியவர்களுக்குப் பணிவிடைபுரிந்து போஜனமளித்துத்தானும் புஜித்து தாம்பூலம் முதலியவற்றால் புருஷனையுபசரித்து சிரமபரிகாரம் பண்ணிக்கொள்வார்கள். பிற்பகலில் இதிஹாஸ புராணங்களின் சம்பந்தமாகிய இராமாயணம் குசலவவாக்கியம், அனந்தங்காடு, பார்வதியம்மன் சோபனம் முதலான மனப்பாடமாயிருக்கும் பாடல்களைச் சொல்லியோ சொல்லச் சொல்லிக் கேட்டோ ஆனந்தமடைவார்கள்.

அஸ்தமனவேளையில் திருவிளக்கேற்றிவைத்து அதன் ஸ்தோத்திரத்தைச் சொல்லி ஸ்துதித்து சேவித்தெழுந்து பக்திபண்ணுவார்கள். இப்படியாக ஸம்ஸாரத்திலிருந்து வேலைகளைச் செய்துகொண்டே கிரகத்தை மங்களகரமாய் வைத்துக்கொண்டு மனது விஸ்ராந்தி யடையும்படியாய் அவ்வப்பொழுது பகவானை பக்திபண்ணிக் கொண்டிருக்கும் உத்தமிகளான நமது ஸ்திரீகளுக்கு கருணாநிதியாகிய பகவான் அருள்புரிவாராக. மரா மரா வென்ற வேடனுக்கும் வாசி வாசி யென்ற பக்தனுக்கும் முக்திகொடுத்த தெய்வம் இப்படித் திருகரண சுத்தியோடு மனப்பூர்வமாய் தினந்தினம் பலவழிகளாலும் கடவுளைத்தொழுது பக்திபண்ணும் பேதமையான பெண்மணிகளுக்கு "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்றபடி சற்கதியளிப்பதிற் சந்தேகமில்லை.

இக்காலத்து நவீன நாகரீகத்தில் மறைந்துபோய்க் கொண்டிருக்கும் அநேகம் நற்கருமங்களைப்போ லல்லாமல் என் சகோதரிகள் அநேகமாய்ப் படிக்கத் தெரிந்தவர்களாகையால் இந்தப்பாடல்களை மனப்பாடஞ்செய்து சத்கர்மங்களைப் புரிந்து பரதேவியினருளுக்குப் பாத்திரர்களாவார்களாக.

ஓம் சுபம் :

Triplicane,
1—9—1920.

V. S. வாலாம்பாளம்மாள்

9. அஷ்டதிக்குப்பாலர் அவர்கள்தேவியை அஷ்டவஸு அஷ்ட [கஜங்களை
சித்தர்கின்னரர் கிம்புருடரைசிறந்த வித்யாதரர்களை
10. வசிஷ்டர் வாமதேவர்காச்யபர் அகஸ்தியர் ஆத்ரி ஆங்கிரஸை
புலஸ்தியர்கிருது புலகர் முதலான தவசிலாக்யமகான்களை
11. வேதவியாஸரை மார்க்கண்டேயரை வீணைகானநாரதரை
சூதர்சவுநகர் தூர்வாஸமுனி ஜடபரதர்ஜரத்காருவை
12. மதங்காமாமுனி ரிச்யசிருங்கரை மகரிஷிசரபங்கரை
பிருகுமகாமுனி கௌதமரிஷி பேர்பெற்றவிஸ்வாமித்ரரை
13. ஸனகாதிகளை ஜனகராஜரை சுகருடன் சதானந்தரை
வைசம்பாயனர் சுமந்துஜைமினி பைலவர்ஜாபாலியை
14. கபிலரிஷியுடன் தத்தாத்திரேயரை கற்கிபாரத் துவாஜரை
ஹயக்கிரீவரைப் பிரகஸ்பதிகுரு ஆதிசங்கராசாரியை
15. பத்மபாதரை அஷ்டகோணரை புகழ்பெற்ற ராமானுஜரை
ஸ்ரீதளாசாரி ஸ்ரீகோவிந்தரை சிறந்தமத்வாசாரியை
16. அகிலபுவனத்தைக் காத்துரக்ஷிக்கும் அஷ்டலக்ஷ்மிநாதரை
அனுமார் பெரியதிருவடியுடன் ஆழ்வார்கள் பன்னிருவரை
17. பரமபக்தனும் ருக்மாங்கதன்துருவன் பக்தனும்பிரகலாதனை
பக்திசெய்திட்டகுசேலர் அம்பரிஷன் பீஷ்மர்விதுரர் பாஞ்சா [லியை
18. ஆதிமூலத்தை கூவியழைத்திட்ட அறிவு மிகுந்தகஜேந்திரனை
ஹரனைத்துதிசெய்த பாணராவண பிருங்கி சண்டிகேச பக் [தரை
19. அப்பர்சுந்தரர் ஞானசம்பந்தர் அறுபத்துமூவர் தங்களை
ஜயதேவருடன் துளஸிதாஸரை சிறந்தஹரிபக்திமான்களை
20. பத்தர்குழாங்களை பகவான்மூவரை பாரிலுள்ள புண்யநதிகளை
ஏற்றித் தொழுதிட்டேன் ஹிருதயசுத்தியுடன் போற்றினேன் [பெரியோர்களை
21. உதயகாலத்தில் உள்ளம்தெளிந்துநான் ஹிருதயத்தில் பர [தேவியின்
பாதகமலத்தை தியானம்பண்ணியே பவக்கடல் கடந்தேறி [னேன் தியானித்தெழுந்தேன்.

ஓம் தத்ஸத் பிர்மார்ப்பிதம்.

# தர்மராஜாவுக்கு நாரதரிஷி உபதேசித்த

## நதிஸ்தோத்திரம் ஸுலோகம்.

1. நதிஸ்தோத்திரம் பிரவக்ஷ்யாமி ஸர்வசாபப்பிரணாசினிம்
பாகிரதிவாரணாஸி யமுனா ஸ்ரீ சரஸ்வதி
2. பல்குணிச்ரோண பத்ராச நர்மதா கண்டகிததா
கயாப்பிரயாகா சரயூ திருவேணி மணிகர்ணிகா
3. கிருஷ்ணவேணி பீமநதி கௌதமி பாபநாசினி
அவின்னாசி வயோத்கங்கா துங்கபத்ராமலா பஹா
4. காவேரிஸிந்துகபிலா தாம்பிரபர்ணிஹரித்முகா
குமுதிஹேமவதிசைவா கிருத மாலாஹரத்முகா
5. மஞ்சரிதபதிசைவா ஸீதா அளகநந்தினி
ஸித்தாத்ரிகிரிஸிம்ஹாத்திரி புண்டரீ கஸமுத்பவம்
6. சுவாமிப்புஷ்காணீசைவா திவ்யபுஷ்கரணீததா
சந்திரபுஷ்கரணீசைவா ஹேமபுஷ்கரணீததா
7. காலேச்வரீம் வேகவதீம் கோமுகம் கோமதீநதீம்
கௌமோதகிம்குருக்ஷேத்ரம் பதரிதுவாரகீததா
8. சாளிக்கிராமஞ்ச கேதாரம் நரநாராயணாச்ரமம்
பிருந்தாவனஞ்ச மதுரா ஹரித்வாரஞ்ச கோகுலம்
9. கனகாசலஞ்ச கைலாஸம் ஹிமயம்சக்கரவாளகம்
கவிஞ்சபாதம்வேதபாதம் நந்திபாதஞ்ச சந்நதீம்
10. அகோபலம்ஜகன்னாதம் வெங்கடாகிரி சந்நதீம்
அயோத்யாஸேதுமதுரா ஸ்ரீமுஷ்ணம் ரங்கமந்திரம்
11. ஸ்ரீகாகுளஞ்ச ஸ்ரீகூர்மம் பாண்டுரங்கம்கபிஸ்தலம்
புஷ்கரஞ்சததாகாஞ்சி அனந்தஞ்சஜனார்த்தனம்
12. பஞ்சக்ஷேத்திரம்ஹஸ்தகிரீம் ஸ்வேதாத்திரி விருஷபாசலம்
அவந்தீஞ்சநகரீம்மாயா ஸ்ரீசைலம்கும்பகோணகம்
13. க்ஷீராப்திகிருஷ்ணதீர்த்தஞ்ச தக்ஷிணத்துவாரகீததா
ஸுப்பிரமண்யம் விருபாக்ஷம் ருத்திரபாதாஞ்சநூபுரம்
14. பம்பாதீரம் ஸுதுதிபதிம் காளஹஸ்திமகாநதீம்
கன்யாகுமாரீவேதபுரீம் காஸ்மீரம்சித்திரகூடகம்
15. சங்கரநாராயணஞ்சைவா வைகுண்டம்பாபநாசனம்
வேதாரண்யம்பஞ்சநதம் கௌரீமாயூரதர்சநம்

16. சாயவனஞ்சஸ்ரீவாஞ்சியம் ஸ்ரீநிவாஸம் நிவாஸிதம்
ஆதிநாதஜகத்விந்தம் காலமேகம் சகுந்தலம்
17. ஹாலாஸ்யநகரீம்திருஷ்டுவா அதிபாபவிமோசனம்
பிரஹ்மோபேந்திரகிரிஞ்சைவா கோமதீவைஷ்ணவீம்ததா:
18. நாரதீயம்நதிஸ்தோத்திரம் நதிஸ்தோத்ராணிஜீவகா:
பிராதக்காலபடேநித்யம் ஸ்நானகாலேவிசேஷ:
19. கோடிஜன்மகிருதம்பாபம் விஷ்ணுஸாயுஜ்யமாபுன்யாத்:
பூர்வேகங்காபடேநித்யம் தக்ஷிணேயமுனேததா:
20. பச்யமேநர்மதைநித்யம் உத்தரேசரயூததா:
ஆக்னேயம்தாம்பிரபர்ணீசா நிருதியாந்தசரஸ்வதீ:
21. வாயுவாம்துங்கபத்ராசா ஈசான்யம்கண்டகீததா:
மத்யேகாவேரீகாபுரோக்த்தம் ஸ்நானமித்யாதி ஆசரேத்:

இதி ஸ்ரீநதிஸ்தோத்திரம் சம்பூர்ணம.

ஓம் தத் ஸத்.

---

## அச்வத்தவிருக்ஷ ஸ்தோத்திர வாக்கியம்.

1. மூந்திமுதலில் மூனைத்தாய்நமோநம:
மூவுலகுமுஞ்செழித்துத் தழைத்தாய் நமோநம:
பக்தியுள்ளோர்க்கருளும் பகவான்நமோநம:
இச்சையுடன் வரமளிக்கும் எந்தாய்நமோநம:
2. வாழ்மரத்துமன்று வளமையுடையவரே
காயித்திரிக்குள்பொருளே கண்மூன்றுடையவரே
சோலையழகரே சொல்லுக்கெட்டாதவரே
அல்லலுற்றபக்தருக்கு அபயங்கொடுப்பவரே
3. அருந்தபஸிபக்தருக்கு அபயங்கொடுப்பவரே
ஆரூர் அரங்கம் அழகுதிருக்காவேரி
சோலைவளமையுள்ள திருக்குடந்தைமாநகரும்
நதிக்கரைகள்தோறும் நிறைந்துநின்றநாயகரே.

### ஸ்லோகம்.

4. மூலதோபிரம்மரூபாய மத்யதேவிஷ்ணுரூபிணி
அக்ரதோசிவரூபாய விருக்ஷராஜாயதேநம:

5. (உம்ம) வேரில்விளங்கும் விஷ்ணுவைநான்பணிந்தேன்
அடிமரத்திலேவிளங்கும் அச்சுதரைப்போற்றிசெய்தேன்
கொம்பில்விளங்குகின்ற கோவிந்தரைப்பணிந்தேன்
பக்கத்தில்ஜோதிவிடும் பானுவைப்போற்றுகின்றேன்

6. சுற்றும்பிரகாசிக்கும் சூரியனைக்கைதொழுதேன்
நடுவில்விளங்குகின்ற நாரணரைநான்பணிந்தேன்
இலையில்செழித்திருக்கும் ஹிருஷிகேசரைத்தொழுதேன்
பூவிலேதோன்றும் புருஷோத்தமரைப்பணிந்தேன்

7. பிஞ்சிலேகாணும்பெருமாளைக் கைதொழுதேன்
காயிலேதோணும் கமலநாதரையும் கைதொழுதேன்
பழுத்தில்விளங்கும் பத்மநாபர் பதம்பணிந்தேன்
விதையில்விளங்கும் விச்வமூர்த்தியடிவணங்கி

8. ஆவாகனங்கள்பண்ணி அர்ச்சித்தேன் வாழ்வரசை
சுற்றிப்பிரதக்ஷணமாய் திருவரசைப்போற்றிசெய்தேன்
பக்குவமாம்பழங்கள்வைத்து பக்தியுடன்பூஜைசெய்தேன்
புஷ்பங்களைச்சொரிந்து போற்றிநமஸ்கரித்தேன்.

9. மஞ்சளுடன்குங்குமமும் மணக்குநல்லசந்தனமும்
தாம்பூலம்சொர்னபுஷ்பம் திருவடியிலேசொரிந்தேன்
வளமையுள்ளவாழ்வரசின் மலரடியில்நான்பணிந்தேன்
அடுத்தாற்கரசே அடைந்தோர்க்குக்கற்பகமே

10. புவனம்பிழைக்கவந்த புண்ணியவாழ்மரமே
வேம்புக்குநாயகரே விருக்ஷத்தின்ராஜாவே
திருமூர்த்தியாய்விளங்கும் செழிப்புடையபேரரசே
பரதேவிதன்னருளால் பாக்கியத்தைத் தாருமையா.

ஓம் தத் ஸத்.

பிர்மார்ப்பிதம்.

---

## ஸ்ரீதுளஸியம்மன் ஸ்தோத்திரவாக்கியம்.

1. ஸ்ரீமத்துளஸியம்மா திருவேகல்யாணியம்மா
வெள்ளிக்கிழமைதன்னில் விளங்குகின்றமாதாவே
செவ்வாய்க்கிழமை செழிக்கவந்தசெந்திருவே
தாயாரேயுந்தன் தாளிணையில்நான்பணிந்தேன்

2. பச்சைப்பசுமையுள்ள துளஸீநமஸ்தே
பரிமளிக்கும் மூலக்கொழுந்தேநமஸ்தே
அற்பப்பிறப்பைத் தவிர்ப்பாய்நமஸ்தே
அஷ்டஐஸ்வர்யம் அளிப்பாய் நமஸ்தே

3. ஹரியுடையதேவி அழகிநமஸ்தே
அடைந்தார்க்கு இன்பம் அளிப்பாய்நமஸ்தே
வனமாலையென்னும் மருவேநமஸ்தே
வைகுண்டவாஸியுடன் மகிழ்வாய்நமஸ்தே

4. அன்புடனேநல்ல அருந்துளஸிகொண்டுவந்து
மண்ணின்மேல்நட்டு மகிழ்ந்துநல்லநீரூற்றி
முற்றத்தில்தான்வளர்ந்து முத்துப்போல்கோலமிட்டு
செங்காவிசுற்றுமிட்டு திருவிளக்குமேற்றிவைத்து

5. பழங்களுடன்தேங்காயும் தாம்பூலந்தட்டில்வைத்து
புஷ்பங்களைச்சொரிந்து பூஜித்தபேர்களுக்கு
என்னபலனென்றுசொல்லி ஹ்ருஷிகேசர்தான்கேட்க
மங்களமான துளஸீ மகிழ்ந்துரைப்பாள்

6. மங்களமாய்என்னைவைத்து மகிழ்ந்துஉபாஸித்தவர்கள்
தீவினையைப்போக்கிச் சிறந்தபலன்நானளிப்பேன்
அரும்பிணியைநீக்கி அஷ்டஐஸ்வரியம்நானளிப்பேன்
தரித்திரத்தைநீக்கி செல்வத்தைநான்கொடுப்பேன்

7. புத்திரனில்லாதவர்க்கு புத்திரபாக்கியமளிப்பேன்
கன்னிகைகள்பூஜைசெய்தால் நல்லகணவரை கூட்டுவிப்பேன்
கிரகஸ்தனென்னைபூஜைசெய்தால் கீர்த்தியுடன்வாழவைப்பேன்
முமுக்ஷுக்கள்பூஜைசெய்தால் மோக்ஷபதங்கொடுப்பேன்

8. கோடி காராம்பசுவைக் கன்றுடனேகொண்டுவந்து
கொம்புக்குப்பொன்னமைத்து குளப்படிக்கு வெள்ளிகட்டி
கங்கைக்கரைதனிலே கிரகணபுண்யகாலத்தில்
வாலுருவி அந்தணர்க்கு மகதானஞ்செய்தபலன்

9. நானளிப்பேன்சத்தியமென்று நாயகியுஞ்சொல்லலுமே
அப்படியேஆகவென்று திருமால்அறிக்கைவிட்டார்
இப்படியேஅன்புடனே ஏற்றித்தொழுதவர்கள்
அற்புதமாய்வாழ்ந்திடுவர் பரதேவிதன்னருளால்

ஓம். தத். ஸத். ப்ரமார்ப்பிதம்

## சூரியபகவான் ஸ்தோத்திரம்.

1. கடலில் உதித்துவரும் கதிரவனைஸ்தோத்தரிக்க
அலைகடலின்மேலெழுந்த ஆதியைப்பூஜைபண்ண

2. ஆனைமுகவா அறுமுகவாமுன்வருவீர்
திவாகரனார்கீர்த்திகளைச் சற்றேதெரிந்துரைக்க

3. நான்முகனார்தேவியரே நாவில்வரவேணுமம்மா
புகழுடையபாரதியே புஸ்தகத்தில்வாழ்பவளே

4. சதுர்வேதசாஸ்திரமும் தத்துவத்தின்உள்பொருளே
தத்துவத்தின்மெய்பொருளே சரஸ்வதியேமுன்வருவீர்.

5. கிழக்கில்உதித்துவரும் கீர்த்தியுள்ளமெய்ப்பொருளே
அடியேன்வினையகற்றி ஆட்கொள்ளவேணுமையா

6. தொட்டிலின்பிள்ளை சிசுக்கள் பிழைசெய்துவிட்டால்
பிழையாகவெண்ணித் பெற்றதாய்தள்ளுவளோ

7. அப்படிப்போலெண்ணி அடியேன்வினையகற்றி
அஞ்சாமல்காத்தெனக்கு ஐக்கியபதம்தாருமையா

8. கதிரவனேமெய்ஞானக் கண்கள்தரவேணுமைய்யா
ஜோதிசுயம்வடிவே சுத்தவொளியானவரே

9. சுத்தவொளியானவரே என்ஜோதிவெளியாக்குமையா
சிஷ்டாள்மனதில் உதிக்கும்திவாகரரே

10. உண்டென்றார்பங்கில் உரையும்பரஞ்ஜோதி
இல்லையென்றபாமரர்க்கு எட்டாதவஸ்துவே

11. ஜகத்திற்கதிபதியே சூரியநாராயணரே
உலகிற்கொருவரென்று உம்மையன்றோசொல்லிடுவார்

12. பிரத்தியக்ஷதேவதையே உம்மபாதஞ் சரணமையா
பிருதிவிஏழுகடலும் பிரத்யக்ஷமாய்விளங்கும்

13. இரக்ஷிக்கும்தேவதையே உம்மஇணையடியைப் போற்றிசெய்
என்னுடையஜன்மத்தை ஈடேற்றவேணுமையா [தேன்

14. நான்மாய்கைவலையில் மறித்துவந்துசிக்காமல்
பிறவாதமோக்ஷபதம் தாரீர்பெருமாளே.

15. உலகிலுள்ளமானிடர்கள் உய்யும்வழிகாட்டவென்று
கதிரவனைபூஜித்து கடைத்தேரவேணுமென்று

16. சூரியனைப்பூஜித்தார் ஸுந்தரிகள்மூவருமாய்
அன்னையெனும்பார்வதியும் அதிகாலையிலெழுந்து

17. ஈஸ்வரியாள்வந்தாள் இலக்ஷுமியாள் தன்மனைக்கு
பார்வதியாள்நல்வரவைப் பார்த்துமகாலக்ஷுமியும்

18. (தன்) வண்டார்குழலசைய மாலைபுரண்டசைய
சீரார்சிலம்பார்க்கச் செங்கைவளைஜோதிவிட

19. கழுத்துப்பதக்கமின்னக் கங்கணங்கள்ஜோதிவிட
மங்கைஉமையவளின் மலரடியிலேபணிந்தாள்

20. தெண்டனிட்டலக்ஷுமியை தேவிகண்டு அன்புடனே
மாதவனூர்மார்பில் பிரியாமல்நீவஸித்து

21. வாழ்ந்திருக்கவென்று மங்கைஉமைவாழ்த்திவிட்டு
காலையில்சென்றேநாம் கங்கைதன்னில்நீராடி

22. இமயகிரிமேலெழுந்த இளங்கதிரைப்பூஜைப்பண்ணி
வருவோம்நாமென்றழைக்கும் மாதுமையாள்சொற்படிக்கு

23. மகலக்ஷுமிதேவியரும் வாணிசரஸ்வதியும்
ஸுரலோகமங்கையரும் ஸுந்தரிஇந்திராணியுடன்

24. சங்கரிதேவியுடன் சேர்ந்துவந்தார் கூட்டமதாய்
வானநதிக்கங்கைதன்னில் மங்கையர்கள்வந்திறங்கி

25. மஞ்சள்நீராடி வெண்பட்டால்ஈரமொற்றி
கோதிமயிராற்றி குழலுக்குப்பூமுடித்து

26. ஈரத்துயில்விழுத்து ஏற்றமுள்ளபட்டுடுத்தி
பத்தினிமார்களெல்லாம் பூஞ்சோலையுள்புகுந்து

27. மல்லிகைமுல்லை அரளி இருவாக்ஷியுடன்
செந்தாமரைப்பூவும் செங்கழுநீர்புஷ்பமுடன்

28. ஆனமலர்களெல்லாம் ஆராய்ந்துதானெடுத்து
தேனுடனே முப்பழமும் செவ்விளநீர்க்குலையும்

29. தாம்பூலம்கந்தவகை தட்டிலேகொண்டுவந்து
எட்டாப்பரம்பொருளின் கிட்டவேவந்துநின்றார்.

30. பருவதம்போல்விளங்கும் பசும்பொன்னால்தேர்விளங்க
முத்தால் அலங்கரித்து மாலைகளுந்தொங்கவிட்டு

31. பவழக்கொடுங்கையுடன் பக்கத்தின்சக்கரமும்
தங்கத்தினாலமைத்த தட்டுக்களாயிரமும்

32. குந்தளப்பொன்னாலமைத்த குடைகொடிகள்தான்பிடிக்க
தங்கரத்தினத்தாலிழைத்த சாமரைகள்தான்வீச

33. அருணனென்னுஞ்சாரதியும் ரதமுகப்பிலேஅமர்ந்து
பச்சைக்குதிரைகட்டிப் பெரியதேர்தான்செலுத்த

34. சப்த மா தான்பூட்டித் தடந்தேரைஓட்டிவர
அழகானதேர்நடுவில் ஆதித்தன்ஜோதிவிட

35. ஆயிரங்கிரணங்கள் ஜோதிவிடஆதித்தன்
வஜ்ஜிரமணிமகுடம் முடியின்மேலேவிளங்க

36. மகமேருபர்வதத்தை வளையவந்துபாஸ்கரனார்
உலகத்தோருய்ய உதயகிரிமேலெழுந்தார்

37. பவனிவரும்சூரியரைப் பத்தினிமார்கண்டுகந்து
அதிகபிரியத்துடனே அர்க்கியமுந்தான்கொடுத்தார்

38. பாதமலம்பிநல்ல பட்டினால்ஈரமொற்றி
ஈரமுலரவென்றே இணைகவுரியால்விசிறி

39. புஷ்பத்தால் அர்ச்சித்து போற்றியந்தப்புண்ணியரை
கனிந்தபழங்களையும் கதிரவனுக்கற்பிதமாய்

40. நைவேத்தியம்பண்ணியவாள் நெய்விளக்குந்தானேற்றி
பன்னிருநாமத்தால் பகலவனைத்தான் துதித்தார்

41. கிருபையுடனேசூரியரும் பூஜைதன்னைத்தான்கிரகித்து
புவனேச்வரிகளையும் போற்றிமனமகிழ்ந்தார்

42. அவரவர்க்குஏற்றவரம் ஆதித்தனைக்கேட்டார்
ஈசரிடப்பாகத்தை என்றும்பிரியாமல்

43. உடனாகவாழ்ந்திருக்க உமையவளுங்கேட்டிருந்தாள்
இலக்ஷ்மிதேவி இச்சையுடனேதுரைப்பாள்

44. மாதவனார்தம்முடைய மார்பைவிட்டுநீங்காத
வரமெனக்குவேணுமென்று மகலக்ஷ்மிகேட்டிருந்தாள்

45. சரஸ்வதிதேவியுந்தன் சதுர்முகனார்தம்முடைய
நாவைவிட்டுநீங்காத நன்மைகளைத்தாருமென்றாள்

46. ஸாவித்திரிசந்தியை காயித்திரிபிர்மனுட
சிரசைவிட்டுநீங்காத சிலாக்கியத்தைக்கேட்டிருந்தாள்

47. அயிராணியப்போ அமரர்கோன்தன்னுடனே
சபையைவிட்டுநீங்காத சுகந்தனையுங்கேட்டிருந்தாள்

48. அரிவயர்கள்கேட்டவரம் அப்படியேஆகவென்று
கிருபையுடனேவாழ்த்தி கதிரவனும்வாக்களித்தார்

49. அழகானதேர்நடத்தி ஆதித்தன்சென்றிடவே
சுந்தரிமார்களெல்லாம் தன்கிரகத்தைதானடைந்தார்

50. சூரியமாலையைச் சொன்னவரும்கேட்டவரும்
சொல்லிக்கொடுத்தவரும் சொல்லுவதைக்கேட்பவரும்

51. மைந்தர்களைப்பெற்றிடுவர் மகிமையுடன்வாழ்ந்திடுவர்
இவ்வுலகுக் காக்ஷிகளும் இகபோகந்தானடைந்து

52. பக்திமனதுடனே பரதேவிதன்கிருபையால்
முக்திப்பதமான மோக்ஷமுந்தானடைவார்.

ஓம் தத் ஸத், பிர்மார்ப்பிதம்

# பரமாத்மா திருப்பள்ளியெழுச்சி.

## பரமாத்மா வணக்கம்.

1. மதுக்ஷீரம் பறவகைகள் - நாளிகேரம் இக்ஷுகண்டம்
நல்லமோதகப் பணியாரவகைகள்
ஆதரவாய் நான்படைப்பேன் ஆவுடையாள் திருமகனே
மரகதமான கணபதி காப்புத்தானே.

2. சந்ததமும் என்நாவில் - வந்துதவிசெய்யும் அம்மா
சாயாம்பூ சரஸ்வதியே சியாமளையே—
தக்ஷிணாமூர்த்தியே ஸ்ரீகுருயோகியே
சுவாமின் சமாதி கோலுவோ!

## ஜீவன்முக்தர்களின் உதயகாலம்.

3. அஞ்ஞான இருள்பிரிந்து அறிவருணோதயமாகின்றது
விஞ்ஞான சூரியன் உதித்தார்—
ஜாக்ரஸ்வப்ன சுஷுப்தி என்ற இராத்திரி மூன்றுங்கழிந்து
ஸ்வானுபோதோதயமானேன் ஐயாவே

4. ஜோதிர்மயமாகும் விருக்ஷம் ஜொலித்து மலர் சொரிகிறது
திடக்கியானபரிபக்குவமாகின்றது

வைராக்கியக் குயிலினங்கள் (ஞான) மதுஸாரக்கனிகோதி
தத்துவமஸி என்று கூவிநிற்கின்றது—

5. ஓங்காரமானதென்றல் வாடை நன்றாய் வீசுகின்றது
சுயஞ்ஜோதி ஆதித்யனுதித்தார்—
பரிபூர்ண மேடைமேல் பராபர ஹம்சங்கள்
நற்பிரணவப் பலனைப்புஜித்து—

6. ஹம்ஸோஹ சிவோஹ பாவனைகள் பண்ணியே
அஹம்பிரும்மைவாஹ மென்று கூவி நிற்கின்றது
தக்ஷிணாமூர்த்தியே ஸ்ரீகுருயோகியே
சுவாமின் சமாதி கொலுவோ

7. மஹத்துக்கள் பிருஹ்மநிஷ்டாள் பாலவிருத்தாள் மஹாயோகி
குருசுவாமியின் தெரிசனந்தேடி நிற்கின்றார்
அகண்டாகாரரூப ஆனந்த லக்ஷ்மியுடன்
ஐக்கியபோகமோ சுவாமின் குருவே!

8. காமக்குரோதலோபமோக மதமாச்சர்ய மமதைடம்பம்
அவித்தையுடன் ஆங்காரம்—ஈஷணைகள் மூன்று—
இந்த விபரீதச் சத்ருக்களை வேர்களைந்து நான் ஜயித்து
ததாகாராஜ்ய ஜயமானேன் ஐயாவே!

9. உபதேசதாரகக் கிருபையான அருக்கன் உதித்தவுடன்
ததாகாரமான வெளியானேன் ஐயாவே
தக்ஷிணாமூர்த்தியே ஸ்ரீகுருயோகியே
சுவாமின் சமாதி கொலுவோ!

## ஜீவன்முக்தர்களின் உதயஸ்நானம்—ஜபம்.

10. சாதன சதுஷ்டயாள் சத்புருஷாள் மகாயோகி
தங்கள் சத்தான பத்தினிகளுடனே
சச்சிதானந்த நதியில் நித்தியமாக நீராடி
சத்தியமென்ற காயித்திரி ஜயித்து—

11. நிஷ்காம்யமாகவே நித்திய கருமந்தனைப்பண்ணி
பிர்மார்ப்பணங்கள் செய்து நிற்கின்றார்
தக்ஷிணாமூர்த்தியே ஸ்ரீகுருயோகியே
சுவாமின் சமாதி கொலுவோ!

## ஜீவன் முக்தர்களின் அக்னிஹோத்திரம்.

12. லக்ஷணாத்திரயங்களென்னும் மதன தண்டந்தனைப்பிடித்து
தத்பத துவம்பதமென்ற அரணிக்கட்டையில்
சிரவண மனன நிதித்யாசனத்தால் மதனம்பண்ணி ஜ்வாலை
சாக்ஷாத்கார ஜ்வாலை வளர்த்து— [யாக்கி
13. அகண்டாகாரமென்ற அக்கினி குண்டத்தில்
ஆஹுதிகள் பண்ணி நிற்கிறாள்
தக்ஷிணாமூர்த்தியே ஸ்ரீ குருயோகியே
சுவாமின் சாமாதி கொளுவோ!

## ஜீவன் முக்தர்களின் யாகம்.

14. ஜீவேச்வராளென்ற தீக்ஷதரும் அத்வர்யுவும்
சின்மாத்திர யாகம்பண்ண தீக்ஷைவகித்து
ஆகாம்ய ஸஞ்சிதவர்ணாசிரமங்களென்ற
நாமரூபகர்ம்ப் பிராரப்த பசுவை
15. ஞானமென்ற பரசினால் கண்டங் கண்டமாய்த் துணித்து
ஜோதியாகும் வபையை எடுத்து
ஞானயோக சமாதியினால் பிரபலாக்கினி வளர்த்து
பரிபக்குவமாகச் சமைத்து,—
16. புண்யபாவங்களென்ற ஆச்சியந்தனைச் சொரிந்து
புரோடாஸ பிண்ட ஹவிஸை
அகண்டாகாரமென்ற அக்கினி குண்டத்தில்
ராஜயோக அத்வர்யர்கள் சூழ—
17. ஹம்ஸோஹம் ஸோஹமென்று அவயமிட்டிக் கோஷமாய்
ஆஹுதிகள் பண்ணி நிற்கிறாள்
தக்ஷிணாமூர்த்தியே ஸ்ரீ குருயோகியே
சுவாமின் சமாதி கொளுவோ!

## ஜீவன் முக்தர்களின் பூஜை.

18. ஜோதிர்மயமாய்ஜ்வலித்து தாவள்யமாய் விளங்கும்
சாக்ஷாத்காரஸ்படிக லிங்கத்தை
சித்தாள் திடஞானி சனகாதியோகியர்கள்
தியானயோக சமாதியினாலே,*

19. தனைவிசாரித்து ஸ்வானுபோக அனுபோகத்தால்
  ஆவாஹனமும் பண்ணி
 ஜன்மமிருத்யு ஜரைவியாதி கர்மபந்தம் அஞ்ஞான
  நிர்மால்யந்தனைக்களைந்து

20. நிர்க்குண நிர்விகற்ப நிரஞ்சன சிம்ஹாஸனத்தில்
  அலங்கரித்து எழுந்தருளப்பண்ணி
 சுத்தோதகமாகும் சத்தியகங்கை கொண்டுவந்து
  தாராபிஷேகங்கள் பண்ணி,—

21. ஜோதிர்மயமாய்ஜ்வலித்து தாவள்யமாய்விளங்கும்
  பீதாம்பரமுஞ் சாற்றி
 விபுவாய் நிறைந்தவர்க்கு வீபூதி ருத்திராக்ஷம்
  யக்ஞோப வீதமுஞ்சாற்றி,—

22. அதிசீதளமாயிருக்கும் பரிமளகந்தங்கள்
  அலங்காரமாகப்பூசி
 சத்துச்சித்தானந்தக் கிரீடகுண்டலங் கண்டஸரம்
  சர்வாபரணங்கள் பூட்டி,—

23. ஆதியந்த மற்றவர்க்கு அர்க்கியங்கள் தான்கொடுத்து
  அன்பென்னும் மலர்தனைக் சாற்றி
 அகண்டகாரமான தூப தீபங் காட்டி
  அக்ஷதைதிலகமுஞ் சாத்தி,

24. அண்டாண்ட பிர்ம்மாண்ட யுகயுகப்பிரளயங்களை

 ஹம்ஸோஹம்ஸோஹ மென்று கர்ப்பூரதீபங்காட்டி
  ஐக்கியநமஸ்காரமும்பண்ணி,

25. தக்ஷிணாமூர்த்தியே (சுவாமி) வடிவாகவந்தென்செவியில்
  தாரகோபதேகஞ்செய்தபின்
 நித்தியானந்தமடைந்து இந்ததேகந்தனை மறந்து
  நிராகார வெளியானேன் ஐயாவே !
 தக்ஷிணாமூர்த்தியே ஸ்ரீகுருயோகியே
  சுவாமின் சமாதி கொலுவோ !

ஓம் தத் ஸத் பிர்மார்ப்பிதம்.

# வேதாந்த உதயராகப் பாட்டுகள்

## ஜீவன் முக்தர்கள் உதயகாலம்

(2)

### உதயராகம்.

1. உதயமாச்சுது ஹிருதயந்தெளிந்தது
 உந்தன் தெரிசனமாச்சுது
பிரமைகளாகின்ற மாய்கையொழிந்தது
 பரிபூர்ணமாய் மனம்நிறைந்தது

2. மாய்கையாகின்ற இருள்பிரிந்தது
 மதியாகிய சூரியன் உதித்தது
காயக்கொடிவேர் அற்றுப்போச்சுது
 கர்மம்விட்டு வெளியாச்சுது

3. பாசமாகின்ற பனியுந்தெளிந்தது
 பிரகாசம்வந்து அண்டம்நிறைந்தது
கிலேசமற்றதோர் திவாகரனும்உதித்து
 ஹிருதயாகாசம்எங்கும் வெளியாச்சுது

4. காமமென்கின்ற கள்ளர்பயத்தினால்
 கலங்கிநிற்கின்ற ஜீவற்கு
க்ஷேமமாம்பரயோக நிஷ்டையால்
 காமாதிகள் ஓடிப்போச்சுது

5. விஷயமாகும் நக்ஷத்திரங்கள்மறைந்தது
 விவேகமாகும் நிலந்தெளிந்தது
அகம்பிரும்ம நிலைதனையடைந்தது
 அருள் அருண உதய மாச்சுது

6. தொண்ணூத்தாறு தத்துவமாகும் கொடிகளும்
 சன்னபின்னலாய்ச் சூழ்த்திருப்பவை
சித்தம்தெளிந்ததோர் ஞானக்கத்தியால்
 வெட்டியேஅறுபட்டுப் போச்சுது

7. வேதநால்கடலும் அலைவந்தடிக்குது
 விளங்கும் சின் மயானந்தம் பெருகுது

நாதமென்னும் ஓங்காரசப்தத்தால்
நரகக்குழி தூர்ந்து போச்சுது
8. ஞானநதிதன்னில் ஸ்நானம்பண்ணியே
மௌனவெண்பட்டு உடுத்தியே
தியானமர்கும் விபூதி உடம்பெங்கும்
தரித்தேன் பரிபூர்ணமாகவே
9. ஞானக்கோபுர உச்சிமீதினில் சகஸ்திர கமலதளத்திலே
ஜீவன்நான் பரமாத்மமூர்த்தியைசேவித்து ஐக்கிய மாகினேன்.

## ஜீவன் முக்தர்கள் வேண்டுதல்

### உதயராகம்.

1. அக்கியான மாகின்ற நித்திரை தெளிந்து போச்சு
பிரக்கியான சாக்கிரத்தை கண்டுதே
விக்கியான மாகின்ற சூர்ய உதயமாகி
வெய்யலுங் கூடத்தில் வந்துதே
2. சிரவணமென்கின்ற வீட்டில் சாணந் தெளியாமல்
தத்துவக் குப்பை கிடக்குதே
(அதைச்) சேர்த்துத் திரட்டி எடுக்கத் தெரிய வில்லை
செகதீச்வரா என்ன செய்குவேன்
3. காயமாகின்ற வீட்டில் எண்ணித்துலையாத
காரியங் கிடக்குது ஈச்வரா
ஞாயமோ நானிந்தப்பாட்டுக் கிலக்கானேன்
நானிந்தக் கிலேசப் படுவேனோ
4. பிராரப்தமாகின்ற கடன்காரன் மறியலாய்
பாடிருக்கான் தலைவாசலில்
யாரைப்போய் நல்லது சொல்லுவேன் நானிப்போ
அதைவிலக்க ஒருவரில்லையே
5. விரக்தி என்ற பர்த்தா வெளியிலே புறப்பட்டால்
விலங்கிடுகின்றார் இருகாலிலும்
துரத்தி யடிக்கின்ற காலமோ வேளையோ
சோதனையோ இது ஈச்வரா
6. கைவல்ய மாகின்ற கர்ப்பம் வயிற்றிலே
கல்லுப்போல் மெத்தக் கனக்குதே

செய்யுங் கருமங்கள் ஒன்றுந் தெரியவில்லை
 தெய்வமே நானென்ன செய்குவேன்
7. போதமாகின்ற பிள்ளை பின்னுடன் துடருது
 சரவணமாகும் ஸ்தன்யம் தரச்சொல்லி
பாதத்தைக்கட்டியே பாலனழுதிட்டால்
 பார்ப்பது எப்படிக் காரியம்
8. கொண்டிமனப் பசுவை அண்ட முடியவில்லை
 தொண்டு கழுத்தினில் கட்டியே
அண்டமளந்த கோபாலருடன் சொல்லிக்
 கொண்டு விடவேணும் அதனையும்
9. அண்டாத ஸம்ஸார பிராரப்த வலைதன்னில்
 அகப்பட்டுக்கொண்டு விழிக்கின்றேன்
தாண்டவழிபாரும் ஆண்டவரே எங்கள்
 சுவாமிகுரு வெங்கடேசரே.

## ஜீவன் முக்தர்கள் விரக்தி.

### உதயராகம்.

1 அஸ்திகடிக்கும் சுவானம்போலே அறிவழிந்து
 நாஸ்தியாமிந்த ஜகத்திலே
தத்திவிழுந்தோடும் ஜீவா உனக்கு நற்
 புத்தி சொல்லுவேன் இப்போ கேட்பாயோ
2. மூலாதாரமான சையபர்வதந் தொட்டு
 சகஸ்திர சங்கம பிர்ம ரந்திர பரியந்தம்
பக்தாளும் முக்தாளும் சக்தாளும் தேவாளும்
 அத்தனைபேரும் வசிக்கின்றாள்
3. காணும் பிரபஞ்சங்கள் எல்லாங் கடம் போலே
 நாசமாகுமென்று பார்த்திடாய்
தோணும்சிதாகார சைதன்ய வஸ்துவை
 சுகசொரூப மென்று அறிந்திடாய்
4. விதவா பூஷணம்போலே அன்ய சாஸ்திரங்கள்
 வியர்த்தமாகுமென்று அறிந்திடாய்
பரமாயிருக்கின்ற அத்வைத ஸாஸ்திரத்தை
 பார்த்தே கிருதார்த்தனாய் பஜித்திடாய்

5. சோதிர்மயமான சுஷும்முனை நாடியில்
சுத்தமாங்காவேரி தன்னிலே
சூக்ஷ்மத்தேகத்திலால் ஸ்நானஞ் செய்தால் பத்மம்
பிரகாசிக்கும் ஹிருதயந் தன்னிலே

6. உலகம் பதினாலும் உன்னுட ஹிருதயத்தின்
உள்ளே இருக்குதென்றே சொல்லி
உத்தர கீதையில்சுவாமி பார்த்தனுக்கு
உபதேசம் பண்ணி இருப்பதால்

7. சேதுவுங்காசியும் ஸ்ரீ கும்பகோணமும்
. ஸ்ரீரங்கம் ஜெம்புகேஸ்வரமும்
திருவையாறும் மத்தியார்ச்சுன மாயூரமும்
உன்தேகத்தில் உண்டென்று பார்த்திடாய்

8. கிடைத்த சிந்தாமணி விட்டுவிட்டுக் காலில்
காச்ச மணிதேடும் பிராந்தம்போல்
சொல்லச் சோர்வில்லாத சுவானு போகத்தைவிட்டு
அல்லலாம் கர்மத்தில் அலையாதே

9. ஸ்ரீ வேங்கடேச குருவையும் சிந்தித்து
தக்ஷிணாமூர்த்தியை சேவியாய்
பிரீதியுடனே அனுக்கிரகம் பண்ணுவர்
பிர்மமாகவே உன்னைப் பாவியாய்

## ஜீவன் முக்தரின் ஆறுதார தேவதைகள் வணக்கம்

### உதயராகம்.

1. கண்டு தொழுதேன் அகண்டந் தன்னிலே
காலபயந்தீர்த்த கண்டரை
அண்டர் போற்றிடும் புண்டரீகரை
ஆதிபரப்பிரம்ம மூர்த்தியை—கண்டு தொழுதேன்

2. மூலாதாரத்தில் முக்தி கணபதி
மூஷிகந்தன்னில் ஏறியே
நாதம் முழங்கவே நாலுதளத்திலே
வல்லபை சக்தி நாதனை—கண்டுதொழுதேன்

3. சுவாதிஷ்டானத்தில் சரஸ்வதி பிர்மா
சகஸ்திர மாறு தளத்தினில்

ஹம்ஸ வாகனந்தன்னிலேறிய
அகிலம் சிருஷ்டிக்கும் நாதனை—கண்டுதொழுதேன்

4. மணிபூரகந் தன்னில் மகாவிஷ்ணு லக்ஷ்மி
மட்டில்லாத தசதளத்திலே
மணியணி பூட்டிய கெருடன் மீதினில்
அறிவின் சொரூபனும் ஆதியை—கண்டுதொழுதேன்

5. அனுகிருத மென்ற மண்டபந்தன்னில்
ஆனபனிரெண்டு தளத்திலே
ரிஷிபவாகனந்தன்னி லேறியே
பார்வதி பரமேசரைக்—கண்டுதொழுதேன்

6. பக்தியுடன் வந்து பதஞ்சலி வியாக்கிரர்
ஏற்றியே பூஜை பண்ணவே
இஷ்டமுடனென்னைக் காத்து ரக்ஷிக்கும்
எங்கள் பார்வதி நாதரை—கண்டுதொழுதேன்

7. விசுத்தியாகின்ற மண்டபந்தன்னில்
விசித்திரம் பதினாறு தளத்திலே
ஜீவவாகனம் தன்னிலேறிய
ஜீவாத்மாவுடன் ஐக்கியமாய்—கண்டுதொழுதேன்

8. ஆதாரமாய்மூலப் பிரகிருதிபிரபஞ்சத்தை
அடக்கியே உள்ளே ஆனந்தம்
ஆக்ஞையிலிருந்து அகண்ட மீரேழும்
காத்து அளிக்கும் எங்கள் நாதனைக்—கண்டுதொழுதேன்

9. சுப்பிரகாசரை ஜோதி சொரூபரை
சொல்லுக்கெட்டாத பரப்பிரம்மத்தை
அப்பிரகாசரை அகண்ட ரூபரை
ஆதியந்தமற்ற ஜோதியைக்—கண்டுதொழுதேன்

## மானஸீக காசி யாத்திரை.

1. ஸத்குருவின் கிருபையினால் (காசி) யாத்ரா மகிமை
சங்கிரமாய்ச் சொல்லுகின்றேன் சாதுக்கள் மகிழ

2. புத்தியினால் நிச்சயிக்கும் சிருஷ்டிக ளெல்லாம்
போதமய மாயிருக்கும் பூர்ண வடிவாய்

3. தேசாந்திரங் கடந்து சோஷிக்கு மாப்போல்
தசேந்திரி யங்களையும் படிய அடக்கி

4. ஆதார கங்கையென்றுஉற் சாகமாய்ச் சொல்லும்
ஆனந்தஸ்வ ரூபந்தன்னில் நிரஞ்சன முமாய்
5. அகங்காரமுதலான அந்தக்கரணத்தின்
அகந்தை மமதைஎன்ற வைரியைவிட்டு
6. காமக்குரோதப் பகைவரைக் கிட்ட வொட்டாமல்
விவேகமென்னும்ஸத் வாஸனை யுடனேயிருந்து
7. ஸ்தூல சூக்ஷ்ம மாயிருக்கும் ராஜ்ஜியம் விட்டு
ஏகாக்கிர சிந்தையென்னும் வாகனமேறி
8. ஏகபோகமாயிருக்கும் காசிதனிலிறங்கி
ஹிருதயசுத்தியாகவே த்யானமும்பண்ணி
9. ஈஷணத்ரயங்களென்னும் வாசனைபோக்கி
இந்திரியங்கள்பதினாலு முள்ளேயடக்கி
10. இடைபிங்கலையென்று இரண்டுநாடியை
யமுனைகங்கையாகப் பாவித்தென்னுள்ளே
11. சுஷுமுனவென்றதொரு நாடியைத்தானே
ஸரஸ்வதியாமந்தர் வாகினியுங்கூடி
12. திருவேணிசங்கமத்தில் தீர்த்தங்களாடி
த்ருதாபமற்றதொரு வெண்பட்டுடுத்தி
13. நிஷ்களங்கமாயிருக்கும் ஜபதபம்செய்து
நித்தியானந்தமாமிருக்கும் கோவில்புகுந்து
14. பக்தியுடனம்மைமகிழ் விச்வநாதரைப்
பிரதிதினமும்தரிசித்து உள்ளேயிருந்தேன்
15. அறிவென்றவிசாலாக்ஷி அம்மனுமப்போ
ஆகாமியசஞ்சிதங்கள் இரண்மறுத்தாள்
16. தாரகப்பிரும்மமென்ற விச்வநாதரும்
சந்தோஷமாய்கங்கா ஸ்நானம்பண்ணென்றார்
17. அற்புதமாய் விச்வநாதர் கிருபை யினாலே
ஆனந்தகங்காஸ்நானம் பண்ணிப்பிறகு
18. பக்தியுடன் ப்ரயாகையில் ஸ்நானங்கள் பண்ணி
பரிபூர்ண மான மணிகர்ணிகை யாடி
19. கங்கையுடன் யமுனை ஸரஸ்வதி முதலாம்
கீர்த்தியுள்ள அறுபத்தாறு தீர்த்தங்க ளாடி

20. சப்தஜென்மமீடேற வட விருக்ஷத்தின் கீழே
நித்தியதிருப்தியாகவெகு பிண்டமும்போட்டு

21. தத்துவங்கள் தொண்ணூறத் தாறு கயா வாளிக்கும்
சந்தோஷமாகவெகு திருப்திகள்பண்ணி

22. நித்தியா நித்திய வஸ்து வென்றும் காவடிகட்டி
நிரந்தரப்பிர்மமென்னும் கங்கையைத்தூக்கி

23. ஸத்சங்க மென்னும் ஸோ பதிக ளோடே
சிரவண மனன மென்னும் மார்க்கமுந் தாண்டி

24. ஜனனமரணமற்ற ராமேச் வரத்தில்
ஸ்திரபோக மாக வங்கே வந்தே யிருந்து

25. அக்கியானத்தினால் வந்த துக்கங்கள் தீர
ஆனந்த ஸாகரத்தில் ஸ்நானமும்பண்ணி

26. ஆதியந்தமற்றிருக்கும் இராம நாதர்க்கு
அறிவென்னுங்கங்கை கொண்டபிஷேகம்பண்ணி

27. ஜ்யோதிர் மயமா யிருக்கும் இராம நாதரை
சித்தத்துக்குள் ளேவைத்து தரிசனம்பண்ணு

28. அகண்டபரிபூரணமாய் அசஞ்சலமாய்
ஆனந்த பிரும்மந்தன்னில் ஐக்கியமானேன்.

ஓம் பிரமார்ப்பிதம்.

---

## மானஸீக சேது ஸ்நானம்.

1. திருவாழி தனைவாங்கி சீதையம்மன் கைக்கொடுத்து
மாருதியும் சேதிசொல்லி வந்தார் ராமர்
திரளான சேனையுடன் சுக்கிரீவராஜருடன்
தர்ப்பசயனத்தில் வந்தார் இந்தக்

2. கதைசாரந்தனையுரைக்க கந்தனுக்கு முன்பிறந்த
கற்பகமே உற்றதுணைவா
லோககுருவாயிருக்கும் ரகுநாதநந்தருட
பாதபத்மத்தில் பணிந்து

3. ஆசை எனக்குண்டான காமக்குரோத லோபமோக
ஆங்காரக் காட்டைக் கடந்து
தேசப் பிரசித்தமுள்ள நவபாஷணத்தில்வந்து
(இனிவரும்) ஜென்மத்தை ஒழித்து விடுவோம்

4. சேதுநாத ஸ்வாமி பாதார விந்தத்தை
சேர்வை பண்ணி ஈடேறிப்போம்
பஞ்சமகா பாதகமும் வியாதியும் பீடையும்
பரிஹரிக்கும் ராமருட சேதுமகிமை

5. நெஞ்சுசிலே இல்லாமல் பஞ்சுபோலே பறந்து
தேசகாலம் ஏன்போக்குறாய்
நஞ்சுள்ள கண்டரை ராமநாதப் பிரபுவை
கண்டவுடன் ஜென்மமெல்லாம்

6. செஞ்சூளைபோட்டெடுத்த பொன்கள் போலவே துலங்கும்
(பாபம்) சேராமல் ஒழிந்தோடிப்போம்
அறிந்தறிந்தும் ஸம்ஸாரத்துறவிலே போய்விழுந்தால்
ஆர்உனக்குத் துணையாகிறார்

7. வெறிபோல சம்ஸாரத்துறவிலே போய்விழுந்து
வீணுக்கேன் உயண்டு சாகிறாய்
கரிபோன்ற கடாயேறி எமனும் வரக்காலமானால்
கண்டவுடன் விழிக்கப் போகிறாய்

8. தேசிகர் சொன்னபடி நடக்கவுந்தெரிய வில்லை
தெரிந்திருந்தும் அறிவுவல்லையே
ஆனாலும் உன்னுடைய ஆங்காரப் பாழ் ஜீவன்
ஆனந்தமடைய வொட்டுமோ

9. ரஜ்ஜுவில் சர்ப்பம்போல் (கந்தர்வ) நகரம்போல்
சுத்தியில் வெள்ளிபோலே (யிந்தப்,)
பொய்க்கூட்டை நம்பினால் கற்பகால மானாலும்
போதந்தன்னை யறிய வொட்டுமோ

10. சச்சுதானந்தரைக் கோவிந்த மூர்த்தியை
ஸ்ரீ விஷ்ணுவை ராமனாதரை
சற்குரு பாதத்தை துணையாகவே கொண்டு
தனுஷ்க்கோடி நீராடவா

11. வேதாந்த சாஸ்திரத்தை காதினாலும் கேளாமல்
வீண்பொழுது ஏன்போக்குறாய்
உயிரின்மேல் ஆசைவைத்து தேகத்திலே காண்ஷைவைத்து
ஓடியோடி மாயுறாய்

12\. (நற்) கதியுனக்கு வேணுமென்றால் கந்தமாதன பர்வதத்தில்
பரிவுடனே போயிருந்து
நெறியுடனே வேண்டினால் பருவத வர்த்தனியும்
நினைத்ததெல்லாங் கொடுப்பளே

13\. கலியிலே முழுகாமல் ராமப் பிரபுவந்து
கடத்திவைப்பர் ஸம்ஸார ஓடத்தை
விஷயசுகம் புஜிப்போமென்று வேண்டிடய நீ திரிந்து
இந்தவீட்டுத் தீக்குள்ளே இருந்து

14\. (நாளை)க்காட்டுத் தீபோலவே எமகிங்கரர்கள் வரவை
கண்டவுடன் விழிக்கப் பேக்கிறாய்
முடுக்கிமுடுக்கி சுவாஸம் இழுக்கிறதும் துடிக்கிறதும்
மூர்ச்சை போட்டுப் போவதும்

15\. காலஎமன் இழுக்கிறதும் தூதர்முன்னே முழிக்கிறதும்
தேகத்தின்மேல் ஆசைவிடுத்து
தாகமெடுத் தலையும் போதும் தலைபுரட்டல் கொள்ளும்
தர்மந் தனைக் கோழ்க்கப் போறயோ [போதும்

16\. வாதுகளும் பேசாதே தத்வார்த்த நிலைதன்னில்
உந்தனுட சிந்தைதன்னை நிறுத்துமனதே
மிருத்யுவுக்குப் பிடரியிலே வீட்டைக் கட்டிக்கொடுத்து
விஷ்ணுமாயக் காட்டி விறங்கி

17\. படுத்தபாம்பு போலே அசந்து போய்க்கிடக்கிறயே
ஸம்ஸார சாகரத்திலே
உன்னை எடுத்துவிட்டுக் கரையேற்றிப் போகவழி காட்டினாலும்
ஹிதமாய் இருக்க வொட்டுமோ

18\. பார்த்தவுடன் சேதுவை போக்கிவைக்கும் எமபயத்தை
பக்தியுடன் நீராடிவா
பஞ்சாக்னி மத்தியிலே தபஸ்பண்ண வேண்டாம்
மரவுரியைத் தரிக்கவேண்டாம்

19\. காய்கிழங்கு பக்ஷித்து உலர்ந்துபோக வேண்டாம்
காடுதனில் வசிக்கவேண்டாம்
ஆச்சரியமான ராமேஸ்வரத்தை தரிசிக்காமல்
ஆருக்காக உயண்டு சாகிறாய்

20. அற்றகொம்பின் பழம்போல மனதறியச்சொன்னாலும்
    அஞ்சி அஞ்சித்திரிகிறாய்
  சுத்த மண்டலம் போலே மனது தெளிவாகி நீ
    சேதுஸ்நானம் பண்ணிவா

21. அன்பான தசரதனார் அரிமுறையோர் வயிற்றிலே
    ஸ்ரீராமாவதார மாகி (அவர்)
  பொன்னான கையினால் சேதுவில் ஸ்தாபித்து
    பூஜித்த ராமலிங்கத்தை

22. அண்டர்கள் நாயகரின் ஆதிபரமேசரின்
    அடிமையாகி நீயும் மனதே
  துக்கமெல்லாம் போக்கி ஜென்மமெல்லாமொழிக்க
    சேதுஸ்நானம் பண்ணிவா.

ஓம் பிர்மார்ப்பிதம்.

# ஸ்ரீ கிருஷ்ண பகவான் பாண்டவர்களுக்கு உபதேசித்த மானஸிக பூஜை.

---

### விநாயகர் வணக்கம்.

1. தும்பிமுகத்தவரே தொப்பைக்கணபதியே
    முன்னைமுகத்தவரே மூஷிகவாகனரே
2. மோகத்தைக்கையில் தரித்த கணபதியே
    கந்தனுக்கு மூத்த கணபதியே முன்னடவும்
3. அப்பம்பொரியவலும் ஒக்காரை எள்ளுருண்டை
    பக்குவமான பலாப்பழமும் தேங்காயும்
4. செவ்விளநீரும் தேன்பாகும் சக்கரையும்
    முழுப்பழங்கள் தன்னுடனே விநாயகரே நான்படைப்பேன்
5. சற்குணனார் பூஜைதன்னை சற்றே தெரிந்துரைக்க
    வாணி சரஸ்வதியும் விநாயகரும் முன்னடவீர்

## பாண்டவர்கள் வரலாறு.

6. பாண்டவர்களைவர்களும் பாஞ்சாலி தன்னுடனே
(அவர்கள்) தேசம் பறிகொடுத்து திரவியமெல்லாமிழந்து
7. கானகத்தில் நடந்து காமியவனத்தில் வந்து
அனேக முனீஸ்வராளும் அந்தணரும் சூழ்ந்திருக்க
8. அதிசோகத்துட னிருந்தார் பாண்டவர்களைவர்களும்
கிலேசமெல்லாம் போக்கவென்று கோபாலகிருஷ்ணன்
9. வந்தகிருஷ்ண சுவாமிக்கு மலராஸனம் போட்டு [வந்தார்
அவரண்டையினில் தர்மர் அதிசோகத் தோடிருந்து
10. அச்சுதரே கேளுமையா இந்த அகில ஜனங்களுக்குள்
எங்களைப்போல் ஜன்மம் ஒருவரையும் கண்டதில்லை
11. நாங்கள் ஜன்மமெடுத்த துன்பம் ஸ்ரீ கிருஷ்ண போருமய்யா
எங்களுக்கு நல்லவழி ஹிருஷீகேசா சொல்லுமென்றார்
12. தர்ம புத்திரர் கேட்கவுமே சக்கரத்தார் தான் சிரித்து
உங்களுக்கு நல்லவழி உபாயமென்று சொல்லுகிறேன்

## கிருஷ்ண பகவான் பாண்டவர்களுக்கு உபதேசித்தல்.

13. சந்ததமும் சிந்தையினில் (சிவ) சங்கரரைக் கண்டுகொண்டு
மங்களமாகவேதான் மானஸீக பூஜைசெய்து
14. சாம்ப பரமேச்வரரை சரணமென்று நீரடைந்தால்
பூலோகம் கைவசமாய்ப் புவனமெங்கு மாண்டிடுவீர்
15. காலாந்தரந் தன்னிலே கைலாஸம் சேர்ந்திடுவீர் [தருமம்
பூஜைபண்ணுமென்று சொன்னார் புண்யபுருஷோத்
16. கோவிந்தர் சொற்படிக்குக் கிலேசமெல்லாம் விட்டுதறி
மாதவனார் சொற்படிக்கு மஹாதேவ சங்கரரை
17. பூஜைபண்ணிக் கொண்டிருந்தார் பாண்டவர்களைவர்களும்
வாரீர் நீர் பாண்டவர்காள் கேளீர் சிவமகிமை
18. ஆதிசிவன் மகிமை யாரும் அறியார்கள்
19. யாராலேயும் அவர் மகிமை அறியமுடியாது
ஆகாசவாணியுமாய் அகிலாண்ட மூர்த்தியுமாய்
20. பூமிக்கு தேவதையும் பூரணஸ்வரூபருமாய்
பிரமனுமாய் விஷ்ணுவுமாய் (சர்வ) பூதகாரணராய்

21. தேவரிஷிகளுமாய் விண்ணவராய் இந்திரனுய்
அந்தராத்மாவாய் அதிஷ்டான தேவதையாய்
22. சச்சுதானந்தரான சற்குணனுர் சீர்வடிவை
ஸ்ரீ கிருஷ்ணர் உரைத்திடவே கீர்த்தியுள்ள பாண்டவரில்
23. வீமன் நன்றுயறிந்து விளங்கினுர் ஆத்மாவை
அகஸ்தியனுரும் அறிவார் சிவன் மகிமை
24. இன்னுமறிந்த வர்கள் சனகாதி யோகியர்கள்
ஆதிப்ரகாசத்தை அகண்டவொளி யானவரை

## ஆவாகனஞ் செய்தல்.

25. ஆத்மாவை ஜீவன் அறிந்தவிதம் சொல்லுகிறேன்
தேகமே ஆலயமாய் ஜீவனே ஈச்வரனுய்
26. அகத்திலிருக்கும் அலர்ந்த செந்தாமரையில்
புத்தியினுலறிந்து பிரும்மந்தனே யடைய
27. ஐந்து பூதத்தால் அலேயும் மனவாயுவை
கண்டத்திலே நிறுத்தி கண்ணுடிபோல் விளக்கி [டேன்
28. அண்டமென்னும் பிண்டமதில் அகிலமெல்லாங் கண்டுகொண்
பதினுலு உலகமுடன் பலநதியும் சாகரமும்
29. தேவாலயமும் சிவனிருக்கும் மண்டபமும்
தன்ஹிருதயந்தன்னில் சகலமுமாய்ப் பாவித்தேன்
30. கல்வருஷம் பெய்து கனவெள்ளமாய் ஓடி
ஆறும் அருவிகளும் வாய்க்காலும் ஓடைகளும்
31. கங்காநதியுடனே சமுத்திரத்திற் போய்விழுந்தால்
(அந்த) ஜலங்களே வெவ்வேருய்ப் பிரித்திடவுமாகாது
32. (அதுபோல்) ஜீவன் முக்திஅடைந்தால் திரும்பியும்ஜன்மிக்
சூரியன் உதித்து ஜகங்கள் வெளியாணுற் போல் [காது
33. இருளான மாய்கைதள்ளி ஹிருதயவெளி கண்டுகொண்டு
திடமாக பக்திபண்ணி சிவன்மேல் கருத்து முண்டாய்
34. அதுவே பழக்கமதாய் அனுபோக முண்டாகில்
இதுவே சிவதியானத்திற் கேதுவென்ருர் மாதவரும்
35. அலேயுமன வாயுவை ஆருதாரம் நிறுத்தி
ஆருதாரமூலத்தில் அம்பிகையைக் கண்டுகொண்டு

36. அனலால் விளக்கி அமிர்தமழையில் முழுகி
அனுஷிருதச் சக்கரத்தில் ஹரனே அறிவாலறிந்து

37. (அந்தத்) தேவாதி தேவன் சிவனையுமையுடனே
அன்பென்னும் பொற்றளத்தின் மேலே யழகுபெற

38. செம்பொன்னும்இரத்தினமும் இழைத்தசிங்காசனத்தில்
ஹிருதய சிங்காசனத்தில் ஈச்வரனைக் கண்டுகொண்டேன்

39. மணிப்பிரகாசம்போல் மாலை விளக்கேற்றி வைத்தேன்
மல்லிகை பூத்தாற்போல் வரிசை விளக்கேற்றிவைத்தேன்

40. ஐம்பூதக் கன்னிகையால் ஹாரத்தியும்எடுத்தேன்
கண்டாமணி யடித்தேன் கைலாஸ நாதருக்கு

41. சிந்தையிற் குள்ளே சிவபூஜை பண்ண விருந்தேன்
அகஸ்தியர் வேதமுனி அருந்தவஸி மாதவர்கள்

42 சப்தரிஷிகள் கலச பூஜைகள் பண்ணியிற்க
தேவரிஷிகள் சிவ ருத்திரங்கள் தான் ஜபிக்க

43. கற்பகவிருக்ஷம் கனக வருஷஞ் சொரிய
அற்புதமாங் காமதேனு ஆவும் பாலைச்சொரிய

## அபிஷேகஞ் செய்தல்.

44. பொற்குடத்தில் பாலமிர்தம் போதமுடன் ஏந்திவந்து
அம்பிகைக்கும் சங்கரர்க்கும் அபிஷேகம் பண்ணிவைத்
[தேன்

45. சொர்ணக் கலசத்தால் சுத்தோதகஞ் சொரிந்தேன்
கொம்பிலுள்ள தேனும் கோது இல்லாச் சர்க்கரையும்

46. காராம்பசு நெய்யும் கதலிப்பழத்துடனே
சேர்த்துக்கலந்து சிவன்முடிமேலே சொரிந்தேன்

47. கிச்சிலி நார்த்தையுடன் எலிமிச்சையின்ரஸமும்
சேர்த்துப்பிழிந்து சொர்னக் கிண்ணமதிலே எடுத்து

48. சுந்தரமூர்த்தி சிரஸிலேதான் சொரிந்தேன்
எண்ணெயுடன் நெய்யும் ஈசருக்கு நான் சொரிந்தேன்

49. நெல்லியுடன் சிகைக்காயும் நிறையவே சாத்தினேன்
மஞ்சளுடன் வாஸனையும் மாக்காப்புச் சாத்தினேன்

50. பன்னீருஞ் சந்தனமும் பக்தியுடன் சாத்தினேன்
நைவேத்தியம் பண்ணினேன் நிர்மலமூர்த்திக்கு

51. கற்பூர ஹாரத்திசெய்தேன் கைலாஸநாதருக்கு
ஏழுசமுத்திரத்தை ஹிருதயத்திலே அழைத்து

52. சப்தசமுத்திரத்தைத் தன்மனதினால் கொணர்ந்து
அறுபத்தாறு கோடி அற்புதமாந் தீர்த்தமெல்லாம்
53. மானஸிகத்தா லழைத்தேன் மஹாநதி தீர்த்தமெல்லாம்
ருத்ராபிஷேகம் ஈசருக்குப் பண்ணிவைத்தேன்
54. கும்பாபிஷேகம் (கௌரீ) நாதருக்குப் பண்ணிவைத்தேன்
பூரணாபிஷேகம் பக்தியுடன் பண்ணிவைத்தேன் [தேன்
55. கங்காபிஷேகம் (சாம்ப) பரமேஸ்வரர்க்குப் பண்ணிவைத்
சுத்தகங்காஜலத்தால் திரும்பவும் பண்ணிவைத்தேன்
56. துளிர்போன்ற பட்டதனால் துவட்டி யவர்மேனிதன்னை
மாணிக்கபூஷணமும் மார்புதனில் சந்தனமும்

## ஆபரணஞ் சாத்தல்.

57. தேவரிடைமருங்கில் செப்பொன்பீதாம்பரமும்
அங்கியுடன் தொங்கும் அசையு முப்பிரிநூலும்
58. யஜ்ஞோபவீதமும் உத்தரீயம் சால்வைகளும்
பட்டையரைஞாணுடனே ஒட்டியாணக்கட்டழகும்
59. கட்டியலங்கரித்தேன் கடிசூத்திரத்துடனே
தண்டையுடன் வண்டயமும் தாளடியிலே சிலம்பும்
60. ஐந்துவிரலாழிகளும் அஸ்தகடகத் தொளியும்
முன்கைமுதாரிகளும் மாணிக்கத்தோள்வளையும்
61. கொத்து சரப்பளியும் கண்டஸர மாலைகளும்
முத்துடனேசொர்ணபுஷ்ப மோகனமாலைகளும்
62. தாளிப்பதக்கம் சங்கையற்ற பூஷணமும்
மாருக்கிசைந்த மணிமுத்து மாலைகளும்
63. ருத்திராக்ஷ மாலை ஈசருக்கும் பார்வதிக்கும்
நவரத்தினத் தாலிழைத்த பதக்கத்திலாயிரமும்
64. புஷ்பராகம் பதித்த பூஷணத்திலே கோடி
முக்கண்ணர்க்கும் தேவியர்க்கும் மார்பிலிடமன்றியிலே
65. ரத்தினமணியாபரணம் நிறைத்து அலங்கரித்தேன்
வஜ்ஜிரமணிக்குண்டலத்தை மஹாதேவர் தோளும்
66. தொட்டு செவியில் அசைய சாத்தினேன்பக்தியுடன் [புஜத்தில்
ஒன்பது ரத்தினத்தால் ஒளிபெறவே தானமைத்த

7. செம்பொன் மணிக்கிரீடம் சங்கரர்க்கும் பார்வதிக்கும்
மங்களமாய்ப் பூமுடிமேல் வைத்து அலங்கரித்தேன்

68. மணியிழைத்த பாதுகையும் மலரடியில்சாத்திவிட்டேன் [ன்
அர்ச்சிக்க சொர்னபுஷ்பம் அன்புடனே கொண்டுவந்தே

## புஷ்பம் அலங்கரித்தல்.

69. இலக்கமற்றபுஷ்பவகை நீலகண்ட சங்கரர்க்கு
கொத்தறுகு மந்தாரை குடமல்லிகைப்பூவும்

70. பச்சைதுளவியும் பாரிஜாதபுஷ்பமலரும்
மட்டற்ற வேர்க்கொழுந்தும் மணமுள்ளமல்லிகையும்

71. (வில்வ) பத்திரத்திலே கோடி பருவதம் போற்குவித்தேன்
மலர்ந்தபுஷ்பத்திலு லனந்தம் மாலைகளுந்தொடுத்து

72. சங்கரர்க்கும் பார்வதிக்கும் சாற்றி அலங்கரித்தேன்
அற்புதப்புஷ்பவகை அரவிந்தம் சண்பகையும்

73. கொன்னை குருக்கத்தி கொத்தரளி மந்தாரை
முல்லை இருவாக்ஷி மணமுள்ள சம்பங்கி

74. இடைக்கிடையே தொடுத்து ஈசருக்குச்சாற்றினேன்
சப்தரிஷிகள் சகஸ்திரநாமம் உச்சரிக்க

75. அலர்ந்த செந்தாமரையில் ஆயிரம் பூ அர்ச்சித்தேன்
ஆதிமூர்த்தி யுகந்தார் அலங்காரப்பூஜைதன்னை

## நைவேத்தியம் பண்ணுதல்.

76. தேவருகந்து திருமனையில் வீற்றிருந்தார்
ராஜான்னம் சம்பான்னம் இஷ்டமுடனே கொணர்ந்தே

77. பருப்பும்பொரிக்கறியும் பத்துவகைப் பச்சடியும் [ன்
காராவின் நெய்யும் கரும்புரஸம் தேனுடனே

78. திரட்டுப்பால்தேன்குழலும் செவ்விளநீர்கொண்டுவந்தேன்
சக்கரைப்பொங்கலுடன் சித்திரான்னம் பலவிதமாய்

79. ஆமவடை போளியும் அப்பளமும்பாயஸமும்
கதலி பலமும் கண்குழிந்த மாம்பழமும்

80. சோலையுடனே நிறைந்த தித்திக்கும் பலாப்பழமும்
மதுரவிளாம்பழமும் மணப்பாகும் தேன்பாகும்

81. மதுரமுள்ள செந்தேனும் வகைவகையாய் பாயஸமும்
சுத்தகங்காதீர்த்தம் (சொர்னக்) கெண்டியிலே கொண்டு
[வைத்தேன்

82. திறுத்திய செங்கரும்பும் செவ்விள நீர்க்குலையும்
உடைத்ததொருகோடி தேங்காய் உடையாதநூறுபடிதயிரும்

83. குடத்து நெய் மேற்சொரிந்து கொம்புத்தேன் கூடவைத்து
பரத்தித்தளிகை தன்னை பட்டினால் மூடிவந்தேன்

84. சாம்பிராணி தூப தீபம் (சிவ) சங்கரபார்வதிக்கும்
வாஸனையாய் எடுத்தேன் வணக்க வொடுக்கமுடன்

85. கண்டாமணி யடித்தேன் கைலாஸ நாதருக்கு
சுத்தோதகத்தாலே சுற்றினேன் நைவேத்தியமதை

86. சுத்தங்காஜலத்தால் சுற்றிப்பிரதக்ஷணமாய் [டேன்
அமிர்தோபஸ்தரணமஸி என்று ஆபோஜனம்போட்

87. பக்தியுடன் பிராணாயஸ்வாஹா பண்ணிவைத்தேன் ஆறுதரம்
பூரணருங்கௌரியுடன் புஜித்து திருப்தியானபின்பு

88. பன்னீரால் வாயலம்பி பட்டாலே தான்துடைத்து
பூஜித்தடிவணங்கி பொன்னாஸனத் தமர்த்தி

89. சொர்ணமணித்தட்டதனில் சீவலுடன் வெற்றிலையும்
சாதிக்காய் ஏலமுடன் லவங்கம் ஜாபத்திரியும்

90. நீறுடனேவால்மிளகும் பச்சைகற்பூரம் குங்குமப்பூ
தாம்பூலம் தான் கொடுத்தேன் சர்வக்ஞ மூர்த்திக்கு

91. புனர்ப்பூஜை பண்ணினேன் பரி) பூரணவடிவானவர்க்கு
சோடச உபஜாரஞ்செய்தேன் தீபாராதனை எடுத்தேன்

92. நாகஹாரத்தி முத்தாரத்தி நானாவித ஹாரத்தி எடுத்தேன்
கற்பூரஹாரத்தி எடுத்தேன்கைலாஸ நாதருக்கு

93. தங்கரத்தினத் தாலிழைத்த சக்கர வாளக்குடை பிடித்தேன்
இங்கிதமாய் முத்துக் குடை மூவாயிரம் பிடித்தேன்

94. பட்டுக் குடை பிடித்தேன் பரமசிவ பார்வதிக்கு
விருதுகளும் தான்பிடிக்க வெகுவிதவாத்தியம் முழங்க

95. குஞ்சம் பிடிக்க குடையும் நிழல்காட்ட
வரிசையுடன் காளாஞ்சி மங்கையரும் ஏந்திநிற்க.

96. வெண்சாமரம் வீசவிருதுகளும் தான்முழங்க
கட்டியம்போட கணிகைமார் பாடிநிற்க

97. மேளமுடன் நாகஸ்வரம் முன்னே எடுத்தூத
பேரிகை மத்தளமும் பில்லாங்குழலூத

98. முகவீணை ஸுரமண்டலி முன்னேஎடுத்தூத
பலவிதமாய்த் துதித்து பதினெட்டு வாத்தியமும்

99. திமிதிமி என்றூத தேவர்களும் பூச்சொரிய
அப்ஸரஸுமாதர்களில் ஆயிரம் பேர் கூத்தாட

100. ரம்பையுடன் ஊர்வசியும் நீர்த்தனங்கள் பண்ணிநிற்க
சந்ததமுங் கந்தர்வாள் சங்கீர்த்தனங்கள் பாட

101 சாஸ்திரங்களாறும் சதுர்வேத ஸாரமெல்லாம்
ஏத்தமுடன் அந்தணர்கள் ஓதிப்புகழ்ந்துரைக்க

102. சூதமஹாமுனிவர் சகலபுராணங்கள் சொல்ல
தேவரிஷி நாரதரும் சங்கீர்த்தனங்கள் பாட

103. பிரதக்ஷணத்திலே கோடி பண்ணிவந்தேன் சங்கரரை
நமஸ்காரத்தில் அனந்தம் வணக்கமுடனே பணிந்தேன்

104. பத்மாஸனத்தின் மேலிருந்து பஞ்சாக்ஷரம் ஜபித்தேன்
சகலகணங்களுடன் சண்டி நந்திகேச்வரர்க்கும்

105. சிவப்பிரஸாதத்தாலவர்க்கு திருப்திகளும்பண்ணிவைத்தேன்
மற்றும் பிரஸாதம் வழங்கினேன் எல்லவர்க்கும்

106. (நான்) தானும் பிரஸாதம் சம்பூரணமாய் புஜித்து
பூவெடுத்து ஷிரஸில்வைத்துபோற்றி அவரைப்பணிந்து

107. பொற்பீடத்தின் கீழிருந்து போற்றிப் பணிந்திருந்தேன்
பார்வதி நாதரைப் பணிந்து ஐக்கியமடைந்தேன்

108. சக்கரத்தார்சொன்னபடி சாம்ப பரமேஸ்வரரை
பக்தியுடன் வீமசேனன் பண்ணி வந்த பூஜைதன்னை

109. பக்தியுடன் கேட்டவரும் சிரத்தையுடன் சொன்னவரும்
உற்றுகந்து நித்தியம் உறுதியுடன் சொன்னவரும்

110. நித்தியம் நூறு லிங்கம் பூஜைபண்ணும் நற்பலனை
நிச்சயமாயடைவாள் என்றூரே அச்சுதரும்

111. பார்வதியாளுடன் கூடப் பரமசிவனாரை
இப்படியேபூஜைபண்ணி ஹிருதயத்திற் கண்டவர்க்கு

112. மாயைவினை ஒழியும் மகாமோகம்நீங்கிவிடும்
தேஜோன்மயமான சித்துமயமாய் விடுவார்

113. ஆங்காரம் நீங்கி அருளின்மயமாய் விடுவார்
அம்பிகைநாதருடன் ஐக்கியமடைந்திடுவார்

ஓம் பிர்மார்ப்பிதம்.

# ஸ்ரீரங்கநாத மானஸீக ஸ்தோத்திரம்.

(ஆர்ணிகை.)

1. ஹேதேவா நாவிண்ணப்பமுலுகைகொனி நன்னு ரக்ஷின்பவே [ரங்கேசா
   நாசங்கல்ப விகல்பமுலு நீகு உபய காவேரி மத்யமுலு
2. நா தேகமுனு நீகு ஸ்ரீரங்க க்ஷேத்ரமு
   நாசப்தா வரணமுலு நீகுசப்தப் பிராகாரமுலு
3. நா ரஜோகுணமுலு நீகு ஹேமசிகர முலு
   நாகர்வமுலு நீகு கருடகம் பமுலு
4. நா விவேகமுலு நீகு விமானஸ்தான முலு
   நாகாமக்குரோதமுலு நீகு சுவர்ணகவாடமுலு
5. (நா)ஞானவைராக்கியமுலு நீகு துவாரபால்குலேனஜய
   நாபுருஷா காரமுலு நீகு ஆகிருதி சயனமுலு [விஜயலு
6. நா மோஹாஜாலமுலு நீகு பாதார் ச்சனே ஸ்ரீதுளஸீகுஸுமமு
   நாஸுக சம்போகமுலு நீகு சந்தனநிலேபனமுலு [முலு
7. நா மோகமுலு நீகு நவரத்ன கஜிதமைன கிரீடமுலு
   நா ஜாலமுலு நீகு கஸ்தூரி திலகம்புலு
8. நாவசனமுலு நீகு ஸகஸ்திர நாமமுலு
   நாபக்தி சக்துலு நீகுநேனு வேஸின வனமாலா
9. நா சிரவண கீர்த்தனமுலு நீகு மகர குண்டலமுலு
   நா ஞானேந்திரியமுலு நீகு நீராஞ் சன தூபதீபமுலு
10. நா கோலாஹலமுலு நீகு கண்டாநாதமுலு
    நாசுபாசுபமுலு நீகு மஹாநைவேத்தியமுலு
11. நா ரஸாகந்தமுலு நீகு தாம்பூலமுலு
    நாசஞ்சாரமுலு நீகு பிரதக்ஷிணமுலு
12. நா சம்போக சயனமுலு நீகுபிரணா மம்முலு
    நாவிவகாரமுலு நீகு ஸ்தோத்திரமுலு
13. நா சந்தோஷமுலு நீகு கருடாதி வாகனமுலு
    நாகர்மேந்திரியமுலு நீகு கீர்த்த கீத வாத்தியமுலு [முலு
14. நா சாக்கிர சொப்ன சுஷுப்துலு நீகுசத்ர சாமர ஆலாவட்ட
    அந்தரங்கமுகா நீனி கைகொனி நன்னு ரக்ஷின்பவே [ரங்கேசா

15. நிவர்த்தகாதீன சரண்பா நிஜளஜகமாயா மோஹாந்தகாரா ரங்கநாயகிகுஜ கும்பப்பிரியா

ஸ்ரீரங்கநாதா நமஸ்தேநமஸ்தே நமஸ்தேநம:

ஓம் பிரமார்ப்பிதம்.

(7)

பரதேவி துணை.

# ஜீவாத்மா அந்தர்முகமாகி ஆராய்ச்சிசெய்து அறிவாகிய மணியை பரமாத்மாவிடம் சமர்ப்பித்தது.

வேதாந்த—நொண்டிச்சிந்து.

1. சாந்தநரசிம்மர் பாதத்திலே நான்
சரணமென்றனுதினமும் பணிந்தேன்
சரணமென்றே அடைந்தேன்—
2. பணிந்த பின்பென்னைப் பார்த்தார் தயாபரர்
பறந்ததே என்றன் கர்மமெல்லாம்
திரும்பியே வாராமல்—
3. தீர்த்தார் ஜென்மத்தை காத்தார் கருணையால்
பார்த்தார் பச்சைமரத்தாணிபோலே
ஆத்தாள் உதரம்விட்டு மாத்தினரே—
4. மாற்றில்லாத மறு பொருளைக்கண்டு நான்
மனதுபுளகித மானேனே
மறந்தேன் சரீரந்தன்னை—
5. ஆனேன் ஒரு வடிவானேன் குருபாதம்
தானோ வலுபிடி யானேனே
நானே நளினபதாம்புஜத்தை—
6. (பரி) பக்குவ மாச்சுதென்று பக்ததயாபரர்
எத்தி முத்திதர நினைத்தாரே
(பரா) சக்தியின் கிருபையினாலே—

7. உபநிஷத் வாக்கியம பொறுக்கி என் செவிதன்னில்
உரைத்தார் தாரகத்தை வான்போல
நிறைத்தார் பூரணத்தை—

8. உரைத்த அக்ஷரம் பிடித்தேன் அரைக்ஷணம்
குடித்தேன் ஆனந்தக்களிப்பானேன்
மதர்த்தேன் மதகரி போல்—

9. பவஸாகரத்தை குருசாதனததால்
அனுயாஸமாகவே கடந்தேனய்யா
ஒரு ஆவின் குளம்படிபோல்—

10. ஸ்நானபானம் சந்தியாதி தர்ப்பணங்கள்
சந்ததமும் செய்துகொண்டு வந்தாலும்
பிரும்மம் சந்திக்க வில்லை ஐயா—

11. ஆதி சேது காசி காவேரி முதலான
அறுபத்தாறுகோடி தீர்த்தங்களும்
ஆடிவந்தேன் ஆத்மாவைக்காணேன் ஐயா—

12. முப்பத்துமுக்கோடி மூர்த்திகளையுங்கண்டு
மூக்காலும் வளையவந்து முட்டிக்குட்டிக்கொண்டாலும்
பிரும்மங் கிட்டவுமில்லை ஐயா—

13. அஷ்டாங்கயோக சமாதியிலிருந்து
ஹடயோகத்தினாலே ஆராய்ந்தேன்
பிராணாயா மத்திலுங்காணேன்—

14. ஸ்தூல சூக்ஷமக் காரணாதிக்கோட்டையை
தும்பிபோலப்பறந்து நான் தேடினேனே
ஜெகதம்பிகை அருளினாலே—

15. ஒருத்தராலேயும் பிரவேசிக்கக்கூடாத
உபநிஷத்தாகிய காட்டிற்குள்ளே
நானொருவனாய் ஊடாடி நுழைந்தேனையா—

16. பற்பலசுருதிகள் ஸ்மிருதிகளாகிய
பிரவாகங்களு மங்கே வருகுதய்யா
மறுகரைகாண முடியாமல்—

17. வேதசாஸ்திரங் ளாகின்றகொடுமுடி வனத்திலே
மேகம்போலே யங்கேவளர்ந்துகொண்டு
வழிமேலே போகவுமொட்டவில்லை

18. அறுபத்துநாலு கலைகளாகின்ற
ஆனைகள் மலைபோல வருகுதய்யா
கால்வைத்திட இடமுமில்லை—

19. ஜனனமரணமாகின்ற மலைப்பாம்பு
வழியிலே மரம்போல் கிடக்கின்றதே
அதைத்தாண்டிப் போகவுந் தெரியவில்லை

20. ஸ்வர்க்கநரகமென்ற அற்பப்பிசாசவந்து
அச்சப்படுத்துவதைக் கண்டு நான்
அலக்ஷியஞ்செய்தேனே—

21. (மனு) வசனங்களாகின்ற பக்ஷிகள் வனத்திலே
வாசி பூசி என்று கத்திடவே
மனது சூஸ்திரவழி சுற்றிடவே—

22. (பல) புராணங்களாகின்ற வண்டுகள் வனத்திலே
பாடிப் பாடிச்செவியில் அடிக்கின்றதே
தேகம் பரவசந்தானுச்சே—

23. தத்துவங்களான தொண்ணூற்றாறு கொடிகளும்
சன்ன பின்னலாய்ப் படர்ந்துகொண்டு
(தலை) சுற்றுகிறதே சற்றுந்தெரியாமல்—

24. அன்வய விதிரேகட
பண்ணைகள் வெகுவாய் வளர்ந்துகொண்டு
தலைசுற்றுகிறதே சற்றுந்தெரியாமல்

25. இப்படிப்பட்ட வேதாந்தக்காட்டை
எப்படிநாமுங் கடப்போமென்று
ஏக்கமுந்தானுச்சே—

26. அறிவுநீதானென்று உளவுசொன்னார் குரு
அதுவே திடமாகப் பிடித்துக்கொண்டு
நானடிமே லடிவைத்து ஆராய்ந்தேன்;

27. சத்சங்கமாகின்ற சாதுக்கள் வழியிலே
சகாயமாகவே கூடித்தையா
மனது சந்தோஷமுந்தானுச்சே!

28. வனத்து துர்ச்சங்கம் கடந்துபோகும்போது
வந்தாரே அங்கே மதவாதியர்கள்
(வாதயுத்தம்) தந்தாலே வழிவிடுவோ மென்றார்

29. அடுத்தாரென்னையவாள் எதிர்த்தேன் அவாளைநான்
தொடுத்தேன் அத்வைத சரத்தினாலே
துணித்தேன் அவாள்மதம் தூளி தூளியாய்

30. ஆறுமதவாதிகளும் வாதுக்குத் தோத்துவிட்டு
ஆருக்கும் சொல்லாமலே ஓடினாரே
அத்வைத திடஞ்சொல்லி ஜெயித்தேனையா—

31. பதபதார்த்த லக்ஷியார்த்த விசாரணை பண்ணி நான்
பையப்பைய வழிகடந்தேனே
நான் பண்ணினதபஸினாலே—

32. சிரவணமனன நிதித்யாஸனமாகின்ற
சாதனங்களினால் வழிதாண்டி
தத்திப்பற்றி மெள்ளப்போகையிலே—

33. ஜீவனீஸ்வராளென்ற இரண்டு இராக்ஷதாள்
ஜனத்துடன் ஓடிவந்து எதிர்த்தார்களே
ஜயிக்க உபாயமுந்தெரியவில்லை

34. சத்குருபாதத்து தூளியை சிரஸிலே
சந்தோஷமாகவே நான் தரித்துக்கொண்டு
தள்ளினேன் ஸர்வசத்துராதியரை

35. அகில உபாதிகளை மடிய அடித்துவிட்டு
ஆனந்த அம்புதியில் அமிழ்ந்தேனே
அகண்டமாயாகாசமாய் நிறைந்தேனே

36. காலத்ரயங்களும் லோகத்ரயங்களும்
தேகத்ரயம் கவிசாகைகளும்
கங்கு கங்காவே கரைந்ததையா—

37. அக்யானமாகின்ற காயத்துக்குள்ளே
விக்யான அக்கினி போய்விழுந்து
மிகவுந்த்திக்கத் தொடங்கிற்றையா—

38. பஞ்சகோசங்களும் பஞ்ச விஷயங்களும்
பஞ்ச சக்தியும் அரக்கு மாளிகையும்
பஞ்சகள் போலவே எரிந்ததையா—

39. ஷடூர்மி ஷட்விகராம் ஷட்கோச மாகின்ற
சாவடிகளும் உப்பரிகைகளும்
தகர்த்துத் தகனங்களாச்சுதையா—

40. ஆதித்யன் முதலான ஐந்து ப்ரகாசத்திற்கும்
அதிக்ரமித்துக்கொண்டு ஜொலித்ததையா
பரமாத்மா தேஜஸ்ஸுடன்—

41. திடச்சித்தமாகவே சத்சங்கபலத்தால்
தேஜோமயமான ஆத்மாவை நான்
தன்னுக்குள்ளே கண்டு கொண்டேனையா

42. முக்தியாகின்ற அம்மனைக்கண்டு நான்
முத்திரை கொடுத்து மணிவாங்கிக்கொண்டு
உத்தர திக்கில்வா சினைத்தேனையா—

43. சம்ஸாரமாகும் விருக்ஷச் சாகைக்கப்புகள் தன்னைச்
சடசடாயமாக முறித்துவிட்டு
ஒரு தெந்தினப்பாட்டையும் பாடிக்கொண்டு

44. ஜனனமரணமென்ற சிந்து வைக்கடந்து நான்
திரும்பி வந்தேனையா இக்கரையில்—
ஜீவன் முக்தானைக்கண்டு சேதிசொன்னேனையா

45. மட்டில்லாத ஒரு ஆனந்தங்கொண்டு நான்
மப்புத்தப்பிக் கொக்கரித்துக்கொண்டு
வந்தேன் நான் உம்மிடத்தில்—

46. வந்தனம் உம்முடைய பாதத்திலே நான்
தந்தேனே ஆத்ம சூடாமணியை
அடைந்தேனே திருவடியை—

47. பக்தவத்ஸலா சரணமய்யா ! பரமதயாளு சரணமய்யா
லக்ஷ்மிகாந்தா சரணமய்யா ! ஸ்ரீநரசிம்மா சரணமய்யா !
தவத்திற்கதிபா சரணமய்யா! சுவாமி வெங்கடேசாசரணமய்யா
குணத்திற்கதிபா சரணமயயா ! குருவெங்கடேசுவரா சர
[ணமய்யா

ஓம்தத்ஸத்.

## திருவிளக்குப் பிரார்த்தனை.

1. விளக்கேதிருவே வேதனுடநற்பிறப்பே
ஜோதிவிளக்கே ஸ்ரீதேவிபெண்மணியே

2. அந்திவிளக்கே அலங்காரப்பெண்மணியே
காந்தவிளக்கே காமாட்சிதேவியரே

3. பசும்பொன்விளக்குவைத்து பஞ்சுத்திரிபோட்டு
குளம்போல்நெய்யைவிட்டு கோலமுடன் ஏற்றிவைத்தேன்

4. பொட்டுமிட்டேன் குங்குமத்தால் பூமாலைசூட்டிவிட்டேன்
ஏற்றினேன் நெய்விளக்கு எந்தன்குடிவிளங்க

5. வைத்தேன்திருவிளக்கு மாளிகையுந் தான் விளங்க
மாளிகையில் ஜோதியுள்ள மாதாவைக்கண்டுகொண்டேன்

6. மங்கிலியப்பிச்சை மடிப்பிச்சைதாருமம்மா
சந்தானப்பிச்சையுடன் தனங்களையும்தாருமம்மா

7. பெட்டிநிறையப் பூஷணங்கள் தாருமம்மா
கொட்டில்நிறையப் பசுமாடுதாருமம்மா

8. (புகழுடம்பைத்தந்து எந்தன்) பக்கத்தேநில்லுமம்மா
அகத்தெளிவைத்தந்தெனக்கு அகத்தினிலேவாழுமம்மா

## திருவிளக்கு தேவி ஸ்தோத்திரம்.

9. சேவித்தெழுந்துநின்றேன் தேவிவடிவுகண்டேன்
வஜ்ஜிரக்கிரீடங்கண்டேன் வைடூர்யமேனிகண்டேன்

10. முத்துகொண்டைகண்டேன் முழுப்பச்சைமாலைகண்டேன்
சவரிமுடிகண்டேன் தாழைமடல்சூடக்கண்டேன்

11. பின்னலழகுகண்டேன் பிறைபோலநெற்றிகண்டேன்
சாந்திடும்நெற்றிகண்டேன் தாயார்வடிவுகண்டேன்

12. குருக்கிடும்நெற்றிகண்டேன் கோவைக்கனிவாயுங்கண்டேன்
செந்தாழைப்பூமடல்போல் செவியிரண்டுங்கண்டுகொண்

13. செண்பகப்பூபோல திருமூக்கும் கண்டுகொண்டேன் [டேன்
மார்பில்பதக்கமின்ன மாலை அசையக்கண்டேன்

14. காலில்சிலம்புகண்டேன் கால்ாழிலிகண்டேன்
பட்டாடைதானுடுத்த பிடியிடையைக்கண்டுகொண்டேன்

15. மங்களநாயகியேஉன்னை மனங்குளிரக்கண்டுகொண்டேன்
அன்பேஅருந்துணையே உனையடைந்தஎந்தனுக்கு

16. வந்தவினையகற்றி மகாபாக்யம் தந்தருள்வாய்
தந்தைதாய்பிறவிநீயே தற்காக்கும்ரக்ஷகியும்நீயே

17. அந்தத்திற்குதவிசெய்யநீயே ஆதாரமானவளும்நீயே
உந்தனையேஉறவாகநம்பி உற்றாரைக்கைவிட்டேன் தாயே

18. சந்தானம்சௌபாக்கியமளித்து சத்துக்கள் சேவைஎனக்களிப் [பாய்
பக்தியுள்ளமனதெனக்குத்தந்து பரதேவிகிருபையுடனே [அருள்வாய்

ஓம்தத்ஸத்.

---

## பரதேவதை ஸ்தோத்திரம்.

1. கொத்தருகும் கொன்றைதும்பைசூடும்
கோடிலிங்கர் பாகமுடையவளே
மைக்குழலி மங்கையுமையவளே
வார்காதுப்பணியசையும் வடிவே

2. பொற்கொடியே அடியேனிடர் தீர்ப்பாய்
புகழுடையமுக்திப் பதமளிப்பாய்
சுத்தமாஞ்ஜோதியொளி காட்டி
ஜயமானமுக்திப் பதந்தருவாய்

3. கண்டங்கறுத் தாரிடத்தில்
கருணையுடன் எனக்குறுதிசொல்வாய்
தெண்டம்பணிகின்றேன் போற்றிபோற்றி
சின்மயானந்தபதம் தருவாய்

4. பாதகங்கள்தீரவே எனக்கு
பார்த்திடுவாய் உன்கருணை விழியால்
பார்வதியம்மாவென் பாவங்களைப்போக்கி
பரிவுடனே மோக்ஷப்பதமருள்வாய்

5. (அம்மா) எட்டாததூரத்திலிருப்பாய்
எந்தனுடமனதுதனில் எப்பொழுதுமிருப்பாய்
பக்தரைத்தேடி யழைப்பாய்
பாபங்கள் சேராமல் ஒழிப்பாய்

6. துன்பமென்னும் பவக்கடலில் விழுந்து
தாய்முகங்காணாத பிள்ளைபோல்
புலம்புகிறேன் கர்மபூமியிலே
பெரியோர்கள்தொழுதேற்றும் பெரியநாயகியே—

7. தாயேசரணம் உன்தாளேசரணம் சங்கரியேசரணம்
மின்னேசரணம் மீனாசரணம் மீனாம்பாசரணம்
பொன்னேசரணம் பூவேசரணம் பொற்பாதமேசரணம்
சரணம் சரணம் என்னிடர்தீர்த்து சாயுஜ்யந்தருவாய்

8. அச்சந்தொலைப்பாய் அருளைப்பொழிவாய்
அழியாப்பத மருள்வாய்
தொப்பைவயிற்றான் தும்பிக்கையாலென்னை
தூக்கியேகரை சேர்ப்பாய்

9. சரணமென்றுந்தன் தாளிணைபணிந்தேன்
தள்ளிவிடலாமோ
நெடுநாளாயுன்னை நம்பினதெல்லாம்

10. கருணாநிதியே கல்யாணிஉமையே
கதம்பவனேச்வரியே
பாசத்தைப்போக்கி பவபயம்நீக்கி
பாதநிழலில் சேர்ப்பாய்

11. பஞ்சாக்ஷரத்தை உபதேசம்பண்ணி
பவபயம்போக்குவிப்பாய்
தேவியேசங்கரர் வாமத்தில்சேர்ந்த
சேர்வையைத் தந்தருள்வாய்

12. அன்னையுமையே உன்னை அல்லாமலெந்தனுக்கு
ஆதாரம்வேறுமுண்டோ
கமலதளலோஜனி கதம்பவனவாஸினி
கைவல்யபதகாரணி

13. விச்வமெல்லாம்நிறைந்த விச்வேசர்வாமத்தில்
விளங்கிடுந்தேவிநீயே
அந்தரி ஸுந்தரி சிவகாமிகனகசபை
ஆதிபராசக்திநீயே

14. சந்ததமும்உன்னைநான் சரணமென்றுநம்பினேன்
தாபமெல்லாம்போக்கியே
அனவரதம் கருணைகடாக்ஷம் வைத்தெந்தனை
அடிமைகொண்டே யாளுவாய்—

ஓம் தத் ஸத் :

Commercial Press, Madras, S. E.

உ

பரதேவி துணை.

# வால்மீகிராமாயணப்பாட்டும் ஞானராமாயணக் கப்பலும்.

இவை

சென்னை

R. S. சுப்பலக்ஷ்மி அம்மாளால்

பிரசுரிக்கப்பெற்றன.

ஆறாம் பதிப்பு



MADRAS:

PRINTED AT THE COMMERCIAL PRESS, TRIPLICANE.

1921.

*Price Annas, 5*]

[விலை அணா 5

# முகவுரை.

இதில் அடங்கியுள்ள,

முதலாவதாகிய—"வால்மீகி ராமாயணப்பாட்டு" நமது தமிழ் நாட்டில் வெகு காலமாய்ப்பெண்களால் மிக சிரத்தையோடு நெட்டுருச்செய்யப்பட்டு ஆதரித்து வரப்பெற்ற பாட்டுகள் முக்கியமானவைகளில் ஒன்று. இதில், சுந்தரகாண்டத்தையாவது சொல்லிக்கொண்டால், மலடிகளும் பிள்ளைப்பேற்றை யடைவார்களென்ற ஒரு நம்பிக்கையுண்டு. சர்ண பரம்பரையாய் வழங்கி வந்ததினால் கொஞ்சங் கொஞ்சமாய் அநேக பிழைகளும் கொச்சைச் சொற்களும், இதிற் பொதிந்துள்ளன. இதனைப் பாராட்டுவோர் தொகை நாளடைவிற் குறைந்து வருதலின் இது முற்றும் இறந்து படாமற் காக்க ஆர்வ முற்று அச்சுவாகன மீது அமர்த்தி யுலவச்செய்ய அநேகரிடத்திற் கேட்டு எழுதிக் கூடியமட்டும் பிழைகளைத் திருத்தியிருக்கிறேன். இப்பாட்டைப்பாடுவோர் பெரும்பாலும் நான்கு வித மெட்டுக்களிற் பாடுவது வழக்கம். அந்த மெட்டுக்களின் அமைப்பை இதிற் சொல்வது எனக்குச் சாத்தியமில்லை. வேறு விதமாகவும் பாடலாமென்று எனக்குத் தோன்றிய விடங்களைக் குறிப்பிட்டிருக்கிறேன்.

இரண்டாவதாகிய—"ஞான ராமாயணக்கப்பல்" துளஸிதாஸருக்கு ஹநுமார் சொல்லிய தத்துவவாக்கியங்களைக் கப்பலாயமைத்து முன் ஒருமுறை "விவேகசிந்தாமணி" என்னும் பத்திரிகையில் பிரசுரித்துள்ளேன்.

படிக்கத் தெரிந்த ஒவ்வொரு பெண் குழந்தைக்கும் இப்புத்தகம் ஓர் அரிய ஆபரணமாகவிருக்குமென்று நம்புகிறேன். இதிலுள்ள பிழைகளையும் வேறு அபிப்பிராயங்களையும் தெரிவித்தால், மறு பதிப்பில் உபயோகப்படுத்துகிறேன்.

இது விஷயத்தில் எனக்கு மிக ஊக்கத்தை உண்டுபண்ணிப் பிழைகளையும் புருவுகளையும் திருத்துவதில், மிகவும் உடனின்றுழைத்த என் தாயாருக்கு மனமுவந்து வந்தனம்புரிய உரிமையுற்றிருக்கின்றேன்.

Triplicane,
December, 1921. R. S. சுப்பலக்ஷ்மி அம்மாள்.

இப்பாட்டு முற்றும் சிரத்தையோடு

மனப்பாடமாய் சொல்லிக்கொண்டிருந்த

என் பாட்டியம்மாள்

செல்லம்மாள் என்கிற அகிலாண்டேஸ்வரிக்கு

இதைச்

சமர்ப்பிக்கிறேன்.

R. S. S.

பரதேவிதுணை.

# வால்மீகி ராமாயணப்பாட்டும் ஞானராமாயணக் கப்பலும்.

## பாயிரம்.

1-வதுமெட்டு.

1 தவமுனிவர் வால்மீகி தானுரைத்த சத்கதையின்
சாராம்சத்தைச் சற்றே நானுமுரைக்க

2 ஆனைமுகவருக்கும் ஆறுமுகவேலவர்க்கும்
அருந்தவமுனிவர்க்கும் அடிபணிந்தேன்

3 அச்சுதனார் ஆதியிலே அவதாரமான கதை
அன்புடனே நானுரைக்க ஆசை யடைந்தேன்

4 ஸ்ரீராமர் சத்கதையைத் தெரிந்துமே நானுரைக்க
சிந்தையி னுள்ளே உரைவாய் சரஸ்வதியே.

---

## தேவர்கள் விஸ்ணுவைச் சரணடைதல்.

5 ஆதியிலே ஆலிலைமேல் அமர்ந்து திருப்பாற்கடலில்
அச்சுதரும் ஒய்யாரமாய் நித்திரை செய்ய

6 தசமுகன் இம்சையினால் தேவர்களுஞ் சதுர்முகரும்
சுவாமியின் திருவடியிற் போற்றி செய்தார்

7 வானவர்கள் முறையிடவே வைகுண்ட வாழ்பதியும்
மந்தஹாஸமாகவொரு வாக்கியஞ்சொல்வர்

8 தேவர்களின் ஹிம்ஸைநீங்க தசமுகனை சம்ஹரிக்க
ஸ்ரீராம நாமத்துடன் அவதாரஞ் செய்வோம்

9 அவதரிப்போம் பூமியிலே நாலுரூபமாய்ப் பிரிந்து
அன்புடைய தசரத மகராஜர்க்கு

10 வைகுண்டவாஸிசொன்ன வார்த்தைகேட்டுத் தேவர்களும்
வாஸவரும் பிரமாவும் மனமகிழ்ந்தார்.

11 சிந்தையில்லை எங்களுக்குச் சுவாமிதயவினாலே
தெண்டனிட்டுத் தேவர் தங்க ளிடத்திற்சென்றார்.

---

## தசரதர் அரசாட்சி.

12 அயோத்தியாபுரி தனிலே அன்புடனே தசரதர்
அறுபதினாயிர வருஷம் ஆண்டு யிருந்தார்

13 மைந்தர்களு மில்லாதே மகராஜா தசரதர்
மனஸ்தாபத்தோ டொருநாள் கொலுவிருந்தார்

14 மனக்கலக்க மறிந்த மந்திரி சுமந்திரரும்
மகராஜர்தனைப்பார்த்தோர் வாக்கியஞ்சொல்வர்

15 ராஜாவே உங்கள்சகா உரோமபாதராஜாவும்
ராஜ்யங்கள் ஆண்டிருக்கும் நாள் தன்னிலே

16 தர்மந்தவறியொரு காலத்தில் நடந்ததினால்
தருமதேவதையுங்கண்டு சகிக்காமலே

17 வருஷங்கலில்லாதே மாநகரத்தார்தவிக்க
மனஸ்தாபத்தையடைந்தார் உரோமபாதரும்

18 ரிச்யசிருங்கமுனிவரை நயத்துடனேயழைத்து
சாந்தை என்ற கன்னிகையை தாரையும்வார்த்தார்

19 கலைக்கோட்டுமாமுனியின் காலடியும் பட்டவுடன்
கனமழைவருஷிக்க தேசங்குளிர

20 உரோமபாதராஜாவின் உகலஞ்செழிப்படைந்து
சாந்தையுடன் மகரிஷியும் வஸித்திருக்கார்

21 நேசமுடன்கலைக்கோட்டு மகரிஷியைத்தானழைத்து
சரயுதீரந்தன்னில் யாக சாலையுங் கட்டி

22 புகழுடைய அச்வமேதம் பரிபூர்ணமாகச்செய்தால்
புத்திராள்உண்டாவார்என்று சுமந்திரர்சொன்னார்.

---

## யாக ஆரம்பம்.

23 அருந்தவமுனிவரை அந்தக்ஷணமேயழைத்து
அச்வமேதஞ்செய்யப் பிரயத்தனஞ் செய்தார்

24 அந்தணருங்வசிஷ்டரும் ரிச்யசிருங்கமாரிஷியும்
அக்கினியுந்தான்வளர்த்து ஆகுதிபண்ணி

25 அச்வமேதம்தான்முடித்து அன்புடனே ராஜாவும்
அந்தணர்கள் முனிவர்க்கும் தானங்கள்செய்தார்

26 புத்திரகாமஇஷ்டிசெய்ய ரிச்யசிருங்கர்சொல்லலுமே
பிரியமுடன்நெய்யினாலே ஓமங்கள் செய்தார்

27 செம்பொன்மணிக்கிண்ணந்தனில் பாயஸமுங்கொணர்ந்து
சீக்கிரமாய்பகவானுங் கையில்கொடுத்தார்

28 மங்களமாம்பாயஸத்தை வாங்கித்தசரதரும்
மங்கைமார்மூவர்க்கும் வகுத்துக்கொடுதார்.

## சுவாமி நான்கு ரூபமாய் அவதாரம்செய்தது.

29 மங்கைமார்மூவர்களும் பாயாஸந்தான் புசிக்க
வைகுண்டவாழ்பதியும் வந்துஜனித்தார்

30 வந்துஜனித்தவுடன் மசக்கையும்உண்டாகி
வளையுங்காப்புமிட்டார்கள் வைபோகமாக

31 தேவர்ரிஷிகளுடன் வசிஷ்டமுனியுங்கூடி
தசரதர்மனமகிழ சீமந்தஞ்செய்தார்

32 மனஸ்தாபந்தீரவென்று வந்துமந்தஅயோத்தியில்
மானிட அவதாரமாகவே எண்ணி

33 கௌஸலைசுமித்திரை கைகேசியின்வயிற்றில்
காகுஸ்த வம்சங்கள் விளங்க வென்றே

34 ராவணஸம்ஹாரம்பண்ண நாலுருபமாய்பிரிந்து
சுவாமி ராமராக அவதாரமாகினார்

35 புகழுடையதசரதர் புண்யபலன் கைகூடி
பூர்ணாவ தாரமானார் புருஷோத்த மரப்போ

36 சப்தரிஷிதேவர்களும் புஷ்பவருஷஞ்சொரிய
தங்கமான அயோத்தியிலே (சுவாமி) வந்து பிறந்தார்

37 பூசம் புனர்ப்பூசம் ஆயில்யம் மகத்துடன்
அபிராமர் நால்வரும் அவதரித்தார்

38 சுவாமிநால்வரும் பிறக்கச் சந்தோஷப்பட்டுராஜா
சர்க்கரையுங்கற்கண்டுமாய் வாரிக்கொடுத்தார்.

---

## தசரதர் விதை தானஞ்செய்தல்.

2-வது மெட்டு.

(முன்னைப்பாட்டு மெட்டிலும் பாடலாம்.)

39 பொன்னுரைத்துநாவிலிட்டாள் ஸ்ரீராமருக்கு [இட்டாள்
சொர்ணச்சங்கில் எண்ணெய்கொண்டு செவ்வெண்ணெய்

40 அன்புடனே தசரத ராஜரெழுந்து
அழகான சரயுவில் ஸ்நாநமும் பண்ணி

41 அமிழ்ந்துமே நீராடி மகாராஜாவும்
ஆடையுடன் ஆபரணந் தானுமணிந்தார்

42 அந்தணர்கள் வெகுபேர்க்கு ராஜாவுமப்போ
ஆயிரம் யானையும் குதிரைகளும்

43 முத்துடனே வஜ்ஜிரமும் மாணிக்கமும்
விரையுடன் வெள்ளிதங்கந் தானமுஞ் செய்தார்

44 தட்டுடனே களிப்பாக்கும் வெற்றிலையும்
சாதிக்காய் ஏலங் கிராம்புடனே

45 நித்தியம் ஒருகுடம் பால்கறக்கும்
இலக்கமற்ற பசுக்களைக் கன்றுகளுடன்

46 மட்டில்லா அனேகவகை தானதர்மங்கள்
வாரிவழங்கிநின்றார் மகாராஜாவும்

47 பாலகர் பிறந்தபின்பு பதினொன்றுநாள்
மாலைகுழலியர்க்கும் மைந்தர்களுக்கும்

48 சொர்ணமான கிண்ணியிலே எண்ணெய்எடுத்து
சிகைக்காய் சிறுபயற்றம் பொடியுங்கொண்டு

49 அங்கேயுள்ள மங்கையர்கள் அருந்ததிமார்
அபிராமர்க்குந் தாய்மார்க்கும் நீராட்டினார்

50 பத்துக்கோடி பணம்பெற்ற பீதாம்பரத்தால்
பச்சைவர்ணமேனியரை பாங்காய்த்துடைத்தாள்

51 நெற்றியில் திலகமிட்டாள் நீலவர்ணனுக்கு
கண்ணுக்கு அஞ்சனமும் இட்டாளழகாய்

52 அரைவடமும் கிண்கிணியும் அரைஞாணுங்கட்டி
புலிநகமும் சரப்பளியும் பதக்கமும் போட்டாள்

53 தண்டை சிலம்பசைய தாளடியிலே
கையில் கணையாழியுடன் காப்பு மிசைத்தாள்

54 சின்னமணித் தொட்டில்கட்டி மஞ்சமும் போட்டு
பொன்னுந் தழுவணையும் போட்டாளழகாய்

55 தாசரதி நால்வரையுந் தழுவி யெடுத்து
தங்கமணித் தொட்டிலிலே வளரவே விட்டாள்.

---

## தாலாட்டு.

56 வைகுண்ட வாழ்பதியோ வாஸுதேவ மூர்த்தியரோ
வையமெல்லாங் காக்கும் மகராசர் கண்மணியோ

57 குலக்கொழுந்தோ குஞ்சரமோ கோவில் மணிவிளக்கோ
குதித்துவந்த குந்தளமோ கோவிந்தர் நீர்தாமோ

58 சமர்த்தரோ சர்க்குணரோ சர்வ வியாபகரோ
எங்கும் விளங்குமொரு இரத்தினமணிக் குண்டலமோ

59 தேவர் ரிஷிகள் சிந்தைகலி தீர்ப்பவரோ
பாவி இராவணனின் படைஜயிக்கும் பார்த்திபரோ

60 கௌஸலையாள் பாக்கியமோ கைகேயி கண்மணியோ
சுமித்திரை யாளுடைய செல்வப் பெருந்தகையோ

61 என்றன் மலடுதன்னை நீக்கவந்த இந்திரனோ
(எங்கள்) சிந்தை மகிழவந்த ஸ்ரீ ராம சந்திரனோ

62 ஆராரோ ஆராரோ ஆரமுத ஆராரோ
பாரேழு மாளவந்த பாக்கியங்காள் கண்வளரீர்.

---

### 1-வது மெட்டு.

(ஜெயமங்களம் நித்திய சுபமங்களம் என்ற மெட்டிலும் பாடலாம்.)

63 மங்கையர்கள் எல்லாரும் பாடிவரவேநல்ல
மங்களவாத்தியமும் முழங்கிவரவே

64 சகலமான ஜனங்களுக்கும் சந்தனம் பூசியே
கொம்பனைமார் எல்லாருக்கும் குங்கும மிட்டாள்

65 கடலை சிறுபயறும் தாம்பூலங்களுடனே
சகல ஜனங்களுக்கும் அள்ளிக்கொடுத்தாள்

66 ஹாரத்திக்காப்பெடுத்தார் அபிராமர்நால்வருக்கும்
அன்புடனே தாய்மாருங் கண்டு மகிழ்ந்தாள்

67 ஸ்ரீ ராமர்நால்வருக்குந் தொட்டிலிடவே அதை
தசரதர்கண்டுமிகச் சந்தோஷமாய்

68 அறுபதாயிரவருஷம் அருந்தவம் பலித்ததென்று
அருமைமைந்தர்முகம்பார்த்து ஆனந்தங்கொண்டார்

69 தாசரதிலக்ஷ்மணர் சத்துருக்கணர்பரதர்
தனித்தனியாய்ப்பாலகருக்கு நாமந்தரித்தார்

70 மரகதம்போல்மேனியுடன் பாலகரும்லீலைசெய்ய
மாதாபிதாக்கள்கண்டு மனதுமகிழ்ந்தாள்

71 சாதகர்மம்நாமகர்மம் சௌளம் உபநயனம்
சந்தோஷமாய்ச்செய்து மகாராஜரும்

72 ஸகலவித்தையும்படித்து தனுஸாகற்கும் நாளையிலே
தவமுனிவர் வேள்விசெய்யத் தானழைக்கவே

73 சத்தியதசரதரும் தானனுப்பவே நடந்து
தாடகையைஸம்ஹரித்த சற்குணராமா

74 ராமகோதண்டராமா ராமக்கலியாணராமா
ராமாபட்டாபிராமா ராம ராகவா

75 மஹாமுனிவர்யாகந்தன்னில் வருஷிக்க ரத்தமழை
மகாசூரர் ரகுராமர் கண்டவுடனே

76 வாளியொன்றினாலே சுபாகுவை விழவடித்து
மாரீசனை வார்க்கடலில் கொண்டுதள்ளியே

77 கவுசிகரும்ராகவரை கருணையினாலேபார்த்து
கலியாணமென்ற ஒருவாக்கியஞ்சொல்வார்

78 மிதிலையிலேவில்லுமுண்டு வெகுபாரமாயிருக்கும்
வில்லொடித்தவீரருக்கு கன்னிகை யென்றார்

79 சங்கரனார்வில்லதனை சற்குணரும்பார்ப்போமென்று
தவமுனிவர்பின்னேயவர் தானடக்கவே

80 (முனிவர்) ஆதரவாலேநடந்து அம்புஜபாதத்தினாலே
அகலிகையின்சாபந் தீர்த்துஅபிராமரும்

81 ஜனகர்மனைபுகுந்து தனுசொடித்துஉச்சிதமாய்
தேவர்மலர்சொரிய வாத்தியங்கள்முழங்க

82 வசிஷ்டசுமந்திரருடன் மகாராஜ தசரதரும்
மாதாக்கள் தம்பியரும் அனைவரும்வந்தாள்.

---

## சீதா கல்யாணம்.

83 ஆனையேறிமாலைசூடி ஜானகியும்ஊஞ்சலாடி
ஞானமுள்ளஜனகர் கன்னிகாதானமுஞ்செய்ய

84 அபிராமர்திருக்கரத்தால் திருமங்கில்யந்தரித்து
ஆஜியத்தால் ஓமம்பண்ணி பொரியுமிட்டாள்

85 அம்மிமிதித்துக்கைபிடித்து அருந்ததியைக்காட்டிவந்து
அழகுசீதையுடனேராமர் போஜனஞ்செய்து

86 மண்டலங்கள் தான்புகழ மற்றுமுள்ள கன்னியரை
மன்னராமர்தம்பியர்க்குக் கலியாணஞ்செய்தாள்

87 ஜனகரிடம்விடைகேட்டு சீதையுடனே மகிழ்ந்து
திரும்பிஅயோத்திவர ஸ்ரீராமசந்திரர்

88 வழிமறித்தபரசுராமர் மதமடக்கிவில்பறித்து
மங்கள அயோத்திவந்தார் தந்தையுடனே.

## அயோத்தியா காண்டம்.

89 சீதையுடனேராமர் செல்வமுடன் வாழ்ந்திருக்க
ஸ்ரீபரதசத்துருக்கனர் அம்மானும்போனார்

90 மகராஜதசரதர் மந்திரிசுமந்திரருடன்
மைந்தனுக்கு முடிசூட்டும் வாக்கியஞ்சொன்னார்

91 அருந்தவசு யாகத்தினால் மைந்தர் விடாய் தீர்த்து
ஆசை தணிக்கவந்த ரகுராமர்க்கு

92 பூச்சக்கிரக்குடையும் பூர்ணசந்திர வாழ்முகமும்
பூமுடியுங் காண எனக் கிச்சையாமென்றார்.

93 அப்படியே ஆகவென்று அனைவர்களும் சம்மதிக்க
அபிஷேகம் நாளைக்கென்று ஆக்கினையிட்டார்

94 ஐம்பத்தாறு தேசத்து ராஜாக்களுந் தான்வரவே
அயோத்யாபுரி நகர்தன்னை அலங்கரித்தார்

95 ஸ்ரீராமர் அபிஷேகம் ஜகமெல்லாங் கொண்டாட
சீர்கேடி கூனியந்த வார்த்தையைக்கேட்டு

96 கடுகி நடந்துமவள் கைகேயி தன்மனையில்
காளவிஷம் போலேயவள் கண்ணில் விழித்தாள்

97 அறிவுகெட்டகைகேயி அனந்தலேன் உந்தனுக்கு
அபிராமருக்கு நாளைக் கபிஷேகமென்றாள்

98 அபிராமரபிஷேகம் அமிர்த வருஷம்போல்
ஆருரைத்தார் எந்தனுட அனந்தலிலே

99 கனபிரியமாயந்தக் கைகேயிசுந்தரியும்
கழுத்து முத்துமாலைதன்னை வெகுமானஞ்செய்தாள்

100 முத்துமாலைகண்டவுடன் முகத்தில் பொறிபறக்க
மூடையானகூனியப்போ ஏதென்று சொல்வாள்

101 கௌஸல்யை மைந்தனுக்கு கைவசமானதுபூவி
காதலுடனே கொடுத்தார் ராஜாவுமிப்போ

102 பரதனும் நீயுமாய் பணிசெய்து கோசலைக்குப்
படிவாங்கிஉண்க வுனக்குப் புராப்தமோடி

103 கடுமையுடன் கூனிசொல்ல கைகேயி மனங்கலங்கி
கவலையுடன் என்னசெய்வோ மென்று நினைத்தாள்

104 ஆதியில்நீ தேரும்விட அன்றுராஜன் உந்தனுக்கு
ஆதரவாய் தந்தவரம் இரண்டு தன்னிலே

105 அந்தவரங் கேளிப்போ அபிராமர் வனம்போக
அவனிபரதனுக்கு அபிஷேகஞ்செய்ய

106 துஷ்டை சொன்னவார்த்தைகேட்டு சுகமென்றுஎண்ண
சுந்தரியுந்தன்னுடைய துர்க்காலத்தாலே [

107 அலறித் தலைவிரித்து ஆபரணந் தான்கழற்றி
அழுக்குத்துணியுடுத்தி அறையிற் சென்றாள்

108 ராஜாவுந்தன்னுடைய நாயகியைக் காணவென்றும்
நல்வசனஞ் சொல்வோமென்றும் நடந்துவந்தார்.

109 அறையில்வந்து பார்த்தவுடன் அவனியிலே தான்விழுந்து
ஆபரணமில்லாத கோலத்தைக் கண்டார்

110 என்னகுறை வந்ததென்று ஏங்கித் தசரதரும்
எடுத்தணைத்து மேல் புழுதி தன்னைத் துடைத்து

111 எழுதவொண்ணுச் சுந்தரியே என்பிராணநாயகியே
இந்தவிசனம் உனக்கு ஆராலே என்முர் [நால்

112 (இந்த) அரண்மனையிலுள்ளவர்கள் அபஜாரம் செய்திருந்
இந்தக்ஷணம் உன்கையிலே ஒப்பித்தருவேன்

113 உரைஎன்று சொல்லவுமே ஓங்காரப்பட்டுமவள்
உத்தண்டமாக வொரு உத்தாரஞ் சொல்வள்

114 ஆதியில்நான் தேரும்விட அன்றுநீ ரெந்தனுக்கு
ஆதரவாய்த் தந்தவரம் இரண்டதிலே

115 அந்தவரமிரண்டில் அபிராமர் வனம்போக
(என்)அருமை பரதனுக்கு அபிஷேகஞ் செய்யென்முள்.

---

2-வது மெட்டுப்போல்.

கோலு கோலன்னக் கோலே கோலன்னக்கோலே கோலு
ஸ்ரீராமருக்குச் செங்கோலுக்கோலே என்ற மெட்டிலும் பாடலாம்.

116 என்றவார்த்தை கேட்கவுமே ஏங்கியேராஜா
இடிவந்து விழுந்தாப்போல் மூர்ச்சை அடைந்தார்

117 தெளிந்து தசரதரும் எழுந்திருந்து
பார்த்துக் கைகேசியைப் பாகாயுருகி

118 (என்) ஸ்ரீராமன் வனம்போகத் தீங்குசொல்லாதே
(உன்) சிறுவனுக்கு முடிசூட்டுரேன் தயவுசெய்யென்முர்

119 கைகேசியுந்தான் கேட்டு கண்கள்சிவக்க
காளவிஷம்தாராய் கூனிபானம் பண்ணுரேன்

120 (நீர்) சத்தியமாயிந்தவரம் தாராதேவிட்டால்
சதியாய் என்ஜீவன்தன்னை விடுவேனென்முள்

121 அதுகேட்டு தசரதர் அலங்கோலமாய்
அபிராமாஎன்றுசொல்லி மூர்ச்சை அடைந்தார்

122 வைகுண்ட வாஸியிந்தச் சேதியைக்கேட்டு
வந்த காரியம் ஜெயமென்று மனமகிழ்ந்தார்.

3-வது மெட்டு.

ஐயோ ரகுராமா வனம்போகத்தெய்வம் சம்மதியாமா
என்றமெட்டிலும் பாடலாம்.

123 அருணன் உதித்திடவே அனைவருங் காத்திருக்க
துரையாய் நடந்துவந்தார் சுமந்திரரப்போது

124 சடுதியாய் அந்தப்புரந் தன்னிலேவந்துநின்று
(ஐயா) முடிசூட ராமனுக்குமுகூர்த்தங் கிட்டவந்ததென்றார்

125 சேதிதனைக்கேட்டுத் தசரதருந் தானெழுந்து
மறையோரை நானழைத்து அவபலனைக் கண்டேனே

126 என் ரகுநாதனையுமிப்போ அழைத்திடுவாய் என்றுசொல்ல
ராமன் அரண்மனைபோய் அடக்கமுடன் வாய்திறந்து

127 உங்களய்யர் அழைத்தார் அபிராமா வாருமென்க
அவசரமாயெழுந்து அரண்மனையை விட்டுவந்தார்

128 செம்பொன் மணித்தேரில் ஸ்ரீராமர் வீற்றிருக்க
துள்ளுமெருதுகட்டி சுமந்திரன் தேர் ஓட்டிவர [விட

129 (ராமன்) பொன்னுமணி ஆபரணம் பளபளென்று சோ[
எண்ணவொண்ணு வாத்தியங்கள் எங்குந் திமிதிமென்ன

130 அபிராமர்வீதிவர அயோத்தியுள்ளோர் தான்பார்த்து
கண்களினுல் ஆனந்தங் கொண்டே மனமகிழ்ந்தாள்

131 சொர்ன மணிரதமும் சுந்தரனுர் வாழ்முகமும்
மின்னலொளிபோல விளங்குமணிக் குண்டலமும்

132 தென்னங் கமுகதுபோல் சங்குவரிப் பூங்கழுத்தும்
வண்ண மணிஹாரம் வகைவகையாய் பூஷணமும்

133 கஞ்சமலர் முகத்தான் கௌஸலையாள் புத்திரனை
மங்கையர்களெல்லாருங் [illegible]ண்டேமன மகிழ்ந்தாள்

134 கனகமணித் தேரைவிட்டுக் காகுஸ்தர் கீழிறங்கி
கைகேயி தன்மனைக்குக் கடுகெனவே வந்து விட்டார்.

## ஸ்ரீராமர் வனம் புகுதல்.

*நீலாம்பரிராகம் தாலாட்டு மெட்டிலும் பாடலாம்.*

135 ஐயரடிபணிந்து அன்னையரின் தாள் பணிந்து
என்னை வரவழைத்த சேதி ஏதென்றுரையுமென்றார்

136 என்னுடைய கண்மணியே என் திவ்யான பூஷணமே
என்னய்யாவே ராகவரே அனைவருக்குந் தாரகமே

137 (என்) தாகந்தணித்தவரே சகலகுண ஸம்பன்னரே
(நீ) வனவாஸம் செய்யுமென்க வாய்வருமோ எந்தனுக்கு

138 (ராஜர்) கண்களிலே நீர்பெருகக் கவலையுடனே விழுந்தார்
கைகேயி தான்விழித்துக் கடுமையுடனே உரைப்பாள்

139 (அட) ஆழ்மையுள்ள ராமா அபிராமா நான்சொல்வேன்
நீ உண்மையறிய உரைத்திடுவேன் ராகவனே

140 தேவலோகத்தில் தசரதனார் யுத்தந்தனில்
(அஸுரன்) கல்வருஷத்தாலே கண்கலக்கம் வந்ததப்போ

141 கைகொடுத்துத் தேர்திருப்பி களைதீர்த்தேன் ராஜருக்கு
(அதை) மனதில்வைத்துக் கொண்டாடி வரமிரண்டு

142 உன் தம்பிபரதன் தரணிமுடி சூடவொன்றும் [கொத்தார்
நீ தங்காமல் கானகத்தில் தானடக்க வொன்றையுமாய்

143 இந்த இருவரமுங்கேட்டேன் இராஜாவை நானுமிப்போ
தந்தார்வரமெனக்கு நீ தங்காதே போகவென்றாள்

144 கெதிகலங்கச் சொல்லலுமே கீர்த்தியுள்ள ராகவரும்
அதிதுரையாய் எழுந்தார் அப்படியே செய்வோமென்று

145 தன்மாதா அரண்மனைக்கு மத்தகஜம் போல்நடந்து
தாயார் அடிமலரைத் தாசரதி தான்பணிந்தார்

146 அடிபணிந்த பாலகரை ஆசையுடனே தழுவி
அவனிமுடி சூடவென்று ஆசீர்வாதம் பண்ணினாள்

147 (அம்மா) தம்பி பரதன் தரணிமுடி சூடுகிறான்
என்னை ஆரண்யம்போக அனுப்பினார் எங்களய்யர்

148 அபிராமர் சொல்லலுமே அலமலந்து கோசலையும்
(இது) காலகெதியோவென்று கவலையுடனே விழுந்தாள்

149 அன்னையரைத் தானெடுத்து ஆறுதல்கள் சொல்லலுமே
மூர்ச்சைதெளிந்து முகில்குழலாள்கண்விழித்து

150 நானுமுன்னுடன்வருவேன் நற்பொருளே ராகவனே
உன்னைவிட்டு இங்கேஇரேன் பலராம வீரியனே

151 (அம்மா) ராஜா இருக்கையிலே என்பின் வருவீரோ
என் அய்யருட சொற்படிக்கே ஈரேழுஞ் சென்றபின்னே

152 மீண்டும் மிடம்வருவேன் முதற்பொருளே மாதாவே
அன்னையரைத்தேற்றி அடிபணிந்தார் ராகவரும்

153 திக்கிலுள்ள தேவர்களை ஸ்ரீஹரியை ஈஸ்வரனை
மனதிலே போற்றியம்மை வருந்தி வரங்கேட்டாள்

154 (என்) மஞ்சளள்ள ராகவரை மங்காமல் காருமென்று
அஞ்சிமனங்கனிந்து ஆசீர்வாதம் பண்ணினள்

155 தாயார் அடிபணிந்து தன் மனைக்கு வந்துவிட்டார்
ஜனகர் மகளாரே என் தேவியரே நீ கேளாய்

156 அபிஷேகஞ்சூடி அயோத்திநகர் ஆளவிருந்தேன்
மாதா அந்தகைகையிப்போ வசமாக்கி ராஜாவை

157 அருமையுள்ள மைந்தர் அயோத்தி நகராள வென்றும்
நான் வனவாசஞ் சென்றுவர வரங்கேட்டாள் கண்டாயா

158 ஏகிநான் காடுதனில் ஈரேழுஞ் சென்றுவரேன்
ஜானகியே நீயுமிரு (நம்ம) தாயார் அருகினிலே

159 இருபொழுதுங் கோசலைக்கு ஏவற்பணிகள் செய்தால்
இகபர மிரண்டினுக்கும் ஈடேரும் மார்க்கமென்றார்

160 காட்டானை கரடிபுலி கானகத்தில் ரொம்பவுண்டு
கூட்டமாய் ராக்ஷதர்கள் கொடுமைகளும் ரொம்பவுண்டு

161 வஞ்சனையாம் ராக்ஷதர்கள் வனத்திலே ரொம்பவுண்டு
வாலையான ஜானகிநீ வரப்போகாதென்று சொன்னர்

162 அபிராமர்சொல்ல அணியழகி ஜானகியும்
நானும்வருவேன் நற்பொருளே ராகவரே

163 பூணும்நல்ல பூஷணமும் பொன்னுடையுந்தனமும்
காணநல்ல பந்துவும் கனபிரியத் தோழியரும்

164 ஏற்குமிவை எல்லாம் எனக்கொன்றுந் தேவையில்லை
(உம்ம) தீர்க்கமலரடியின் சேர்வைஎனக்குண்டானல்

165 என் பாக்கிய மதுவேஎன்று உம்மபாதம் பணிந்திருப்பே
என்னைக்கார்க்கும் திறமையுண்டு என்றேயடி பணிந்தாள்

166 இளங்கொடியாள் சீதைசொல்ல லக்ஷுமணரைப்பார்த்து
மன்னரந்த ராஜரையும் மாதா இருவரையும்

167 ஆதரவாய்ப் போற்றிச்செய்து அருகிலிருந்தம்பியென்றார்
தம்பிஎன்றுசொல்ல சகிக்காராம் லக்ஷுமணர்
அண்ணரே உம்மைவிட்டு அரைநாழி தங்கிஇரேன்.

168 காட்டிலே உங்களுக்கு காய்கிழங்கு கொண்டுவந்து
நேசமுடன் காத்திருப்பேன் நித்திரையுஞ் செய்யாதே

169 தாஸனும் உங்கள் தலைவாசல் காத்திடுவேன்
(என்று) லக்ஷுமணர்சொல்ல ரகுராமர் சம்மதமாய்

170 ஆடையுடன் ஆபரணம் ஆனை குதிரைகளும்
அந்தணர்கள் எல்லவர்க்கும் அபிராமர் தான் கொடுத்தார்

171 கோடிபசுதானம் கொடுத்தார்நற் பிராமணர்க்கு
விளைநிலமும் வீடுகளும் வேதியர்க்குத் தான்கொடுத்தார்

172 ஏற்ற பொருளெல்லாம் ஏழைகட்குத் தான்கொடுத்தார்
சீதையோடு தம்பிவர திரும்பிவந்தார் தந்தையிடம்

173 ஆரண்யம் போகஐய்யா அனுப்பிவிடை தாருமென்றார்
ஆரண்யம் என்கவுமே அதிக சந்தோஷமுடன்

174 மாதாஅந்தக்கைகேயி மரவுரியைத் தான்கொடுக்க
சற்றுந்தாழாமல் வாங்கித் தரித்தார் இருவருமாய்

175 இருபேருந் தானுடுக்க இளங்கொடியாள் ஜானகியும்
மன்னரகு ராமாநான் மரையுடுக்க வல்லவளோ

176 (சீதை)அஞ்சி உரைக்கவுமே அபிராமர் போத்திவிட்டார்
ஜானகியுந் தான் உடுக்கத் தாய்மாரெல்லாம் வருந்த

177 வசிஷ்ட மகாரிஷியும் மந்திரி சுமந்திரரும்
(அடி) ஜானகிக்கு இந்தவரம் உண்டோடி சாகாவி

178 ஆச்சரியமான வரங்கேட்ட மாபாவி
வழிவழியாய் உங்கள் வம்சம் மாதாவின் துர்க்குணந்தான்

179 புரோகிதர் சொல்லி வெறுத்திடவே ராஜாவும்
கைகையுட துர்குணத்தைக் கண்டுமனம் வெறுத்து

180 சுமந்திரரைப் பார்த்துத் தேர்கொண்டு வாருமென்று
ஆடையுடன் ஆபரணம் அருமையுள்ள மைதலிக்கு

181 செம்பொன்மணிப்பட்டாடை தேரின்மேல் ஏற்றுமென்றார்
(சீதை)மரவுரியைத் தான்களைந்து மாதளம்பூப் பட்டுடுத்தி

182 மாதா பிதாவை வணங்கவே மூவருமாய்
மதியுரைத்து மைதலிக்கு மாமிவிடை கொடுத்தாள்

183 தேரேறி மூவருமாய் சாரதியை ஓட்டுமென்க
காடுதனை நோக்கிக் கடுகிவிட்டார் மந்திரியும்

---

(எக்காலக்கண்ணி மெட்டிலும் சொல்லலாம்.)

184 பட்டணத்தின் வீதியிலே பார்த்திருந்த மாஜனங்கள்
பாலவிருத்தாள் கூடி பதைபதைத்துத் தானழுதாள்

185 ராமரில்லா நாட்டில் நாங்களிரோம் என்றுசொல்லி
ஸ்ரீராமரோடு சேர வழிநடந்தாள்

186 மாதா கௌசலையும் மைந்தர்விடாய் தாளாமல்
மகா ராஜரோடு வருந்தியே ஓடிவந்தாள்

187 மாதா பிதா வருந்தக் கண்டுமந்த ராகவரும்
சுமந்திரர்க்குச் சொல்லி துரிதமாய் ஓட்டுமென்றார்

188 நேசமுடன் ஜனங்கள் நெருங்கியே வந்துவிட்டாள்
(ராமர்) தேரைவிட்டுக் கீழிறங்கி தமஸா நதியருகில்

189 அயோத்தி ஜனங்களுடன் அன்றிரவு தங்கிவிட்டு
நெருங்கிவந்த அந்தணர்கள் நித்திரையுஞ் செய்தபின்பு

190 துளசி மணவாளன் சுமந்திரனைக் கிட்டழைத்து
சுழலவிட்டுத் தேரைதென் திசையில் ஓட்டுமென்றார்

191 நொடிப் பொழுதிற்குள்ளே குதிரைதன்னை ஓட்டிவந்தார்
நேசமுடனே ஜனங்கள் நித்திரையுந் தான்தெளிந்து

192 ரகுநாதன் இல்லாது எல்லவருஞ் சோகமண்டி
திரும்பியும் பட்டணத்தில் சென்று மணங்கரைந்தாள்

193 தேர்த்தூளிதான் மறைய தசரதனும் தேவியுடன்
கருகிமனமெரிந்து கடுஞ்சோகந் தானடைந்து

194 கௌஸலையாள் ஆறுதலால் கைகையை மிகவெறுத்து
கோசலையின் அந்தப்புரந்தனிலே வந்திருந்து

195 மாதரசே நீயெனக்கு மாலையிட்ட நாள்முதலாய்
மனங்குளிர உந்தனுடன் வார்த்தைநான் சொன்னதில்லை

196 காமமென்னுங்கைகேயி குரோதக்கடல் விழுந்தேன் [ருர்.
(அவள்) கைமேலளித்தபலன் காலனென்னைச் சூழ்ந்ததென்

## குகப்பெருமான் ஸ்ரீராமரை வேண்டுதல்.

4-வது மெட்டு

அகவல் மெட்டிலும் பாடலாம்.

197 கோஸலதேசங் கடந்தோரகுராமர்
கொந்தளிக்கும் கங்கைக்கரையிலே வந்துவிட்டார்

198. குகனோடிக்கிட்டவந்து கும்பிட்டடிபணிந்து
தாசரதிஉம்மைச் சரணமென்று நானடைந்தேன்

199 (என்) நாட்டிலிருந்து என்னை ஆளவேணும் ஆண்டவனே
என்நகரை அபிஷேகஞ் சூடுமெங்கள் நாயகனே

200 அடியனுக்காயிரஞ்சேனை உண்டு அபிராமா
காடுங்கரையுமுண்டு கனவேட்டை நாயுமுண்டு

201 இங்கேஇருமையா என்னுடைய பாவம்போம்
எப்போதுங்கூடியிருப்பேன் இமைப்போழுதும்நான்பிரியே

202 வேட்டைமிருகமுண்டு வேணபுள்ளி மான்களுண்டு [ன்
தெளிந்தநல்ல ஆறுடையுண்டுசேர்ந்தமலேப்பாறையுண்டு

203 சந்தனமரங்களுண்டு கந்தம்புனுகுமுண்டு
தென்னைபனையுமுண்டு தேன்களும் ரொம்பவுண்டு

204 ஆடும்மயிலுண்டு ஆடுமுண்டு பசுவுமுண்டு
தினையுண்டு சோளமுண்டு செந்நெல் அரிசியுண்டு

205 அழகானவீடுமுண்டு அதனருகே தோப்புமுண்டு
(என்)தந்தையே உங்களுக்குத் தாஸனாய் நானிருப்பேன்

206 (என்)சுந்தரிநாயகியும் சீதை அருகிருப்பாள்
உங்கள் நல்வரவினாலே ஸ்ரீராகவா நான் மகிழ்ந்தேன்

207 தினைமாவுங்காய்கிழங்கும் சேர்ந்துபுஜித்திடலாம்
கொம்புச்சிறுதேனைக் குடத்தோடு குடித்திடலாம்

208 வந்தமறையோர்க்கும் இட்டுப்புசித்திடலாம்
(உம்ம) செல்வச்சநுகையினால் ஸ்ரீராமாநான் பிழைப்பேன்.

209 நீரிங்கே இருந்துஎன்னை ஈடேற்றவேணுமென்றான்
குகன்வேண்டி நிற்கலுமே கோதண்டபாணிசொல்வர்

210 வருஷங்கல்லாய் விழுந்தால் மரங்களது என்னசெய்யும்
வரும்விதி வந்ததென்றால் மானிடவர் என்னசெய்வார்

211 நாடுநகரமெல்லாம்(என்)நல்லதம்பி ஆளுகிறான்
(நான்) காடுமலைவஸிப்பேன் கைகைவரத்தாலே

212 மரவுரியை நான் தரித்து மாதவங்கள் செய்யவந்தேன்
உன்னாட்டில் ராஜாவாய் நானிருக்க நீதியில்லை

213 (உன்) பக்திபெரிதாலே பக்ஷமெனக்குண்டாச்சு [ணும்
(என்) அந்தரங்கத்தம்பியும்நீ (உன்னோ) டைந்துபேர்நாமா

214 உகந்துசொல்லி குகனுடனே ஓடம்விடவேணுமென்று
காகுஸ்தர் சீதையுடன் கங்கைக்கரையடைந்தார்

215 துய்யகுழல்சடைதரித்து சுமந்திரர்க்கு விடையளித்து
அய்யருக்கும் அன்னையர்க்கும்வந்தனங்கள் சொல்லுமென்

216 கங்கைநதிகண்டு கிளிமொழியாள் கைகுவித்து [றார்
திவ்யகங்காநதியை சீதையரும் பூஜைசெய்து

217 வணங்கியே கங்கைதனைமைதலியும் வேண்டிநின்று
ஜானகியும் ராமருடன் ஓடத்தில் ஏறிநின்றாள்

218 அசங்கிவிடவேஓடம் அபிராமர்கைபிடித்துநின்றாள்
இளங்கொடியாள் ஜானகியும் ஓடமேறியறியாளே

219 ஓடங்குலுங்காது ஓட்டுமென்றார் குகனுடனே
கோந்தளிக்குங் கங்கைதனை குகனாலே தான்கடந்து

220 கோவிந்தர் கீழிறங்க குகப்பெருமான் ஏதுசொல்வர்
பதினாலாமாண்டில் உம்மதிருமுகத்தைக்காணேட்டால்

221 பாய்ந்திடுவேன் கங்கைதனில் என்றார் பரவசமாய்
அப்படியே ஆகவென்று ஸ்ரீராமர்வழிநடந்தார்

222 காடும்மலையும் கடுகியே தான்கடந்து
பாரத்வாஜர் ஆசிரமம்வந்தார் பரிவுடனே.

4 - வது மெட்டு.

சுவலாலே என்ற மெட்டிலும் பாடலாம்.

223 அன்புடனேகொண்டாடி பாரத்வாஜரும்
அதிதியாகப் பூஜைசெய்தார் அபிராமருக்கு

224 ஸ்ரீ ராமா உம்முடைய தரிசனத்தினால்
(நான்) செய்ததவம் சித்தித்தது என்று துதித்தார்

225 மனமகிழ்ந்து ராகவரும் ரிஷியைப்பணிந்து (நான்)
வாஸம்பண்ண யோக்கியமான இடமுமேதென்றார்

226 வாஸுதேவா உமக்கொரு இடந்தானோவாஸம்
மனுஷபாவனைக்கு ஒரு இடஞ்சொல்கிறேன்

227 தேவர்முனிவர் போற்றும் சித்ரகூடத்தில்
சீதையுடன் வாஸம்பண்ணும் ஸ்ரீ ராமச்சந்திரா

228 அப்படியே செய்வேனென்று அபிராமரும்
அந்தக்ஷணமே நடந்தார் சித்ரகூடத்தில்

229 அழகானசித்ரகூடந் தன்னையடைந்து
அபிராமர் சீதையுடன் கண்டுமகிழ்ந்தார்

230 அன்புடைய லக்ஷ்மணன் ஆசிரமங்கட்டி
ஆகாரநித்ரைவிட்டு சிச்ருஷை செய்தார்

231 ஸ்ரீ ராமரும் ஜானகியுந் தம்பியுடனே
சேர்ந்திருந்தாள் மூவருமாய் சித்ரகூடத்தில்

232 சுகத்துடன் இங்கிருக்க ரகுபதியும்
சுமந்திரன் தேரைக்கொண்டு திரும்பிச்சென்றான்.

---

## தசரதர் மரணமும் பரதர் பிரலாபமும்.

233 புகழுடைய தசாதர் கௌஸலையுடன்(தன்)
பூர்வசாபந்தன்னைச் சொல்லிப்புலம்பினின்றார்

234 அந்தநாள் பிள்ளை வந்து தீர்த்தமெடுக்க
நாணறியாது யானையென்று அம்பாலே எய்தேன்

235 என்னைப்போல புத்திரசோகம் அனுபவிப்பா (யென்று)
இட்டாரே மஹாரிஷியும் சாபத்தையப்போ

236 அந்தகாள் சாபத்தாலிந்த அந்தியகாலத்தில்
அபிராமனை வனத்தில்விட்டு வாட்டமடைந்தேன்

237 சோகத்துடனே புலம்ப ராஜாவுமப்போ
சுமந்திரரும் அந்தவேளை திரும்பிவந்தார்

238 ஸ்ரீ ராமர் வனம்போனார் சீதையுடனே (உம்ம)
திருவடிக்குச் சரணஞ்சொன்னார் சேதிசொன்னார்

239 அபிராமனை வனத்தில்விட்டேன் என்றவுடனே
அந்தக்ஷணம் தசரதர் ஆவியிழந்தார்

240 அழுதுபுலம்பி அரண்மனையிலுள்ளோரார்
அன்புடைய பரதருக்குத் தூதனுப்பினார்

241 தூதர்வரும் வேளையிலே துய்யபரதர்
துர்ச்சொப்பனங்கண்டு சோகமடைந்தார்

242 அஞ்சிமிகப்பயந்து பரதரப்போ
அந்தரங்கத்தம்பி தன்னை எழுப்பிச்சொன்னார்

243 நம்ம ஐயர் தசரதனார் தைலந்தேய்த்து
அப்யங்கஸ்நானமும் பண்ணக்கண்டேன்

244 கிரசுமயிரெல்லாந் தான் உதிர்ந்து
திலதர்ப்பணங்கள் பண்ணி இருக்கக்கண்டேன்

245 பட்டான கோடிவஸ்திரந் தரிக்கக்கண்டேன்
பல்லக்கின்மேல் ஏறிப்போகக்கண்டேன்

246 ஸ்ரீ ராமர் லக்ஷ்மணர் சீதையுங்கூடத்
தெற்கேவெகுதூரம் நடக்கக்கண்டேன்

247 பரதருந் தான்கண்ட சொப்பனந்தன்னை
பசுவின் செவியில்மூன்று தரமாய்ச்சொன்னார்

248 வருந்தி இருக்குமந்தப் பரதரிடம் (அப்போ)
வசிஷ்டர் அனுப்பின தூதர்கள் வந்தார்

249 அழைத்திடுந் தூதருட வாக்கியத்தாலே
அனர்த்தங்கள் வந்ததென்று அஞ்சிப்பரதர்

250 அதி துரையாகவே பயணமாகிப் பரதர்
அயோத்தி நகரத்தடைந்தார் மூன்றுநாளிலே

251 பட்டணத்து வீதியெல்லாங் கண்டுபரதர்
பாழடைந்ததேனோவென்று அச்சமடைந்தார்

252 அஷ்டலக்ஷுமி வாசம்பண்ணும் அயோத்தி தன்னை
ஆச்சரியமாகப்பார்த்து மனந்தவித்தார்

253 அய்யா இளையவரே சத்துருக்கனு (என்)
ஆகாத சொப்பனத்தின் அதிசயம்பாரும்

254 என்று இருவருமாய் ஏக்கத்துடனே
மாதகைகையுடைய மனையில் வந்தாள்

255 மஞ்சத்தின் மேலிருந்த கைகையுடைய
மலரடியிற் பணிந்தாள் வாட்டத்துடனே

256 எப்பொழுதும் பிரியாமல் மஞ்சத்திருக்கும்
(எங்கள்)அய்யரெங்கே எங்களுக்கு சொல்லுவீ ரென்றார்

257 பதைப்பேன் பதில்லாமலே கைகேயியப்போ
பரதரைத்தழுவியே மடியிலணைத்தாள்

•258 அய்யா என் செவ்வமுள்ள அழகுமணியே
உன்அம்மானும் பாட்டனுரும் சுகமோவென்றாள்

259 சுகமாக வந்தாயோஎன் சுகுணபுத்திரா
சொந்தமாக அரசாள்வாய் பூமியை என்றாள்

260 அபிராமனை வனத்தில் துரத்திவிட்டேன்
உங்களய்யர் அதனுலே சீவனைவிட்டார்

261 ஸ்ரீராமனை வனம் போகவேசெய்தேன்
தசரதர் அதனுலே ஜீவனிழந்தார்

262 என்றவார்த்தை கேட்கவுமே ஏங்கிப்பரதர்
இளம்வாழை முறிந்தாப்போல் மூர்ச்சை அடைந்தார்

263 சண்டாளிகைகையிப்போ என்னடிசெய்தாய்
சத்தியமேசொப்பனங்கள் சத்துருக்கனு

264 தாயேஉன்னைச்சிந்துசிந்தாய் வெட்டிஎறிவேன்
(ஸ்வாமி) சந்நிதிக்காகாதென்றென்னைத் தள்ளிவிடுவர்

265 ஸ்திரீ ஹத்திதோஷத்தைநான் செய்தேனேயானல்
திரும்பாரயோத்திக்குச் செல்வராமரும்

266 மாதுர்ஹத்திதோஷத்தைநான் செய்தேனேயானல்
வரமாட்டாரயோத்திக்கு மன்னர்ராமரும்

267 மன்னராமர் வனவாஸம் போகலாமோடி
மதிப்பாகநாமிருந்து வாழலாமோடி

268 மதனிசீதைவனத்திலே வருந்தலாமோடி
மற்றவர்கள் இங்கிருந்து மகிழலாமோடி

269 அபிராமர்மரவுரி தரிக்கலாமோடி
அழகானபட்டாடைநாம் உடுக்கலாமோடி

270 (என்) அண்ணன்ராமன் காய்கிழங்கு தின்னலாமோடி
நெய்யும்பாலுஞ்சோறுமாய்நாம் உண்ணலாமோடி

271 ஈனரும்பின்பாஷைகற்ற உங்களய்யரை
இனங்கெட்டுக்கொல்லப்பார்த்தாள் உந்தன்மாதாவும்

272 அந்தப் பாதகிபெண்ணல்லவோ கைகையேநீயும்
நீபர்த்தாவைக்கொன்றது உன்குலவிருதென்றார்

273 பாவியைத் தரிசித்த பாதகந்தீர உதித்த
பாஸ்கரனை தரிசிப்போம் வெளியேவா தம்பி

274 சண்டாளிகூனியவள் எதிரேவர
தலைமயிரைப் பிடித்திழுத்து சத்துருக்கனர்

275 வீதியில்இழுத்தடித்துவெளியில்தள்ளி
வேகத்துடன் ஓடிவந்தாரிரண்டுபேருமாய்

276 மாதாகௌஸலையின் மனையில்வரவே (அவரை)
பாராமலிருந்தாளம்மன் பராமுகமாய்

277 பாதாரவிந்தந்தன்னில் புரண்டழவே
பார்த்துமந்தக் கோசலையும் ஏதென்றுரைப்பாள்

278 அகண்டமான ராஜ்ஜியங்கள் கிடைத்திருக்க
அழுவானேன்பரதாநீ ஆளலாமென்றாள்

279 (அம்மா) ராஜ்ஜியத்தின்மேலெனக்கு இச்சையுமானால்
(ராமன்) வனம்போக நானதற்குள்க்கையுமானால்

280 (நான்) பண்ணினதவமெல்லாம் இழந்துபோவேன்
இகபரமிரண்டில்லாமல் அழிந்துபோவேன்

281 கன்றை நினைத்துப் பசுவுங்கதறிவரவும்
கன்றையொருபக்கத்தினிற் கட்டியேவைத்து

282 கன்றுக்குபால்விடாத பாவிகளுண்டேயந்தப்
பாவிபோகும்நரகத்தில் நான்போவேனென்றார்

283 பட்டமகிஷியைவீட்டில் வைத்துமேவிட்டு
பரஸ்திரியைத்தேடிக்கொண்டுபோரவனுண்டே

284 அந்தப்பாவிபோகு நரகத்தில் நான்போவேனென்று
பரதரும் பலவிதமாம்ச் சத்தியஞ்செய்தார்

285 சத்தியம்சத்தியமிது என்றுபரதர்
சபையோரைப்பார்த்துமிந்தச் சபதம்செய்தார்

286 சத்தியவாசகராம் மகராஜர்க்கு
சம்ஸ்காரம் செய்யுமென்று வசிஷ்டர்சொன்னார்.

---

## தசரதருக்கு அந்தியகர்மஞ்செய்தல்,

287 கௌசலையாள் மனை தன்னையும்விட்டு
கண்கலங்கி யோடி வந்தாரிரண்டு பேருமாய்

288 தைலத்திலே யிருக்கும் ராஜாவைஎடுத்து
தோளுடன் சேர்த்தணைத்துச் சோகித்தழுதாள்

289 அய்யரை வைத்துக்கொண்டு அரசாளுகைக்கு
அதிர்ஷ்ட மற்றுப்போனோமென்று அழுதுசோர்ந்தாள்

290 செம்பொன் குடந்தன்னில் தீர்த்தமெடுத்து ராஜர்
திருமேனி தன்னி லபிஷேகம்பண்ணி

291 தங்கப்பரிவட்டமும் சாத்தியழகாய்
சவரணையாகத் திருநாமமு மிட்டாள்

292 சொர்ணத்தால் தேர்கொணர்ந்து சோடனைசெய்து
மன்னர்க் கலங்காரம்பண்ணி ஆடையுடுத்தி

293 (ராஜர்) கொலுவிருக்கும் அந்தப்பாவனைபோல
கொற்றவரைத் தேரிலேற்றி குமாரருஞ்சூழ

294 அதிசோகத்தோடு மந்தப்பரதரைப்போ
அக்கினியைக் கையிற்கொண்டு தம்பியுடனே

295 தலையை விரித்துமவாள் இரண்டுபேருமாய்
தசரதர்க்கு முன்னடந்தாள் சேனைகள்சூழ

296 பொன்னரிசிபொன்பூவுந் தங்கக்காசுமாய்
பூமியிலிறைத்துமவர் முன்னேநடந்தார்

297 வீதிவழிநடந்து விருதுகள்சூழ
நகரின்வெளிதன்னிலே ரதங்கொணர்ந்தார்

298 அழகான சரயு நதிகரையில்வந்து
அலங்காரச் சப்பாத்தைக் கீழேயிறக்கி

299 ஸ்ரீராமர் திருக்கையினால் செய்யுங்கிரியை
சிறுவன நான்செய்கிறே னென்னையாவேஎன்றார்

300 அபிராமர்திருக்கையினால்செய்யுங்கிரியைதன்னை
அடியேன் நான்செய்கிறேனென்னையாவேஎன்றார்

301 சந்தனக்கட்டையாலே சிதையடுக்கி
அரணிகடைந்தெடுத்து அக்கினிபோட்டார்

302 சிதைபிரித்து நுணிமுடிந்து தோண்டியுடைத்து
சிறந்தமந்திரஞ்சொல்லித் தகனஞ்செய்தார்

303 அதன்பின்னேவசிஷ்டரும் மந்திரிமாரும்
அன்புள்ளகுமாரருக்கு உபசாரஞ்சொன்னார்

304 மகானுபாவாஉங்கள் அய்யருக்கிப்போ (இந்த)
மரணம்வந்ததேஎன்று வருந்திச்சொன்னார்

305 என்னசெய்வோமெங்களுட அதிர்ஷ்டமிது
இப்படியும்வந்ததென்று ஏங்கிஅழுதார்

306 பரிதாபமாயழுது பரதருமப்போ
பார்த்துத்தன்மாதாக்களை பாகாயுருகி

307 (அம்மா) முந்நூற்றிஅறுபத்து மூன்றுபேரிலே
மூலையிலொருத்திஇருந்தாள் மிருத்யுவாக

308 (அந்தப்) பாதகிகிட்ட இருந்த தோஷத்தினாலே
(இந்தப்) பரிதாபம்வந்ததென்று பிரலாபித்தழுதார்

309 அழுதழுதழுகியவாள் அரண்மனைவந்து
சபிண்டீகரணஞ்செய்தார் தசரதர்க்கு

310 மாதானம்பூதானம் சையாதானமும்
வகைவகையாய்த்தானங்கள் வேணதுசெய்தார்

311 கிரகயக்யஞ்செய்தெல்லோரும் ஆடையுடுத்தி
சகலபேருக்கும்நல்ல போஜனமிட்டாள்

312 ஸ்ரீராமரைத்தானழைத்து வரவேஎன்று
சேனை ஆனை பரிவாரந்தங்களுடனே

313 சுமந்திரந்தேரைவிடத் தோப்பிலிறங்கி
துய்யகுழலைச் சடையாகத்தரித்து

314 அன்புடனேகுகனும் ஓடம்விடவே
அருங்கங்கைதாண்டியவர் அக்கரைசேர்ந்தார்

315 பக்தியுடனேகங்கா நதியுந்தாண்டி
பாரத்வாஜர் ஆசிரமந் தன்னையடைந்து

316 தவமுனிதன்னுடைய தாளில்பணிந்து
தாசரதி இருப்பிடம் அடையாளங்கேட்டு

317 அதிகதூரந்தன்னிலே பரதர்வரவை
ஆலவிருக்ஷந்தன்னிலேறி லக்ஷ்மணர்பார்த்தார்

318 (அண்ணா) பாதகி கைகேசியின் மைந்தனுமிப்போ
படையெடுத்துவருகின்றான் சேனையுடனே

319 இங்கே இருந்துமொரு சரந்தொடுத்து
பஞ்சாய்ப்பறக்கும்படி பாணம்விடுவேன்

---

### ராமபிரான் தசரதர்க்குப் பிண்டம்போடுதல்

320 லக்ஷ்மணர்சொல்லலுமே ராமருமப்போ
நேசமுடனேஒருவார்த்தையுஞ் சொல்வர்

321 (நீங்கள்) இருபேருந்தம்பிதானே என்றனுக்கிப்போ
என்னையும்பகைப்பானோ தம்பிபரதன்

322 பரிவுடன் சொல்லலுமே ரகுநாதனும்
பரதருங்கிட்டவந்து பாதம் பணிந்தார்

323 வாரும் தம்பிபரதாஉன் பட்டணத்தில்
மாதாபிதாசுகமோ வாட்டமில்லாமல்

324 ஸ்ரீராமர் கேட்கவுமே பரதருமப்போ
சிந்தைமிகத்தளர்ந்து சேதியுரைப்பர்

325 அபிராமாநீர் வனத்தில் வந்ததினாலே
(நம்ம) அய்யர் தசரதரும் ஆவியிழந்தார்

326 ஸ்ரீராமர் கேட்டுமதைச் சிந்தை கலங்கி
அன்புடைய அய்யாவென்று அழுதுசோர்ந்தார்

327 வசிஷ்டசுமந்திரரும் மாதாக்களுமாய்
மாராபிராமனுக்குத் தேறுதல்சொன்னார்

328 மைதலியும்லக்ஷமணரும் கூடவரவே
மந்தாகினி நதியில் ஸ்நானமும் பண்ணி

329 இலந்தைப்பழத்தினாலே பிண்டமும்வைத்து
எள்ளுந்தண்ணுமாயெடுத்துத் தர்ப்பணஞ்செய்தார்

330 புங்கங்காயா லேராமர் பிண்டமும்வைக்க
புண்யதசரதனார் கையைஏந்தினார்

331 மைந்தர் அருமையினால் தசரதரும்
வாயஸமாக வந்து வலக்கை ஏந்தினார்

332 அதுகண்டஜானகியும் மிகப்பயந்து
அபிராமரண்டையிலே அணைந்துநின்றாள்

333 சகலகர்மமும்பண்ணித் தர்ப்பணம்பண்ணி
ஸ்நானம்பண்ணிக்கரைஏறி ஆசிரமம்வந்தார்

334 லக்ஷமணர்போல்பரதர் சத்துருக்கனர்
நேமத்துடன் காய்கிழங்கு தானும்புசித்தார்

335 அதன்பின்னே பரதரும் அபிராமரைப்பார்த்து
அரசாள அயோத்திக்கு வரவேணுமென்றார்

336 பரிவாகக் கேட்டதொரு பரதருக்கு
(பல) ஞாயஞ்சொல்லிப் பாதுகையைத் தானுங்கொடுத்தார்

337 ஸ்ரீராமர் பாதுகையை ஸிரஸில்வைத்து
நந்திக்கிராமந் தன்னில்நின்று ராஜ்ஜியமாண்டார்

338 பாதவடி இரண்டும் பட்டணமாள
பரதரும் ராமாராமா என்றே யிருந்தார்

அயோத்தியாகாண்டம் முற்றிற்று.

---

## ஆரணியகாண்டம்.

339 அத்திரி அனுசூயா ஆசிரமந்தன்னில்
அன்புடனே வந்திருந்தார் அபிராமரும்

340 வாடாதமாலையுடன் பூஷணங்களும்
மைதலிக்குத்தான் கொடுத்தாள் அனுசூயையும்

341 ஜானகியும் அலங்காரஞ் செய்துகொண்டு
தாசரதி ராமருடன் கூடிநடந்தாள்

342 வழியிலே சண்டைசெய்த விராதன் தன்னை
விநாயகபூஜையாக முதபலியிட்டு

343 சஞ்சலங்க ளன்றியிலே வழிநடந்து
சரபங்க மகாரிஷிக்கு மோக்ஷங்கொடுத்து

344 அதற்குப்பின் அகஸ்தியர் ஆசிரமம்வந்து
(அவர்) ஆதரவாய்க்கொடுத்த அஸ்திரம்வாங்கி

345 பஞ்சவடி தன்னில்வந்து ஆசிரமங்கட்டி
தஞ்சமாக முனிவருக்கு ஸ்வாமி இருந்தார்

346 சிச்ருஷை செய்திருக்க லக்ஷ்மணரும்
சிலகாலமங்கிருந்தாள் மூவருமாக

---

## சூர்ப்பநகா பங்கம்

347 இப்படி இவாளிருக்கும் நாளில்ஒருநாள்
அற்புதமாகவொரு அரக்கிவந்தாள்

348 அதிரூபமான அபிராமனைக்கண்டு
ஆசைகொண்டுமோகத்தினல் அண்டையில்வந்தாள்

349 (நீ) சந்திரனே இந்திரனே சதுர்முகனே
மன்மதனேகந்தர்வனே மனிதன் தானே

350 மன்மதசுந்தரனே மாதவனே
வனத்திலேவந்திருக்கும் காரியமென்ன

351 வலிகூராளாயிருக்கும் ராக்ஷதர்கண்டால்
மாம்ஸபிண்டமென்று உம்மை பக்ஷித்திடுவாள்

352 (நீ) யார்பெண்ணேயென்று ஸ்ரீராமரும் கேழ்க்க
இலங்கையின் ராவணனுட தங்கையுந்நானே

353 சூர்ப்பநகையென்று சொல்வாள் பேருமெனக்கு
(உன்)சுந்தரத்தைக்கண்டுமயல் கொண்டேனென்றாள்

354 தசரதர்பாலர்நாங்கள் ஸ்ரீராமன் என்பேர்
என்தேவியுடன் வனத்திலே தவஞ்செய்கிறேன்

355 சிந்தை இல்லை எங்களுக்கு உன்தயவாலே
தயவுபண்ணி இரட்சியென்றார் ஸ்ரீராமச்சந்திரர்

356 அப்படியே நின்றுகாப்பேன் உங்களைநானும்
ஆசைகொண்டேன் மோகத்தினால் அணையுமென்றாள்

357 சூர்ப்பநகை சொல்லவுமே ஸ்ரீராமச்சந்திரர்
சற்றேசிரித்துமந்த சீதையைப்பார்த்து

358 அதிசுந்தரமான உன்னழகினுக்கு
அதிர்ஷ்டமில்லை சீதைஎன்னை அணையவிடாள்

359 பாரியுமில்லாதவன் வடிவழகன்
பாராயந்த லக்ஷ்மணன் ஏர்வையானவன்

360 (ஒரு)சுந்தரியும்வேணுமென்று என்னையுங்கேட்டான்
சுகமாக அவனிடம் இருபோவென்றார்

361 தாசரதிசொன்னதொரு வார்த்தையைக்கேட்டு
சற்குணரானதம்பி கிட்ட நடந்தாள்

362 ஸ்ரீராமச்சந்திரனார்உன் தமயனார் உந்தன்
தேவியாயிருக்கச்சொன்னார் சேர்த்தணையென்றாள்

363 தாசரதிசொல்லிவிட்ட வார்த்தையைக்கேட்டு
சற்றேசிரித்துமந்த லக்ஷ்மணரும்

364 ஏதுபெண்ணேசூர்ப்பநகி இம்மட்டோபுத்தி
ஏவற்பணிசெய்பவன் நான் ஏர்வையுமில்லை

365 இருபொழுதும் ராமருக்குக் காவல்புரிந்து
இதுவேஜீவனமாக நானுமிருக்கேன்

366 தாஸரதி தாஸனன்றோ என்னையணைந்தால்
( நீ ) தாஸீஎன்று ஆய்விடுவாய் சகிக்க அறியேன்

367 அதிசுந்தரமான உன்னழகிற்கு
அவர்தானே ஏர்வைகண்டாய் அங்கேபோவென்றார்

368 நீங்களிருவருமாய்ச்சிரித்து ஏமாற்றலாச்சோ
இளக்காரமாகினேனோ என் பலம்பாரும்

369 (சீதை)வடிவாலேவந்த உங்கள் கர்வங்களெல்லாம்
சற்றுப்பொழுதிற்குள்ளே தீர்த்துவிடுவேன்

370 சீதையை எடுக்கவந்தாள் சூர்ப்பநகியும்
ஸ்ரீராமருந்தம்பியர்க்குச் சாடையுஞ்செய்தார்

371 சுமத்திரா தேவியுட செல்வமைந்தரும்
செவியுடன் மூக்குமுலை மூன்றுமரிந்தார்

372 கதறியேசூர்ப்பநகி காளவிஷம்போல்
கரதூஷணர்களுட காலில்விழுந்தாள்

373 சேதியைக்கேட்டவுடன் கரதூஷணன்
தீபத்தை நாடிவரும் பூச்சிகள்போலே

374 ஸ்ரீராமர்தம்முடைய பாணத்தினாலே
க்ஷணத்திலே சீவன்விட்டு சித்தியடைந்தாள்

375 வலிசூராள் தம்பிமார்கள் பட்டவுடனே
அலறியே ராவணனின் அண்டையிற்போனாள்

376 (அண்ணா) தசரதகுமாரனும் ஸ்ரீராமச்சந்திரன்
தண்டகவனமிருக்கார் சீதையுடனே

377 அதிசுந்தரமாம்அவள் அழகைப்போலே
(இந்த) அவனியில் ஒருவரைக் கண்டதுமில்லை

378 செந்தாமரை புஷ்பம்போலே முகத்தழகும்
தீபப்பிரகாசம்போலே தேகத்தொளியும்

379 அந்தரவில்லுப்போலே புருவமிரண்டும்
ஆணிமுத்துப்பதித்தாப்போல் பல்வரிசையும்

380 அபிராமர் சீதையுடன் வீற்றுமிருக்க
அண்டையிலேலக்ஷ்மணன் காத்துமிருக்கான்

381 ஆபரணமேதுக்கு அண்ணா நமக்கு சீதை
அழகொன்றும்போதுமே இலங்கைவிளங்க

382 தீபந்தானேதுக்கு அண்ணாநமக்கு சீதை
சிவப்பொன்றும்போதுமே லங்கைவிளங்க

383 வண்டோ தரியைத் தோற்கும் அவளழகும்
அன்புடனே வார்த்தை சொல்லும் அதரத்தழகும்

384 ஸ்வப்ரகாசமான அந்த சுந்தரிவந்தால்
அற்புதமாகவிளங்கும் அரண்மனை யெல்லாம்

385 உமக்கவள் ஏர்வைஎன்றே உச்சிதமாக
ஓடிஎடுக்கப்போனேன் தாவிப்பிடித்தேன்

386 ஸ்ரீராமன் தம்பியொரு இடும்பனவன்என்
செவியுடன் மூக்குமுலே மூன்றும்அரிந்தான்

387 கரதூஷணனுடைய கட்டுங்குலேத்தான்
காலதூதன் தானேயவன் சந்தேகமில்லை

388 தங்கையிது சொல்லவுமே தசமுகனும்
பொங்கிமனங்கொதித்துக் கண்கள் சிவந்தான்

389 (உன்னைப்) பங்கஞ்செய்த மனிதரைப் பாடுபடுத்தி
திக்களெட்டுநாளையிலே திரும்புவேனென்ருன்.

---

## மாரீசன்வதை

390 அந்தப்புரந்தனிற்சென்று தசமுகனும்
ஆலோசனை பண்ணியொரு தீர்மானஞ்செய்தான்

391 வாருமையாமாரீசனே மான்வடிவாக
வழிநெடுகக்கொண்டு செல்வாய் ராமச்சந்திரனை

392 ராவணன் சொல்லவுமே மாரீசனப்போ
ரா வென்றசப்தங் கேட்டால் நான் நடுங்குவேன்

393 மாரீசன் சொல்லவுமே ராவணன் கேட்டு
(நீ)மடியவேதடியாலே அடிப்பேனென்ருன்

394 சிந்தித்துப் பார்த்துமந்த மாரீசனும்
தீராதமரண காலங் கிட்டியதென்று

395 ராவணப்பாவி கையால் பட்டோமேயானல்
நரகக்குழியொழிய மற்றென்றுமில்லை

396 ஸ்ரீராமர் திருக்கையால் பட்டோமேயானல்
ஜனனமரணமில்லை ஸத்கதியுண்டு

397 மனதிலே எண்ணியவன் பொன் மாஞகி
வனந்தன்னில் வந்துமவன் மயக்கிநின்ருன்

398 தங்கமிருகம்வந்து சஞ்சரிக்கவே
ஜானகியும் கண்டு மெத்தச் சந்தோஷமாய்

399 அய்யா இளையவரே ரகுபதியே இந்த
ஆச்சரியப் பொன் மானின் அழகைப்பாரும்

400 கானகத்திலே திரியும் மான்தானே யிது
(என்) கைதனிலே பிடித்துத் தரவேணுமென்ருள்

401 தங்கத்தினல் சீவனுடன் மானிருக்குமோ
இங்கேயுள்ள ராக்ஷதரின் வஞ்சனை என்ருர்

402 வஞ்சனை யல்லாத மான்தானது அதை
தந்தாலல்லால் ஜலபானம் பண்ணேனென்றாள்

403 அரைக்ஷணம் மான்பிடித்துத் தருவேனென்று
அபிராமர் பாணங்கொண்டு பின்னே தொடர்ந்தார்

404 மங்களமாம் சீதையை மார்பினில் வைத்து
மாயா சீதையை வனத்திலே வைத்து

405 பொற்பாதத் திருவடியை பூமியில் வைத்து
பொன் மானின் பின்நடந்தார் புருஷோத்தமர்

406 அலைந்து திரிந்து மந்தாகுபதியும்
ஆவியுடன் பிடிக்க மானகப்படாமலே

407 தோன்றியுந் தோன்றாமல் மான்நடக்கவே
குரூரத்தனமாக ராமர் பின்நடக்கவே

408 அலைந்து திரிந்து மான் அகப்படாமலே
அபிராமர் லக்குவைத்து அம்பாலே எய்தார்

409 அம்பாலே எய்யவுமே மாரிசனப்போ
ஆசீதா தம்பியென்று அலறிவீழ்ந்தான்

410 அவசத்தங் கேட்டவுடன் ஜானகியப்போ
ஆதிசேஷரையழைத்து வார்த்தையுஞ் சொல்வள்

411 ஸ்ரீராமர் சத்தமிட்டு விழுந்தாரிப்போ
சென்றறிந்து வாருமென்று சீதையுரைத்தாள்

412 (அம்மா) மரணஜனன முண்டோ அபிராமர்க்கு
மாய்கையிது ராக்ஷதரின் வஞ்சனை யென்றார்

413 சேஷரிது சொல்லவுமே சீதையுங்கேட்டு
தெய்வமே என்று சொல்லிச் சிந்தைகலங்கி

414 போனவன் போகட்டும் நம்ம இஷ்டம்போல்
போகமடைவோ மென்று எண்ணமுங்கொண்டீர்

415 சீதைசொல்லக் கையிரண்டும் செவியில்வைத்து
ஸ்ரீராமா ராமாவென்று முக்காலுஞ்சொல்லி

416 கோடுதன்னைக் கீறியே சீதையைவைத்து
கோரராக்ஷதருட குரூரங்கள் சொல்லி

417 மயில்களா குயில்களா மாமரங்களா
மைதலியும்உங்களுட அடைக்கலமென்று

418 வைதேகி வார்த்தை தன்னைக் கேழ்க்கமாட்டாதே
மன்னரபிராமரிடம் வந்துமே நின்றார்

419 தாசரதிலக்ஷுமணர் தன்னையும் பார்த்து
ஜானகியைத் தனியேவிட்டு ஏன்வந்தாய் தம்பி

420 பாணம்போல பிளக்கும் வார்த்தையுஞ் சொன்னாள்
வேகமாய் மனதுநொந்து வந்தேனென்றார்

421 அவளுரைத்தாள் அவளுடைய காலகெதியால்
அறியாயோ பெண்கள்மதி ஏன்வந்தாய் என்றார்

422 ஜானகியை நாமும் இனிக் காண்போமோவென்று
தாகத்துடனே ராமர் வேகமாய் வந்தார்

---

## இராவணன் சீதையை எடுத்துப்போகுதல், ஜடாயு யுத்தம்.

423 இப்படியவர்கள் வரத் தசமுகனும்
அதிதிபோலவே சீதை அருகில் வந்தான்

424 மத்யான்ன அதிதியைக் கண்டவுடனே
மைதலியுங் காய்கிழங்கு தீர்த்தங்கொணர்ந்து

425 பக்தியுடனே யம்மன் அருகில்வைத்து
பக்குவமான பழம் புஜியுமென்றாள்

426 பக்குவ காலந்தான் இது சீதையுனக்கு
(நான்) பலநாளுந் தேடிப்பலன் கிட்டாதேபோச்சு

427 பசியில்லே உந்தன் மேலே இச்சையாய் வந்தேன்
பத்துத்தலே ராவணன் நான் பாராயென்றான்

428 அரக்கன் வடிவைச் சீதை கண்டஉடனே
அடங்கியொடுங்கி யம்மன் நடுங்கி நின்றாள்

429 அதிபாவி ராவணா இங்கேனடாவந்தாய்
என்னபிராமர் கண்ணிற்பட்டால் தப்பவேமாட்டாய்

430 அந்தக் காலதூதர்கள் வந்து காண்பதற்குள்ளே
கடுகி எழுந்திருந்து போவென்று சொன்னாள்

431 இணங்கியே நம்மை இவள் வணங்காளென்று
எடுத்தான் பலவந்தமாய் ஏற்றினான் தேர்மேல்

432 பத்தினி சீதைவந் துட்கார்ந்தவுடனே
பதுங்கிற்று ரதமப்போ பூமிதன்னிலே

433 ஓடொன்று தானெடுத்துத் தசமுகனும்
ஒண்டொடியாள் அருகினில் ஓடியேவந்து

434 உத்தமி சீதையை என்ன ஓடிதுவென்றான்
பாவிஉலகத்தார் வீடுமூடும் மண்ணோடு என்றாள்

435 அந்தரத்துமேலே யந்தத்தேர் பறக்கவே
அப்போசீதை ராமாராமா வென்றலறவே

436 வழிமறித்துச் சண்டைகொள்ளுஞ் சடாயுவப்போ
படைபண்ணி என்னையும் ஜெயித்துப் போவென்றார்

437 பாபிஷ்டி ராவணா ராமர் பாரியை நீயும்
(இந்தப்) பதினாலு உலகத்தில் கொண்டொளித்தாலும்

438 உலகம்பதினான்கும் ஒரு பாணத்தால்
ஊடுருவவே பிளப்பர் உன்னை என்றார்

439 சடாயுவின் சிறகையும் வெட்டியேதள்ளி
ஜானகியைத் தோளிற்கொண்டு பறந்துவாரான்

440 அந்தரத்து மேலேயவன் பறந்துவரவே
அபிராமா வென்றுசீதை புலம்பியழவே

441 கிஷ்கிந்தா பட்டணத்தருகில் ராக்ஷதன்வர
சுக்கிரீவன் சொக்கட்டான் ஆடியிருக்கவே

442 ஆபரணங் கழட்டிசீதை துணியிற்சுற்றி
(என்) ஆண்டவர் வந்தாலளிப்பீரென்று எறிந்தாள்

443 இளையவரைச் சொன்ன உதாசினமிப்போ
எந்தனுக்கு இந்த விதம் லபித்ததென்று

444 ஏந்திழையாள் மிகவும் சோகத்துடனே
ஏங்கிமனம் நடுங்கிப் புலம்பிடவே

445 அதிதுரிதமாய்கொண்டு லங்கைபுகுந்து
அசோகவனத்திலே அம்மனை வைத்தான்

446 திரளாகராக்ஷதியைக் காவலும் வைத்து
தசமுகன் சந்தோஷமாய்க் கொலுவிருந்தான்.

---

## ஜடாயு மோக்ஷமடைதல்.

447 தாசரதி லக்ஷ்மணர் தன்னுடன்கூடி
தன்னுடைய ஆதிரமம் வந்துபுகுந்து

448 மைதலியைக் காணுமல் மனந்தளர்ந்து
வனங்களெல்லாந்தேடி வாடியலேந்தார்

449 ஜானகியே நீயுமெங்கே போனுயென்பார்
ஜலங்கொண்டுவாராளோ பாராயென்பார்

450 அன்புடைய நாயகியே ஜனகன்பெண்ணே
அனேகம்பொழுதாச்சுப் பரியாஸமென்ன

451 மலர்ந்து சொரியுமிந்தப் புஷ்பவகைகள்
மைதலியைக் காணுமல் வாடிப்போச்சென்பார்

452 சிவந்த காலாலேவந்து ஹம்ஸபக்ஷிகள்
சீதைஎங்கே ராமாவென்று சேதிகேட்குதே

453 வனத்தில் உன்னுடன் ஆடும் மயில்கள்வந்து
மைதலி எங்கேஎன்று வாடிப்போகுதே

454 பூக்கும்மரங்களா பொய்கைநதிகாள்
(என்) பொற்கொடியாள் இந்தவழி வரக்கண்டீரோ

455 மலேகாள் பருவதங்காள் வண்ணக்குயில்காள்
மைதலியாள் இந்தவழி வரக்கண்டீரோ

456 தாசரதி லக்ஷ்மணர் இரண்டு பேருமாய்
தனித்தனியே புலம்பித் தேடியேவாரார்

457 தசரதகுமாரனுர் வரும்வழியில் அங்கே
தேர்முறிந்துகிடந்தது சின்னபின்னமாய்

458 ஆர்வசத்தை யடைந்தாளோ ஜானகியும்
ஆவியிழந்தாளோவென்று அலத்திவந்தார்

459 நின்றுநின்று புலம்பியே இரண்டுபேருமாய்
இரண்டடிநடந்துவந்து பார்க்குமளவில்

460 சிறகொடிந்து கால்முறிந்து ஜீவன் துடிக்கும்
சடாயுராஜன் தன்னே ராமருங்கண்டார்

461 ஸ்ரீராமர் பார்த்துமதைச் சிந்தைகலங்கி
சடாயுவே இதுவென்ன அவகோலமென்றுர்

462 தென்னிலங்கையிலிருக்குந் தசமுகனும்
சீதையைக் கொண்டுபோனுன் திருட்டாகவே

463 தென்புறத்திலே ஒருதேர்பறக்கவே
சீதையும் ராமா ராமா என்றலத்தவே

464 ராமாராமாவென்றழுத குரலைக்கேட்டு
ராவணனோடு யுத்தம்பண்ணித் தேரைமுறித்தேன்

465 சீதையைமீட்கவென்றே யுத்தங்கள்பண்ணி
தேரைமுறித்தெறிந்தேன் சின்னாபின்னமாய்

466 பறக்குஞ் சிறகுதன்னைப் பிச்சுமெறிந்துலங்கைப்
பட்டணத்திற் கொண்டுபோனான் (நான்) பார்த்துமிருக்க

467 அதிதுரையாய் நடந்து லங்கையிற்சென்று
அசோகவனத்திலே அம்மனை வைத்தான்

468 சீதையுட சேதியிதை சடாயுவுஞ்சொல்லி
ஸ்ரீராமா ரக்ஷியென்று ஜீவனைவிட்டார்

469 ஸ்திரமானஉபகாரம் பண்ணினாரென்று (அப்போ)
தசரதர் மரியாதை பண்ணிராமரும்

470 தந்தைபோலவேஎண்ணி சம்ஸ்காரமுஞ்செய்து
சாயுஜ்யபதவியைத் தானும் அளித்தார்

471 காடுதன்னிலே இவாள் வரும்வழியில்
கவந்தனைக்கொன்றுமவன் சாபந்தொலைத்து

472 சபரியின் ஆசிரமந்தன்னிலேவந்து
சகலபூஜையுங்கொண்டு முக்தியுந்தந்தார்.

ஆரணியகாண்டம் முற்றிற்று.

---

## கிஷ்கிந்தாகாண்டம்.

### ஸ்ரீராமர் ஹநுமாரைக் காணுதல் சுக்ரீவன் நட்பு.

473 அப்புறந்தெற்கே சில தூரங்கடந்து
ஆலோசனைகள் பண்ணி அபிராமரும்

474 பம்பையாற்றங்கரைதனில் வந்துமிருந்து
தம்பியுடனே இருந்து யோசனைசெய்தார்

475 தசமுகன் ஸம்ஹாரம் எப்படியாகும்
சீதையும் நம்மைவந்து எப்போதடைவாள்

476 (என்று) வருந்திடும் வேளைதன்னில் மரக்கிளைமேல்
ஒருவானரந் தன்னைக்கண்டார் வைபோகமாக

477 லக்ஷ்மணா பாராயிந்த வானரந்தன்னை
இரத்தின குண்டலமும் நல்வடிவமும்

478 அன்புடனே ராமர்சொல்ல ஹநுமான்கேட்டு
ஆண்டவர் இவர்தானென்று அடிபணிந்தார்

479 அஞ்சனைக்குமாரன்நான் ஹநுமான் என்பேர்
ஆலோஜனை பண்ணுகின்ற காரியமென்ன

480 தாஸாதிதாஸனையா உங்களுக்குநான் (உங்கள்)
சங்கடங்களை யுரைத்தால் சாதிப்பேனென்றார்

481 தென்னிலங்கை தனிலிருக்கும் தசமுகனும் (என்)
தேவியைக் கொண்டுபோனான் திருட்டாகவே

482 அதுவேவிசாரமய்யா ஹநுமாரே இப்போ
ஆராலே தீருமிது அறியேனென்றார்

483 ஸ்ரீராமாஉம்முடைய தயவுண்டானால்
ஸாகரந்தாண்டிச் சீதைகண்டுவருவேன்

484 சுக்கிரீவ ராஜருக்குச் சொல்லியேநானும்
சினேகமுஞ் செய்துவைப்பேன் என்று நடந்தார்

485 ஹநுமாருஞ்சுக்கிரீவ ரண்டையில்வந்து
அபிராமர் சேதிதன்னை அன்போடுரைத்தார்

486 தசரதர்குமாரனும் ஸ்ரீராமச்சந்திரன்
தண்டகவனத்தில்வந்து தேவிபிரிந்தார்

487 சத்துருவை ஜயிக்கவே நம்மளுடைய
சகாயத்தைவிரும்பியே சினேகிதமானார்

488 அபிராமர் தம்முடைய தயவுண்டானால்
அபயஸ்தந் தருவர்என்று ஹநுமான்சொன்னார்

489 அதிகப்பிரீதியுடனே சுக்கிரீவராஜன்
ஹநுமாரே நீர்போய் அழைத்துவாவென்றார்

490 ஸ்ரீராமா லக்ஷ்மணுசரணம் ஐயா
சீக்கிரம் வாருமென்று அழைத்துவந்தார்

491 அபிராமரும் சுக்கிரீவரும் சினேகம்நாமென்று
அக்கினியின் முன்பாகவே சத்தியஞ்செய்தாள்

492 ஸ்ரீராமர் தம்பியுடன் வீற்றுமிருக்க அங்கே
சுக்கிரீவர் சிறுமூட்டை தனைக்கொணர்ந்து

493 ராக்ஷதன்கொண்டுபோன ராஜ்ஸ்திரீ இந்த
நவரத்தின பூஷணத்தை இங்கேஎறிந்தாள்

494 (இதன்) அடையாளம் பாருமென்க சுக்கிரீவராஜன்
அபிராமர் பார்த்துமதை மனந்தவித்தார்

495 மைதலியே உன்னுடைய பூஷணந்தன்னை
வந்து நீ பூணுவாயோ கண்ணாற் காண்பேனோ

496 துர்ப்பலவானென என்னையடைந்துநல்ல
சுகமொன்றுங் கண்டதில்லை சுந்தரி நீயும்

497 லக்ஷ்மணா மைதலியின் பூஷணந்தானோ இது
நீபாராய் என்றுசொன்னார் ரகுபதியும்

498 பரிவாகலக்ஷ்மணர் கையிலே வாங்கி அம்மன்
பாதச்சிலம்பொன்றைநான் அறிவேனென்றார்.

---

## வாலிவதம்.

499 சோகத்துடனே புலம்ப ராமபத்ரரும்
சூரஹநுமாருமந்த சுக்ரீவரும்

500 வாலியின்ஸம்ஹாரம் ஆனவுடனே அய்யா
மைதலியைக் கொண்டுவரேன் வருந்தவேண்டாம்

501 ஏழுமராமரத்தை ஒரு பாணத்தால்
எய்து விழவடித்தால் நம்பிக்கையென்றான்

502 மராமரமேழையும் அபிராமரும் அப்போ
வையகமெல்லாம் அதிரத் துளைத்துநின்றார்

503 மரைந்துமேதானிருந்து வஞ்சனையாக ராமர்
வாலிமடியவொரு வாளிதொடுத்தார்

504 வாலியுங்கீழ்விழுந்து ராமரைப்பார்த்து
மர்மமோ என்றன்மேலே வஞ்சனைதானோ

505 பக்ஷபாதமோ உமக்கு யோக்யந்தானோ இது
பாஹிம்சைசெய்வதுங்கள் குலதர்மமோ

506 பரமபுருஷாநீர் என்னுடன் சொன்னாலந்தப்
பத்துத்தலைப்பூச்சியைப் பிடித்துத்தாரேனோ

507 பரிபூரணர் வாலியின் மேல் இரக்கமாகி
பங்கஜக்கண்ணினாலே கிருபையளித்தார்

508 தெய்வக்கிருபையினாலே வாலியுமப்போ
ஸ்ரீராமா இரட்சியுமென்று சீவனை விட்டான்

509 தாரைவந்துபுலம்பவே தாசரதியுஞ்சில
தத்துவங்கள் தானுரைத்துச் சோகந்தணித்தார்
510 தாரையுந்தான் தெளிந்து அங்கதன்கையால்
சகலகா மமும்பண்ணி வாலிதனுக்கு.

---

## சுக்கிரீவ பட்டாபிஷேகம்.

511 தாசரதி தம்பிகையால் சுக்கிரீ வருக்கு
சகலஸாம்பிராஜ்யத்தோடே பட்டமுங்கட்டி
512 அபிராமர் கிருபையாலே அரசும்பெற்று
அந்தப்புரமடைந்தார் அன்றைக்குத்தானே
513 பத்தினியுடன்மோகித்துச் சுக்கிரீவ ராஜன்
பரமர்சொன்ன வாக்கியத்தைத் தப்பிநடந்தான்
514 அபிராமர்லக்ஷ்மணர் தன்னையழைத்து (அந்த)
அறிவுகெட்ட வானரத்தை இங்கழை என்றார்
515 கிஷ்கிந்தாபுரிவந்தார் லக்ஷ்மணரும்
கெதிகலங்கிப் பயந்தார்கள் வானரங்களும்
516 நினைவுகெட்டசுக்கிரீவனே நெடுநாளாச்சே (என்று)
அதட்டியேலக்ஷ்மணர் அதிகோபங்கொண்டார்
517 உரிமையுடன் சுக்கிரீவன் வெளியில்வந்து
உவமையில்லா லக்ஷ்மணர் பாதம்பணிந்தான்
518 அறிவுமயங்கினேன் அபஜாரமய்யா
அபிராமர் சந்நதிக்குப் போகலாமென்றார்
519 படைகளுஞ்சூழ்ந்துவர சுக்கிரீவ ராஜன்
பாரளந்தார் திருவடி பணிந்துநின்றார்
520 அடிபணிந்தராஜனை அபிராமர் பார்த்து
அங்கங்கேதேடிவரச் சேனையனுப்பும்
521 அன்புடைய ஹனுமானை அருகழைத்தார்
அடையாள மோதிரத்தைக் கையிற்கொடுத்தார்
522 தெற்குத்திசைகடந்து சீதையைக்கண்டு
திரும்பிவருவீரென்று ஆசீர்வதித்தார்
523 ஆசீர்வாதங்கள் பண்ணி அபிராமரும்
தூதர்களை நாலுதிக்குஞ் சொல்லியேவிட்டார்

524 மலைகளுங் காடுகளும் வழிகடந்து
நிலந்தாண்டி மஹேந்திர மலையைக்கண்டாள்

525 சீதையைக்காணுக காரணத்தினால் தங்கள்
சிலனை விடுவோமென்று சிந்தனைசெய்தாள்

526 அந்தவேளை தன்னிலே சம்பாதிகண்டு
அத்தனை பேரையுங்கிட்ட அழைத்துக்கொண்டு

527 அறிவுகெட்டதசமுகன் அந்தப்புரத்தில்
அசோகவனத்திலே அம்மணிருக்காள்

528 ஸாகரந்தாண்ட உங்களால் ஆகுமேயானால்
ஜானகியை இப்பொழுதே காணலாமென்றார்

529 ஸாகரமென்றவுடன் அத்தனைபேரும்
தாண்டுதற்கு எங்களாலே ஆகாதென்றார்.

கிஷ்கிந்தாகாண்டம் முற்றிற்று.

---

## சுந்தரகாண்டம்.

### ஹனுமார் கடல்தாண்டுதல்.

530 வாயுகுமாரரும் மஹேந்திரமேறி
வானமட்டும் மலைபோல வளர்ந்துநின்றார்

531 விருக்ஷங்கள் செடிகளும் வேருடன்சாய
பக்ஷிராஜன் போலேயவர் பறந்துவந்தார்

532 வரும்வழி தன்னில் ஒரு ராக்ஷசிகண்டு (என்)
வாய்தான் வழியுனக்குப்போகலாமென்றாள்

533 ஹநுமாரும் அனுகூலமாகவே எண்ணி
ஆழிதன்னை ஆகாசந்தன்னிலெழுந்து

534 வாயில்புகுந்து செவியாலேகுதித்து
மணிமோதிரமதனைக் கையிலேந்தினார்

535 சுற்றிலும் பொன்னாலமைந்த இலங்கைநகரில்
ஸ்ரீராமதூதுவனும் வந்து குதித்தான்

536 தங்குதடையில்லாதே ஹநுமான்வர
சத்துருவைக்கண்டுமந்த லங்காதேவியும்

537 நில்லடா நீயாரென்ன லங்கணியப்போ
நெற்றியிலே அறைபட்டு நிலத்தில் விழுந்தாள்

538 அறிவுதெளிந்துமந்த லங்காதேவியும்
ஹநுமானிவர்தானென்று அறிந்துகோண்டாள்

539 அழிந்தது ராவணனுடன் இலங்கையென்று
அலறியேலங்கணியும்சீவனைவிட்டாள்

540 மாருதியுந் திரிகூட மலையைவிட்டு
மைதலியை மாநகரம் எங்கிலுந்தேடி

541 அரக்கனுட கோட்டைகள் கொத்தளமெல்லாம்
ஆராய்ந்து பார்க்துவந்தார் அந்தப்புரத்தில்

542 மின்னல்நிறமொத்த ராஜ கன்னிகைகளும்
மூவேழு உலகத்துள்ள மங்கையர்களும்

543 பாதாள லோகத்துநாக கன்னியர்களும்
பலவிதமாதர்களைப் பார்த்துமேவந்தார்

544 மண்டோதரியைக்கண்டே மாருதியப்போ
வடிவழகையுங்கண்டு மயங்கிநின்றார்

545 அரிஹரி என்னபுத்தி மயங்கிநின்றேன்
அரக்கனை இச்சிப்பாளோ ஆதிலக்ஷ்மியும்

546 அம்மனுட அடையாளம் ஈதல்லவென்று
அசோகவனத்திலே ஹநுமார்வந்தார்

547 செந்நாய்கள் சூழ்ந்திருக்க மான்பேடுபோல
சீதையும் ராக்ஷசிகள் நடுவிருந்தாள்.

---

### சீதையை ஹநுமார் காணுதல்.

548 ஸ்ரீராம ராமாவென்று சிந்தனைபண்ணி
சீதாப்பிராட்டியாரும் சோகித்திருந்தாள்

549 மாதாவைக் கண்டுகந்த பாலகரைப்போல்
மாருதியும் மைதலியைக் கண்டுமகிழ்ந்தார்

550 மரத்தின் கிளையின்மேலே மறைந்துகொண்டு
வைத்தகண் வாங்காமலே பார்த்துமிருந்தார்

551 அதிகாலைவேளை தன்னில் தசமுகனும்அந்த
அபிராமர் நாயகியை மனதிலெண்ணி

552 அந்தப்புரத்திலுள்ள பெண்களுடனே
அழகான வாத்தியங்கள் கோஷத்துடனே

553 தசமுகனங்கேவா சீதாதேவியும் அப்போ
தெய்வகெதியோவென்று சிந்தைமடிந்தாள்

554 மகிழ்ந்துமே எந்தனுடன் மஞ்சத்திருக்க
மனதுதா னெப்போவரும் மைதலி நோக்கு

555 எதிரற்ற செல்வத்துடன் போகபோக்கியமும்
யௌவனந்தப்பிவிட்டால் ஏதுக்குதவும்

556 பட்டமகிஷியையென் வண்டோதரியை
பணிசெய்தடப்பந்தாங்க பக்கத்தில்வைப்பேன்

557 தென்னிலங்கை கண்டறிந்து ஸாகரந்தாண்டி
ஸ்ரீராமர்வருவரென்ற சிந்தையைவிடு

558 தசமுகன் சொல்லலுமே ஜானகியப்போ
திக்காரம்பண்ணியொரு திரணத்தைப்பார்த்து

559 ஸ்ரீராமர் வந்திடுவர் எட்டுநாளையில்
(உன்) தசவாயில் மண்ணறைந்து என்னையுமீட்பர்

560 சீர்தூக்கிப்பார்த்து மென்னை க்ஷமையுங்கேட்டு
ஸ்ரீராமர் பக்கமென்னைச் சேர்ப்பாயென்றாள்

561 சீதையுஞ்சொல்ல ராவணன் ஆங்காரத்தோடே
சீறியேகண்வசிந்து வார்த்தையுஞ் சொல்வன்

562 திங்களெட்டில் என்னுடனே சேராதேபோனால்
துண்டு துண்டாய் உன் தேகத்தைத் துணித்தெறிவேன்

563 தசமுகன் சொல்லலுமே சீதாதேவியும்
சிந்தைமிகவும்நொந்து வார்த்தையுஞ்சொல்வள்

564 வையகத்துப் பெண்களைப்போல் எண்ணி என்னையும்
மரியாதையில்லாதே வார்த்தை செல்லாதே

565 வந்து வந்து அதட்டுறுய் மதமுண்டோடா
வசைகள் கேளாதேஎந்தன் வாயினுலிப்போ

566 (உன்)வஞ்சனையெல்லாமறிவேன் பிதற்றுதேடா
(என்)தஞ்சமான ராமர்வந்துன் தலையைத்துணிப்பர்

567 மைதலியுஞ் சொல்லலுமே ராக்ஷதனப்போ
வாளெடுத்து ஓங்கிவந்தான் கொல்லநினைத்தே

568 வண்டோதரி கண்டுமகா லக்ஷ்மிஎன்றே(எண்ணி)
வழிமறித்துக் கையினுலே தடுத்துவிட்டாள்

569 ராவணன் போனபின்பு ராக்ஷசிஎல்லாம்
பக்ஷணஞ்செய்வோமென்று பயங்காட்டினாள்

570 சுற்றிலும் உறுமிநின்ற ராக்ஷசியெல்லாம்
சற்று மயக்கமாகத்தா னிருக்கையில்

571 அம்மனும் மாத்தினடி தன்னிலேவந்து (தன்)
ஆவியை விடுவோமென்று சிந்தைபண்ணினாள்

572 அந்தவேளை கண்டுமெந்த ஹநுமாரும்
எந்தவிதம் சீதையைநாம் காணலாமென்று

573 ஸ்ரீராமர் சத்கதையைச் சொன்னோமேயானால்
சீதையும் நம்மையிப்போ நம்புவாளென்று

574 பூர்வத்தில்தசரதர் யாகஞ்செய்ததும்
புத்திரர்கள் நாலுபேர்கள் வந்துதித்ததும்

575 தனுஸொடித்து ஜானகியை மணஞ்செய்ததும்
தாயார்கைகேயியால் வனம்வந்ததும்

576 மாய்கையினால் ஒரு பொன் மான்வந்ததும்
மான்பிடிக்கஸ்ரீராமன் பிரிந்துபோனதும்

577 மைதலியைராவணன் கொண்டுபோனதும்
வைதேகிகாதில்விழ மாருதிசொன்னார்

---

## ஜானகி கணையாழியைத் தரிசித்தல்.

578 அமிர் தவருக்ஷம்போலே சரித்திரந்தன்னை
அன்புடனே காதைவைத்துக் கேட்டிருந்தாள்

579 காடெல்லாஞ் சீதையரைத் தேடிவந்ததும்
கவந்தனைக் கொன்றுபம்பைக் கரைவந்ததும்

580 சுக்கிரீவன் தோழமை தானடைந்ததும்
சூரனை வாலியைத் துணித்தெறிந்ததும்

581 சடுதிலேவானரங்கள் தேடிவந்ததும்
சாகரத்தையநுமான் தாண்டிவந்ததும்

582 மாருதியுஞ்சொன்னபின்பு கீழேயிறங்கி
அன்புடனே ஜானகியின் அடிபணிந்தார்

583 பணிந்திட்டஅநுமானை ஜானகி பார்த்து
பாவிராவணனுனக்குப் பலரூபமோ

584 வகைவகையாய் ரூபங்கொண்டு வந்ததட்டுறாய்
(உன்) வஞ்சனை எல்லாமறிவேன் போபோவென்றாள்

585 சீதையரைப்பார்த்தநுமார் சிந்தையேனம்மா
ஸ்ரீராமர் தூதன்நான் சந்தேகம்வேண்டாம்

586 அடையாள மோதிரத்தைக் கையிற்கொடுத்து
அன்புடைய அநுமாரும் அடிபணிந்தார்

587 ஆழிதன்னைக் கண்டவுடன் ஜானகிதேவி
ஆனந்தஸாகரந் தன்னிலமிழ்ந்தாள்

588 விரலின்மேலேவைத்துச் சிந்தைமகிழ்ந்து
திருமார்பிலாழிதன்னைச் சேர்த்துமணைத்தாள்

589 வாரும்பிள்ளாய் அநுமாரே மங்களவாழ்வே
(என்) மன்னவரும் இளையோருஞ் சுகமோவென்றாள்

590 ஸ்ரீராமரின் தூதுவனாய் வந்தஉமக்கு
செய்யும்பிரியம்உபகாரம் ஒன்றையுங்காணேன்

591 அப்படியேநானுமொன்றும் அறியேனம்மாஉங்கள்
அபயஸ்தம் வேணுமென்று வணங்கிநின்றார்

592 மாருதிவணங்கிநிற்க ஜானகியம்மன்
வாழ்த்திநின்றாள் சிரஞ்சீவி யாயிருமென்று.

---

## ஹநுமார் அசோகவனமழித்தல்.

1 - வது மெட்டுப்போல்.

593 சூடாமணிகொடுத்து சீதையரும் மனந்தேறி
ஸ்ரீராமர் தன்வரவைப் பார்த்துமிருந்தாள்

594 அடையாளம் வாங்கியந்த அனுமாரும் ஆலோசித்து
அசோகவனமழிக்க அங்கே குதித்தார்

595 கபடமாய்க்கொண்டுவந்த கள்வனைக் காண்போமென்று
கருதியே சோலைதன்னை அழிக்கலுற்றார்

596 ஜானகியருகிருக்கும் தங்கவிருக்ஷங்களொழிய
சகலசெடிமரமும் முறிக்கலுற்றார்

597 அசோகவன மழிய ராக்ஷதர்கள் கண்டவுடன்
அலறியேதசமுக னண்டையிற்சொன்னாள்

598 (அய்யா) வானரமொன்றுவந்து மைதலியைக்கண்டுபேசி
வனங்கள் செடிமரங்கள் எல்லாம் அழித்து

599 இல்லாத உதாசீனங்கள் எங்களையுஞ் சொல்லிவைது
எங்கேயாகிலுஞ் சொல்லென்று ஓட்டியேவிட்டான்

600 ராக்ஷதர்கள் சொல்லலுமே ராவணன் மனம்புழுங்கி
ரோஷத்துடன் சேனைகளை அனுப்புமென்றான்.

---

2 - வது மெட்டுப்போல்.

601 வந்தவந்தசேனையெல்லாம் மாருதியப்போ
மடியவே தானடித்தார் மரத்தினாலே

602 எதிர்த்துவந்தசேனைகள் எல்லாமடிய
மதத்துடன் விநோதமாய் மகிழ்ந்திருந்தார்

603 சதுர்முகனஸ்திரத்தால் (இந்திர)சித்தனுங்கட்ட (அப்போ)
சத்தியத்தில் கட்டுப்பட்டார் சர்க்குணமூர்த்தி

604 ஜயத்துடன் ஹநுமாரைக் கட்டியிழுத்து
தசமுகனண்டையிலே கொண்டுபோய்விட்டான்

605 அரக்கனும் ஸிம்மாஸனந் தன்னிலிருக்க
அநுமான் நாம்கீழிருக்க லாகாதென்று

606 வளைத்துவாலைச்சுருட்டி ஆஸனமாக
வாளரக்கனுக்குமேலே வளர்ந்துநின்றார்

607 உன்மத்தன் போலேயிருக்க ராவணன்கண்டு
உதடுகள் துடிக்கவே கண்கள் சிவக்க

608 அந்தப்புரத்தினிலே நீ எப்படிவந்தாய்
ஆரடாநீ சொல்லாயென்று ராவணன்கேட்டான்

609 ஆரென்று கேட்டாய்என்னை அரக்காநீயும்
(நீ) அமைதியுடனே கேட்டால் அறியச்சொல்வேன்

610 அபிராமர் நாயகியைத் திருடிவந்த (உந்தன்)
அசோகவனமழிக்க உன்னுயிரொழிக்க

611 (உன்) தசமண்டையுந் துணிக்கச் சரந்தொடுக்கும்
ஸ்ரீராமர் தூதன்நான் தெரிந்துகொள்ளடா

612 அபிராமர் தூதன் என்னை அறிந்துகொள்ளடா
(என்று) ஹநுமாருஞ் சொல்லவுமே அரக்கன்பொங்கி
613 அண்டையிலேயிருக்கும் தூதாளைப்பார்த்து
ஆயுதத்தினுலிவனை வெட்டுங்களென்றான்
614 கொல்லவே ஆகாதென்று விபீஷணரும்
கொஞ்சமாய் ஆக்கினை செய்யலாமென்றார்
615 குரங்குதன் வாலிலே துணியைச்சுற்றி
கொளுத்துங்கள் கூத்தாடும் பார்க்கலாமென்றார்
616 பட்டணத்திலுண்டான பட்டாடைகளும்
பலவிதஉருமாலை பட்டுச்சேலையும்
617 இருந்ததெல்லாம் வாரிவந்து வாலிலேசுற்றி
இழுத்துக்கொண்டு போங்களென்று கொளுத்திவிட்டாள்
618 ஹநுமாரும் அநுகூலமாகவே எண்ணி
ஆகாசம் எழும்பிவாலைச் சுழட்டிவிட்டார்
619 சுழட்டவே லங்கைஎங்குஞ் சூழ்ந்துகொண்டு
சுடர்விட்டு நின்றெரிந்து தூள்பறந்தது
620 தென்னிலங்கை தன்னைச்சுட்டிக் கொட்டைபரத்தி
திரும்பவுஞ் சீதையுட அருகில்வந்தார்
621 சீதையம்மன் சூடாமணி இரத்தினங்கொடுத்து
ஸ்ரீராமர் அருகிலேபோய் வாருமென்று
622 ஆசீர்வாதங்கள் பண்ணி ஜானகிதேவி
அன்புடன் அநுமாரை அனுப்பிவைத்தாள்
623 ஸாகரந்தாண்டியே மாருதியப்போவந்து
ஜாம்பவந்தர் முதலான பேர்களுடனே
624 மைதலியைக்கண்டுவந்த சந்தோஷத்தாலே
மதுவனந்தானழிந்து விடாய்கள் தணிந்து
625 காகுஸ்த ராமருட சந்நிதிவந்து
கண்டேன் சீதையை என்று அடிபணிந்தார்
626 கலியாணராமர் மெத்த மனமகிழ்ந்து
கனபிரியத் தோடவரைக் கையாலணைத்து
627 என்னை நினைத்தாளோ ஜானகியாளும்
எந்தவிதமிருக்கிறாள் உரையுமென்றார்

628 (அந்த) ராவணனடுமை ராக்ஷசிகள் நடுவில்
(வேடர்) வலையிலகப்பட்ட மான் போலிருக்காள்

629 மாதம் ஒன்றுபார்ப்பேன் அவர் வாராமற்போனால்
மாய்த்துக்கொள்வேன் சீவனை நான் சத்தியமென்றாள்

630 ஹநுமானுரைத்திட ஸ்ரீராமருங்கேட்டு
ஆனந்தத்துடன் ஒரு உத்தரம்சொல்வர்

631 தீராதமனக்கவலை தீர்த்தஉமக்கு
(நான்) செய்யும்பிரியம் உபகாரமொன்றுங் காணேனே

632 நானுமக்கு ஒன்றுமே செய்யவறியேனெங்கள்
நால்வருடன் ஐந்தாம்பேரா யிருமென்றார்

633 ஹநுமாருஞ்சூடாமணி தன்னைக்கொடுக்க
ஸ்ரீராமர்கண்டுமெத்த ஆனந்தங்கொண்டார்

634 எழுபது வெள்ளஞ்சேனை வானராளுடன்
இசைந்து வழிநடத்து மஹேந்திரஞ்சென்றார்

சுந்தரகாண்டம் முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம்.

### ஸ்ரீராமர் சேதுவில் அணைகட்டுதல்.

2-வது மெட்டுப்போல்.

635 சூரஹநுமாரும் சுக்ரீவரும்
துரிதமாய் இலங்கைக்கு போகத்துரையாய்

636 வாயுகுமாரரும் முன்னேநடக்க
வானர சேனைகளும் பின்னே நடக்க

637 அங்கதராஜனும்முன்னே நடக்க
ஸ்ரீராம லக்ஷமணரும்பின்னே நடக்க

638 சமுத்திரராஜனும் வரவேஎண்ணி
தருப்பையின் மேற் பள்ளிகொண்டார் தாசரதியும்

639 ஆலசியமாயிருக்கும் அம்புதியின்மேல்
ஸ்ரீராமர் கண்டுமெப்போ அதிககோபமாய்

640 லக்ஷ்மணா பாராயிந்த ஸாகரந்தன்னை
நேமத்துடனே யழைத்தும் லக்ஷியமில்லை

641 தனுஸுடன் பாணந்தன்னைக் கொண்டுவா தம்பி
இந்தஸாகர ராஜனுட தாமஸமென்ன
642 ஓங்காரத்துடனேயவர் ஒரு பாணத்தால்
உண்டான ஜலங்களெல்லாம் உறிஞ்சவடித்தார்
643 அம்புதி மிகநடுங்கி அவர் பாணத்தால்
அபிராம ரண்டையிலே வந்துபணிந்தார்
644 ஆழியிலிருக்கும் பொல்லாமச்சங்களுட
அருஞ்சண்டை தீர்க்கப்போனேன் பிழைபொறுமென்றார்
645 நளன்தொட்டால் மலைகளும் மிதக்கும்ராமா
நானும் முதுகுதரேன் அணையுங்கட்ட
646 அப்படியேராகவரும் ஆக்ஞைசெய்ய
ஹநுமாரும் வானர சேனைகளுமாய்
647 கொடுமுடிகள் பர்வதங்கள் பாறைகளெல்லாம்
கொண்டுகொடுக்க நளன் அணையடைக்க

## ராவணன் மந்திராலோசனை.

648 ஸ்ரீராமர் சேனையுடன் சுவேலமலைமேல்
நளனாலே வீடமைத்து ராமரிருந்தார்
549 அபிராமர் சேனையுடன் வந்திருக்கவே
அரக்கனுங்கேட்டுமதை ஆலோசித்தான்
650 ஆஸ்தான மண்டபத்தில் ராவணனப்போ
அமைச்சர் சபையோருடன் கொலுவமர்ந்தான்
651 பக்திபெரிதானதம்பி விபீஷணரப்போ
பத்துத்தலை ராவணனைப்பார்த் தேதுசொல்வர்
652 அண்ணாகேளும் ரகுபதியும் அணையடைத்து
அரைக்ஷணமே வந்துவிட்டார் சுவேலமலைமேல்
653 ஜானகியைக் கொண்டுவிட்டு சக்கியமாய்போனால்
ஸ்ரீராமர் தயவால் லங்கை சித்திக்குமென்றார்
654 அப்படி விபீஷணரும் சொன்னவுடனே
அரக்கனிராவணனும் சீறியேசொல்வன்
655 ஏழைமனதுதம்பி உன்மனதிப்போ
எலியைக் கண்டுபூனை ஏங்கிநிற்குமோ

656 நரமனுஷர் ராக்ஷதர்குப் பக்ஷணமாச்சே
ராமனைவணங்கும் புத்தி நன்ருகச்சொன்னுய்

657 நன்ருயிருக்குமென்று ராவணனைப்போ
நாலாறுமுகத்தையும் ஆட்டிச்சிரித்தான்

658 பரியாஸம் பண்ணவுமே விபீஷணரும்
பத்துமுகந்தன்னையும் பார்த்தேதுசொல்வர்

659 ராமனை நரனென்றும் நாம் ராக்ஷதாளென்றும்
ராமநாயகி ஜனகன்பெண்ணை நற்சிறையென்றும்

660 தசமுகம் உண்டென்றும் தீரன்நானென்றும்
சிவனுட கைலாஸத்தை எடுத்தோமென்றும்

661 ஈடில்லாத லங்கையுண்டு பாக்கியம்உண்டு
ஏழுமதில் உண்டென்று எண்ணவும்வேண்டாம்

662 சத்துச்சித்தானந்தமே ஸ்ரீராமமூர்த்தியும்
(பஞ்ச) சக்தியுமே வந்துதித்தாள் ஜானகியாக

663 அமரரைக் காக்கவந்த ஆதிமூர்த்தியை
அளவிடமுடியாது அவர்மகிமையை

664 (சுவாமி) விஷ்ணுவே வந்துதித்தார் சப்தாவதாரம்
சரணமடைதல் நல்ல சாயுச்சியமுண்டு

665 திரும்ப எனக்குப்புத்தி சொல்லாதேயென்று
திரஸ்காரம் பண்ணியந்த ராவணன்சொல்வன்

666 பரப்பிரும்ம மூர்த்தியிந்த ராமனுமானுல்
பஞ்சசக்திஸ்வரூபமே ஜானகியானுல்

667 பரவஸ்து பக்திபண்ண வேண்டாமென்தம்பி
படைபண்ணிச் செத்தேனுல் பதம்பெறலாம்

668 அப்படியே தசமுகன் சொன்னவுடனே
அன்புடைய விபீஷணர் என்னென்றுசொல்வர்

669 ஒருவானரம்முன்வந்து சீதையைக்கண்டு
இரகசியமாகப்பேசி வனம் அழித்து

670 உன்னெதிராய் வந்திருந்து உத்தாரம்பேசி
(நீ) வாலில்இட்ட தீயினுலே லங்கையைச்சுட்டு

671 தென்னிலங்கை சுட்டுவிட்டு ஜயத்துடன் போன
சேதியொன்றுந் தெரியல்லையோ அண்ணுவுனக்கு

672 அதினாலுந் தோன்றவில்லையே அண்ணா உனக்கு
(உன்)ஆகாதபுத்திதன்னை விட்டுவிட்டிப்போ

673 அபிராமன் நாயகியைக் கொண்டுபோய்விட்டால்
அழியாமல் இருக்கலாம் இலங்கைமலைமேல்

674 இப்படி விபீஷணனும் சொன்னவுடனே
இராவணனுங் கோபங்கொண்டு காலதோஷத்தால்

675 நம்முடைய மனம்போல கேளாதவுன்னை
ராஜ்ஜியப்பிரஷ்டனாகத் தள்ளிப்போடுவேன்

676 நரமனுஷன் ராமனையும் உன்னையுமாக
(அரை) நாழிகையில் கொன்று கெதியடையவைப்பேன்

---

### விபீஷணர் ஸ்ரீராமரைச்சரண் அடைதல்.

677 அதட்டி இராவணனும் சொல்லவேகேட்டு
அன்புடைய விபீஷணர் என்னென்றுசொல்வர்

678 தாருமாருஞ்சொல்லும் உந்தனோடேயிருந்து
சுவாமிக்குச் சத்துருவாய் ஆகவுமாட்டேன்

679 ஏற்றமுள்ள ராமர்அணை யிட்டவிடத்தே
என்னிச்சைப்படிக்குப் போறேன்என்றே எழுந்தார்

680 ஆதரவான மந்திரி நான்குபேருடன்
ஆகாசவழியாய் ராமனருகிற்சென்றார்

681 அபிராமா ரகுநாதா சரணமய்யா
விபூஷணன்என்று சொல்வார் பேருமெனக்கு

682 சரணஞ்சரணமென்று செல்லவேகேட்டு
தாசரதி தன்சேனையை கையாலமர்த்தி

683 ஸ்ரீராமா சரணமென்ற பேர்களை நானும்(அவாள்)
சிந்தையின் பயங்களெல்லாம் தெளியவைப்பேன்

684 பயமொழித்து பக்தர்களை காத்தாலொழிய
படைபண்ணி ஜெயிக்கநம்மால் ஆகாதுதம்பி

---

### ஸ்ரீராமர் விபீஷணருக்கு அபயமும் அரசும் கொடுத்தல்.

685 அப்படியே ஸ்ரீராமர் சொன்னவுடனே
அன்புடைய சுக்ரீவன் ஏதென்று சொல்வன்

686 சூது பண்ணும் ராக்ஷதானை நம்பவேண்டாம்
(என்று) சொல்லி வணங்கி நின்றார் சுக்ரீவரும்
687 சுக்கிரீவர் சொன்னவுடன் ஹனுமாருங்கேட்டு
உத்தம விபீஷணரை உகந்துசொன்னார்
688 ஹனுமாரும் சுக்கிரீவரும் சொன்னவுடனே
அபிராமர் கேட்டுமதை அமைதியுடனே
689 ராக்ஷத ராவணனே என்னிடம்வந்து
ராமா சரணமென்றால் நானேயழைப்பேன்
690 ஜானகியை விட்டாலும் விட்டுவிடுவேன்
சரணமென்ற பேரைவிடச் சம்மதமாகேன்
691 அன்புடனே ராமர்சொல்லி அழைத்தவுடனே
அண்டையில் விபீஷணரும் அடிபணிந்தார்
692 பக்ஷமுடன் ராகவரும் எடுத்தணைத்து
பட்டாபிஷேகஞ்செய்தார் லங்காபுரியை
693 ஆதரவாய் மத்திரிமார் தங்களுடனே
அன்புடன் விபீஷணரும் (ராமர்) அருகிருந்தார்
694 சுற்றிமதிலமைத்த லங்கைமலைமேல்
ஜயகோஷத்தோடிருந்தாள் ராமசேனையும்.

---

## ராவணன் சுகசாரணரை அனுப்புதல்.

695 அபிராமர் சேனையுடன் வரவைகேட்டு
அனுப்பினானே சுகசாரணர்தனை
696 தாசரதி சேனையின் பலங்கள் தன்னையும்
ஸாகரத்தில் அணையிட்ட சேதிகளையும்
697 அபிராமலக்ஷ்மணன் ஆண்மைகளையும்
அங்கதசுக்ரீவனுட சேனபலமும்
698 ஸ்ரீராமருட பலங்களைத் தெரிந்துகொண்டு
சீக்கிரமாய் இங்கேவந்து சேருங்களென்றான்
699 வானரான் தன்னைப்போல வேஷந்தரித்து
வந்திருந்தார் ஸ்ரீராமர் படைநடுவிலே
700 சுகசாரணன் இரண்டுபேரும் வந்தலைவதை
சுக்கிரீவருடனே சொன்னார் விபீஷணரும்

701 வானரசேனையவாளை வளைந்துகொண்டு
வானரம்போலேவந்த ராக்ஷதாள்தன்னை
702 காலினாலும் கையினாலும் கல்லுக்களாலும்
பல்லினாலேயுங்கடித்து இம்சைபண்ணினாள்
703 ராகவா சரணமென்று முறையிடவே
ராமருங்கிருபையுடனே அழையுமென்றார்
704 இருவரையும்பிடித்து சுக்கிரீவரப்போ
ரகுபதியண்டையிலே கொணர்ந்துவிட்டார்
705 வாரும்பிள்ளாய் சுகசாரணா இங்கே
வந்தகாரியந்தன்னை சொல்லுங்களென்றார்
706 ராவணன் அனுப்பிவைக்க நாங்களும்வந்தோம்
ராமருடசேனாபலம் அறிந்துமேகொள்ள
707 சாரணர்சொல்லலுமே ராமருங்கேட்டு
வீரமுடன் சேதிகளுஞ் சொல்லியேவிட்டார்
708 சூரஹநுமாருடன் சுக்ரீவரும்
அதிசூர வாலிபுத்திரன் அங்கதனுடன்
709 விச்வகர்மாபுத்திரன் நளனுடனே
முக்கியமான மந்திரியும் ஜாம்பவானுடன்
710 உன்தம்பி விபீஷணரும் தாசரதியாம்
என்தம்பி அதிசூரன் இலக்ஷ்மணனுடன்
711 வந்திருக்கேன் சேனையுடன் (என்ற) சேதியைச்சொல்லும்
மைதலியைக் கொண்டுவந்து விடவேசொல்லும்
712 ஸாகரத்தில் அணையிட்ட சேதியைச்சொல்லும்
ஜானகியைக் கொண்டுமிங்கே வரவேசொல்லும்
713 மைதலியைக் கொண்டுமிங்கே வாராதேபோனால்
வஞ்சகனை யுத்தம்பண்ண வரவேசொல்லும்
714 அந்தவார்த்தை கேட்டவுடன் சுகசாரணாள்
அந்தக்ஷணம் ஓடிவந்தாள் ராவணனிடம்
715 இங்கிதமறிந்துவர அனுப்பிவைத்தீரே
இராமருட தயையினாலே தப்பியேவந்தோம்
716 வாய்திறக்கமுடியவில்லை அங்கேபோய்நின்றோம்
வானரான் கூடியேவந்து வளைந்துகொண்டார்

717 வானராள் எல்லவருமாய் வளைந்துகொண்டு (எங்கள்)
மாமிசத்தை கைக்குக்கொஞ்சம் பிச்சமேபோட்டாள்

---

**சாரணன் ராவணனுக்கு ஸ்ரீராமர் முதலோரைக்காட்டல்.**

818 உப்பரிகை மேலேறி ராவணனுடன்
உச்சிதமாம் ராமர்சேதி சாரணன் சொல்வான்

719 கோடிசூர்யகாந்திபோலே வில்லுங்கையுமாய்
அதிகோபத்துடன் வீற்றிருக்கும ராமரைப்பாரும்

720 சுற்றிநிறைந்திருக்கும் வானராளுடன்
சூரனுனலக்ஷ்மணன் வீரத்தைப்பாரும்

721 ஜானகியைக் கொண்டுவிட்டு சக்கியமாய்ப்போனுல்
(ராமர்) தயவாலே லங்கையில் தரிக்கலாமென்றூர்

722 சுகசாரணர்கள் இதைச்சொன்னவுடனே
சீறியந்த ராவணனும் என்னென்றுசொல்வன்

723 கையினுலாகாத இந்த ரகுராமனை
கைகையும் பரதனுமாய்த்துறத்திவிட்டாள்

724 (அவன்) பாரியைப் பிடுங்கிக்கொண்டு விட்டுவிட்டேன்நான்
பராக்கிரமங்களென்ன (உண்டு) இந்தராமனுக்கிப்போ

725 போரும்போரும் நீங்கள் சொன்ன புத்திஎனக்கு
என்போகம்புஜித்தெனக்கு துரோகம்நினைத்தீர்

726 சத்துருவின் பக்ஷமாகப் பேசியேநீங்கள்
ஜானகியை விட்டுவிட யுத்தியுரைத்தீர்

727 என்சரீரத்தை விட்டாலும் விட்டுவிடுவென்
ஜானகியாள் தன்னைவிடச் சம்மதமாகேன்

728 பதினுயிரஞ்சேனையுடன் சேனுதிபதிகளுமாய்
படைக்குப்புறப்படவே ஆக்கினை செய்தான்.

---

**சுக்ரீவன் தசக்ரீவன் முடிபறித்தல்.**

729 ஆக்கினை செய்துமிருக்க ராவணனிங்கே
ஆலவிருக்ஷமேறி யங்கே வானராள் பார்த்தார்

730 ஏழுகட்டரண்மனையும் உப்பரிகையும்
ஏழுயோசனை இலங்கை விஸ்தாரங்களும்

731 வைரத்தினலிழைத்த புஷ்பரதமும்
மாணிக்கத் தாலிழைத்த மண்டபங்களும்

732 அரக்கன் மார்பில் விளங்கும் பதக்கங்களும்
அடுக்கடுக்காய் காதிலுள்ள குண்டலங்களும்

733 தோளில்விளங்கும் தய்யகத்தி ஈட்டியும்
சுடரொளி போல்விளங்கும் கிரீடங்கள் பத்தும்

734 கையிரு பதில்விளங்கும் கனகவளையும்
கழுத்துமுத்துமாலைகளும் கண்டஸரமும்

735 சொர்னத்தினலிழைத்த சிம்மாஸனத்தில்
தசமுகன் விளங்குவதை வானராள் கண்டார்

736 ஆங்காரத்துடனே பார்த்துசுக்ரீவனும்
ஆகாசம் கிளம்பியரக்கன் சிரத்திற்குதித்தான்

737 பயமச்சமன்றியிலே சுக்ரீவனந்த
பத்துத்தலையானுடனே யுத்தமும்பண்ணி

738 கைகளாலும் கால்களாலும் பல்லுக்களாலும்
கடித்துப்பத்துக் கிரீடங்களைப் பிடுங்கிக்கொண்டு

739 அப்படியே சுக்ரீவன் உயரக்கிளம்பி
(அபி) ராமரிடம் கிரீடங்களை வைத்துப் பணிந்தான்

740 ஸ்ரீராமரும் சேனைகளும் சுக்ரீவரைக்கண்டு
சூரனென்று கொண்டாடிப்புகழ்ந்துமேகொண்டார்

741 ஸ்ரீராமர் சேனையுடைய கோஷமுங்கேட்டு
கிரீடங்கள் பத்துமிழந்து கிலேசமுங்கொண்டு

742 ராமர் வில்லுடனேநிற்கும் தீரமுங்கண்டு
நடுங்கிப்போய் ராவணனும் கீழிறங்கினன்

743 நாலுகோடி சேனையுடன் சேனபதிகளை
நாலுகோட்டை வாசலுக்கும் காவலமைத்தான்

---

## இராவணன் மாய்கையினலாகிய ஸ்ரீராமர் சிரத்தைச் சீதையிடம் காட்டுதல்.

744 மாய்கையினல்சிரமொன்று உண்டாக்கியே
மன்னரகுராமருட மதிமுகம்போலே

745 அழுலைந்தத்தண்டந் தன்னைக்கொண்டுராவணன்
அசோகவனத்தில் வந்தான் சீதையருகில்

746 (உன்)பர்த்தாவின் சிரஸைநானும்கண்டித்தேபோட்டேன்
பரகெதியடையவேநான் பண்ணியே விட்டேன்

747 நேற்றைய ராத்திரிராமன் நித்திரைசெய்ய
உன்நாதனுடசிரஸை நான்வெட்டியேபோட்டேன்

748 ராமர் தலையைநானும் வெட்டியவுடன்
நாலுதிக்கும் வானரங்கள் ஓடியேபோச்சு

749 அநுமானும் சுக்ரீவனும் லெக்ஷ்மணனும்
அங்கதனும் ஜாம்பவானும் ஓடியேபோனுர்

750 அதிரூபமாயிருக்கும் சிரஸைப்பாராய்
அடையாளமான கணையாழியும் பாராய்

751 மாம்ஸரத்தம் பெருகும் கிலேசத்தைப்பாராய்
வந்துகெதியடைந்த (இந்த) ரூபத்தைப்பாராய்

752 ஸ்ரீராமரை இனிநீயுங் காணப்போருயோ
சேர்ந்துவிடும் எந்தனுடன் ஸிம்மாஸனத்தில்

753 அந்தவார்த்தை கேட்டமந்த ஜானகிதேவி
அபிராமர் முகம்பார்த்து அதிசோகமாய்

754 அதிபாவி ராவணனும் வெட்டியெறிய
அற்றுதோகாலம் உமக்கு கெதியடைய

755 கௌஸலையும் தசரதரும் சோகத்துடனே
காட்டுக்கனுப்பினுர்கள் விசனத்துடனே

756 கௌசலை கேட்டாலிந்தக் கொடுமைதன்னை
கன்றிழந்த பசுவைப்போல் கதறுவாரே

757 அப்படியே நானுமிந்த இலங்கைதன்னிலே
அதிபாவி ராவணன்முன் சீவன்விடுவேன்

758 ஸ்ரீராமர் தன்னுடைய சோகத்தினுலே (தன்)
சீவனை விடவேயந்தச் சீதைதுணிந்தாள்

759 அபிராமர் தன்னுடைய சோகத்தினுலேதன்
ஆவியை விடவேயெந்தத் தேவிநினைத்தாள்

760 அந்தவேளை தன்னிலொரு ராக்ஷசன்வந்து
அபிராமர் சேனையுடன் (வந்து) வளைந்தாரென்ருன்

761 இராமரும் இலங்கை வந்தா ரென்றவுடனே
இராவணனுங் கேட்டுமதைக் கண்கள்சிவக்க

762 அசோகவனத்தைவிட்டு ராவணனப்போ
ஆலோசனை பண்ணவந்தான் மந்திரிமாருடன்

763 ராவணன் போனபின்பு ஸ்ரீராமர் சிரஸும்
மாய்கையினால் ஆகாசத்தில் மறைந்ததப்போ

764 மறைந்தவுடனேயந்தத் திரிசடையும் வந்து
மாதா சீதாதேவியர்க்குத் தேறுதல் சொன்னாள்

765 வானரங்கள் தங்களுட கோஷமுங்கேளாய்
வந்துவிட்டார் லங்கையினில் அபிராமரும்

766 தசமுகனைச் சிந்துசிந்தாய்சிதற அடிப்பர்
ராக்ஷத சேனைகளை மடியஅடிப்பர்

767 இலங்காநகர் விபீஷணர் ஆளவேபோரார்
இரகுநாதர் உம்மைவந்து கூட்டியேபோவர்

768 எங்கள் இடையூருகளை நீக்கவேபோரார்
எனக்கிச்சையான வரங்களை தந்துமே போவீர்

769 (அந்த) மங்களவார்த்தை கேட்டு மைதலியாளும்
ஆனந்த ஸாகரந் தன்னி லமிழ்ந்தாள்

770 ஆராதவிசனம் நீக்கி அகமகிழ்ந்து அந்த
அபிராமர் நாயகியும் சிந்தைகுளிர்ந்தாள்

---

## இராம இராவண முதல்நாள் யுத்தம்.

1 - வது மெட்டு.

771 ஸ்ரீராமருஞ் சேனையுடன் சுவேலமலையைவிட்டு
சேனையுடன் கோட்டைதன்னை வளைந்துகொண்டு

772 அபிராமர் சேனைவந்து ஆரவாரிக்க
அரக்கனுந்தன்சேனையை யனுப்பிவைத்தான்

773 பாலாவுடன்கத்திசூலம் பட்டாக்கத்தி வெட்டரிவாள்
பலவித ஆயுதங்கள் கையினிற் கொண்டு

774 அபிராமர் சேனைமேலே ஆயுதங்களால் அரக்கர்
அம்புவருஷங்களால் வருஷித்தார்கள்

775 வானரவீரர்களும் மலையும் மரமுங்கொண்டு
மாய்த்திட்டார் ராக்ஷதசேனையை எல்லாம்

776 இருவர்சேனையும்மாண்டு ரத்தவெள்ளமாய்ப்பெருக
பருந்தும்கழுகும்அங்கே வட்டமிடவே

777 இப்படியே ராக்ஷதரும் வானரசேனைகளும்
இரணகளத்தில் மாண்டுவிழ ராமருங்கண்டு

778 அநுமார் தோளின்மேலேறி அபிராமரும்வந்தெதிர்க்க
அரக்கனும் தேரிலேறி எதிரேவந்தான்

779 மலையின் சிகரம்போல பத்துமுடிகளுடன்
மரங்கள் செடிகள் போலே இருபதுகையும்

780 மிருகசாதி பக்ஷிகள்போல் கண்கள் இருபதுடனே
மேகசஞ்சாரம்போல் பாசிப் பல்வரிசையும்

781 நடக்கும் பருவதம்போல ராமர் எதிரேவந்து
ராவணனும்நின்று அட்டகாஸம் பண்ணினான்

782 ஏகவஸ்துவாய் நிறைந்த ராகவருடனே கூடி
ராவணனும் பாணம்விட்டு யுத்தம்பண்ணினான்

783 ஸ்ரீராமரும் எதிர்த்து பாணங்கள் அநேகம்போட்டு
சிலநேரம் இரண்டுபேரும் போராடினார்கள்

784 அரக்கனுடையதேரும் பத்துக்கையின் வில்லும் அம்பும்
அழித்தார் இராவணனும் மூர்ச்சையடைந்தான்

785 தெளிந்து இராவணனும் சுவாமிஎதிர் நின்றவுடன்
ஸ்ரீராமர் பார்த்துச் சிலசேதியுஞ் சொல்வர்

786 ஜானகியைவிட்டுஎன்னைச்சரணமடைந்தாயானால்
சாகாமல் இருக்கலாம்இலங்கைமலைமேல்

787 சென்றுஉன் அரண்மனையில் ஆலோசனைபண்ணிப்பின்னை
சேஷமுள்ள சேனையுடன் திரும்புவாய் என்றார்

788 பரியாஸம் பண்ணராமர் தசமுகனும் அப்பொழுது
பத்துத்தலையுங்குனிந்து அரண்மனைவந்தான்

789 வேதவதியின் சாபந்தான் பலித்ததோவென்பான்
விஷ்ணுவே இராமனாக வந்தாரோவென்பான்

790 நளகூபர் சாபங்கள் தான் பலித்ததோ வென்பான்
(ஸ்ரீமந்) நாரணரே படைபண்ண வந்தாரோ வென்பான்

791 ஊர்வசியின் சாபங்கள்தான் பலித்ததோ வென்பான்
உண்டான சாபமெல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்ததோவென்பான்

792 சீதை கண்டு நகைக்கவே ஸ்ரீராமர் கையினாலே
தெய்வமே அபஜயமும் பண்ணினாய் என்பான்

## கும்பகர்ணன் வதை.

2 வது மெட்டு.

793 தசமுகன் பாட்டனுடன் சொல்லியழுவே
ஜானகியைவிட நல்ல சமயமீ தென்றான்

794 பாட்டனும் மதியுரைக்கப்பாவி மகோதானப்போ
படைபண்ணும்தம்பி கும்பகர்ணனென்றான்

795 மாடுகள் ஆடுகளையும் கும்பகர்ணன் மேலேவிரட்டி
பேரிகை டமாரவாத்தியம் தம்பட்டங்கொட்டி

796 சப்தங்களைக் கேட்டவுடன் கும்பகர்ணனும்
சடுதியாய்க்கண்விழித்து எழுந்திருந்தான்

797 ஆயிரஞ் சகடத்துள்ள அன்னம்புசித்து
ஆயிரஞ் சாடியிலுள்ள கள்ளுங்குடித்தான்

798 அண்ணுவே நீரெழுப்பிய காரியமென்ன
யார்கையினால் அபஜயமடைந் தீரென்றான்

799 சீதையை எடுத்துவந்தேன் தெரியாதோதம்பி
ஸ்ரீராமர்கையால் அபஜயம் வந்ததுஎன்றான்

800 அந்தவார்த்தை கேட்டவுடன் கும்பகர்ணனும்
(அதி பாரமுள்ள சூலாயுதம் தன்னை எடுத்தான்

801 அதிகாயன் மகாகாயன் கூடவரவேயப்போ
(அபி) ராமருடன் யுத்தம்பண்ண வந்தே எதிர்த்தான்

802 சூஸ்திரம்போல் பூதவுருவரவே கண்டு (ராமர்)
சூதோ விபீஷணுஎன்ன சொல்லுவீரென்றார்

803 சூஸ்திரமுமல்லவிது பதுமையுமல்ல
சூரர்க்குள் சூரனிவன் கும்பகர்ணனே

804 வானரசேனைகளெல்லாம் வந்துமெதிர்க்க
வாரிவாரி விழுங்கினான் கும்பகர்ணனும்

805 சூரசூராமருட சேனைகளெல்லாம் அரக்கன்
செவியாலும் மூக்கினாலும் வெளியேவந்தாள்

806 அபிராமர் கண்டுமதை அதிசயமாய்
அம்புவில்லுந்தானெடுத்து யுத்தமுஞ்செய்தார்

807 கனத்த சண்டைகள்செய்து கும்பகர்ணனும்
கைகாலுந்தறிபட்டுக் களத்தில் விழுந்தான்.

## இந்திரசித்து வதை.

808 நிகும்பலை யாகம் பண்ண இந்திரசித்தனும்
அபிராமரண்டையில் விபீஷணர் சொன்னார்

809 நிகும்பலை யாகமிப்போ நிறைவேறித்தானால்
அபிராமா உம்மகாரியம் அபஜயமென்றார்

810 தாசரதி கேட்டவுடன் தம்பிலக்ஷ்மணனை
சகலவானராளுடன் அனுப்பிவைத்தார்

811 நிகும்பலையைக் கெடுத்து வாருங்களென்ன
ஆகாசவழியாய் அம்புமழைபொழிந்தான்

812 அந்தக்ஷணம் நிகும்பலை அழிந்தவுடனே
இந்திரசித்தன் கோபத்துடன் எழுந்துவந்தான்

813 எதிர்த்திட்ட இந்திரசித்தன் எதிரில்சென்று
ஏற்றமான இளையோரும் யுத்தமுஞ்செய்தார்

814 பிரபலமாய் யுத்தஞ்செய்து இந்திரசித்தனும்
பிர்மாஸ்திரந்தன்னை விட்டான் லக்ஷ்மணர்மேல்

815 ஹநுமாரும் சஞ்சீவிமலை கொண்டுவரவே
அபிராமர் மகிழ இளையோருமெழுந்தார்

816 எதிர்த்துப்படைகொடுக்க இருவருமாய்
இழுத்தொரு பாணம்விட்டார் இளையவரும்

817 அந்தக்ஷணம்இந்திரசித்தன் முடிநிலத்தில்விழ
அதுகேட்ட ராவணனும் மனங்கொதித்து.

## மூலபலச் சண்டை.

818 மூலபலச்சேனைகளைச் சேர்த்தனுப்பவே
மோகனக் கணைதொடுத்தார் ராமருமப்போ

819 பார்த்தவிடமெல்லாம் ராமமூர்த்திரூபமாய்
பலராமராக நின்றார் படை நடுவினில்

820 அங்கும்ராமன் இங்கும்ராமன் என்றடிக்கவே
தங்களுக்குள் அடிப்பட்டு நற்கதியடைந்தாள்.

## இராமபாணத்தால் இராவணன் இறந்தது.

821 மூலபலப்படைகளும் தானொழியவே
மூர்க்கனிராவணனும் எதிர்த்து வந்தான்

822 அரக்கனும்வந்து அட்டஹாசம் பண்ணவே
அப்ராமர் கண்டுமத்தை அதிவேகமாய்

823 எதிர்க்கவே இராவணனும் இரதத்திலேறி
இந்திரன் தேரின் மேலே ஏறியோராமர்

824 ஆதித்தன் போலவிருக்கும் அபிராமரொளியும்
அம்புஜ பாதங்களும் யானைநடையும்

825 காதளவுங் கண்மலரும் கனிவாய்முறுவலும்
காகுஸ்தரும் வில்லெடுத்தார் காலபாணம்போல்

826 தலை பத்தையும் அறுக்கத்தலைதுளிர்க்க
சதகோடித் தலைகளாய் தரையிலுருள

827 அரக்கன் தொடுத்ததொரு பாணமுமப்போ
அபிராமர் நெற்றியினிற் பட்டுவிழவே

828 ஸ்ரீராமர் பாணம்பட்டுத் தேரும்முறிய
தசமுகன் தேரைவிட்டுக் கீழேகுதித்தான்

829 பத்மமலர்க் கையிரண்டும் நோகுமேஎன்று
பக்தியுள்ள அகஸ்தியர் பார்த்தேதுசொல்வர்

830 ஆதித்யஹிருதயந்தன்னை ஜபித்தீராகில்
அவன் தலை சிதறுமென்று அகஸ்தியர் சொல்ல

831 அப்படியே ஆதித்யஹிருதயஞ் செபித்து
அஸதிரமும் வருஷித்தார் அபிராமரும்

832 ஸ்ரீராமர் தொடுத்த தொரு அஸ்திரங்களும்
தசமுகன் தேகமெல்லாம் துளைத்ததப்போ

833 தசமுகன் விட்டதொரு பாணங்கள் தன்னை
துண்டு துண்டாக ஓடித்தார் ரகுபதியும்

834 பத்மமலர்க்கையிரண்டும் நோகுமோஎன்று
பக்தனும் விபீஷணனும் எடுத்துரைப்பன்

835 மஹாதேவர் வரத்தாலவன்மார்பிலுண் டமிர்தகடம்
மாரைப்பிளந்தால் சீவன் போய்விடுமென்றார்

836 மர்மம்அறிந்துமந்த ரகுராமருமப்போ
மார்புதன்னில் இலக்குவைத்துப் பாணந்தொடுத்தார்

837 தலைசிதறியே ராவணனும் பூமியில்விழ
தேவர்கள் மலர் சொரிய சுவாமி சிரசிலேவிழ

838 அவனியின் தூள்களெல்லாம் ஆகாசம் செல்ல
அமரர்கள் கைமலரெல்லாம் சுவாமி அருகில்விழ

தேவர்கள் துதி 1-வது மெட்டு

839 அம்புஜ கரத்தின் வில்லும் அம்புராத்தூணியுமிறக்கி
அபிராமமூர்த்தியரும் ஆயாஸந்தீர்ந்தார்
840 சங்கரர் சதுர்முகரும் சகலதேவாளுடன்
அன்புடைய ராகவரைப்பார்த்துமுரைப்பார்
841 அகண்டராய்ப் பூரணராய் அசஞ்சலராயிருக்கும்
ஆனந்தமூர்த்தியும் ஆகியராமா
842 பூர்ணஸ்வரூபமாய் போதவடியாய் நிறைந்த
புத்திக்கும் சாக்ஷியாகி நின்றிடும்ராமா
843 திக்கெட்டும் கொண்டாட தசமுகராவணனை
சிதரவிழவடித்த ஸ்ரீராமச்சந்திரா
844 மதர்த்திடும் ராவணனை வதைத்து இடர்கள் தீர்த்த
வானவர்கள் போற்றிசெய்யும் வைபோகராமா
845 உலகமுழுவதிற்கும் பயங்கள் நிவர்த்திசெய்தீர்
உமக்கென்னவரம் வேணுமென்று தேவருங்கேட்டார்
846 தசமுகன் சண்டைதன்னில் சகாயமுஞ்செய்யவந்த
அனேகம் வானரசேனை மடிந்துபோனார்
847 எழுபதுவெள்ளஞ் சேனையில் ஏதொன்றுங்குறையாமலே
எழுந்துவரவேணுமென்றார் ரகுபதியும்
848 வானரசேனைகள் எல்லாரும் பிழைத்திடவே
வஸந்தனும் வானுலகிலிருந்து வந்தான்
849 மடியவே ராவணனும் மண்டோதரியுங்கேட்டு
அந்தப்புரந் தன்னைவிட்டு அலறிவந்தாள்
850 தாசிமார் தங்களுடனே தலையைவிரித்தழுது
தசமுகன் விழுந்திட்ட இடத்தினில் வந்தாள்
851 ஆகாதகாலமன்றோ என்னுடையராஜாநீரும்
ஜானகியை கொண்டுவந்து என்னைக்கெடுத்தீர்
852 மைதலியைக் கொண்டுவிட்டுச் சரணமடைந்தீரானால்
மங்கிலியமுண்டென்றேனே எந்தன் அரசே
853 வீரியமும் ஆண்மைகளும் எங்கேஒளித்தீரென்று
பாரில்விழுந்து மடிந்தீர் பிராணநாயகா

854 இந்திரசித்தையும் பலியாகக்கொடுத்தீரே என்று
அம்புஜக்கையினால் மார்பிலடித்து அழுதாள்

855 கும்பமுலைமார்பினிலே கைகளாலடித்துக்கொண்டு
கொடூரன்ராவணன்மேலே விழுந்தழுதாள்

856 விழுந்தழு விபீஷணா என்று சொல்லவேராமரும்
விழுந்து கடகடவென்று புறண்டழுதார்

857 அண்ணாவே என்னைவெறுத்து விழுந்தாய் அதிகுரூரனே
நன்றாயிருந்தோமே நாமும் லங்கைதன்னிலே

858 மண்ணாள் மாட்டாதேநீயும் ராமருடபாணத்தாலே
விண்ணாள நடந்தாயோவென்று மேலேவிழுந்தழுதார்

859 ஸ்ரீராமலக்ஷ்மணரும் தேறுதலுஞ் சொல்லியப்போ
சகலருக்கும் சம்ஸ்காரமுஞ் செய்யவேசொன்னார்

860 ஸ்நானம்பண்ணித் தலைவிரித்து விபீஷணருமப்போது
தப்பாமல் சகலவர்க்கும் கர்மங்கள்செய்தார்

861 தசமுகன் தாசரதிதன்னை அடைந்தானப்போது
தென்னிலங்கையை விபீஷணர் தானுமடைந்தார்

862 சோதிரகுபதியும் தம்பிகையால் விபீஷணர்க்கு
சுபகரமாக லங்கைப் பட்டமுங்கட்டி

863 அபிராமர் தன்கிருபையால் அரசடைந்து விபீஷணரும்
அந்தப்புரஞ்சென்றார் வெகு சம்பிரமத்துடன்

864 ஸ்ரீராமருட ஆக்கினையால் அனுமார் விபீஷணரும்
சீதையரைத்தானழைக்கச் சென்றுநடந்தாள்

865 அசோகவனந்தனிலே அம்மன் அருகினிலே
அரைக்ஷணம் ஓடிவந்து பாதம்பணிந்தாள்

---

## சீதாதேவிக்கு ஹநுமார் ஜெயம்கூறல்.

2-வது மெட்டு.

866 ஸ்ரீராமருஞ் ஜெயந்தன்னை அடைந்தாரம்மா
சிதறியே ராக்ஷதாளும் விழுந்துபோனாள்

867 மன்னவனார் ராகவரும் அழைக்கவே சொன்னார்
மங்களஸ்நானமும்பண்ணி வாருமென்றார்

868 ஸ்ரீராமர் உம்மையழைத்து வரவேசொன்னார்
ஸ்நானம் பண்ணிவாருமெங்கள் தாயாரே என்றார்

869 அசோகவனத்தில் நான் இருந்தவடிவை
அபிராமர் கண்டால் பிழைகள் வராதுஎன்றாள்.

870 சபைதன்னில் இப்படியுந்தான் போவார்களோ
ஸ்நானம் பண்ணிவாருமெங்கள் தாயாரேஎன்றார்

871 திரும்பத்திரும்ப அவாள் சொன்னவுடனே
சீதாதேவிடரும் தன்னுடைய காலதோஷத்தால்

872 மஞ்சநீராடியம்மன் ஆடையுடுத்தி
சர்வாபரணங்களுந் தரித்துக்கொண்டாள்

873 சுற்றிலும் முத்தாலமைத்த சிவிகையிலேறி
ஸ்ரீராமர் தன்னுடை பக்கத்தில் வந்தாள்

874 பரப்பிரும்ம மூர்த்தியுட பக்கத்தில்வந்து இரு
பாதகமலத்திலம்மன் பணிந்துநின்றாள்.

சீதாதேவி அக்கினியில் குளித்து எழுந்தது.

875 சீதையைக் கண்டவுடனே ஸ்ரீராமருக்கப்போ
தீபத்தைக்கண்டகண்கள் கோவதுபோல

876 சிறை இருந்தவடிவமோ சீதாஇதுவும்
சிங்காரவனமிருந்த வடிவோ இதுவும்

877 வாழ்வை இழந்திருந்த வடிவமோ சீதா
வாளரக்கனோடிருந்த வடிவமோ சீதா

878 துணிவாக வந்துநின்ற ஜானகியுன்னைச்
சுடவேணும் அங்கங்களைத் துண்டுதுண்டாக

879 சீதையைத் தசமுகனும் எடுத்துப்போனான்
ஸ்ரீராமருந் துர்பலமாகத் திரும்பினாரென்று

880 ஜகத்தின் அபவாதங்கள் வாராதிருக்க
தசமுகனை ஸம்ஹரித்தோம் தேவர் இம்சையும்நீக்க

881 ஸ்ரீராமருக்குப் பாரியுண்டு நான்குதிக்கிலும்
சீதா நீ எங்கேயாகிலும் நடவாயென்றார்

882 அப்படியே அபிராமரும் சொன்னவுடனே
அதிசோகந்தானடைந்தாள் ஆதிலக்ஷ்மியும்

883 அநுமாரை வானரானைப் பார்த்துமந்த ஜானகியும்
அக்கினியும் வளர்த்துத்தர அம்மனுங்கேட்டாள்

884 அக்கினியுந் தான்வளர்க்க இளையவர் அப்போ
ஆச்சியத்தைக் கொட்டியவாள் எரியவிட்டாள்

885 அம்மனும் அக்கினியின் அருகில்வந்து நின்று
சத்தியமாய் ஒருவசனம் தானுமுரைப்பாள்

886 ஸ்ரீராமரைத் தெய்வமென்று (என்) சிந்தையில் எண்ணி
தசமுகனைத் திரணமாக எண்ணியிருந்தால்

887 அக்கினியும் என்தேகத்தை தகிக்காமலே
அபிராமர் பாதம்வந்து சேரக்கடவேன்

888 ஆகாசம் பூமியுடன் பஞ்சபூதங்களும்
அபிராமர் சபையோரும் சாக்ஷிஎன்றாள்

889 சத்தியமாய் சபதம்பண்ணிச் சபையோர்முன்னே
ஜானகியும் அந்தக்ஷணம் அனலிற்சென்றாள்

890 பதிவிரதாக்கினியைத் தாங்கமாட்டாமல்
(இராமர்) எதிராகவந்து நின்றான் அக்கினிதேவனும்

891 அக்கினிபகவானும் அதிக தேஜஸுடனே
அபிராமர் எதிராக வந்துதுதிப்பார்

892 கற்பிதமாஞ் ஜகத்திற்குக் காரணரூபியை
கமலதளத்தில் வந்த கலியாணியை

893 பாஸ்கரனுடனே மதி இணையாகுமோ இந்த
பதிவிரதா தேவிக்கெதிர் ஒருவருண்டோ

894 அபிராமரிடத்திலே சீதாதேவியை விட்டு
அக்கினியும் அந்தர்த்தானம் தன்னையடைந்தான்

895 அந்தரத்துத் தேவர்களும புஷ்பவருஷஞ்சொரிய
அபிராமர் ஜானகியை அழைத்துக்கொண்டார்.

## ராமர் தசரதரைக்காணுதல்.

896 தாசரதி ஜானகியைச் சேர்ந்தவுடனே
தசரதர் ரகுபதியுன் அருகில்வந்தார்

897 வைகுண்ட வாழ்பதியை ரகுபதியை
மைதலியை இளையவரைக் கண்டுமகிழ்ந்தார்

898 தாசரதி தந்தையரின் தாளிற் பணிந்துநல்ல
தம்பி பாதனுக்கு அருள்செய்யுமென்றார்

899 மனங்குளிர்ந்து ராஜா அந்த வரங்கொடுத்து
மைதலி மனமகிழத் தேருதல் சொல்லி
900 சூழ்ந்திருக்குந் தேவாளுடன் ராஜாவுமப்போ
சொர்க்கலோகந் தன்னிற் சென்றார் க்ஷணந்தனிலே

ஸ்ரீராமர் புஷ்பகரதமேறி அயோத்திக்குச் செல்லும்போது
சீதைக்கு வந்தவழி அடையாளங்கள் கூறல்.

901 விபீஷணர் புஷ்பகரதம் கொணர்ந்து நிறுத்த
வீரராமர் சீதையுடன் ஏறியேகொண்டார்
902 அன்புடைய விபீஷணரும் சேனையுடனே
தம்பி இலக்ஷுமணருடனே தானுமேறினார்
903 எழுபதுவெள்ளஞ் சேனையுடன் சுக்கிரீவராஜா
ஏற்றமான புஷ்பகவிமான மேறினார்
904 அம்புதியருகினிலே புஷ்பகவிமானமும்வர
அபிராமர் ஜானகியைப் பார்த்துப் பரிவுடனே
905 அதிபாவி ராவணனைக் கொன்றவிடமும்
அதிகாயன் கும்பகர்ணன் பட்டவிடமும்
906 இந்திரசித்துடன் வீரர்கள் பட்டவிடமும்
எங்குமங்கும் காட்டிவந்தார் ரகுநாதரும்
907 தென்கடலின் வழியாக இலங்கையுள்வர
சேதுவிலணையைக் காட்டிச் சீதைக்குரைப்பர்
908 சேதுவைத் தரிசித்த ஜனங்களுக்கெல்லாம்
ஜனனமரணமில்லை சத்ஙதியுண்டு
909 சேதுவில் சிவலிங்கப் பிரதிஷ்டையும்பண்ணி
ஸ்ரீராமநாதரென்று பூஜையும்பண்ணி
910 அம்புதியைத்தாண்டி புஷ்பகரதம்வரவே
அபிராமர் சீதையுடன் அன்புடன் சொல்வர்
911 அஞ்சாதேஎன்று சொல்லிச் சகாயமுஞ்செய்த
அனுமானை சக்கியஞ்செய்த மரத்தினடியும்
912 சுக்கிரீவனைத் தோழமையாய்க் கொண்டவிடமும்
சூரனனவாலியைத் துணித்தவிடமும்
913 பம்பாநதிவழியே உன்னைத்தேடிவரவே
வாய்கிமிக்நக் கரையேற்றினேன்

914 சடாயுவைக்கண்டு சேதிகேட்டவிடமும்
சபரியின் ஆசிரமம் தரித்தவிடமும்

915 பதினொலாண்டுமிருந்த பஞ்சவடியும்
பாவியான மான்நடந்து பாழ்த்தவிடமும்

916 பாரா யிவையென்று காட்டிக்கொண்டுவரவே
பரத்துவாசர் ஆசிரமந்தன்னை நெருங்கி

917 லக்ஷ்மணா பாராயிந்த (ரிஷி) ஆசிரமந்தன்னை
நின்றுஇங்கே போகவேணும் நிச்சயமாக

ஸ்ரீராமர்வரவை ஹநுமார் பரதருக்குக் கூறல்.

918 அந்தந்தவேளைதனக்கு உபகாரஞ்செய்யும்
அன்புடைய அநுமாரைக் கிட்ட அழைத்து

919 அடையாளமாகவேதன் ஆழிகொடுத்து
அயோத்திக்குத் தம்பியிடம் அனுப்பிவைத்தார்

920 வந்தார் வந்தார் ராமரென்ற வாக்கிய அமிர்தம்
வருஷித்தார் குகன்பரதர் தாகந்தணிந்தார்

921 பதினாலுவருஷத்தின் சேதியுஞ்சொல்ல
பரதரும்கௌஸலையும் ஆனந்தங்கொண்டார்

922 ராமர்வரவைக்கேட்டு பரதரப்போ அயோத்தி
நாடுநகரமெங்கும் சோடனை செய்தார்

923 தெருவெங்கும் நீர்தெளித்துத் தோரணங்கட்டி
தேவாலயங்கள் தோறும் அலங்கரித்தாள்

924 நிலைத்தேர்கள் சோடித்து வாழையுங்கட்டி
நேர்த்தியாக வீதியெங்கும் கோலங்களிட்டாள்

925 பரதருக்குச் சேதிசொல்லி அநுமார்வந்தவுடனே
பலவிதமாய்ப் புகழ்ந்துராமர் விருந்துமுண்டார்

---

ஸ்ரீராமர் அயோதிக்கு வருதல்

926 அதிர்வெடிகளும்போட அபிராமரும் வாரார்
அந்தணர்கள் நின்று வேதகோஷம்முழங்க

927 தேவதுந்துமிமுழங்கக் கட்டியம்போட
தேவரெல்லாம் ஜயவிஜீபவா என்றுதுதிக்க

928 தாசரதி தான்வரவே பரதருங்கண்டு
தாயைக்கண்ட கன்றதுபோல் தாளிற்பணிந்தார்

929 பரதசத்துருக்கனரை பரிவாக அணைத்து
அபிராமரும் பல ஆசிகள்சொன்னார்

930 தம்பிமார்கள் கிட்டநின்று சாமரம்போட
தாசரதி ராகவரும் வீதியில்வந்தார்

931 சிம்மம்போல் இராகவரும் வீற்றுமிருக்க
சீதையும் மின்னல்கொடிபோல் கூடஇருந்தாள்

932 மங்கள வாத்தியங்கள் முழங்கவேராமர்
மாதா கௌஸலையின் மனையில்வந்தார்

933 மைதலியும் ராகவரும் இளையகோவும்
மாதாக்கள் மூவர்களின் அடிபணிந்தாள்

934 அன்னையைப் பணிந்தவுடன் அபிராமரை
அன்புடையகௌஸலையும் மடியிலணைத்தாள்

935 மைதலி சிலம்புகொஞ்ச வந்துபணிய
மனமகிழ்ந்து கௌஸலையும் தழுவியணைத்தாள்

936 அன்புடைய கௌஸலையும் ஜானகிதன்னை
அணைத்து மடியில்வைத்து ஆறுதல் சொன்னாள்

937 அன்புடைய தங்கையரும் தாஸிமார்களும்
அபிராமர் ஜானகியைப் பணிந்து மகிழ்ந்தாள்.

938 அபிராமர் ஜானகியின் சடைகள் பிரித்து
அப்யங்க ஸ்நானங்கள் பண்ணியே வைத்தாள்

939 (அம்மன்) தங்கவொளி மேனி தன்னில் பட்டுடுத்தி
ஆபரணங்களும் பூட்டினாள் அதிசோபிதமாக

940 முத்துமாலை ரத்தினமாலை கண்டத்தில்மின்ன
முழுமதிபோல் முகத்தில் மூக்குத்திமின்ன

941 அதிசுந்தரமான ஜானகியப்போ
அபிராமர் தன்னுடனே சபையில்வந்தாள்.

ஸ்ரீராமர் பட்டாபிஷேக வைபவம்

942 பூர்வா பூர்வமாகவாழ்ந்த மாளிகைதன்னை
பொன்னால் அலங்கரித்து மாலையுங்கட்டி

943 ஸ்ரீராமருட ஆபிஷேக மண்டபந்தன்னை
சிங்காரமாகச் சோடித்தார் ஸ்ரீபரதரும்

944 அழகான நவரத்தினமணிக ளிழைத்தமாலை
அன்புடன் காணிக்கைவைத்தான் இந்திரனப்போ

945 சகலரிஷிகளுடன் தேவருஞ்சூழ
அழகாஸனமிருந்தார் அபிராமரும்

946 நாலுசமுத்திரம்போய் தீர்த்தங்கொணர்ந்து
நவரத்தினக்குடங்களில் அநுமார் வைத்தார்

947 வசிஷ்டமுனிவர்கையால் அபிஷேகஞ்செய்து
மைதலிக்கும் ராமருக்கும் பட்டமுங்கட்டி

948 நீலமேகமேனியராம் ரகுராமர்க்குப்பட்டம்
நிரந்தரமென்று சொல்லிச் சபையோர் வாழ்த்தினார்

949 மங்கள வாத்தியங் கடல்போல்முழங்க
மந்திரமுனி வசிஷ்டரும் ஆசிவழங்க

950 அந்தரத்துத் தேவர்களும் புஷ்பஞ்சொரிய
அன்னையினடிபணிந்தார் அபிராமரும்

951 தசரதர் காணவில்லையே இந்தக்காக்ஷியையென்று
தாயார் கௌசலையும் கண்கலங்கினாள்

952 ஆசிகள் மிகவுஞ்சொல்லி அன்னையுமப்போ
அபிராமரையணைத்து ஆனந்தங்கொண்டாள்

953 அபிராமருட அபிஷேகம் ஆனவுடனே
அனைவருக்கும் நல்ல போஜனமிட்டாள்

954 அனைவருக்கும் தாம்பூலங்கள் தானுங்கொடுத்து
அவரவர்க்குத்தக்க வெகுமானங்கள் செய்தார்

955 அங்கதன் சுக்ரீவன் ஜாம்பவானுக்கும்
ஆடையுடன் ஆபரணம் நிரம்பக்கொடுத்தார்

956 அன்புடைய ஹநுமாரைக் கிட்ட அழைத்து
அடையாளமாய் முத்துமாலை சீதைகொடுத்தாள்

957 தென்னிலங்கை விபீஷணரைக் கிட்டஅழைத்து
ஸ்ரீரங்க நாதர்தன்னை ராமர் கொடுத்தார்

958 சந்தோஷமாய் எல்லோரையும் அனுப்பிவைத்து
தாசரதி தர்மத்துடன் ராஜ்ஜியமாண்டார்

959 ஸ்ரீராமர் நால்வருக்கும் ஜெயமங்களம்
ஜனகர் குமாரிகட்கும் சுபமங்களம்

960 அபிராமர் நால்வருக்கும் ஜெயமங்களம்
அன்னைமார் மூவருக்கும் சுபமங்களம்

961 அஞ்சனை குமாரருக்கு ஜெயமங்களம்
அயோத்திநகர் வாசிகட்கும் சுபமங்களம்

962 இன்பமாகப் பாடுவோர்க்கு ஜெயமங்களம்
இராமமூர்த்தி பக்தாளுக்குச் சுபமங்களம்.

---

## மங்களம்

மங்களம் ஜயமங்களம் சீதாராமர்க்கு
மங்களம் சுபமங்களம்

1 தீனரக்ஷகராமர் தென்சமுத்திரம் வந்து
சேர்ந்துவானருடன் சேதுவிலணை கட்டி
ஞானவிபீஷணர்க்கு லங்காசாம்பிராஜ்யம் தந்து
ராவணாதியர்களை வதைத்த ஸ்ரீராமா (மங்களம்

2 சீதையைச் சிறை நீக்கி செந்தணல் குளிப்பித்து
தேவர்கள் தன்னுடனே தசரதரையுங் கண்டு
மாதவர்புகழவே மணிபுஷ்பகத்தி லேறி
ஜானகியுடன் வந்த தசரத ராமா (மங்களம்

3 மாருதிசகாயத்தால் மணிபரதரைக் காத்து
மாமுனியாசிரமம் சென்றுவிருந்து முண்டு
ஆறுதலடையவே அயோத்யாபுரியி லுள்ளோர்
அன்னையரைப்பணிந்த அபிஷேக ராமா (மங்களம்

4 தம்பிமார் மகிழ்ந்திட சபையோர் சந்தோஷிக்க
இன்பமாகப் பதினெட்டு வாத்திய முழங்க
அன்புள்ள வசிஷ்டரும் அழகுபொன்முடி சூட்ட
பண்புடன் வீற்றிருந்த பட்டாபி ராமா (மங்களம்

5 மங்கை சீதையுடனே மணியாசனத் திருந்து
இங்கிதமா யெல்லாவர்க்கும் விடை யளித்து
சங்கையில்லாமல் தம்பிமார் களுடனே கூடி
கண்களிக்கவேவாழ்ந்த கௌஸல்ய ராமா (மங்களம்

சீதா லக்ஷ்மண பரதசத்ருக்ன ஹநுமத்ஸமேத
ஸ்ரீ ராமசந்திர பரப்பிரும்மணே நம:
ஓம் தத்ஸத்.

# THE REVELATIONS OF THE RAMAYANA OR RAMA'S LIFE UNVEILED.

## ஞானராமாயணக் கப்பல்.

மோக்ஷமென்னும் அயோத்தி தன்னில் வாழும்
பிரமமென்னும தசரதர்க்கு ——
ஞானசக்தி இச்சாசக்தி கிரியா
சக்தியென்ற மனைவியராம் ... ...
ஞானசக்தி கௌஸலைக்கு ஆத்மா
ராமரென்னும் சுதன் பிறந்தார் ——
(அவ்) யக்தமென்னும் பாலியத்தால் ஆத்மா
ராமரவர் தன்னைமறந்தார் ... ...

### முடுகு.

அக்கியான மயமான ஜீவன் தானாகி
தேகேந்திரியா திகளுக்குக் கோனாகி
சிரவணமயமென்னும்வ சிஷ்டரையடைந்து
மனனமென்னும்விஸ்வா மித்ரரைத்தொடர்ந்து
வைராக்கியமென்னும்லக்ஷ மணருடன் நடந்து
பஞ்சபாதகமென்னும் பர்வதங்கடந்து
ஆத்மராமபிரான் என்னும்பரமேட்டி
விஞ்ஞான மென்கின்ற பாணத்தைத்தீட்டி
ஆவரணமென்கின்ற தாடகையைமாட்டி
அடியோடு மழிந்துபோ க அவளைமாட்டி
இச்சையென்னும் மாரீச னுக்குப்பயங்காட்டி
என்னெதிரில் வந்தால்சா வாயென்று ஓட்டி.
விபசாரமென்கிற பாறையைமிதித்து
அகலிகையைத்துதித்து
ஏ மிதிலையைச்சேர்ந்து
சாய்ந்தமயமென்கிற ஜனகரைச்சார்ந்து
பொறுமையென்கிற கார்முகமொடித்து
ஜானகி கைப்பிடித்து
மதமென்கிற பரசு ராமனையெதிர்த்து
என்றும் மதமெழா மல் கர்வமழித்து

மோக்ஷபதமென்னும் அ யோத்தியில்புகுந்து
ஜீவன் தானல்ல என்பதைநினைந்து
பிரமமென்னும் தச ரதனுடன்கூட
கூடஸ்தமெனும் அபி ஷேகத்தைநாட
கிரியைஎன்கின்ற கை கேசியினுடைய
சலனமென்கின்ற ஏவல்வந்தடைய
பிரமமென்கின்ற தசரதனைப்பிரிந்து
மோக்ஷமென்கின்ற அயோத்தியைத்துற
வைராக்கியமென்கின்ற லக்ஷ்மணனுடனே
ஆனந்தமென்கின்ற வைதேகியுடனே
சித்தமென்னும்சரயு நதிதன்னைத்தாவி
புத்தியென்கின்ற கு கன்றன்னைமேவி
விக்ஷேபமென்னும் வ னத்தினிற்சென்று
தபமென்னும் சித்திர கூடத்தில்நின்று
அகங்காரமென்னும் வி ராதனைக்கொன்று
மனமென்னும் காகா சுரனையும்வென்று
சங்கல்பமென்கின்ற கண்ணைக்கெடுத்து
நிருவிகல்பமென்னும் கண்ணைக்கொடுத்து
வீரமென்னும் அகஸ்திய முனிதன்னைக்கண்டு
தீரமென்னும் அஸ்தி ரம் பெற்றுக்கொண்டு
காமமென்னும சூர்ப்ப நகையைத் தண்டித்து
ஆகாமைய கரதூஷ ணனைக்கண்டித்து
இச்சையென்னும் அரக்கன் மாரீசனாலே
ஆனந்தமெனும் சீதை யைப்பிரிந்ததாலே
இராஜதமென்கின்ற இராவணனடுத்து
ஆனந்தமென்கின்ற சீதையையெடுத்து
இன்பமென்கிற வை தேகியையுருக்கும்
துன்பமென்கின்ற இ லங்கையிலிருக்கும்
அசுபவாசனையென்னும் ராக்ஷதர்மொய்க்க
எண்ணமெனும் அசோக வனத்தினில்வைக்க
ஆத்மாவென்னும் ஸ்ரீ ராமனும்கடுகி
இச்சையென்னும் மா ரீசனை முடுகி
நிராசை யென்கின்ற பூமியிற் சாய்த்து
என்றைக்குந் தன்முன் வ ராமலே மாய்த்து

ஆனந்த மேன்கின்ற
இல்லாமலே யாத்மா
வைராக்கியமென்னும் லக்ஷ
விக்ஷேபமென்கின்ற
சிந்தனையென்னும் க
சந்தோஷமென்கின்ற
நித்தியாசனமென்னும்
ஆனந்த மேன்கின்ற
மென்னுஞ் சப்த
பயமென்னும் வாலிமேல
அபயமென்றுவந்த சுக்
சுபவாசனையென்னும்
நித்தியாசனமென்னும்
மோஹமென்கின்றதோர்
லோபமென்கின்ற இ
அசுபவாசனை யென்னும்
ஆனந்தமென்கின்ற
உல்லாசமென்னு மனு
எண்ணமெனும் அசோக
அஞ்ஞானமெனும் சம்பு
சந்தேகமென்கின்ற
விபரீதமெனு மிந்திர
மயக்க மென்கின்ற
இராஜதமென்கின்ற இ
மௌனமென்கின்ற அக்
துன்பமென்கின்ற இ
மோஹமென்கின்றதோர்
திடமென்னும் ஒப்பில்லா
சாத்வீகமென்னும் வி
தாமதமென்னுங் கும்ப
இராஜதமென்னும் இ
விபரீதமெனு மிந்திர
மயக்கமென்கின்ற
வைராக்கியமெனும் லக்ஷ

மைதலி பால்வந்து
ராமனும் நொந்து
மணனுடனயர்ந்து
கானகத்திலலைந்து
வந்தனையும் கொன்று
சபரிபாற்சென்று
ஹநுமானைக்கூடி
சீதையைப்பாடி
தருக்களைக் கொய்து
ம்பொன்றை எய்து
ரீவனைக்காத்து
குரங்குகளைச்சேர்த்து
அநுமானைத்தூண்டி
சமுத்திரத்தைத்தாண்டி
லங்கணியைத்தொலைத்து
ராக்ஷதரைக்கலைத்து
சீதையைக்கண்டு
பூஜிமேற்கொண்டு
வனத்தையுமழித்து
மாலியைக்கழித்து

ப

பாசத்தை எதிர்த்து
ராவணனை யெதிர்த்து
கினியைப் பெருக்கி
லங்கையைக்கருக்கி
வாரியைக்கட்டி
அணியினைக் கட்டி
பீஷணனைக் கிட்டி
கர்ணனையும்வெட்டி
ராவணனையதட்டி
சித்தனை முட்டி
பாசத்தால் மயங்கி
ம

நிதித்தியாசன மெனும்
நிஷ்டையென்னும் சுகு
வைராக்கியமென்கின்ற
விபரீதமெனுமிந்திர
சஞ்சிதம் என்கின்ற
தீரமென்னும் மோஹ
அசுபவாசனை யென்னும்
சுபவாசனை யென்னும்
ஆத்மாவென்கின்றஸ்ரீ
கெம்பீரமென்கின்ற
இராஜதமென்னும் இ
ஞானமென்கின்ற ஒரு
நானென்னும் ஆணவக்
தசேந்திரியமென்னும் தச
ஆனந்தமென்கின்ற
மௌனாக்கினி தன்னில்
பிரும்மமயமென்கின்ற
ஆனந்தமென்கின்ற
மோக்ஷமென்கின்ற
ஜீவத்வமறவென்னும்
பிரம்மமயமென்கின்ற
மோக்ஷமென்கின்ற
தேசுள்ள பூர்ணசக்தி
செழிப்பாய் விளங்கினான்
மாசில்லாதீரன்
வண்மைமிகுசூரன்

அனுமார்களிக்க
சீவிஷையயளிக்க
லக்ஷ்மணர் களிக்க
சித்நனைச் சிதைக்க
மூலபலமெதிர்க்க
ஜஸ்திரம் வதைக்க
ராக்ஷதர் முடிக்க
வானரங்கள் கெடுக்க
ராமன் கடுத்து
கோதண்ட மெடுத்து
ராவணனையடித்து
பாணத்தைத்தொடுத்து
கவசத்தையுடைத்து
மஸ்தகமுடைத்து
சீதையைக்கண்டு
குளியென்று விண்டு
தசரதனைநாடி
சீதையைக்கூடி
அயோத்தியினில்புகுந்து
மகுடம்புனைந்து
தசரதன் தானாகி
அயோத்திக்குக்கோனாகி
ரோதயம் போலே
தருமநெறியாலே,—
தேசுள்ள வீரன்
வாழும் ரகுவீரன்

மாக்ஷி, மை யமோக்ஷி, க்க, க்கடாக்ஷி சர்வ, சாக்ஷியென்று
வந்திக்கவு கந்திச்சையை
முந்தித்தரு வன்றற்பரன்
ஏலேலோ...ஏலேலோ தத்துய்யா,
ஏலேலோ...ஸ்ரீராமஜெயம்

Printed at the Commercial Press, Madras, S. E.

ஸ்ரீ

பராதேவி துணை.

# சாவித்திரி பாடம்.

இஃது

சென்னை

R. S. சுப்பலக்ஷ்மி அம்மாளால்

பிரசுரிக்கப்பட்டது.

ஆறாம் பதிப்பு.



MADRAS:

THE COMMERCIAL PRESS.

1923

Price Annas 2] [விலை அணா 2.

# முகவுரை.

**சாவித்திரிபாடம்** என்பது கர்ணபரம்பரையாய் ஆதரிக்கப் பட்டு இன்னும் உயிரோடிருக்கும் பாட்டுகள் முக்கியமானவை களில் ஒன்று. இதில் அச்வபதி என்னும் அரசனுக்குத் தவப்பெண் ணாய்ப் பிறந்த சாவித்திரி என்பவள் பிரமனெழுத்தின்படி பங்குனி மாதம் முதல்தேதி இறந்துபோன தன் கணவர் சத்தியவான் என் பவர் உயிரை தான் செய்த கௌரி பூஜையின் பலத்தினாலும் தன் சாமர்த்தியத்தினாலும் மீட்டுக்கொண்டதோடு முக்கியமான சில வரங்களையும் இயமதர்மராஜனிடத்திலேயே பெற்றதாகச் சொல் லப்பட்டிருக்கிறது. சாவித்திரியம்மன் செய்த கௌரி நோன்பா கிய மாசியும் பங்குனியும் கூடும் வேளையிற் செய்யப்படும் இந்த மாசி பங்குனி நோன்பென்பது நம்முடைய தேசத்தில் எல்லாச் சுமங்கலிகளாலும் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. இதற்கு நைவேத் தியம் காரரிசிமாவும் காராமணி அல்லது துவரையும் கலந்த அடை என்னும் பணியாரம். இதனால் **காரடையான் நோம்பு** என்று இதை விசேஷமாய்ச் சொல்வது வழக்கம். சாவித்திரி யம்மன் காட்டில் வசித்துக்கொண்டிருந்ததனால் காரரிசியும் துவரையுந்தான் கிடைத் திருக்கலாம் போலும். நிவேதனஞ் செய்யும் பொழுது "**உருகாத வெண்ணெயும் ஓரடையும் வைத்தேன், ஒருக்காலும் என் கணவன் பிரியாதிருக்கவேணும்**" என்ற மந்திரத்தைச் சொல்லுவார்கள்.

மற்றைய நோன்புகளுக்குக் கையில் சரடு கட்டிக்கொள்வது வழக்கமாயிருக்க இதற்குமாத்திரம் சரட்டில் மஞ்சள் கோர்த்துக் கழுத்தில் கட்டிக்கொள்ளுவார்கள். இந்தநோன்பின் முக்கிய பலன் தீர்க்க சுமங்கலியம்.

இந்தச் சாவித்திரி பாடத்தை, செவ்வாய்க்கிழமை, வெள்ளிக் கிழமை தவறாமல் சொல்லுகிற அல்லது சொல்லக்கேட்கிற சுமங் கலிகளுக்கு அவ்வப்பொழுது விரற்கடை மங்கலியம் வளருமாம். இத்துணை மகத்துவம் வாய்ந்த இதைப் பாராயணஞ் செய்து மகா தேவியின் கிருபையை யாவரும் அடைவார்களாக.

R. S. சுப்பலக்ஷுமி அம்மாள்.

சகலவித்யா சொரூபியான

# ஸ்ரீ சாரதா தேவிக்கு

இந்த மகாபக்திகரமான சாவித்திரி மகாத்மியத்தைச் சமர்ப்பிக்கிறேன்.

R. S. S.

உ

# சாவித்திரி பாடம்

அதாவது

## மாசி பங்குனி நோன்பு.

### கடவுள் வணக்கம்.

1 அந்தமாம் பாரதத்தில் ஆரண்ய பர்வத்தில்
சுந்தரமாம் பாண்டவர்க்கு தீயமுனிவர் உரைத்தார்

2 சத்தியவான் தேவி சாவித்திரி நற்கதையை
பக்தியுடன் நான் பாட பார்வதியே முன்னடவும்

3 தொப்பைக் கணபதியே தும்பிக்கையுள்ளவரே
விக்கினங்கள் வாராதே விநாயகரே முன்னடவும்

4 பச்சரிசிவெல்லம் தேங்காய் பழத்துடனே
அப்பமுடன் எள்ளுருண்டை அதிரஸம் மோதகமும்

5 பக்தியுடன் நான் படைப்பேன் பாலகணேசருக்கு
அற்புதமாக அருள் செய்ய வேணுமய்யா.

---

### கதை வரலாறு.

6 வனத்திலந்தப் பாண்டவர்கள் வேட்டைக்குப் போயிருந்தாள்
பர்ணசாலை தனிலே பாஞ்சாலி தானிருந்தாள்

7 சைத்திரதன் அங்குவந்து திரௌபதையை தேரில்வைத்து
கொண்டு சென்றுபோம்போது கூடிவந்து பாண்டவர்கள்

8 பஞ்சவர்கள் கோபமதாய் படைபண்ணித் தான் ஜெயித்து
ஐங்குடுமிவைத்து அவனைத்துறத்திவிட்டாள்

9 சைத்திரதன் போனபின்பு சலித்துமந்தப் பாண்டவர்கள்
மிகவும் மனதுநொந்து வீராங்கு வீற்றிருந்தாள்

10 தருமபுத்திரராஜா சலித்தே மனந்தளர்ந்து
தலைகுனிந்து சோகித்து தருமராங்கு வீற்றிருந்தார்,

## பாண்டவர்களிடம் மார்க்கண்டேயர் எழுந்தருளுதல்.

11 வந்தங்கு தோன்றிநின்றார் மார்க்கண்ட மாமுனியும்
எழுந்து நின்றுபாண்டவர்கள் எதிர்கொண்டடி பணிந்து

12 ஆஸனத்தில் வைத்து அருகிருந்து தருமர்சொல்வர்
கேளுமையா மார்க்கண்டரே எங்களுட கிலேசத்தை

13 எங்களைப்போல் கிலேசித்தோர் உண்டோ உலகதனில்
என் தம்பியர்போல் சோகித்தோர் உண்டோ தரணிதனில்

14 எந்தனுடசோகம் இருக்கட்டு மென்றாலும்
என் தம்பிமார்சோகம் சகித்திருந்தோ மானாலும்

15 எங்களுட திரௌபதையாள் ஏந்திழையாள் பட்டதுக்கம்
என் ஹிருதயம்பிளந்து எரிகிறது கண்டீரா

16 (நாங்கள்) தாஸாளாய்ப்போனவுடன் தன்மானங்காத்து நின்றாள்
எங்களையும் மீட்டுவிட்டாள் ஏந்திழையாள் திரௌபதையும்

17 இவளைப்போல் பதிவிரதை இவ்வுலகிற் கண்டதுண்டோ
என்று இஷ்டர் உரைக்கவுமே ஏதுரைப்பார் மார்க்கண்டர்

18 பதிவிரதை யானவர்கள் பிரபஞ்சத்தில் ரொம்பஉண்டு
உம்முடைய பத்தினியாள் உத்தமிதான் ஆனாலும்

19 இன்னம் பதிவிரதைகள் ஏற்றமுள்ளார் சற்கதையை [டர்.
இன்பமுடன் கேளுமென்று எடுத்துரைத்தார் மார்க்கண்

## மார்க்கண்டேயர் நளராஜன் சரித்முரைத்தல்.

20 வீரசேனன் குமாரன் வீரியவான் நளனொருக்கால்
சூதுகளாடி ராஜ்யம் தோற்று மனந்தளர்ந்து

21 சொக்கட்டான் ஆட்டத்தால் தோற்றுத் தரணிவிட்டு
தமயந்தி தன்னுடனே தயங்க வனத்தில் வந்து

22 ஏகவஸ்திரந்தரித்து இரண்டாகவே கிழித்து
நடுக்காட்டில் தன்னுடைய நாயகியைத் தான்பிரிந்து

23 கார்க்கோடகன் கடித்து கருகியவர் மேனியெல்லாம்
(அவர்) தேகம் தெரியாதே தேசாந்தரம் வசித்தார்

24 தமயந்தி நாயகரைத்தேடி வனந்திரிந்து
பதிவிரதை அக்கினியாய் வேடனை நீருக்கி

25 நாயகரைக் காணுதே ராஜ்ஜியத்தில் வந்திருந்து
தன்பதிவிரதா தர்மத்தால் பர்த்தாவைத் தானடைந்தாள்

26 இன்னம் புதுமையுண்டு ஏற்றகுலப் பாண்டவர்கள்
இன்னேரிதிகாஸம் எடுத்துரைப்பேன் பஞ்சவர்காள்.

## மார்க்கண்டேயர் ஸ்ரீராமமூர்த்தி சரிதமுரைத்தல.

27 தசரதபுத்திரனுர் ஸ்ரீராமசந்திரனுர்
கைகேயி வாக்கியத்தால் கானகத்தில் அலேந்து

28 வைதேகியைப் பிரிந்து மானையவர் பின்தொடர்ந்தார்
வாளரக்கன் வந்து மைதலியைக் கொண்டுசெல்ல

29 திரும்பிவந்தராகவரும் சீதையைக் காணுதே
சுக்ரீவன் என்னுமந்த தோழனுடன் கூடிவந்து

30 அலேகடல் தன்னில் அணேபோட்டு லங்கைவந்து
தசமுகனேச் சம்ஹாரித்து சீதை சிறை மீட்க

31 (அவள்) பதிவிரதா தருமத்தால் அக்கினிப் பிரவேசம் பண்ண
அதிக சுகிர்தத்துடனே அயோத்திதனேயாண்டிருந்தார்

32 இன்னம் புதுமையுண்டு ஏற்றகுலப் பாண்டவர்கள்
இன்னமொரு பதிவிரதை இதிகாசம் நானுரைப்பேன்.

---

## மார்க்கண்டேயர் சாவித்திரி சரிதமுரைத்தல்.

33 மத்திரதேசம் மகிமை யுள்ள ராஜ்ஜியத்தில்
அசுவபதியென்னும் அவருமொரு ராஜாவாம்

34 தருமம்தவருதே தரணி தன்னே ஆண்டிருந்தார்
புண்ணியங்கள் செய்து புவனங்கள் ஆண்டிருந்தார்

35 புத்திரனில்லே என்று புகழுடைய ராஜரப்போ
சந்தானமில்லே யென்று தாபம் மிகவடைந்தார்

36 நாரதரங்கு மப்போ நலமாய் எழுந்தருள
கண்டுமந்த ராஜா கைகூப்பியே பணிந்து

37 மைந்தரில்லாக் குறையைச் சொல்லி மனந்தளர்ந்தார்
கேட்டுமந்த நாரதரும் கிருபையுடனே ஏதுசொல்வார்

38 சாவித்திரி தேவியை நீர் சிந்தை தன்னில் நினைந்து
ஓமங்கள்செய்து நேமத்துடனிருந்தால்

39 (அந்த) தேவி கிருபையால் ஜெயமுண்டு என்று சொல்லி
அக்கினியில் ஓமங்கள் பண்ணிவைத்தார் நாரதரும்

40 அந்தணர்க்கும் தேவர்கட்கும் அவிர்ப்பாகமுங்கொடுத்து
வந்தனங்கள் பண்ணி மகாராஜர் வீற்றிருந்தார்

41 அக்கினி குண்டத்தின் நடுவிலொரு தேவிவந்தாள்
அறிவீரோ பாண்டவர்காள் அவளுடைய ரூபத்தை

42 அதிகாலே தன்னில் பிரம்மமாய்த் தானிருப்பாள்
மத்தியான்ன காலம் ஜெகத் ஜோதியாயிருப்பாள்

43 சந்தியா காலத்தில் சந்திரகாந்தப் பட்டுடுத்தி
அனுஷ்டானஞ் செய்திருக்கும் அன்புடையபக்தர்களின்

44 மகத்துக்கள் தங்களுட மனதில் விளங்கிடுவாள்
இப்படிப்பட்ட ஏற்றமுள்ள தேவியப்போ

45 மூர்த்தீகரித்து அரசன் முன்னே விளங்கினின்றாள்.
கண்டு மந்தராஜன் கையை உயரவெடுத்து

46 பக்தியுடன் துதித்து பாதங்களில் வணங்கி
(அம்மா) நீர் ஆத்மஸ்வரூபமோ அற்புத விக்ரஹமோ

47 பிரம்மஸ்வரூபமோ பேதமற்ற வஸ்துவோ
திக்குப்பாலாளோ திருமூர்த்தி நீர் தாமோ

48 நீர்யாரோ எனக்கு அறிய உரையுமென்றார்
கேட்டுமந்த சாவித்திரி கிருபையுடன் ஏதுரைப்பள்

49 நான்முகனுர் அனுப்ப நானும் வந்தேன் ராஜாவே
நான்முகர் சொன்னபடி நானுமிப்போ சொல்வேன்

50 புத்திரரும் இப்போவில்லே புகழுடைய ராஜாவே
இனிமேல் உண்டாகுமைய்யா இப்பொழுது தானுமில்லே

51 இந்தத் தபஸுக்கு ஏற்ற பலனுக இப்போ
(உம்ம) கடுந்தபஸுக்கேற்ற கன்னிகையாய் நான் வருவேன்

52 கன்னிகையாய் வந்து அவதரிப்போம் இப்பொழுதே
என்று சொல்லி சாவித்திரி அந்தர்த்தானமடைந்தாள்

## சாவித்திரியம்மன் அவதாரம்.

53 அந்தர்த்தான மாய் அவள் மறைந்த பிற்பாடு
பட்டமகிஷி யராம் பாராளும் தேவியிடம்

54 மாளவி என்னும் மஹாராஜன் தேவியரின்
திருவயிற்றில் வந்து பிறந்தாளே தேவியரும்

55 வந்து பிறந்த அம்மன் வடிவழகை நீர்கேளும்
சந்திரன்போல் முகமும் தாமரைப்பூப்போல் நிறமும்

56 சிவந்த அதரமும் செம்பவழ வாயழகும்
வெள்ளை நிறமும் மேனியுட கட்டழகும்

57 கறுத்தகுழல் சுருளும் கண்மலரும் காதழகும்
பாதவடிவழகும் பாங்குடைய கைத்தலமும்

58 கோடிசூரியர் வந்து கூடியுதித்தாப்போல்
சித்திரித்த பொம்மைபோல் தேவி பிறந்தாளே

59 அச்வபதி கேட்டு அதிகசந்தோஷமுடன்
சித்திரமாய் பொய்கைதனில் சடுதியாய் வந்திறங்கி

60 தீர்த்தங்களாடி செங்நெற்கள் கொண்டுவந்து
விரைதானஞ் செய்து வேதியர்கள் எல்லார்க்கும்

61 ஆயிரம் பால்பசுக்கள் அந்தணர்க்குத் தான் கொடுத்து
பூதானஞ் செய்தார் பூசுராளெல்லவர்க்கும்

62 அரண்மனைகள் வீதிகளும் அலங்காரம் செய்துவைத்து
ஆஸனத்தில் வீற்றிருந்தார் அசுவபதி ராஜாவும்

63 முத்திழைத்த கோவிலுக்கு மூப்பி என்னும் தாவியவள்
பட்டு மடிப்பின்மேல் பாலகியைக் கொண்டுவந்து

64 அச்வபதிராஜா அடிமடியில் வைத்திடவே
ராஜா உச்சிமுகந்து உள்ளங்கால் கண்ணிலொற்றி

65 பொன்னுரைத்து நாவிலிட்டார் புத்திரிக்கு அப்பொழுது
ஜாதகர்மம் நாமகர்மம் செய்து மந்தராஜாவும்

66 கடுந்தவஸால் வந்திட்ட கட்டழகி தேவியரை
சாவித்திரி யம்மனென்று சந்தோஷமாயழைத்தார்

67 மாதாமனமகிழ வளர்ந்தாளே மங்கைநல்லாள்
தாயார் மகிழ தவிழ்ந்து விளையாடினாள்

68 தத்தடியிட்டு நடந்தாளே தையலரும்
சித்தாடைகட்டி தெருவில் விளையாடி வந்தாள்

69 சுக்கிலபக்ஷச் சந்திரன் போல் சுந்தரியும் தான் வளர்ந்தாள்
மகாலக்ஷுமியைப்போல வடிவழகாய் இருந்தாள்

70 இவளுடையரூபத்தைக் கண்டனந்தம் ராஜாக்கள்
(நமக்குக் கிட்டாது என்றெண்ணிக் கேட்காதிருந்தார்கள்

71 மாதாபிதாவும் அம்மன்வடிவழகைக் கண்டுகந்து
இவள் அழகுக்கிசைந்த பர்த்தா யாரை வரித்திடுவோம்

72 என்று எண்ணி ராஜாவும் ஏக்கம் பெரிதாக
சாவித்திரியம்மனுடன் தானெதெடுத்துரைப்பர்

73 (இந்த) உலகமெல்லாந்திரிந்தேன் உன்னழகிற்கேற்றபர்த்தா
காணேமே எங்கும் என் கன்னிகையே நீயுமிப்போ

74 சதுரங்கசேனையுடன் தோழிமாரோடுசென்று
(நீ) தானே வரித்துவா தார்குழலே என்று சொன்னார்

75 ஏதுபிதவே இப்படியும் சோல்வீரோ
ஏற்குமோ தர்மமிது எங்கேயானாலு முண்டோ

76 தந்தையன்றோ கன்னிகையைத் தானம்கொடுத்திடுவர்
தந்தையரும் இல்லாட்டால் சகோதரரும் செய்திடுவாள்

77 சகோதரரும் இல்லாட்டால் தாயார் நடத்திவைப்பள்
தாயாருமில்லாட்டால் தானே வரித்திடுவள்

78 என்றுசொல்ல சாவித்திரி ஏதுசொல்வர் ராஜாவும்
உலகமெல்லாந் திரிந்தேன் உன்னழகுக் கேற்ற பர்த்தா

79 வையகமெல்லாந் திரிந்தேன் வடிவுக்கிசைந்த பர்த்தா
(உன்) அழகுக்கிசைந்தபர்த்தா காணேனே ஆரணங்கே

80 நீதானே வரித்துவா தார்குழலே குற்றமில்லை
(என்று) அச்வபதி ராஜா அவரும் விடையளிக்க.

## சாவித்திரியம்மன் கணவரை வரித்தல்.

81 அப்பொழுது சாவித்திரி அதிகலஜ்ஜை தன்னுடனே
மாதாவிடையளிக்க மனதொத்த தோழியுடன்

82 அநேகஞ் சேனையுடன் அந்தப்புரங் கடந்து
தேரின் மேல் ஏறி தேசமெல்லாம் ஆராய்ந்து

83 தேசமெல்லாங் காணுமல் திகைத்து வனத்தில் வந்தாள்
(ஒரு) நந்த வனந்தனிலே ஞாயி ருதித்தாப்போல்

84 நல்லமலரெடுக்கும் நாயகரைக் கண்டவுடன்
புஷ்பம் பறிக்கும் புண்ணியரைக் கண்டவுடன்

85 இவர்தாம் நமக்கேற்ற இஷ்டபர்த்தா என்றறிந்து
மனதுக்கிசைந்த பர்த்தா வரித்தே திரும்பி வந்தாள்

86 அப்பொழுது நாரதரும் அங்கே எழுந்தருளி
அசுவபதி கொலுவில் அவருமங்கு வீற்றிருந்தார்

87 நாரதரையும் பிதாவையும் நன்ருய் நமஸ் கரித்தாள்
நாரதர் பார்த்து ராஜனுடன் ஏதுரைப்பர்

88 கன்னிகைக்குத் தக்க கணவரை நீர் தேடாமல்
(நீர்) தாமிருக்க ராஜாவே அவள் தானே வரித்து வந்தாள்

89 (என்று) மங்கையர்ந்த சாவித்திரிமதிமுகத்தைத் தான்பார்த்து
(அம்மாநீ) யாரைவரித்துவந்தாய் அன்னமே சொல்லு [மென்ருர்

90 சாலுவதேசாதிபதி தன்பதியைத் தானிழந்து
காட்டினில் வந்து கடுந்தபசு செய்திருக்கும்

91 யவசேன ராஜருட ஏற்ற முள்ள புத்திரனுர்
அவரை வரித்து வந்தேன் என்ருளே ஆரணங்கு

92 அப்பொழுது நாரதரும் அதிக கிலேசமுடன்
இவள் மனதைத் தானறிய எண்ணியே நாரதரும்

93 கையைத் பிசைந்து கலங்கி யவர் சொல்லலுற்ருர்
நீஅறியாயோ பெண்ணே அவருடைய காரியத்தை

94 அதிககுண முள்ளவர்தான் அந்தக்கரணசுத்தியுண்டு
சகலகுண சம்பன்னர் தருமிஷ்டர் தானுமவர்

95 ஆனாலொரு தோஷம் இருக்கிறதுகாணாய் நீ
அந்தவொரு தோஷத்தை இப்பொழுதே சொல்லுகிறேன்

96 இனறுமுதல் ஒருவருஷம் முன்னூற்றறுபதாநாள்
மத்தியான காலம் மரணம் வருமென்று சொன்னார்

97 மரணமவர்க் கென்று மகாத்மாவுஞ் சொன்னவுடன்
அசுவபதி கேட்டு மிகவும் மனங்கலங்கி

98 இதென்ன விசாரமென்று ஏக்கம் பிடித்தவரும்
சாவித்திரி யம்மா நீசந்தோஷ பர்த்தாவை

99 வேறே வரித்திடுவாய் மெல்லியரே என்றுரைக்க
வேறே வரியுமென்க விவேகமுள்ள கன்னிகையும்

100 பதிவிரதை யாவார்கள் பர்த்தா வரித்தபின்பு
பலபுருஷர் தேடுவரோ பதிவிரதா பங்கமன்றோ

101 அழகற்றானானாலும் அதிமூடனானாலும்
குணமற்றானானாலும் குரூபியேயானாலும்

102 அந்தமில்லானானாலும் ஆயுஸில்லானானாலும்
அவரே எனக்கிசைந்த இஷ்டபர்த்தா என்றுரைத்தாள்

103 மனதுக்கிசைந்த பர்த்தா வரித்துவந்தேன் எந்தையும்
கன்னிகாதானம் கொடுங்களென்றாள் கன்னிகையும்

104 நாரதரப்போ நன்மையுடன் ஏது சொல்வர்
(அவள்) தாலி பலத்தால் தருமராஜரையுந் தான்ஜெயிப்பள்

105 அவள் மனதிடத்தாலே மிருத்யுவையும் ஜெயிப்பள்
அசுவபதி ராஜாவே உம்ம அலங்காரக் கன்னிகையை

106 சத்தியவானுக்குத் தானங் கொடுங்களென்றார்
என்றுசொல்லி நாரதரும் யதாஸ்தானம்போயடைந்தார்.

## சாவித்திரியம்மன் திருக்கல்யாணம்.

107 சாவித்திரியம்மனுடன் தாயாருந் தோழிகளும்
பட்ட மகிஷியரும் பல்லக்கில் ஏறிவந்தாள்

108 சதுரங்க சேனையுடன் தானுமந்த ராஜாவும்
தேரின் மேலேறிவந்தார் தீரமுள்ள அச்வபதி

109 பொன்னுடனே பூஷணமும் பெட்டகத்திற் ருனெடுத்து
பலவிதமாம் பண்டங்கள் கொண்டுவந்தார் வண்டிகளில்

110 யானை குதிரைகள்மேற் கொண்டுவந்தாரங்கமணி
தானை வெள்ளஞ் சேனையுடன் தானும் வந்தார் அச்வபதி

111 நாகஸ்வரமுழங்க நான்கு வகைசேனையுடன்
வந்தாரே அச்வபதி வளமான காடுதன்னில்

112 இரண்டு கண்ணுமில்லாத யவசேன ராஜாங்கே
காட்டிலிருந்து கடுந்தபஸ் பண்ணுகிருர்

113 அச்வபதி ராஜா அவருடைய கிட்டவந்து
ஆலிங்கனமும் பண்ணி அதிக சந்தோஷமுடன்

114 யவசேன ராஜருடன் ஏகாசனத்திருந்தார்
இஷ்டரைக்கண்டு யவசேனர் தான் மகிழ்ந்து

115 வந்தீரோ அச்வபதி வளமான காடுதன்னில்
காரணங்களுண்டோ உரையீர் கடுகவென்ருர்

116 காரணங்கள் சொல்லுகிறேன் கற்பகமே நீர்கேளும் [கையை
(உம்மிட) அமிர்த.குமாரனுக்கு (என்) அழகுடையகன்னி

117 கன்னிகாதானம் தருவேன் நான் என்றுரைத்தார்
அப்போயவசேனர் அதிக சந்தோஷமுடன்

118 உமக்கும் நமக்கு மிது உத்தம சம்பந்தம்
எப்போது கூடுமென்று இருந்தேனே ராஜாவே

119 நான் ராஜ்ஜியப் பிரஷ்டனுய் நாடு விட்டுக்காட்டில்வந்து
காட்டினில் வந்தோம் கண்கள் தெரியவில்லை

120 காய் கிழங்குதான் புஜித்து கடுந்தபஸ் பண்ணுகிருேம்
இந்த அருந்தபஸ் பண்ண அறிவாளோ ஆரணங்கு

121 யவசேனர் தானுரைக்க ஏற்றமுள்ள அச்வபதி
அருந்தபஸ் செய்யுமுங்கட் கா்தரவாய்த் தானிருப்பள்

122 கலங்காதிருமென்று கலியாணம் நிச்சயித்து
காடுதிருத்திப பவழக்கால் தான் நிறுத்தி

123 ஆகாசவெளிக்கு மேற்கட்டுக் கட்டியுவாள்
மேல்கட்டுக் கட்டி விடுதிப் பூக்கள் தொடுத்து

124 தோரணங்கள் கட்டி சுந்தரமாம் பந்தலிலே
தூணுக்கிடையில் தூண்டா விளக்கேத்தி

125 அச்வபதிராஜா ஆக்கினையுந் தப்பாதே
கலியாணமண்டபமும் காக்ஷியுடனே அமைத்தாள்

126 அச்வபதிராஜாவின் அலங்காரக் கன்னிகையை
சந்தனுதித் தைலமிட்டு தாதியர் நீராட்டி வைத்தார்

127 பச்சை மஞ்சட் பூசி பைங்கிளிக்கு நீராட்டி
அற்புதமாம் சுந்தரிக்கு அலங்காரஞ் செய்தார்கள்

128 பரந்ததொரு நெற்றியிலே பொட்டு மிட்டாள் மையுமிட்டாள்
கொத்ஸுவைத்துப் பின்னி குழல் வாரிப் பூமுடித்து

129 குப்பியிற் பன்னீரும் குளிர்ந்திருக்கும் சந்தனமும்
சிற்றிடையாள் சாவித்திரி தேகத்திற் பூசிவிட்டாள்

130 வசிஷ்ட ரிஷியுடனே வாமதேவர் காசிபரும்
வனத்திலேயுள்ள மற்றும் ரிஷிகளுடன்

131 முற்றின தேங்காய் முன்னூறு கொண்டுவந்து
விக்கின விநாயகர்க்கு வேண்டித் தேங்காயுடைத்து

132 மைகுழலாள் சாவித்திரி மாதாபிதாவுடனே
வீற்றிருந்தாள் மணையில் விருதங்கள் செயயவென்றே

133 வசிஷ்ட மஹாரிஷியும் மந்திரங்கள் உச்சரிக்க
பாலிகையுந்தான் தெளித்து பாலமிர்தந் தான் சொரிந்தாள்

134 அந்தரங்கத் தோழியர்கள் அம்மணவறையினிற் சூழ்ந்து
மங்களங்கள்பாடி மான்கவரி வீசினர்.

135 பொற்றாமரை நிறத்தாள் பூர்ணசந்திரனைப் போல் முகத்தாள்
கட்டழகி சாவித்திரி கைதனிலே காப்பிசைத்தார்

136 தம்மாணி மார்பன் சத்தியவான் அப்பொழுது
விக்கினங்களில்லாதே விருதங்கள் பண்ணியவன்

137 சாந்தியுடன் ஓமம் சத்தியவான் செய்துமப்போ
பரதேசிக் கோலம் புறப்பட்டார் பாவனையாய்

138 அச்வபதிராஜா அருகினிலே கிட்டவந்து
மஞ்ச ம்ணிததேங்காய் வாழ்த்தியவர் கைக்கொடுத்து

139 கன்னிகையை நான் தருவேன் என்றேஅழைத்து வந்தார்
ஆனை மேலேறி அலங்காரக் காக்ஷியுடன்

140 மாலையிட்டு சாவித்திரி மணவாளர் தன்னுடனே
பூவால் அலங்கரித்த பொன்னூஞ்சல் ஆடிநின்றாள்

141 பொன்னூஞ்சல் தானாடப் பெண்கொடிமார் தான்பாட
வாத்தியங்கள் தான்முழங்க மங்கையர்கள் தான்பாட

142 நிறைநாழி முத்தெடுத்து நெய்விளக்குத் தானெடுத்து
மங்களாஹாரத்தி எடுத்தார்கள் மங்கையர்கள்

143 வேதகோஷங்களுடன் விருதும் பலமுழங்க
விரைக்கோட்டைமேலே விற்றிருந்தார் சத்தியவான்

144 அச்வபதி ராஜாவும் அவருடைய தேவியுமாய்
சத்தியவான் காலைப் பொற்தட்டின் மீது வைத்து

145 பாலினாற் காலலம்பி பட்டாலே தான் துடைத்து [தார்
கன்னிகையைக் கைப்பிடித்து சத்தியவான் கைக்கொடுத்

146 கன்னிகாதானம் காக்ஷியுடன் செய்தபின்பு [றார்
மறையோர்கள் கைக்கொடுத்து மங்கிலியம் வாழ்த்துமென்

147 மங்கிலியம் தொட்டு மறையோர்கள் எல்லவரும்
வாழ்வீர் வளமையுடன் மைந்தர்களைப் பெற்றிடுவீர்

148 (அம்மா) உன்ஐயரைப் போல அவனிமுழுதாள்வீர் [யிருப்பீர்
உன் தாயைப்போல் மாமியைப்போல் (சௌ) பாக்யவதியா

149 நிற்பீர் நிலைத்திடுவீர் நீடூழிவாழ்ந்திடுவீர்
தாலி முடிக்கினால் சந்தோஷமாயிருப்பீர்

150 மங்கிலியம் வாழ்த்தி மறையோர்கள் தான்கொடுத்தாள்
பட்டெடுத்து ஓதிக்கொடுத்தாளே பாவையர்க்கு

151 குலநாயகிக்குக் கொசவாமுந் தாழவைத்து
வலமாய் இடைநெருங்க வைத்து மடிசாரிசைத்தாள்

152 மங்கைநல்லாள் சாவித்திரி மடிதனிலே வீற்றிருக்க
விரைக்கோட்டைமேலே வீற்றிருந்தார் அச்வபதி

153 மறையோர்கள் வாழ்த்த மங்கள வாத்தியம்முழங்க
மங்கிலிய தாரணமுஞ் செய்தார் மனோகரமாய்

154 சாவித்திரி தேவியுடன் சத்தியவான் வீற்றிருந்து
காராவின் நெய் சொரிந்து காக்ஷி ஓமங்கள் பண்ணி

155 அம்மி மிதித்து வந்தாள் அருந்ததியைப் பார்த்து வந்தாள்
ஆசிர்வாதங்கள் பண்ணி அனுக்கிரகித்தார்மாமுனிகள்

156 கடல்போல் முழங்கு மந்தக் கலியாணப் பந்தலினில்
எடுத்துமொரு ஜாடிபணம் ஏற்றமுடனே வழங்கி

157 அன்னமுடன் பாயஸமும் அபூர்வபணியாரங்களும்
திருப்தியுடன் பூஜித்தாள் தேவர்முதல் யாவர்களும்

158 புசித்து எழுந்துமவாள் பொடிதேய்த்துக் கையலம்பி
போஜன தாம்பூலம் புண்ணியருந்தான் கொடுத்தார்

159 நாலுநாள் ஹோமமுடன் கலியாணங்கள் ஆனபின்பு
அச்வபதி ராஜாவும் அவருடைய தேவியரும்

160 புத்திரியைத் தானணைந்து புத்தி சொல்லி முத்தமிட்டு
மத்திர தேசம்போனார் மஹாராஜர் தேவியுடன்.

## சாவித்திரியம்மன் கௌரி நோன்பு செய்தல்.

161 சாவித்திரியம்மன் சலியா மனதுடையாள்
காயித்திரியம்மன் கடுந்தபஸு செயலுற்றாள்

162 நாரதர் சொன்னதொரு நாளைக்குறித்து வைத்து
அவர் சொன்னகால அளவை மனதில் வைத்து

163 ஆபரணம் பூணும் அபேட்சைகளு மில்லாமல்
மரவுரி கிருஷ்ணசனமும் மங்கையருந்தான் தரித்து

164 மாமிமாமன் சிச்ருஷை மகிமையுடன் செய்து வந்தாள்
பர்த்தாவின் சிச்ருஷை பக்தியுடன் பண்ணி வந்தாள்

165 கௌரியைப் பூஜித்துக் கிளிமொழியாள் நோன்பிருந்தாள்
உபவாஸ மகாவிரதம் உத்தமியுந் தானிருந்தாள்

166 அமாவாசை பௌர்ணமியும் அஷ்டமி சதுர்த்தசியும்
மாஸம் முதல் தேதியிலும் மஹாதேவியரைப் பூஜித்தாள்

167 பஞ்சபர்வத்தில் பார்வதியைப் பூஜைசெய்தாள்
பார்வதி தேவியை நோக்கித் தவமிருந்தாள் பாவையரும்

168 மூன்று நாள் மௌனவிரதம் மிருது குழலாள் தானிருந்து
உபவாஸமாகவிருந்தாளே உத்தமியாள்

169 பால்குன மாதம் முதல் நாள் பாவைநல்லாள் சாவித்திரி
நாரதர் வாக்கியத்தை நன்றாகவே உணர்ந்து

170 மஹரிஷி சொன்னதொரு நாளு மிதுவாகு மென்று
அதிகாலையில் எழுந்து அம்பிகையைப் பூஜை பண்ணி

171 பக்திபெரிதாலே பரதேவியைச் சிந்தை பண்ணி
பாரணைகள் பண்ணாதே பத்தினியுந் தானிருந்தாள்

172 மாமனார் மாமியார் மங்கைதனை நோக்கி யவாள்
பாரணைகள் பண்ணும்மம்மாபைங்கிளியேஎன்று சொன்னாள்

173 அம்மா ஆறுஞ்சாமத்தில் அஸ்தமித்த பிற்பாடு [ரைத்தாள்
போஜனங்கள் பண்ணுகிறேன் புண்ணியர்காள் என்று

174 தபஸில் திடமுடைய சத்தியவான் அப்பொழுது
காட்டிற்குப்போகவென்றும்காய்கிழங்குவெட்டவென்றும்

175 கோடாலி தானெடுத்துத் தோள் தனிலே வைத்துமவன்
வெறகொடித்து நானும் வரேன் என்று வழிநடந்தான்

176 வேகமுடன் நடக்க மெல்லியருங் கிட்ட வந்து
நானும் வரேன் காட்டினிற்கு நாயகரே என்று சொன்னாள்

177 மாதா பிதாவின் அனுமதியைக்கேட்டு வந்தால்
கூடவா என்னுடனே கொம்பனையே என்றுசொன்னார்

178 இருமிங்கே என்று சொல்லி ஏந்திழையாள் சாவித்திரி
ஓடி ஒருநொடியில் ஓட்டமுடன் கிட்டவந்து

179 மாதாபிதாவை வணங்கியே மங்கையரும்
காட்டுக்குப் போய் வருவேன் கணவருடனாக

180 அனுப்பிவைக்க வேணுமென்று அன்புடனே கேட்டு நின்றாள்
(அம்மா) நீ இத்தனை நாள் தன்னில் கேட்டதில்லை இந்தவரம்

181 பட்டினியாக இருக்கின்றாய் பைந்தொடியே
போய்வாரும் சடுதியிலே என்றுரைத்தார் புண்ணியர்கள்

**சாவித்திரியம்மன் கணவருடன் காட்டுக்கு ஏகுதல்.**

182 ஓடிநடந்து வந்து உத்தமியாள் சாவித்திரி
பர்த்தாவின் பாதம் பணிந்து நமஸ்கரித்து

183 பின்னே நடந்தாளே பொற்கொடியாள் சாவித்திரி
சத்தியவான் தன்னுடைய தேவியரின் கைப்பிடித்து

184 இந்தக் காடு தன்னைப்பாராய் கமலப் பூநாயகியே
விருக்ஷங் செடி கொடிகள் பாராய் நீ மெல்லியரே

185 புஷ்பங்கள் பூத்துச் சொரிவதைப்பார் பொற்கொடியே
மானுங் கலையும் விளையாடுவதை நீ பாராய்

186 தாமரை ஓடைகளைப் பாராய் நீ தார்குழலே
என்று சொல்லி சத்தியவான் இங்கு மங்கும் காட்டிவர

187 (அவள்) அதுவொன்றும் பாராதே அந்தஃகரணம் நடுங்கி
நாரதர் சொன்னதொரு நாழிகையை எண்ணிவாராள்

188 தவசீலனுகுமந்த சத்தியவானப்பொழுது
காட்டினிலுள்ள கனி கிழங்கு தான் பறித்து

189 பழங்கள் பறித்துமவர் தழையினல் கட்டிவைத்து
கண்டகக் கோடாலியினல் கட்டை பிளக்கலுற்ருர்.

**எமதர்மராஜன் சத்தியவான் ஜீவனைக் கொண்டுபோகுதல்.**

190 கட்டை பிளக்கும்போது கண்கள் கலங்கியவர்
தலையுங் கிருகிருக்கத் தன் வசங்களன்றியிலே

191 தலையு மிகவலிக்கத் தன்னுடம்பும் வேர்த்துவிட
நித்திரையுஞ்செய்ய வருகுதிப்போ நேரிழையே

192 (என்று) வந்து விழுந்தான் மலைபோல சத்தியவான்
மடியில் விழுந்தவுடன் மங்கையவள் கலங்கி

193 உள்ளம்பறக்க அம்மன் உடம்பு நடுநடுங்க
ஆம்பல்மலர்க்கண்ணுட்கு அடிவயிறு தானெரிய

195 நெஞ்சம் கலங்கியம்மன் நீலவிழி நீர்சொரிய
மஹாதேவியைத் துதித்து மரத்தடியில் வீற்றிருந்தாள்

195 அங்கோர் மஹாபுருஷன் அதிரூபந் தன்னுடனே
கிரீடமும் குண்டலமும் கேசவனுர்போல் நிறமும்

196 கறுத்ததொருமேகம் காளமுகில்போல் வடிவும்
பீதாம்பரமும் பெருத்தமுத்து மாலைகளும்

197 சிவந்தபுஷ்ப மாலைபூண்ட சுந்தரனார் பேரொளியும்
கண்டுமெய்ந்த சாவித்திரி கணவரைக் கீழேவைத்து

198 பிரதக்ஷணமாகவந்து பணிந்து நமஸ்கரித்தாள்
தீர்க்க சுமங்கலியாயிரு வென்றார் அப்பொழுதே

199 இதுவே சகுனமென்று எடுத்து முடிந்தாள் தலப்பில்
எமராஜரை வணங்கி ஏந்திழையும் கேட்கலுற்றாள்

200 ஆத்மஸ்வரூபமோ அற்புதமாம் விக்கிரகமோ
பிரமஸ்வரூபமோ பேதமற்ற வஸ்துவோ

201 என் ஹிருதயந்தனில் வசிக்கும் எமராஜர் நீர் தாமோ
நீர் யாரென்றெனக்கு அறியவுரையு மென்றாள்

202 சத்துக்கள் கண்ணுக்கு நான் சந்தோஷமாயிருப்பேன்
அசத்துக்கள் கண்ணுக்கு அதிகோரமாயிருப்பேன்

208 பாபிகள் கண்ணுக்கு நான் பயங்கரமாயிருப்பேன்
பாபி இல்லார் கண்ணுக்கு பிரம்மவடிவாயிருப்பேன்

204 எமதர்மராஜ ரென்பாள் என்னுடையநாம தேயம்
சுகிர்தத்தினா லுனக்குத்தோன்றினேன் நானுமிப்போ

205 என்று பாசக்கயிறெடுத்து பறபறென்னத்தான் பூட்டி [றார்
ஒரு இசிப்பாய்த்தான் இசித்துஉத்தமரைக்கொண்டு சென்

---

## சாவித்திரியம்மன் எமதர்மர்பின்சென்று வரம்பெறுதல்.

206 சாவித்திரியம்மன் சரேலென்று தானெழுந்து
பக்ஷி மிருகந்தீண்டாது பர்த்தாவை ரக்ஷைபண்ணி

207 தழைந்தமரம் வளைத்து தழையொடித்து மேல்மூடி
கிளையின் இலை பறித்துக் கணவரை மூடிவைத்து

208 பின்னே நடந்தாளே பொற்கொடியும் தருமருடன்
பின்னால் நடக்கலுமே பெருமாள் திரும்பி நின்று

209 ஏன் பெண்ணே சாவித்திரி என்னைத் தொடருகிறாய்
அதிதூரம் வழிநடந்தால் அதிக இளைப்பாகும்

210 போவாய் நீ ஊர் நோக்கி பொற்கொடியே என்று சொன்னார்
(ஐயா) பர்த்தாவுடன் நடந்தால் பார இளைப்புமுண்டோ

211 ஒரு இளைப்பு மில்லை ஐயா ஓடிவருவேன் என்றாள்
ஓடிவருவேனென்க உத்தமருங் கேட்டுகந்து

212 (அம்மா) உன்வாக்கு நலமழகும் மங்கள ஸ்தோத்திரமும்
உன் ஸ்தோத்திரங்களாலே செவியுங் குளிர்ந்ததம்மா

213 உனக்கான தொருவரமுங் கேளாய் நீ உத்தமியே
(உன்) பர்த்தா உயிர் தவிரப் பிரியவரங்கேளாய்

214 வரந்தருவ துண்டானால் மஹாராஜா சொல்லுகிறேன்
(எங்கள்) யவசேன ராஜருக்கும் ஏற்றமுள்ள தேவியர்க்கும்

215 இருவருக்கும் இரண்டுகண்ணும் இராஜ்ஜியமும் வேணுமென்
தந்தேன் நான் இந்தவரம் சாவித்திரியம்மா வுனக்கு [றாள்

216 தந்தேன் நான் என்றுசொல்லி தருமர் நடக்கலுற்றார்
தருமர் நடக்கலுமே தார் குழலாள் பின்னடந்தாள்

217 பின்னால் நடந்திடவே பெருமாள் திரும்பி நின்று
ஏன் பெண்ணே சாவித்திரி இன்னம் வருகிறாய்

218 மான்கலைகளுண்டு மத யானையுண்டு வேடருண்டு
பார்க்கப்பயங்கரமாய் புலியுண்டு சிங்கமுண்டு

219 பக்ஷி மிருகமுண்டு இந்தப்பயமான காடுதன்னில்
போவாய் நீ ஊர்தனக்குப்பொற்கொடியேஎன்றுசொன்னார்

220 (ஐயா) சத்துக்கள் தன்னுடனே சகவாசஞ் செய்திருந்தால்
மஹாபலன்கள் உண்டென்று மஹான்கள் சொல்லிடுவார்

221 உம்முடனே கூட வழிநடந்தால் எந்தனுக்கு
ஒருபய மமில்லை யிப்போ ஓடிவருவே னென்றாள்

222 ஓடிவருவேனென்க உத்தமருங் கேட்டுகந்து
மங்களவார்த்தை தனைக்கேட்டு மனமகிழ்ந்து

223 வாருமம்மா சாவித்திரி (உன்) மணவாளர் தன்னைவிட்டு
வேறொருவரங்கேளாய் மெல்லியரே என்று சொன்னார்

224 (ஐயா) புத்திரனில்லாத புகழுடைய அச்வபதி
அதுவேமனக்குறையாய் என் ஐயருந்தானிருக்கார்

225 நல்லசத்துக்களாயும் சற்குணவரான வருமாய்
சுதகுமாராளவர்க்குத் தாருமையா சற்குருவே

226 தந்தேனிந்தவரமும் சாவித்திரியம்மன் வுனக்குத்
தந்தேன் நான் என்று தருமர் நடக்க லுற்றார்

227 தருமர் நடக்கலுமே தார்குழலாள் பின் நடந்தாள்
பின்னால் நடக்கலுமே பெருமாள் திரும்பி நின்று

228 ஏனோ வருகின்றாய் இந்த இருள்சூழ்ந்த காடுதன்னில்
உன் பர்த்தாவின் உத்தரகிரியை நீயுடனிருந்துசெய்வத

229 போவாய்நீ ஊர்தனுக்கு என்று சொன்னார் புண்ணியரும் [ற்கு
தருமருரைக்கலுமே தார்குழலும் ஏது சொல்வள்

230 (ஐயா) புத்திர ரில்லாவிட்டால் புண்ணிய வுலகமில்லை
புற்று நரகமுண்டு பொல்லாத ஜன்மமுண்டு

231 மலடி என்று சொல்லி மானிடர்கள் ஏசிடுவாள்
எந்தனுக்கு நூறுபிள்ளை தாருமென்றாள் ஏந்திழையும்

232 தந்தேன் நானிந்தவரம் சாவித்திரியம்மா உனக்கு
தந்தேனன் என்று சொல்லித் தருமரும் ஓடலுற்றார்

233 குறுக்காய் மறித்துமந்தக் கொம்பனையும் ஏதுசொல்வள்
என்னைத்தொடர்ந்து ஏன்மறித்தாய் என்பீரோ

234 சிருஷ்டிப்பீர் நீரும் ஜகத்திலுள்ள மானிடரை
விச்வபதியாய் நிறைந்து விஷ்ணுவாய் இரக்ஷிப்பீர்

235 சம்ஹார மூர்த்தியுமாய்ச் சகலரையும் சம்ஹரிப்பீர்
தருமந்தவறாத ராஜனென்று தானுரைப்பாள்

236 தீர்க்கமுடன் வாழ்த்தும் உம்முட திருவாக்குப்பொய்யாமோ
பதிவிரதையாவார்கள் பர்த்தாவை யன்றியிலே

237 பதிவிரதா தருமத்தில் பழுதுகள் வாராதே
பதிவிரதைப் பேரொழியப்பட்டப்பெயர் இல்லாதே

238 அருந்தவப் பேரொழிய அவப் பெயர் இல்லாதே [றாள்
புத்திரரைப் பெற்றெடுக்க உபாயமொன்று சொல்லுமென்

239 தெட்டினாய்என்னையிப்போ சிறுபெண்ணே சாவித்திரி
தர்க்கங்கள் சாஸ்திரங்கள் சகலமும் கற்றாலும்

240 உன்னைப்போல் ஸ்தோத்திரங்கள் பண்ணுர் ஒருவருமுண்டோ
உன்னுடைய ஸ்தோத்திரத்தால் என் உள்ளங் குளிர்ந்த

241 எப்பொழுதும்போல யவசேனர் தேவியுடன் [தம்மா
இழந்தகண்ணையடைந்து இராஜ்ஜியத்தை யாளவென்றும்

242 சத்தியவான் தன்னுடனே நீ சம்பிரமமாய் வாழவென்றும்
உந்தனுக்கு நூறுபிள்ளை உன் தந்தையர்க்கு நூறுபிள்ளை

243 என்று வரங்கொடுத்து யமராஜர் போனபின்பு
ஐந்துவரங்கொடுத்து அந்தர்த்தான மானபின்பு

244 ஓட்டம் பெருநடையாய் ஓடிவந்தாள் சாவித்திரி
நாயகர் தன்தலையை எடுத்து மடியில் வைத்து

245 சுந்தரனுர் தன்னுடைய திருமுகத்தைப் பார்த்திருந்தாள்
சொர்ப்பனங்கள் கண்டதுபோல் திடுக்கிட்டுக் கண்விழி

246 மஹாபுருஷர் வந்தார் மங்கையரே நீ கண்டாயா [த்து
அறிந்திடுவேன் நாயகரே அனேகம் பொழுதாச்சு

247 அநேகம் பொழுதாச்சு அஸ்தமனமாச்சுதையா
மேகம்வந்து மூடிவெளிச்ச மொன்றுந் தோன்றவில்லை

248 போவோம் நாம் வாருமென்று பொற்கொடியாள் கைப்பிடித்து
பழங்கள் மூட்டைதன்னை பாவையருந்தானெடுத்து

249 கண்டகக்கோடாலி எடுத்து மவள்தோளில்வைத்து
சத்தியவான் கைப்பிடித்து சாவித்திரிதான் நடைந்தாள்.

---

**சாவித்திரியம்மன் கணவர் ஜீவனைமீட்டு மாமன் மாமியிடம் வருதல்.**

250 மெள்ள நடந்தாளே மிருது குழலாள் நாதருடன்
காட்டுத்தீயால் வெளிச்சங்கொண்டு வழிநடந்தாள்

251 நக்ஷத்திர வெளிச்சம் நன்ருய் விளங்கிடவே
வழிகண்டுகொண்டு நடந்தாரிருவருமாய்

252 இவர்கள் கதையிங்கே இப்படியுந் தானிருக்க
யவநேசர் தேவியுடன் ஏதுசெய்வாரப்போது

253 காரணங்கள் தோன்றவில்லை கண்கள் தெரிகிறது
மைந்தரும் தேவியரும் வாராதிருப்பானேன்

254 அங்குமிங்கும் ஓடிப்பார்த்தே புலம்பலுற்றார்
எங்குங்காணுதே ஏங்கிப்புலம்பலுற்றார்

255 அபயமபய மென்று அழுதாரிருவருமாய்
வனத்திலேயுள்ள மஹாரிஷிக ளெல்லாரும்

256 எல்லாரும் வந்திருந்து ராஜனுக்கு ஏது சொல்வாள் [தால்
உம்ம புத்திரற்குத் தீங்கில்லே பொற்கொடியும் போயிருந்

257 (அவள்) மானுடர் என்றும் மனுஷி என்றும் எண்ணுதீர்
பொல்லாத லக்ஷணமும் இல்லேயந்தப் பொற்கொடிக்கு

258 இப்போ வரப்போரார்கள் ஏங்காதிருங்களென்று
அந்தணர்கள் தேற்ற அவர்களங்கு வீற்றிருந்தார்

259 சத்தியவானைத் தன் தோளின் மேலேயணைத்து
வந்து பணிந்தார்கள் மாதா பிதாவையப்போ

260 வந்துபணிந்த மகனை வாரி எடுத்தணைத்து
தந்தையரும் மார்புடனே தழுவி எடுத்தணைத்து

261 இத்தனை போதாக வராமலிருப்பானேன் என்மகனே [ன்றார்
காரணங்கள் என்னவென்று கான் முளேயே சொல்லு மெ

262 (என்) வசமழிந்து நித்திரையும் பண்ணினேன் மகாத்மாவே
அதுவொழிய நானறியேன் என்றூரே சத்தியவான்

263 அந்தணர்கள் மஹாரிஷிகள் இந்த ஆரணங்கைச் சூழ்ந்து
சாவித்திரி யம்மா நீர் காட்டுக்குப் போனீரே [கொண்டு

264 காரணங்கள் யாதுமுண்டோ உரையீர் கடுக வென்றார்
காரணங்கள் உண்டு அதைச் சொல்வேன் மகாரிஷிகாள்

265 எல்லாருங் கேளுங்கள் என்னுடையவன் குறையை
அசுவபதி ராஜாவின் அருந்தபஸு யாகத்தில்

266 கன்னிகையாய் உதித்துக் கவலேகெடவே யிருந்தேன்
காட்டுக்கு வந்தேன் இந்தக்கணவரை நான் வரித்தேன்

267 நாரதமஹாரிஷியும் என் நாயகரின் தீங்கு சொன்னார் [றேன்
அன்றுமுதல் இன்றளவும் அம்பிகையை வேண்டி நின்

268 இன்றைக்குக் காட்டுக்கு இருவருமாய்ப் போனேமே
எமராஜர் எந்தனுட நாயகரைக் கொண்டு சென்றார்.

269 பின்னே நடந்துசென்று பொருளைவேண்டி நின்றேன்
ஐந்துவரமுங் கொடுத்து அந்தர்த்தான மடைந்தார்

270 ஐந்துவரம் ஏதென்றால் அந்தணர்கள் சொல்லுகிறேன்
எங்கள் யவசேன ராஜருக்கும் ஏற்றமுள்ள தேவியர்க்கும்

271 இருவர்க்கு மிரண்டு கண்ணும் இராஜ்ஜியமும் வாங்கிவந்தேன்
(எங்கள்) அச்வபதி ராஜருக்கு நூறுபிள்ளைவேண்டி வரம்
[வாங்கி வந்தேன்

272 எந்தனுக்கு நூறுபிள்ளை கேட்டுவரம் வாங்கிவந்தேன்
எந்தனுட பர்த்தாவை எழுப்பவரம் வாங்கிவந்தேன்

273 ஆச்சரியம் ஆச்சரியம் என்றே அனைவர்களும்
எமனுடனே தர்க்கித்த ஏத்தமுள்ள தேவியிவள்

274 மறித்த அவள் பர்த்தாவை வரவழைத்துக்கொண்டாளே
(ஐயா) உங்கள் மைந்தனையும் மீட்டுவந்தாள் மறுபடியும்
[கண் கொடுத்தாள்

275 இவள் ஈச்வரியோ வென்று எல்லவருங் கண்டுகேந்தாள்
மாமனும் மாமியரும் மனமகிழ்ந்து கண்களித்து

276 மாமியாரும் மகளை மகிழ்ந்தே எடுத்தணைத்து [மடைந்தோம்
(அம்மா) உன்பதிவிரதா தருமத்தால் பாக்கியமெல்லா

277 என்று உத்தமியைக் கொண்டாடி உகந்தா ரிருவருமாய்
சந்தியவானுந் தர்மபத்தினியைக் கொண்டாடி

---

**சாவித்திரியம்மன் முதலியோர் இராஜ்ஜியமடைந்து சுகித்தல்.**

278 ஆனந்த சாகரத்தில் அமிழ்ந்தே களிகூர்ந்தார்
(இப்படி சந்தோஷமாயிருக்க சாலுவதேசத்திலிருந்து

279 கடுகியொரு தூதன்வந்து கண்டுமெந்த ராஜாவை
(உம்ம) சத்துரு ராஜாவுந்தான் மாண்டுபோனதினால்

280 இராஜ்ஜியமாள்வதற்கு வாருமென்றுகைதொழுதான்
பட்டத்து யானைதன்னில் யவசேனர் ஏறிவர

281 அச்வத்தின்மேலே ஏறிவந்தார் சத்தியவான்
சாவித்திரிதேவியும் தன்மாமியுடன் தண்டிகையில்

282 ஏறிவர எல்லவரும் இன்பமுடன் கண்களிக்க
: வாத்தியங்கள் தான்முழங்க வந்தார் தன்தேசமதில்

283 பட்டணத்து வீதிசுற்றி வந்தார் அரண்மனையில்
இஷ்டமுடன் ராஜ்ஜியத்தை யவசேனர் தானடைந்தார்

284 அச்வபதி ராஜருக்கு அப்பொழுது தூதனுப்ப
மாளவி தேவியுடன்வந்தாரே அச்வபதி

285 யவசேனராஜர் எதிர் கொண்டு உபசரித்து
உம்ம மங்கையரால் வந்த வாழ்வு இதுராஜாவே

286 அச்வபதிராஜா அதிக சந்தோஷமுடன்
மங்கையுடதன்மகிமை மனமகிழ்ந்து தான்கேட்டு

287 அன்னையருந் தந்தையரும் அருமை மகளை அணைத்து
கண்களித்து ஆனந்த நீர் சொரிந்தார் கண்மலரால்

288 சாவித்திரி நாயகரும் (ராஜா) தாளடியினிற் பணிய
கண்களித்து ஆனந்தங்கொண்டே மனமகிழ்ந்தார்

289 தபஸாலதிகமுள்ள சாவித்திரி யம்மனவள்
தம்பிமார் நூறுடனும் தன்புதல்வர் நூறுடனும்

290 எமராஜன் தன் கிருபையால் ஏற்றமுள்ள ராஜ்ஜியத்தில்
சங்கரியைப் பூஜைபண்ணி ஸௌபாக்கிய வதியாயிருந்

291 மார்க்கண்டேயர் உரைக்க மனமகிழ்ந்து பாண்டவர்கள் [தாள்
ஆச்சரியமாகுமிந்த அருங்கதையைக்கேட்டுமேவாள்

292 அம்மன் மகத்துவத்தைக் கேட்டு மனங்குளிர்ந்து
சாவித்திரி தேவியரைச் சிந்தை பண்ணியே ஸ்துதித்தாள்

293 ஒத்திசைத்த கெம்புடனே ஒளிமுத்துக் கோர்த்தாப்போல்
சித்திரமாம் பாரதத்தின் நடுவிருக்கும் சற்கதையை

294 கற்றவருங் கேட்டவரும் கற்றுக் கொடுத்தவரும்
சாவித்திரியம்மனைப்போற் சந்தோஷமாயிருப்பாள்

295 மங்கிலியம் தான்பெருகும் மைந்தர்களைப் பெற்றிடுவாள் [ஞர்.
மஹாதேவி தன்கிருபையால் வாழ்ந்திடுவார் என்று சொன்

ஓம் சுபம்.